உ

சிவமயம்

# திருச்செந்தூர்த் தலபுராணம்



திருச்செந்தூர் தேவஸ்தான வெளியீடு

1963

**உயர்திரு. எம். பக்தவத்சலம் அவர்கள்**, பி.ஏ., பி எல்,
*நிதி, கல்வி, அறநிலைய ஆட்சித் துறை*
*அமைச்சர், சென்னை.*

## பாராட்டுரை

திருச்செந்தூர், முருகப் பெருமானுக்குரிய பழமை மிகுந்த சிறந்த பெருந்தலம். அதற்கு '**அலைவாய்**' எனவும் ஒரு பெயர் உண்டு. சங்கத் தமிழின் தலைமைப் புலவர் ஆகிய ஆசிரியர் **நக்கீரர்** தமது திருமுருகாற்றுப் படையில்,

> **" உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர்**
> **அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே "**

என இத்தலத்தினைக் குறிப்பிடுகின்றார். அதனால் இத் தலமானது 'உலகம் புகழ்ந்து போற்றும் நிலையில் ஓங்கி உயர்ந்த மேன்மையும் சிறப்பும் உடையது' என்று உணரலாம்.

கடலின் அலைகள் தன் கோயில் மதில்கள் மீது வந்து அலைக்கும் இடத்தே அமைந்துள்ள சிறப்புப் பற்றி, இத் தலத்திற்குச் '**சீரலைவாய்**' எனவும் ஒரு பெயர் வழங்கும்.

> **" சூர்அலை வாய்இடைத் தொலைத்து மார்புகீண்டு**
> **ஈரலை வாய்இடும் எஃகம் ஏந்தியே**
> **வேரலை வாய்தரு வெள்ளி வெற்பொரீஇச்**
> **சீரலை வாய்வரு சேயைப் போற்றுவாம் "**

எனக் **கந்தபுராணம்** பாடிய **கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்**, 'சீரலைவாய்' என்பதனைச் செய்யுளின் எதுகையாக அமைத்துப் பாடித் துதிக்கின்றார்.

**புறநானூறு** என்னும் பழந்தமிழ்ச் சங்க நூலின்கண் **மருதன் இளநாகனார்** என்னும் புலவர், பாண்டியன் ஒருவனைப் பாடிய பாடல் ஒன்றில், 'முருகப் பெருமான் எழுந்தருளியுள்ளதும், அலைகள் வந்து மோதும் சிறப்பினையுடையதும் ஆகிய அழகிய பெரிய திருச்செந்தூர்க் கடலின்கண் உள்ள எக்கர் மணலினும் மிக்க பல நெடுங்காலம் நீ இனிது வாழ்க!' என வாழ்த்தி மகிழ்கின்றார்.

> " நீநீடு வாழிய நெடுந்தகை! தாழ்நீர்
> வெண்டலைப் புணரி அலைக்கும் **செந்தில்**
> **நெடுவேள்** நிலைஇய காமர் வியன்துறைக்
> கடுவளி தொகுப்ப ஈண்டிய
> வடுஆழ் எக்கர் மணலினும் பலவே. "

இதனால் திருச்செந்தூரின் பழமை பெருமைகளை யாவரும் இனிது உணரலாம். நெஞ்சை யள்ளும் **சிலப்பதிகாரம்** என்னும் செஞ்சொற் காப்பியத்தினை இயற்றிய **இளங்கோ அடிகள்**,

> " சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
> ஏரகமும் நீங்கா இறைவன்கை வேல் அன்றே
> பார்இரும் பவ்வத்தின் உட்புக்குப் பண்டொருநாள்
> சூர்மாத் தடிந்த சுடர்இலைய வெள்வேலே "

என முருகனின் தலங்களுள் முதன்மையானதாக வைத்து இதனைக் குறிப்பிடுவதுடன், "**சீர்கெழு செந்தில்**" எனவும் இதனைச் சிறப்பித்துப் புகழ்ந்துரைக்கின்றார்.

இங்ஙனம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் மிக முற்பட்ட காலந் தொட்டே, முருகப் பெருமானுக்கு உரிய சிறந்த பெருந்தலமாகத் திகழ்ந்து வரும் **திருச்செந்தூர்** பற்றிய பழைய இனிய செய்திகளை **வென்றிமாலைக் கவிராயர்** என்னும் பெரும்புலவர், "திருச்செந்தூர்ப் புராணம்" என்னும் சீரிய நூலாகப் பாடியுள்ளார். ஏறத்தாழ 900 பாடல்களைக் கொண்ட அந்நூல், சொற்சுவை பொருட்சுவைகள் துளும்பிச் சிறந்த இலக்கியமாகத் திகழ்கின்றது.

நூலின் சிறப்புக்குத் "தாலிபுலாக நியாயம்" பற்றி, ஓர் இடத்தை மட்டுமே ஈண்டுக் குறித்தல் சாலும். முருகப் பெருமானுக்கு உரிய பெயர்கள் ஆகிய **சுப்பிரமணியன், சரவணபவன்** என்பனவற்றிற்கு "மந்திர மகிமை யுரைத்த அத்தியாயம்" என்னும் பகுதியில், சிறந்த பொருள் விளக்கம் செய்யப்பட்டுள்ளமை குறிப்பிடத் தக்கது. 'சிவபிரானும் திருமாலும் தம்முள் ஒன்றி இயைந்தே முருகனை விளங்குகின்றனர்' என வென்றிமாலைக் கவிராயர், சைவ வைணவ சமயங்களில் சமரச நோக்கோடு பின்வரும் செய்யுட்களில் அழகுற விளக்கி யிருக்கும் திறம், மிகவும் பாராட்டி மகிழற் பாலது.

"சுப்பிர மணியன் என்று
சொலும்பெயர்ப் பதம்மூன் றுகும்;
அப்பதத் திடையுண் டான
அரும்பதம் சிவனும்; ஈற்றின்
மெய்ப்பதம் சிவனை ஏத்தும்
விண்டுவின் வடிவாம்; முன்னம்
செப்புறு பதம் இரண்டு
பதங்களைச் சேர்ந்து காட்டி"

"ஒப்பறும் அயிக்யம் ஆக
உரைத்தலால், உரைக்க ஒண்ணு
மைப்படி மிடற்றி னுனும்
மால்எனும் நாமும் ஆக,
முப்புவ னங்கள் ஏத்த
மூலமும் முடிவும் இல்லாச்
**சுப்பிர மணியன்** ஆகச்
சொல்லும் நால் வேதம் மாதோ"

"சரவண பவன்என் ருேதும்
தாவறு பதங்கள் மூன்றில்
பரவுறு சரம்என் ருய
பதம்அது சலமே ஆகும்;
வருவநம் வாசம்; இந்த
வான்பதம் இரண்டும் பார்க்கில்
அரிதுமா தவத்து நாரா
யணன்எனும் அருத்தம் ஆமால்"

"இயலுறு பவன்என் ருேதும் இரும்பதம் சிவன்தான் ஆகும்
மயலற இரண்டும் ஒன்ருய் வழுத்தில்ஆ றெழுத்தே ஆகும்
பயன்ஒருங் குணரின் ஞானப் பரம்பொருட் சிவன தாய
சுயவடி வாகும் என்றே சொல்லும்நான் மறைகள் அம்மா!"

இத்தகைய நலன்கள்பல அமைந்த இந்நூல் முருகன் அடியார்கள் ஆகிய செந்தமிழ் அன்பர்கள் அனைவருக்கும் பயன்படுதற் பொருட்டு, இதனைத் திருச் செந்தூர் தேவஸ்தானக் குழுவினர் வெளியிட முன்வந்துள்ளனர்.

**"இதனை இதனுல் இவன்முடிக்கும் என்ருய்ந்(து)
அதனை அவன்கண் விடல்"**

எனத் திருவள்ளுவர் அருளிச் செய்தபடி, இந்நூல் கற்றோர்க்கே யன்றி மற்றோர்க்கும் பயன்படும்படி, சென்னைப் பெரும்புலவர் குகஸ்ரீ ரசபதி அவர்களைக் கொண்டு உரை எழுதுவித்து, தேவஸ்தானத்தார் இந் நூலை வெளியிடுகின்றனர்.

மிகப் பல ஆண்டுகளாகச் சமயத் தொண்டும் தமிழ்த் தொண்டும் சலியாது ஒல்லும் வகைகளி லெல்லாம் செய்து வருபவரும், பற்பல நல்ல நூல்களை எழுதியுள்ளவரும் ஆகிய குகஸ்ரீ ரசபதி அவர்கள் எழுதியுள்ள பொழிப்புரையும் குறிப்பும், எளிய இனிய தெளிவான நடையில், சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் தகைமையில் அமைந்திருக்கின்றன. நூலின் ஈற்றிற் சேர்க்கப்பட்டுள்ள "திருச்செந்தூர்ப் புராண சாரம்" என்னும் உரைநடைப் பகுதி, நூலின் பொருளை ஓரளவு எல்லோரும் விளங்கிக் கொள்வதற்குப் பெரிதும் துணைபுரியும்.

தலபுராணங்கள் தமிழ்நலமும் சமயநலமும் அமைந்து திகழ்வன. நாட்டின் பல்வேறு பகுதிகளைப் பற்றிய பலதிறச் செய்திகளையும் உணர்ந்து கொள்ள அவைகள் நமக்கு உதவி செய்கின்றன. சமயக் கருத்துக் களையும், தத்துவ நுட்பங்களையும், வாழ்வியல் அனுபவ உண்மைகளையும், நம் முன்னோர்களின் உள்ளுணர்ச்சித் திறங்களையும் பிறவற்றையும், தலபுராணங்களால் நாம் உணரப் பெறுகின்றோம். அவைகளில் அமைந்துள்ள கவிதை-இலக்கிய-அறிவுச் செல்வம் அளப்பரியது. அவைகளை இயற்றியருளிய கவிஞர்கள், நம்மனோரின் பெருமதிப்பிற்கும் வணக்கத்திற்கும் உரியவர்கள் ஆவர்.

அண்மையிற் சென்ற நூற்றாண்டின் இறுதியில் விளங்கியவரும், பல தலபுராணங்களைப் பாடிய பெருங்

கவிஞரும் ஆகிய திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களின் அருமை பெருமைகளைப்பற்றி, அவர் தம் அரும்பெறல் மாணவர் டாக்டர் திரு. உ. வே. சுவாமிநாத ஐயர் அவர்களால் தமிழுலகம் நன்கறியும். இங்ஙனமே சிவஞான முனிவர், கச்சியப்ப முனிவர் போன்ற சான்றோர்கள் பலரும், பல அரிய இனிய தல புராணங்களை இயற்றி யருளியுள்ளார்கள். அவைகளை யெல்லாம் புறக்கணி யாது கற்றுப் போற்றிப் பாதுகாத்துப் பயன் எய்த வேண்டுவது, தமிழ் மக்களின் தலையாய கடமை.

இத் "திருச்செந்தூர்ப் புராணம்" என்னும் சிறந்த நூலிற்கு உரை எழுதி அளித்த குகஸ்ரீ ரசபதி அவர் களும், இதனை வெளியிட்டு உதவும் தேவஸ்தானத் தார்களும் செய்துள்ள தொண்டு, மிகவும் பாராட்டி மகிழ்தற்குரியது.

இந் நூலை எல்லோரும் கற்றுப் பயன் எய்தி இன்புறத் திருச்செந்தூர் முருகனின் திருவருள், தண்ணளி சுரப்பதாக!

**எம். பக்தவத்சலம்.**
*30-1-61*



சென்னை அறநிலைய ஆட்சித் துறை ஆணையாளர்

உயர்திரு. **எம். எஸ். சாரங்கபாணி முதலியார்,** பி.ஏ., பி.எல்.,

அவர்கள்

# அணிந்துரை

தண்ணார் தமிழளிக்கும் தண்பாட்டி நாட்டில் **"பன்னிரு கண்ணுடைய பிள்ளை தோன்றும்"** என்று ஆளுடைய அரசுகள் பாடி மகிழ்ந்த பதி திருச்செந்தூர். மிகப் புராதனமான இப்பதியின் மகிமையை, அரிய நூற்கள் பல அறிவிக்கின்றன.

கடலும், கரையிலுள ஆலயமும், எவர் உளத்தை யும் வயப்படுத்தும் தகுதியன. முதன்மைக் கோயிலிலுள மூர்த்தம், அன்பு அருள் அமைதி ஆதிய அருளி இன்புறுத்தும் அற்புதமானது. ஆறுபடை வீட்டுள் **இரண்டாவது படைவீடு** எனற்கு ஏற்ற கம்பீர கோலத்தொடு இருக்கும் அந்த ஆறுமுகப் பெருமானை மறவாதாரே பிறவாதார்.

"அருமறை முறையிட அறைகழல் பறையிட
அடியர் உள் நினைவது உன்னடி ;
ஒருமையின் இருமையும் உதவிய மதியென
ஒளியொடு குளிர்வது உன்னருள் ;
வருமுலை வனிதையர் இருவரும் மயிலினம்
மழையென விழைவது உன்னெழில் ;
பெருகலை கலிகெழு கடலினும் எழுமடி
பெருகுவது உருகுவ நின்னருள்."

"எவ்வா றெனையுய் யக்கொள்வாய் ;
எழுதா மறையின் திறத்துள்ளாய் !
செவ்வான் அனையான் திருப்பிள்ளாய் !
தெரியா தினியுன் செயல் விள்ளாய் !"

என்றெல்லாம் உள்ளம் உருகிச் செந்திலாண்டவனைப் பாடி மகிழ்ந்த பாவலர் பலருளர்.

செந்திற் பதியிற் பிறந்து சேவை செய்து, அம்மான் அருட்கு ஆளாகும் திரிசுதந்தர அந்தணர்தம் கால்வழியில் வந்த ஸ்ரீ வென்றிமாலைக் கவிராயர் பாடிய புனித நலத்தது, திருச்செந்தூர்ப் புராணம். இதனில் உள்ள எந்தப் பாடலும், தொடுமணற் கேணிபோல் சுரக்கும் பொருள் நுட்பம் கொண்டுளது. அருமையான இப்புராணம் எங்கும் கிடைப்பது அரிதான இந்நாளில், அன்பும் பண்பும் கொண்ட திருச்செந்தூர் தேவஸ்தான தர்ம கர்த்தர்கள், அதை வெளிப்படுத்தித் தம் கடமையை நிறைவேற்றிய அருமை, பாராட்டக் கூடிய செய்தி.

திருச்செந்தில் கந்தர் கலிவெண்பா, திருச்செந்தில் நிரோட்டக யமக அந்தாதி, திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ் முதலிய நூற்களையும், மற்றும் பல நூற்களையும் எழுதி யிருக்கும் குகஸ்ரீ ரசபதி அவர்கள், இன்று இப் புராணத்திற்குப் பொழிப்பும், குறிப்பும், புராண சாரமும் எழுதி யுளர். விரித்து விளக்க வேண்டிய இடங்களில் உரை யாசிரியர் இயன்றவரை முயன்றுளர். அரிய பல நுட்பங் களை அறிதற்கு வாய்ப்பா யிருக்கிறது உரைக்குறிப்புக் கள். சிலேடைப் பாக்களிலும், மந்திர ரகஸ்யமான மரபுகளிலும், கல்பபேத நுட்பங்களிலும், அனைவரும் உணர்ந்து மகிழ வேண்டிய செய்திகள் பல இவ்வுரையில் உள.

கற்றவர்க்கும் மற்றவர்க்கும் பயனும் வண்ணம் அமைந்த இப்பதிப்பு, கண்ணைக் கவரும் கட்டடமாகவும்

அமைந்துளது. இல்லை என்ற குறையின்றி முருகன் அடியார்கள் இனி இந்நூலை ஏற்றுப் போற்றி மகிழ்வர் என்று நம்புகிறோம்.

இதைப் பின்பற்றி, தமிழ்நாட்டுத் திருக்கோயில்களின் தருமகர்த்தர்கள், தம் தலபுராணங்களையும், தலங்குறித்த சமய இலக்கியங்களையும் முறையே வெளியிட்டு, சிறந்த அச்செல்வங்களைச் சேமம் செய்வது அவர்களது புனித கடமை என்பதை நினைவூட்டுகிறோம்.

உயர்ந்த இந்நூலின் உரையாசிரியர்க்கும், பதித்து வெளியிடும் ஸ்தல தர்மகர்த்தர்கட்கும் திருச்செந்திலாண்டவன் திருவருள் துணைபுரிவதாக.

> " வந்த வினையும் வருகின்ற வல்வினையும்
> கந்தனென்று சொல்லக் கலங்குமே-செந்திநகர்ச்
> சேவகா என்று திருநீ றணிவார்க்கு
> மேவவா ராதே வினை "

மா. சே. சாரங்கபாணி
6—2—63



உ

முருகன் துணை

**உயர்திரு. ஐ. ஏ. சிதம்பரம் பிள்ளை** அவர்கள், M.A., M.L.C.

# முகவுரை

கலியுக வரதன் கண்கண்ட தெய்வம். குமரன் கோயில் கொண்டிருக்கும் முக்கிய தலங்களில் சிறந்து விளங்குவது திருச்செந்தூர். சந்தனுசலம், "வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்," "கயிலை மலையனைய செந்தில்பதி", "திருச்சீரலைவாய்", "வேலை நகர்," 'சயந்திபுரி' முதலிய திருநாமங்களை யுடைய தலம்.

சங்ககாலப் புலவர்களான நக்கீரரும், மதுரை மருதன் இளநாகனுரும், ஆதிசங்கரரும், மற்றும் பலரும் முருகனின் பெருமையைப் பாடியுள்ளார்கள். உலகம் உய்யும் பொருட்டு தாருகா சூரன் பத்மாசூரனைச் சங்கரித்து **முருகன் எழுந்தருளி யுள்ள பழம்பதி இதுவே.** குமாரக் கடவுள் நவவீரரும், இரண்டாயிரம் சேனையும் சூழ எழுந்தருளி வந்து, "**கருணை வெள்ள மெனத் தவிசின் வீற்றிருந்து**" தமது சக்தி வேலால் மாமரமாகிய சூரபன்மனை இருகூருக்கி, அவை சேவலும் மயிலுமாய்த் தோன்ற, சேவலைக் கொடியாகவும், மயிலை வாகனமாகவும் கொண்டு, "**மூவர் குறை முடித்து விண்ணங் குடியேற்றிய தலம்.**"

இன்றும் இந்நகரின் பகுதியொன்று "**மாப்பாடு**" என்றழைக்கப் படுவதே இதற்குச் சான்று.

இத்தலத்தின் விசேஷத்தையும், முருகனின் புகழை யும் பாடுகின்ற நூல்கள் பல. அவைகளில் தலை சிறந்து விளங்குவன அருணகிரிநாதர் திருப்புகழ், சுவாமி நாத தேசிகர் இயற்றிய செந்திற் கலம்பகம், குமரகுரு பர சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய கந்தர் கலி வெண்பா, பகழிக் கூத்தர் பிள்ளைத் தமிழ், சிவப்பிரகாச சுவாமிக ளியற்றிய திருச்செந்தில் நிரோட்டக யமக வந் தாதி, திருச்சிற்றம்பல் நாடிகளியற்றிய திருச்செந்தூர் அகவல், சரவணப் பெருமாள் கவிராயர் பாடிய கந்த வருக்கச் கந்த வெண்பா, தண்டபாணி சுவாமிகள் இயற்றிய வள்ளிநாயகி பிள்ளைத் தமிழ் முதலிய 19 பிரபந்தங்கள், ஆதி சங்கரர் வடமொழியில் இயற்றிய சுப்பிரமணிய புஜங்கம், வென்றிமாலைக் கவிராயர் பாடிய திருச்செந்தூர்த் தலபுராணம் முதலியன.

மடைத் தொழில் புரிந்துவந்த வென்றிமாலையென்ற வேதியர் மனமுடைந்து இறக்கத் துணிந்தபோது, முருகனால் தடுத்தாட் கொள்ளப்பட்டார். வட நூலி லிருந்து செந்தமிழில் நம் தலபுராணத்தை நீ யினிது செப்புவாயென முருகன் கட்டளையிட, செவ்வல் கிருஷ்ண சாஸ்திரியிடம் புராணம் கேட்டு, அருள் வாக்குப் பெற்று இயற்றியது இத் தலபுராணம். அழகிய சொக்கநாதப் புலவர், "**மடைதிறந்திட்ட வெள்ளம் போல வென்றிமாலைக்கு வந்தன வாக்கு**" என்று, இப்புராணத்தைச் சிறப்பித்துரைக்கின்றார்.

இந்தப் புராணம் 18 சருக்கங்களும் 899 பாடல் களும் உடையது. திருச்செந்தூர்த் தலபுராணம் வெகு காலத்திற்கு முன்பே பதிப்பிக்கப்பட்டு இப்போது கிடைப்பது அரிதாயது. ஆகவே இந்தக் குறையைப்

போக்க தேவஸ்தானத்தார் கருதினர். தலப் பெருமை யையும், மூர்த்தி விசேடத்தையும் அன்பர்கள் தெரிந்து பயனடைய வேண்டுமென்பது நோக்கம். ஆகவே முருக தாஸர்களில் தலைசிறந்தவரும், விரிவுரை வித்தகரும், அனுபூதிமானுமான உயர்திருவாளர் **குகஸ்ரீ ரசபதி** அவர்கள்தான், தேவஸ்தான சார்பில் புராணத்தை உரை எழுதிப் பதிப்பிக்கத் தக்கார் எனக் கருதி, அவர்களிடம் எங்களது விருப்பத் தைத் தெரிவித்தோம். பல பணிகளுக்கு இடையே, அவர்கள் உரையும் எழுதிப் பதிப்பாசிரியருமாக அமைய சம்மதித்தது, தமிழகம் செய்த தவப்பயனே. திருச் செந்தூர்த் தலபுராணம் நல்ல முறையில் அச்சாகி யிருக்கிறது.

நிரம்பிய புலமையுடைய அவர்கள், காவியச் சுவை நலங்களை எளிமையாகவும் இனிமையாகவும் எடுத்துக் காட்டி உரை செய்திருக்கின்றார்கள். அவர்களது நுண் மாண் நுழைபுலம் வியந்து பாராட்டற்குரியது. அவர் களுக்கு என்றும் எங்களது நன்றி உரித்து.

அவர்கள் நீடுழி வாழ்ந்து, மென்மேலும் இத்தகைய பணிகள் பல புரிந்து சிறந்து விளங்கச் **செந்திலாண்ட வன் அருள்பாலிப்பாராக.**

தவசீலர் என்று தமிழ் மக்களால் கருதப் பெறும் முன்னைய அறநிலைய ஆட்சித்துறை ஆணையாளர் **திரு. A. உத்தண்டராம பிள்ளை** I. A. S. அவர்கள், திருச்செந்திலாண்டவன் திருப்பணியிலும் பிற தல சேவைகளிலும் இடையறுது எம்மை ஊக்கியவர்கள். நாடு போற்றும் அளவு நடந்த **திருச்செந்தூர்க் கும்பாபிஷேகம்** அதற்கு ஒரு எடுத்துக் காட்டு.

அக் காலத்தில் **குகஸ்ரீ ரஸபதி**யவர்களைக் கொண்டு திருச்செந்தில் நிரோட்டக யமக அந்தாதிப் பேருரையை வெளியிடச் செய்த அவர்கள், இப்புராணத்தை வெளியிடுங்கள் என்று எங்கட்கு அன்று இட்ட கட்டளை, திருச்செந்திலாண்டவன் திருவருளால் இன்று நிறைவு பெற்றது. வாழ்க அந்தப் பெருந்தகை என்று எங்கள் தர்மகர்த்தர் குழு அவர்களை மனமார வாழ்த்துகிறது.

எங்கள் வேண்டுகோட்கு இணங்கி இந் நூற்குப் பாராட்டுரை எழுதி ஆசி கூறிய அறநிலைய ஆட்சித் துறை அமைச்சர் கனம் **M. பக்தவத்சலம்** B.A., B.L. அவர்கட்கும், அணிந்துரை உதவிய அறநிலைய ஆட்சித் துறை ஆணையாளர் **M. S. சாரங்கபாணி முதலியார்** B.A., B.L. அவர்கட்கும் எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

புராணத்தைப் படித்து மெய்யன்பர் பயனடைந்து **செந்தில் முருகனின் கருணைக்குப் பாத்திரர் ஆவார்களாக!**

இலஞ்சி
1—1—63

**ஐ. ஏ. சிதம்பரம் பிள்ளை,**
தலைவர், தர்மகர்த்தர் குழு.



தெய்வமே துணை

# முன்னுரை

திருவருள் நிறைதலம் திருச்செந்தூர். ஜயம் ஜயம் எனும் நாதம் சதா ஒலித்தலின், இப்பதி ஜயந்திபுரம் என்றும் எண்ணப்பெறும். இனிது அங்கு இருந்து, அகில உலகையும் ஆள்பவன் செந்தில் ஆண்டவன்.

> தண்டையணி வெண்டையம் கிண்கிணி சதங்கையும்
> தண்கழல் சிலம்புடன் கொஞ்சவேநின்
> தந்தையினை முன்பரிந் தின்பவுரி கொண்டுநன்
> சந்தொடம ணைந்துநின் றன்புபோலக்
> கண்டுறக டம்புடன் சந்தமகு டங்களும்
> கஞ்சமலர்ச் செங்கையும் சிந்துவேலும்
> கண்களும் முகங்களும் சந்திரநி றங்களும்
> கண்குளிர என்றன்முன் சந்தியாவோ?

எனவரும் திருச்செந்தூர்த் திருப்புகழை, ஐந்து வயதில் அடியேன் பாடக் கற்பித்தார் ஸ்ரீ பரமேஸ்வர ஐயர். அன்று முதல் அப்பாடல், உளத்தில் உருண்டு புரண்டது; உவகை தந்தது. அதன் பயன் தானோ என்னோ! அடியேன் உள்ளம், என்றும் திருச்செந்தூரில் இருக்கிறது.

கனவில் நனவில், கண்ணில் கருத்தில், எண்ணில் எழுத்தில், இணைந்து தன்னை யறிந்து இன்புற, அன்பர்கட்கு அத்தன் அருளும் ஆடலை ஓத ஒருநாப் போதுவதோ?

அன்பும் பண்பும் கொண்டு அடியேனை ஆசி செய்யும் **பிரமஸ்ரீ சு. முத்துஸ்வாமி ஐயர்; டாக்டர் பிரமஸ்ரீ மணி ஐயர்** அவர்கள் இருவரும், பதினான்கு ஆண்டுகளாக நடத்தி வரும் **அமிர்தவசனியெனும்** தெய்வீக மாத இதழில், **கந்தர் கலிவெண்பா** விரிவுரையை, இலைமறை காய்போல் இருக்கும் **செந்தில் அடியவர் வரலாறுகளை** எழுத உதவிய திருவருள், **திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்** விரிவுரையில் ஈடுபடுத்தி, அதுவும் வெளிவர அருளியது.

பல தலங்களில் வெள்ளி விளக்குகள் ஏற்றிய சென்னை கிடங்குத் தெரு **ஸ்ரீ பாலசுப்ரமண்யம் கம்பெனியார் டிரஸ்ட்** மூலம், **திருச்செந்தில் நிரோட்டக யமக அந்தாதி விரிவுரையைத்** தன் கோயில் **கும்பாபிடேக காலத்தில்** எழுதப் பணித்து எம்மான் ஏன்று கொண்டனன்.

கவிக்காளமேகம், வண்ணச்சரபம் **ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள்** அருளிய செந்தில் பிரபந்தம் 19. அவை களுள் மூன்று அச்சேறியுளது. மூன்றுள் ஒன்றான **ஸ்ரீ வள்ளிநாயகிப் பிள்ளைத் தமிழ்** ஷை டிரஸ்டார் ஏற்பாட்டின் படி, சுவாமிகள் பெயரர் திரு. **தி. செ. முருகதாச பிள்ளை** அவர்கள் குறிப்புடன், தேவஸ்தான வெளியீடாக அடியேன் பார்வையில் வெளிவந்தது.

ஒருநாள் பரணிதினம். வைகறை நேரம். தெய்வப் பிரதிநிதிகளாக அடியேன் எண்ணி யிருக்கும் **திரிசுதந்தரர்கள்** ஆசிகூறிப் பூதியளிக்க, ஷண்முக விலாசத் தில், ஆயிரக்கணக்கான அன்பர்கள் நடுவில், திருச் செந்தூர்ப் புராண விரிவுரை செய்வதாக, களிவைத் தருமொரு கனவு கண்டேன். விழித்தேன். வியர்த்தது உடல். விடியும் வரை, செந்தில் துரையைச் சிந்தித் தேன். சிந்தையில் தங்கும் செந்தில் பெருமா! நினைவை எழுப்பினை! நிறைவேற்றிவை என்று, நெஞ்சைத் தூது போக்கி நெகிழ்வு கொண்டேன்.

அன்று ஆணையாளரா யிருந்த உயர் திரு. **A. உத்தண்டராம பிள்ளை, I. A. S.,** அவர்களை அணுகினேன். திருச்செந்தூர்ப் புராணத்திற்கு உரை யெழுதலாம்; வாழ்வளிக்கும் அந்நூலை வெளியிட வழி செய்யுங்கள் என்று விண்ணப்பித்தேன். பயனுள பணி என்று பாராட்டி ஆவன செய்த அவர்கள் அன்புளத்திற்கு, எளியேன் வணக்கம் என்றும் உரியது.

திருச்செந்தூர்த் தேவஸ்தானம் மிகப் பெரியது. அங்குள்ள நிர்வாகிகள் ஒவ்வொருவரும், அளவிறந்த அன்புடையவர்கள். நிர்வாக சூழ்நிலையும் அளவிலா தன. அந்நிலையிலும், சுமுகமான பதில் அவர்களிடம் இருந்து வந்தது.

அமைதி கருதும் அடியேற்கு, இடையில் சென்னை கந்த கோட்டத் தலபுராணத்தை எழுத உதவினன் எம்பெருமான். கனம் அறநிலையத் துறை அமைச்சர் அவர்கள் தலைமையில், அந்நூல் அரங்கேறியது. இன்றைய ஆணையாளர், மற்றும் பல அறிஞருடன் பரிவு காட்டி நூலைப் பாராட்டி, விலையுயர்ந்த பொன்னுடை ஒன்றைப் போர்த்தினர்.

அப் போர்வையுடன், சேவை கருதி, புனித ஸ்ரீ முத்துக் குமரன் சந்நிதியுட் புகுந்தேன்.

"திருச்செந்தூர்ப் புராணப் பிரதி, அகப்படுவது அரிதாய் விட்டது. உரை எழுதுவதாகக் கேள்விப் பட்டேன். விரைவில் எழுதி வெளிப்படுத்துங்கள்" என்று, அன்பொடு பக்தர் ஒருவர் அங்கு அறிவித்தார். புன்னகையொடு வந்த அப்பொன்னுரை, அத்தன் அறிவிப்புப் போல அடியேன் அறிந்தேன். அதற்கு ஏற்றபடி, 'விரைவில் எழுதுக. வெளியிடலாம்' என்று, திருச்செந்தூர் தேவஸ்தான நிர்வாகிகளின் திருமுகம்

அடுத்த நாளே வந்தது. ஆரம்பம் தொடங்கி இது குறித்த தொடர்புகளை எண்ணும் போதெல்லாம், செந்தில் பெருமா! ஆயுள் உள்ளவரை இப்படியே அருள்க ஐயா! என்று, உளத்தால் விண்ணப்பித்து உருகினேன்.

அதிகம் பாரம் ஆகும் என்று, பொழிப்புரையும், குறிப்புரையும், அவசியமான இடங்களில் விரிவும், புராண சாரமுமாக ஓரளவு முயன்றுளன். அப்படியும் ஏறக்குறைய நாற்பது பாரங்கள் ஆயின.

நம்பன் உதவும் என்று நம்பி எழுதிய இவ்வுரையில், பாராட்டத்தக்க பகுதிகள் உளவேல், அது திருவருள் உதவுதல். மற்றவை, என் அறிவினைத் தகையும் கருமல காரியம் என்று, அன்பர்கள் கருத வேண்டுகிறேன்.

உரையில் ஏதேனும் குறையுளதேல், அறிஞர்கள் தம் இயற்கைக் கருணையால் அறிவிப்பர். அடுத்த பதிப்பில் திருத்திக் கொள்ளலாம் என்று நம்பியுளன்.

இந்நாட்டின் **கல்விச் செல்வம், பொருட் செல்வம், அறநிலைய ஆட்சித் துறை அருட்செல்வம் மூன்றையும் பல காலமாகப் பாதுகாத்து வரும் அமைச்சர் பெருமான்** உயர்திரு. **M. பக்தவத்சல முதலியார், B.A., B.L.,** அவர்கள், தம் பரந்த உளத்தால் இவ்வுரைக்குச் செய்த **பாராட்டுரையும்,**

தரும குணமும், அமைதி உளமும், அருள்நூல் ஆர்வமும் பெருகிய இன்றைய அறநிலைய ஆட்சித் துறை ஆணையாளர் உயர்திரு. **M. S. சாரங்கபாணி முதலியார், B.A., B.L.** அவர்கள் தந்த **அணிந்துரையும்,**

அன்பு மிகுந்த குணத்தாலும், அறிவு மிகுந்த செயலாலும், புன்னகையுடன் தக்கோரைத் தாய் போல் அணைக்கும் தரும சீலத்தாலும் உயர்ந்த திருச்செந்தூர் தேவஸ்தான தர்மகர்த்தர் குழுத் தலைவர்,

இலஞ்சி வள்ளல் I. A. சிதம்பரம் பிள்ளை, M.A., M.L.C. அவர்கள் தர்மகர்த்தர்கள் சார்பில் தந்த முகவுரையும், இத்தகைய பணிகளில் எற்கு மென்மேலும் ஊக்கம் மிகச் செய்த நல்லாசி என்றே நம்புகிறேன். வரத குமரன் திருவருளால், வாழ்க இப் பெருமக்கள் என்று வாழ்த்துகிறேன்.

இப்புராண வுரை எழுத ஆதரவு அளித்த அந்நாளில் இறைபணியாளரா யிருந்த திரு. இராமைய நாயுடு B.A. அவர்கள், பழனித் தலத்தி லிருந்தபடி, உரைப்பணி எவ்வளவு நிறைவேறியுளது என்று இடையிடை எழுதி வினவியபடி யிருந்தனர். அவர்கட்கும், செந்தில் சொற்பொழிவிற்குச் சென்றிருந்த சமயம், ஆர்வத்தோடு பாராட்டியும், இடையிடை படங்களை அனுப்பியும் உதவிய இன்றைய திருச்செந்தூர் தேஸ்தான இறைபணியாளர் திரு. C. S. தீனதயாளு BSC., B.L. அவர்கட்கும், இவ்வுரையை அழகாகப் பதித்த திருவள்ளுவ நாயனார் திருக்கோயில் தலைமைத் தர்மகர்த்தரான பார்க்கர் அச்சக அதிபர் அவர்கட்கும், இறைவன் அருளால் எந்நலனும் நேர்க என இறைஞ்சுகிறேன்.

இத்தகைய திருப்பணி என்றும் அடியேற்கு இருக்க அன்பர்கள் ஆசி செய்ய வேண்டுகிறேன். திருச்செந்தி லாண்டவன் திருவருளால் அமைதியை உலகம் அடைவதாக! வணக்கம்.

அளியாலும் சோலை, ஒளிசேர்வான் செந்தூர்
தெளிவாயால் நெஞ்சே! அழியா வீடுண்டே.
ஆறுமுகப் பெருமான் திருவடிகட்கே அடைக்கலம்!!

ஓம்

திருவருள் நிலையம்
97, சஞ்ஜீவிராயன் கோயில் வீதி,
பழைய வண்ணை, சென்னை-21.

இங்ஙனம்,
அன்பர்கள் ஆசியை விழையும்
குகஸ்ரீ ரஸபதி.

உ

ஆறுமுகம் துணை

# திருச்செந்தூர்த் தலபுராணம்

அருளிய

# வென்றிமாலைக் கவிராயர்

# வரலாறு

தண்பொதியத் தமிழ் நாட்டில், பரம குமரன் தலங்கள் பல. அவைகளுள், திலகம் போல்வது **திருச்செந்தூர்.** இது, பயன்தரும் கடற்கரையில் உள்ள பழம்பதி; இரண்டாவது படைவீடு; இங்கு வீற்றிருக்கும் ஆறுமுகப் பெருமானை, அந்தணர் ஈராயிரவர் ஆராதிக்கின்றனர். இவர்கள் **திரிசுதந்திரர்** எனப் பெறுவர்.

அவர்களுள் ஒருவர், அருந்தவம் மிக்கவர். பெருமான் அருளால், அவர்க்குப் பிறந்தது ஒரு பிள்ளை. ஐந்து வயது ஆனபின், பிள்ளையைப் படிப்பிக்கப் பெற்றோர் முயன்றனர்.

கோயிலைச் சுற்றுவது; பரமன் திருவுருவை உளத்தில் பதிப்பது. ஆறுமுகம் துணை என்று விழுவது. வணங்கி எழுவது. இவைகளைத் தவிர, புனித கல்வியில் புத்தி புகவில்லை. வரவர வயது வளர்ந்தது.

இது கண்டு, தந்தை மனம் தளர்ந்தது. வேறு வழியில்லை. ஆலய **மடைப்பள்ளித்** தொழிலில்

பிள்ளையை அமர்த்தினர். சிறக்க நிவேதனங்களைச் சித்தப்படுத்தும் இதுவும் ஒரு **புண்ணியமான திருப்பணிதான்.** அவர் உள்ளத்தில் செந்திலான், அதிக உறவு பூண்டான். அப்பரனை உணரும் தியானத்தில் அவர் ஆநந்தம் கொள்வார்.

ஒருநாள், நெடுநேரம் தியானம் நீடித்தது. அதன்பின் விழித்தார். நிவேதன காலத்தை நினைத்தார். அஞ்சியது மனம். விறுவிறுத்துச் செயலில் விரைந்தார்.

அன்று ஆறுமுக சுவாமிக்கு அபிஷேகம், அற்புதமாக இருந்தது. முதன்மை அலங்காரம் முடிந்தது. எங்கே நைவேதனம்? எங்கே என்று, ஏக குரல்கள் எங்கும் எழுந்தன. ஓடி வந்தனர் சிலர். மடைப்பள்ளியுள் புகுந்தனர். நைவேதனம் கொண்டு வாரும்! உம்! சீக்கிரம் என்றனர். இதோ விரைவில் சித்தப் படுத்தி விடுகிறேன் என்றார், பாகம் கைவந்த பக்தர்.

ஆராதனையில், காலம் தவறுவது ஆகாது. அதிகாரிகள், தாமதத்தை அறிந்தனர். பதைத்தது மனம். இழுத்து வாருங்கள் அவரை! என்று அதிர்த்தனர். இந்தப் பிழைக்குத் தண்டம் இது என்று, தேவாலயத்தில் அன்று தீர்ப்பிருந்தது. அதன்படி அன்பரை, கை கால்களில் கிட்டி கட்டி அடித்தனர். அதனுடன், வேலையிலிருந்தும் விலக்கினர்.

உபாதை பொறுக்க முடியவில்லை. இரவு நேரம். அன்பர் கடற்கரையை அணுகினார். உள்ளம் உருகி முருகனை உணர்ந்தார்.

அயிலேந்தும் அரசே ! மயிலேந்தும் மணியே ! உணர்வால் உறவு பூண்டேன். பற்றிய எளியேனை அதிகம் பற்றியவர் நீர்தானே! விழிப்பில் இருந்தால், சிறக்கப் பணியைக் காலத்தில் செய்திருப்பேனே! அடிபட்டவன் உன் அடியவன். அது உனக்குத்தானே குறை! அந்தக் குறைக்கு இடமான இவ்வுடல், அழியத்தான் வேண்டும் என்று அழுதார்.

ஓ ! ஓ என்று ஒலிக்கிறது கடல். வீழ்ந்து இரக்க நினைந்தார். கடலை நோக்கி விரைந்தார்.

நில்! நில்! என்று, பின்புறத்தில் எழுந்தது ஒரு குரல். தடுப்பது யார்? திரும்பிப் பார்த்திலர். இருக்க விருப்பம் இல்லை என்று, வீரிட்ட கடலில் வீழ்ந்தார். ஆம். அவ்வளவுதான். மறைந்தது அவர் திருவுருவம்.

என்ன வியப்பு! பெருகி யெழுந்த ஒரு பேரலை, அவரை வாரிக் கரையில் ஒதுக்கியது. உருண்டார். சமாளித்து எழுந்தார்.

வள்ளி மணாளா! கடமையில் தவறியவர்கள், பூமிக்குப் பாரம். வாழ நினைத்திலன். இறக்கக் கூடவா சுதந்தரம் இல்லை? குலுங்கியது உடல். குமுறி யழுதார்.

உலகர்க்கு உதவியாக, அவசியமான காலம் வரை அன்பர்கள் இருக்கத்தான் வேண்டும். திருச்

செந்தூர்ப் புராணத்தை, பயன்தரும் தமிழால் பாடு! செவலூர் கிருஷ்ண சாஸ்திரியைப் போய்ப் பார்! என்று ஒரு குரல் எழுந்தது.

எவர் அறிவிப்பு இது? ஏறிட்டு நோக்கினர். என்ன அதிசயம்! கருணை பொழி முகங்கள் ஆறும், கரங்கள் பன்னிரண்டுமான கந்தப் பரமன், எதிரில் காட்சி யாயினன்.

பிரபோ! நான்மறை தேடும் நாயகா! எளிய என்னையும் பொருளாக்கி எழுந்தருளல் செய்தாயா? கல்விஞானம் இல்லா எனக்கா இக்கட்டளை? என்று, வீழ்ந்து பணிந்து எழுந்தார். கடவுள் பெருமான் திருவுருவம் கரந்தது.

பெருகியது கண்ணீர். அடடா!பரமன் திருவடிகளைப் பற்றிக் கொண்டேன் இல்லையே! ஏமாந்தேனே ஏழை! என்று, எண்ணி மனம் இடிந்தார்.

கட்டளையில் கவனம் சென்றது. அதி வைகறையில் நீராடி அனுட்டித்தார். செவலூர்க்குச் சென்றார். ஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரிகளைத் தரிசித்தார். ஸ்வாமி! திருச்செந்தூர் மகாத்மியத்தைத் தாங்கள் அறிவீர்களா? என்று வினவினர்.

ஓஹோ! நீங்கள் தானா! வைகறையில் ஒரு பக்தன் வருவான். வடமொழியில் உள்ள தல மகாத்தியத்தை மொழிபெயர்த்துச் சொல் என்று, கனவில் அடியேற்குக் கட்டளை; வாழ வழிபிறந்தது என்று நினைத்தேன்; தாங்களும் வந்தீர்கள் என்று ஆநந்தித்தார் சாஸ்திரிகள்.

எண்ணி வந்த பக்தரை, எதிரிலிருந்த பீடத்தில் இருத்தினர். வடமொழி நூல் அவரிடம் வாளா இருந்தது. எடுத்தார். விரிவாக அதன் பொருளை விளக்கினர்.

என்ன அதிசயம்! பக்தரிடம், கடல்மடை திறந்ததுபோல் கவிவெள்ளம் பெருகியது. அவர் ஒவ்வொரு சுலோகமாக மொழி பெயர்த்தார். அப் பொருள், உடனே தமிழ்ச் செய்யுள் உருவம் கொண்டது. ஏறக்குறைய 900 பாடல்கள் தோன்றின. புராணப் பாடல்களில் சொல்லாட்சி, பொருளாட்சி, நடை தொடை முதலிய நல்லாட்சிகள், ஆநந்த நடனம் ஆடின.

வியந்தார் சாஸ்திரிகள். அன்பரே! இன்று முதல் உம் திருநாமம், **வென்றிமாலைக் கவிராயர்** என்று விளங்குவதாக என்றுரைத்தார்.

ஏறக்குறைய 200 ஆண்டுகட்கு முன்பு இருந்த இவர்க்கு, பெற்றோர் இட்ட பெயர் தெரியவில்லை. வென்றிமாலைக் கவிராயர் என்ற பெயரே, இன்றுவரை நின்று எங்கும் நிலைத்தது. அவரை அப் பெயராலேயே நாமும் அறிவம்.

வரகவியான கவிராயர், சாஸ்திரிகள் இடத்தில் அனுமதி பெற்றுப் புறப்பட்டார். செந்திலை யடைந்தார். ஆண்டவன் சந்நிதியில், புராணம் அரங்கேற வேண்டும் என்று அவாவியது மனம். அரிய நிர்வாகிக ளிடத்தில் அதை அறிவித்தார்.

நேற்றுவரை சுயம்பாகி. அத்தொழிலுக்கும் தகுதியற்றவன். இன்று புராணம் இயற்றி யிருக்கிருனும் என்று, பயனுன நூலை வாங்கியும் பார்த்திலர்; ஏளன நகைதான் எங்கும் எழுந்தது.

கவிராயர் சிந்தித்தார். எம்மான் திருவுளம் போல் எதுவும் ஆகும் என்று, ஆறி மனம் தேறினுர். கடலை யடைந்தார். எழுதி யிருந்த ஏடுகளை எடுத்தார். கடலில் எறிந்தார். அங்கிருந்து அகன்றுர். அரிய ஒரு இடத்தில் அமர்ந்தார். சிவயோகத்தில் ஆழ்ந்தார். பலகாலம் இந்த நிலை.

முதன்மையான உன் திருப்பணி முடிந்தது. இனி நீ வா! என்று எழுந்தது ஒரு நாதம். அதனில் லயமாஞர். கவிராயர் ஆன்மா, இறையருள் நிழலில் கலந்து இன்பம் கண்டது.

அன்று ஆளுடைய பிள்ளையார் இட்ட பதிக ஏடு, வைகையில் எதிரேறிச் சென்றது. அதுபோல் இவர் எடுத்து இட்ட ஏடுகளை, அலைகள் ஏந்திச் சென்றன. ஈழ நாட்டுக் கடற்கரையில் ஒதுக்கின. அந்த இடம், பனைமுறி என்று இன்றும் பெயர் கொண்டு இருக்கிறது. பனை ஓலையில் எழுதிய நூல் அடைந்த முனை என்பது அதன் பொருள்.

அங்கு ஒரு சுப்பிரமண்ய பக்தர். அவர் கரை யோரத்தில் ஏடுகளைக் கண்டார். விரைந்தார். எடுத்துத் தொகுத்தார். ஓதினுர். அரிய பாக்களின் அருமையை அறிந்தார். உள்ளம் உருகினுர். அந்நூலைத் தாம் அறியுமாறு செய்த எம்மான் திருவருளை எண்ணினுர். இன்பக் கண்ணீரைச் சிந்தினுர்.

ஏடுகளைப் பல்லக்கில் ஏற்றினார். மங்கள வாத்தியங்கள் ஒலிக்க மரியாதை காட்டினார். எடுத்துச் சென்றார். தம் திரு மாளிகையில் சேர்த்தார். பதினாறு உபசாரம் செய்து, அதை நாள்தோறும் பாராயணம் பண்ணினார்.

சக்கர சுவாசம் என்பது, ஒரு விஷக் காற்று. ஒரு சமயம் அது, பட்டினம் முழுவதும் பரவியது. அதனால் நலிந்தவர் பலர். இறந்தவர்கள் சிலர். ஏடு இருந்த வீதியில் மட்டும், எவர்க்கும் ஒரு இடர் இல்லை.

திருச்செந்தில் ஆண்டவன், அதன் அருமையை எவர் கனவிலும் அறிவித்தான். விவரம் அறிந்த பலர் விரைந்தனர். புராணத்தைக் கண்டனர். புளகிதம் எய்தினர். பல பிரதி செய்தனர். தம் தலத்தில் அரங்கேற்றினர். தனியின்பம் கண்டனர். அதன் பயனாக, விஷக்காற்று மறைந்தது. பொங்கும் மங்களம் எங்கும் எழுந்தது. வென்றி மாலைக் கவிராயர் இயற்றிய **திருச்செந்தூர்ப் புராணம்,** ஓதுவார் உள்ளத்தை உருக்கி, எங்கும் பரவி, இன்று நாடு முழுதும் நடமிடுகின்றது. வாழ்க வென்றி மாலைக் கவிராயர் என்று, அவரை வணங்குகின்றது நம் சிரம்.

தெய்வீகம் எய்திய
வென்றிமாலைக் கவிராயர்
திருவடிகட்கே அடைக்கலம்!

ஓம்!

## உள்ளத்தைத் தொடும்
## *உயர்ந்த சில குறிப்புகள்*

(எண்–பா எண்)


கந்தன் பெயர் பொருள் 146.
கார்த்திகேயன் 649, 650.
குகன் 864.
சரவணபவன் 643, 644.
சுகர்தவக்கடல் 301, 767, 830.
சுப்ரமண்யம் 641, 642.
தபோவனம் 796.
திரிசுதந்தரர் சிறப்பு 397, 483 முதல் 510 வரை.
திருமண தத்துவம் 330.
திருவேங்கடவன் 647.
திருவோலக்கச் சிறப்பு 223.
தேவயானையார் வேண்டுகோள் 382.
பதினெட்டுத் தல லீலைகள் 798 முதல் 826.
பாராயணத்திற்குரிய பக்தி தத்துவப் பாடல்கள் 433 முதல் 445; 453 முதல் 457; 603, 604; 856 முதல் 888 வரை.
பிரணவமேனியன் 651, 652.
புட்கரணி மேன்மை 408.
புராணச் சிறப்பு 61.
முருகநாம மகிமை 328.
மூர்த்தி மகிமை 74.
மூர்த்தி தலம் தீர்த்தம் 99.
வதனாரம்பம் 411.
வள்ளியம்மை 260, 268, 274.
வியாசர் பெருமை 36, 44, 301, 797.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருச்செந்தூர்த் தலபுராணம்

## காப்பு

ஊற்றெ டுத்துவண் டோலிடு மும்மதத்(து)
ஆற்றொ ழுக்கின் அருவியம் சாரல்வாய்
ஏற்று கைக்கும் இறைவற்கு முந்திய
மாற்றி லாக்களி யானையை வாழ்த்துவாம்.

(பதவுரை) :—ஊற்று எடுத்து - ஊற்றுகின்ற மதநீரை உண்டு; வண்டு ஓலிடும் - வண்டுகள் ஒலிக்கின்ற; மும்மதத்து ஆற்று ஒழுக்கின் அருவி அம் சாரல் வாய் - (யானை) மும்மதம் ஆறுபோல் ஒழுகும் அருவிகளையுடைய அழகிய (மலைச்) சாரலில்;

ஏற்று உகைக்கும் இறைவற்கு முந்திய - ஏறு மயில் ஏறிச் செலுத்தும் முதல்வனை முருகப் பரமனுக்கு முற்பட்ட;

மாற்று இலாக் களி யானையை வாழ்த்துவாம்— மாறுபாடு இல்லாத ஆநந்தமான யானைமுக கணபதியை, (இந்நூற்குக் காப்பு செய்க என்று) வாழ்த்துவம், (எ-று).

(குறிப்பு) :—மலை நிலத்தது மதயானை. தின்று கொழுத்துத் திமிதமிடும் அவைகள், மதநீரைப் பெய்கின்றன. அதை

உண்டு வண்டுகள் ஆரவாரிக்கின்றன. அருவிநீர் பெருகும் அம்மலைகளின் சாரலில், ஆண் மயில் ஏறி நடத்துகின்றான் ஆறுமுகப் பெருமான். அப்பெருமானுக்கு மூத்தவர் ஆனை முக அத்தர். ஓங்கார முகத்தரான அவர், ஆநந்த மேனியர்; அதனால் 'களியானை' எனும் பெயரினர். இப்புராணத்திற்கு அவரே காப்பாளர் ஆதலின், வாயார ஆரம்பத்தில் அவரையே வாழ்த்துவம் என்றபடி.

'மும்மதத்து ஆற்றொழுக்கின் அருவியை யுடைய மலை போன்ற விடையூரும் பெருமாற்கு மூத்த பிள்ளையான களியானையை' என்று கூட்டிப் பொருள் கொண்டாருமுளர். பொருத்தமேல் கொள்க. ஏறு என்பது, தன்னொற்று இரட்டி ஏற்று என நின்றது.

## கடவுள் வாழ்த்து

### சிவபெருமான்

1. இருப்பதப் பிரணவத் தியல்பென் றாலமே
சருப்பதச் செய்கைய தாக்கித் தங்கவான்
பருப்பதச் சிலைகொணற் பரமன் தாமரைத்
திருப்பதத் துணைமலர் சென்னி சேர்த்துவாம்.

(பதவுரை):—இருப்பது அப் பிரணவத்து இயல்பு என்று - நிலையுள்ளதாகிய அந்தப் பிரணவத்தின் இயற்கை வடிவம் என்று இருந்து;

ஆலமே சருப்பதச் செய்கையது ஆக்கி - நஞ்சை (அவி) உணவுச் செயலாக ஏற்று;

தங்க வான் பருப்பத சிலை கொள் நல் பரமன் - வானளாவிய பொன்மலையை வில்லாகக் கொண்ட சிவ பெருமானுடைய;

திருப்பதத் துணைமலர் சென்னி சேர்த்துவாம் - திருவடித் தாமரைகளைச் சிரமேற் கொண்டு வணங்குவம், (எ-று).

(குறிப்பு) :—என்று எனும் எச்சம், ஆக்கி என்பதனோடு இயைந்தது. சருப்பதம் - உணவு ; இருபெயரொட்டு. (1)

## உமாதேவியார்

2. ஊடலின் உடைந்த சங்கம்
 ஒளிர்சடைப் பிறைவெண் கீற்றின்
மாடுறப் பொருத்தும் போழ்து
 மகிழ்நருள் குறித்து நோக்க
ஏடுறு தளவப் போதின்
 இளநிலா முறுவல் பூத்துப்
பீடுறு மதியிற் செய்த பெண்ணடி
 வணக்கம் செய்வாம்.

(பதவுரை) :—ஊடலின் உடைந்த சங்கம் - ஊடலால் உடைந்த சங்கு வளையலின் துண்டம் (ஒன்றை) ;

ஒளிர் சடைப் பிறை வெண் கீற்றின் மாடுறப் பொருத்தும் போழ்து - பிரகாசிக்கின்ற சடையில் உள்ள வெண்பிறையின் நுனியின் பொருந்தச் சேர்க்கும் அமயம் ;

மகிழ்நர் உள் குறித்து நோக்க - (பரம பதியான) நாயகர், (அதைத்) திருவுளத்தில் அறிந்து (திருவருள்) நோக்கம் பாலிக்க ;

ஏடுறு தளவப் போதின் இளநிலா முறுவல் பூத்து - இதழ்களை யுடைய முல்லை யரும்பு போன்ற புன்னகையால் சந்திரிகையைத் தோற்றுவித்து ; பீடுறு மதியிற்

செய்த பெண் அடி வணக்கம் செய்வாம் - பெருமிதம் பொருந்திய (முழு) மதிபோல் அனுபவம் செய்த (உமா) தேவியின் திருவடிகளை வணங்குவம், (எ-று).

**(குறிப்பு) :—உடைந்த பாதி வளையலை, பாதி மதியொடு பொருத்தி முழுமதி யாக்கினள் முதல்வி ; பரமன் அதைப் பார்த்து மகிழ, முழு நிலவு ஒளியை முறுவலில் காட்டினள் என்றபடி. சங்கம் – சங்கு வளையல். துண்டம் – உடைந்த பாகம். மாடு – பக்கம். பீடு – பெருமிதம். மதியின் – திங்களைப் போல.** (2)

## விநாயகக் கடவுள்

3. எழுத்தும் சொல்லும் பொருளும் இணக்குற
வழுத்தும் சீர்செயந் திப்பதி மான்மியம்
விழுத்த கும்தமி ழால்சொல வேதமே
பழுத்த குஞ்சரன் பாதங்கள் போற்றுவாம்.

(பதவுரை) :—எழுத்தும் சொல்லும் பொருளும் இணக்குற - எழுத்துக்களும் சொற்களும் பொருள்களும் (மங்கலமாகப்) பொருந்த ;

வழுத்தும் சீர் செயந்திப் பதி மான்மியம் - (சிறந்தோர்) துதிக்கும் திருச்செந்தில் மகாத்மியத்தை ;

விழுத்தகும் தமிழால் சொல - (தனிப்பெரும்) சிறப்புடைய தமிழால் பாட ;

வேதமே பழுத்த குஞ்சரன் பாதங்கள் போற்றுவாம் - வேதத் தருவில் (கனிந்த) கனியான யானைமுக கணபதியின் (தூய) திருவடிகளைத் துதிப்பம், (எ-று).

(குறிப்பு) :—எழுதப் படுதலின், வரி வடிவம் எழுத்தெனப் பெற்றது. அவைகளுள் மங்கல எழுத்து சில. பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் நான்கும் ஆக்கம் தரும் சொற்களாக அமைவது நலம். பொருள் கோள் விழுமியதேல், நூல் புனிதமுறும். இங்ஙனம் புனிதத் தமிழில் இந்நூல் உருவாக, வைதிக கணபதி யடிகளை வணங்குவம் என்றபடி. 'வேதம் பழுத்த குஞ்சரன்' எனும் பகுதியை, உணரும் உள்ளம் நெகிழ்தலுறும். விழு – சிறப்பு. (3)

## வயிரவர்

4. கிஞ்சு கந்தரு வாய்க்கலைக் கிள்ளையான்
அஞ்சு கம்மிலொன் றற்றிடக் கிள்ளியே
மிஞ்சு கந்தொறும் மிக்குறும் கார்நிறக்
கஞ்சு கன்பொற் கழலிணை போற்றுவாம்.

(பதவுரை) :—கிஞ்சுகம் தரு வாய்க் கலைக் கிள்ளையான் - முருக்க மலர்போல் (சிவந்த) வாய்க் கிளியாம் கலைவாணி கணவனை பிரமனுடைய ;

அஞ்சு கம் ஒன்று அற்றிடக் கிள்ளியே - ஐந்து தலைகளுள் ஒன்று அறுபடும்படிக் கிள்ளி ;

மிஞ்சு உகந்தொறும் மிக்குறும் - எஞ்சிய யுகங்கள் தோறும் (துட்ட நிக்கிரகச் செயல்) மிக்குச் செய்யும் ;

கார்நிறக் கஞ்சுகன் பொன் கழல் இணை போற்றுவாம் - கருநிறச் சட்டை யணிந்த வயிரவக் கடவுளின் பொன்போலும் இரு திருவடிகளையும் ஏத்துவம், (எ-று).

(குறிப்பு) :—கிளிபோலும் கொஞ்சிக் கலைகளைக் கூறும் வாணியை, 'கிள்ளை' என்றூர். ஐந்து என்பது அஞ்சு என்று திரிந்தது. கம் – தலை. கிஞ்சுகம் – முருக்க மலர். தரு – ஒத்த. கார்நிறக் கஞ்சுகன் – கருஞ்சட்டையணிந்தவன். (4)

## வீரபத்திரக் கடவுள்

5. ஆளு டைத்தனி ஆதியை நீத்தொரு
வேள்வி முற்ற விரும்பிய தக்கனூர்
நீள்சி ரத்தை நிலத்திடை வீட்டிய
வாள்ப டைத்த மதலையைப் போற்றுவாம்.

(பதவுரை) :—ஆள் உடை தனி ஆதியை நீத்து - (அடியரை) ஆளுத லுடைய ஒப்பற்ற முதல் கடவுளை (அகங்கரித்து) ஒதுக்கி ;

ஒரு வேள்வி முற்ற விரும்பிய - ஒரு யாகத்தை நிறைவேற்ற ஆவலித்த ;

தக்கனூர் நீள் சிரத்தை நிலத்திடை வீட்டிய - தக்க னுடைய நெடுந்தலையை நிலத்தில் (உருளும்படி) வெட்டித் தள்ளிய ;

வாள் படைத்த மதலையைப் போற்றுவாம் - வாள் படை ஏந்திய (வீரபத்திரர் எனும் தூய) சிவகுமரரைத் துதி செய்வம், (எ-று).

(குறிப்பு) :—வாக்கிற்கும் நோக்கிற்கும் எண்ணிற்கும் எட்டாதவனை, 'ஆளுடைத் தனி ஆதி' என்றார். (5)

## சுப்பிரமணியக் கடவுள்

6. வண்டடை கிடந்தின் இசைமுரன்
றெழுதேன் வாய்மடுத் துண்டுகால் உழக்க
விண்டுடைந் தலரும் கடம்பணி தடந்தோள்
வெற்பெலாம் பொற்புலாம் சுடர்வேல்
கெண்டையம் தடங்கண் குறக்கொடி களபக்
கிளரொளி முலைவனப் பெழுதக்
கண்டுகண் டுள்ளம் களிப்பருச் செந்தூர்க்
கந்தனை வந்தனை புரிவாம்.

(பதவுரை) :—வண்டு அடை கிடந்து இன் இசை முரன்று - வண்டுகள் அடைந்து கிடந்து (பயனுன) இனிய இசை பாடி ;

எழு தேன் வாய் மடுத்து உண்டு - ஊறுகின்ற தேனை வாய் நிரம்பப் பருகி ;

கால் உழக்க விண்டு உடைந்து அலரும் கடம்பு அணி தடம் தோள் வெற்பெலாம் - கால்களால் மிதிக்க வாய் பிளந்து கட்டு விட்டு மலரும் கடப்ப மாலை யணிந்த மாபெரும் (பன்னிரு) தோள்களாகிய மலைகள் தோறும் ;

பொற்பு உலாம் சுடர்வேல் - பொலிவு நிழலிடும் ஒளியினை யுடைய வேல் படையையும் ;

கெண்டை அம் தடம் கண் குறக்கொடி களபக் கிளர் ஒளி முலை வனப்பு எழுத - கெண்டை மீனையும் போன்ற பெருங்கண் படைத்த குறவர் பூங் கொடியான வள்ளி யம்மை, கலவைச் சாந்து அணிந்த பேரொளி வழங்கும் (தன்) குயங்களால் அழகிய கோலம் எழுத ;

கண்டு கண்டு உள்ளம் களிப்பு அரு - பார்த்துப் பார்த்து உள்ளத்தில் மகிழ்ச்சி ஒழியாத ;

செந்தூர்க் கந்தனை வந்தனை புரிவாம் - திருச்செந் தில் கந்தப் பெருமானை வணங்குதல் செய்வம், (எ-று).

(குறிப்பு) :—முரலல் - ஒலித்தல். உழக்க - குழப்ப. தோள் வெற்பு – உருவகம். வேல் கண், கெண்டையம் கண், தடங்கண் எனக் கூட்டுக. வனப்பெழுதுதலை, தழுவும் பொழுது தொய்யில் எழுதுதல் என்பது மரபு. (6)

## வேலாயுதம்

7. அரம டங்கலும் தழைசெல மூலமே லாயுத்
தரம டங்கலும் பொருவுசூர் மாமுதல் தடிந்தே
நரம டங்கலும் துதிப்பரும் குமரனாட் கமலக்
கரம டங்கலும் கலம்செய்வேல் என்கவிக் கருத்து.

(பதவுரை) :—அரம் அடங்கலும் தழைசெல - பாதலம் முழுதும் தளிர்கள் வியாபிக்க ;

மூலம் மேல் ஆய் - வேர் மேல் போக ;

உத்தர மடங்கலும் பொருவு சூர் மாமுதல் தடிந்தே - ஊழித் தீயையும் ஒக்கும் உருவமுள சூர (பதுமனாகிய) மாமரத்தை வேரோடு வெட்டித் தள்ளி ;

நர மடங்கலும் துதிப்பரும் - நரசிங்கமான திருமாலும் (சூர சம்மாரம் செய்த ஞான சத்தி இது என்று தெரிந்து) துதிக்க ;

குமரன் நாள் கமலக் கரம் அடங்கலும் கலம் செய்வேல் - (அருமையான) குமரனது அன்று மலர்ந்த தாமரை போன்ற எல்லாத் திருக்கைகளிலும் அணிகலன் போல் இருக்கும் வேல் படையைப் பாடுவது,

என் கவிக் கருத்து - என் கவிதா சக்தியின் கருத்தாகும், (எ-று).

(குறிப்பு) :—அரம் - பாதலம். மூலம் - வேர். உத்தர மடங்கல் — ஊழித் தீ ; இரு பெயரொட்டு. மா — மாமரம். முதல் - வேர். கலம் - அணிகலம். வேர் மேலும் கிளை கீழுமாக

சூரன் மாமரமானமை, அவனது அவசர கோல அவதி என்று அறிவித்தபடி. 'கவின்செய் வேல்' என்றும்' 'கரம் அடங்கு அலங்கு அம் செவ்வேல்' என்றும் பாடம் உள. (7)

## ஐயனார்

8. அரிய பூரணை புட்கலை யாமிரு
தெரிவை மார்முலைச் செங்கள பத்தொளி
விரவு சுந்தர மேருவொப் பாம்புயக்
குரிசில் தண்டை குரைகழல் போற்றுவாம்.

(பதவுரை):—அரிய பூரணை புட்கலையாம் இரு தெரிவை மார் முலை செம் களபத்து ஒளி விரவும் - அருமையான பூரணை, புட்கலை எனும் பெயருடையவர்கள் ஆகிய இரு தேவியருடைய குயங்களில் பூசிய செஞ்சந்தன ஒளி பரவிய ;

சுந்தர மேரு ஒப்பாம் புயக் குரிசில் - அழகிய மேரு மலை போன்ற தோள்களை யுடைய ஐயனாரது ;

தண்டை குரை கழல் போற்றுவாம் - தண்டைகள் நாதம் எழுப்பும் (புனித இரு) திருவடிகளைப் போற்றுவம், (எ-று).

(குறிப்பு) :—ஐயனார்க்கு, மாசாத்தா அரிகர புத்திரர் என்றும் பெயர்கள் உள. இவர்க்கு ஆயுதம் செண்டு. ஊர்தி யானை. தூய ஒரு சோழன், இவரைத் துதித்தான். பேறுன ஒரு செண்டு பெற்றான். மேருமலை மேல் எறிந்தான். தனக்கு வேண்டிய பெரும் பொருளைப் பெற்றான் என்று சிலப்பதிகாரம் கூறும். (8)

## வீரவாகு தேவர்

9. வடுத்தமா இருபிள வாகச் சோதிவேல்
விடுத்தவா னவனடி விடாது போற்றியே
அடுத்தவா னவர்சிறை அகற்றச் செம்மணி
கொடுத்தவாள் வீரவா குவைவ ழுத்துவாம்.

(பதவுரை) :—வடுத்த மா இருபிளவாக - வடுப்பட்ட (சூரனது) மாமர உருவம் இரு துண்டம் ஆக ;

சோதிவேல் விடுத்த வானவன் அடிவிடாது போற்றியே - பேரொளிப் பிழம்பான வேல் படையை ஏவிய தெய்வ முருகன் திருவடிகளை இடையறாது துதித்து ;

அடுத்த வானவர் சிறை அகற்ற - (அப்பரனைச்) சார்ந்த வானவர்களை (சூரனிட்ட வீணான) சிறையி லிருந்து விடுவிக்க ;

செம்மணி கொடுத்த வாள் வீரவாகுவை வழுத்து வாம் - செந்நிற மாணிக்க வல்லி பெற்ற வாளேந்திய வீரவாகு தேவரை வழிபடுவம், (எ-று).

(குறிப்பு) :—**உமாதேவி** சிலம்பில் இருந்து சிந்திய மாணிக்கத்தில் அத் தேவி நிழல்பட, அந்நிழலே **உ**ருவான மாணிக்க சக்தியை, 'செம்மணி' என்ற பெயரால் குறித் தார். வீரவாகு தேவர் - நவ வீரருள் முதல்வர். (9).

## திருஞான சம்பந்தர்

10. அறுகால் உழக்கச் சிறுமுகைத்தேன்
ஆறு பாயும் சோணாட்டில்
உறுகா ழியில்வந் தவரித்தென்
உள்ளத் திருந்து சமணரெனும்
குறுகார் தமைக்கட் டழித்துமையாள்
கோமான் சரணந் தனைப்போற்றும்
சிறுகான் முளையின் இருசரணச்
செந்தா மரைவந் தனைபுரிவாம்.

(பதவுரை):—அறுகால் உழக்க சிறுமுகைத் தேன் ஆறு பாயும் சோணாட்டில் - ஆறுகால் வண்டுகள் குழப்ப, சிறு அரும்புகளி லிருந்து தேனாறு பாய்தற்கு இடமான சோழவள நாட்டில் ;

உறு காழியில் வந்து அவதரித்து என் உள்ளத்து இருந்து - (வளம்) பொருந்திய சீகாழிப் பதியில் வந்து உதித்து, அடியேன் உளத்தில் குடியிருந்து ;

சமணர் எனும் குறுகார்தமை கட்டழித்து - சமணர் கள் என்று கூறும் அயலவர் கொள்கைகளை அலமரச் செய்து ;

உமையாள் கோமான் சரணந்தனைப் போற்றும் - உமை மணாளரான சிவபிரான் திருவடிகளை (த் தேவாரப் பாக்களால்) துதிக்கின்ற ;

சிறுகான் முளையின் இருசரண செந்தாமரை வந்தனை புரிவாம் - (திருஞான சம்பந்தர் எனும்) இளைய பிள்ளை யாரின் இரு திருவடித் தாமரைகளை வணங்கி வழிபடுவம், (எ-று).

(குறிப்பு):—கட்டழித்தல் - (சமண) மதம் கெடுத்தல். சரணம் - அடைக்கல நிலயமான திருவடிகள். (10)

## திருநாவுக்கரசர்

11. கலக மிடும்பொய்ச் சமணர்குழாம்
 கட்டிக் கடலின் இடைப்புகுத்த
உலகம் பரவ விடுத்த கல்லே
 உயரும் புணையாக் கரையேறி
இலவ இதழோர் பங்கமைத்த
 எம்மான் கமலத் தாள்பழிச்சும்
சொலவின் புணையாப் பவக்கடலும்
 கடந்தான் சரணத் துணை துதிப்பாம்.

(பதவுரை) :—கலகம் இடும் பொய்ச் சமணர் குழாம் கடலின் இடைப் புகுத்த கட்டி விடுத்த கல்லே - கலகம் செய்கிற பொய்யறிவினை யுடைய சமணர்கள் கூட்டம், கடலுள் அமிழும்படி (தம்மைக்) கட்டிவிட்ட கல்லானது,

உலகம் பரவ உயரும் புணையாக் கரையேறி - உயர்ந்தோர் போற்ற, கம்பீர மரக்கலமாகக் கரை ஏறி ;

இலவ இதழ் ஓர் பங்கு அமைத்த எம்மான் கமலத் தாள் பழிச்சும் - இலவ மலரின் இதழ் போன்ற பார்வதியாரை ஒப்பற்ற இடப் பாகத்தில் இருத்திய சிவபிரான் கமலமலர் அடிகளைத் துதிக்கும் ;

சொல் அவ் இன் புணையா - தேவாரமாகிய அவைகளே இனிய தெப்பமாக,

பவக் கடலும் கடந்தான் சரணத் துணை துதிப்பாம் - பிறவிக் கடலையும் கடந்த திருநாவுக்கரசர் இரு திருவடிகளை இறைஞ்சுவம், (எ-று).

**(குறிப்பு) :—சமணர் கடலில் கட்டியிட்ட கல்லைத் தெப்ப மாக்கிக் கரையேறினார் ; தேவாரப் பாக்களான தெப்பத்தில் ஏறி, பிறவிக் கடலைக் கடந்த பெரியவர் அப்பர். அவர் திருவடிகளே நமக்கு அரண் என்று அறிவித்தபடி.** (11)

## சுந்தர மூர்த்திகள்

12. அரவக் கடலின் இடைப்பாம்பின்
 அமளி படுத்த துழாய்முகிலும்
விரைகொப் புளிக்கும் செழுங்கமல
 வீட்டுக் கிறையும் இனும்காணா
இருபொற் சரணம் சிவப்பூர
 இரவிற் பரவைக் கிருந்தூது
பரவப் பணித்த கவிராசன்
 பாதம் எமது தலைக் கொள்வாம்.

**(பதவுரை) :—**அரவக் கடலின் இடை பாம்பின் அமளி படுத்த துழாய் முகிலும் - ஆரவாரிக்கின்ற கடலின் நடுவில் பாம்பணையிற் கண்வளரும் துளசிமாலை யணிந்த மேகவண்ணரான திருமாலும் ;

விரை கொப்புளிக்கும் செழுங்கமல வீட்டுக்கு இறையும் - மணம் வெளிப்படுத்தும் செந்தாமரைக் கோயிலில் எழுந்தருளி யிருக்கும் நான்முகனும் ;

இனும் காணா இரு பொன் சரணம் சிவப்பு ஊர - இன்னும் கண்டறியாத அழகிய இரு திருவடிகள் (நில மேல் நடத்தலால்) சிவந்துபோக ;

இரவில் பரவைக்கு இரும் தூது பரவப் பணித்த - நள்ளிரவில் பரவையார் இடத்து சிறந்த தூதாகச் செல்லும்படி விநயம் காட்டி வேண்டிய,

கவிராசன் பாதம் எமது தலைக் கொள்வாம் - கவியரச ரான ஆளுடைய நம்பிகளது திருவடிகளை எமது சிரமேல் சூடுவம், (எ-று).

(குறிப்பு) :—பாற்கடல் பெரிது; அதனில் இருக்கும் பாம்புமோ பெரிது; அதன் மேல் கண்வளரும் முகில் வண்ணரோ பெரியரினும் பெரியர்; பிரமன் எனும் பெயரே பெரியோன் எனும் பொருளது; அத்துணை மேலவர்கள் இன்னும் கண்டிலாத் திருவடிகள் சிவப்ப, சிவபிரானை ஏவியவரோ கவிராசர் எனும் செய்தி, கருதுவார் கருத்தைக் கனிவிக்கும். (12)

## மாணிக்க வாசகர்

13. கொள்ளைவண் டிருந்து விருந்துணச்
 செழுந்தேன் கொப்புளித் தலர்ந்தபூங் கொன்றை
துள்ளுதெண் திரைநீர் முடித்தசெஞ் சடிலச்
 சோதிசெங் கரம்பிடித் தெழுதத்
தெள்ளுசெந் தமிழிற் கோவைநா னூறும்
 செப்பிய நாற்கவி ராசப்
பிள்ளைசெஞ் சரணக் கிரணவா ரீசப்
 பிரசநாண் மலரிணை துதிப்பாம்

(பதவுரை) :—கொள்ளை வண்டு இருந்து விருந்து உண - பெருங்கூட்டமான வண்டுகள் (அமைதியாக) இருந்து விருந்து உண்ணும்படி;

செழும் தேன் கொப்புளித்து அலர்ந்த பூங் கொன்றை - செழுமையான தேனை வெளியிட்டு மலர்ந்த கொன்றை மலரையும்;

துள்ளு தெண்திரை நீர் முடித்த செம் சடில சோதி செம் கரம் பிடித்து எழுத - துள்ளுகிற தெளிந்த அலைகளை யுடைய கங்கையையும் அணிந்த சிவந்த சடையை யுடைய பேரொளிப் பிழம்பான சிவபெருமான் திருக்கரத் தால் (ஏட்டைப்)பிடித்து எழுத ;

தெள்ளு செந்தமிழிற் கோவை நானூறும் செப்பிய நால் கவி ராசப் பிள்ளை - தெளிவாகிய செந்தமிழில் திருக் கோவையார் நானூறு பாடல்களையும் திருவாய் மலர்ந் தருளிய சிறந்த கவிமன்னரான திருவாதவூர் அடிகளுடைய ;

செம் சரணக் கிரண வாரீசப் பிரச நாள் மலரிணை துதிப்பாம் - சிவந்த திருவடிகளாகிய ஒளியுள தேன் நிறைந்து அன்றலர்ந்த தூய தாமரை மலர்களைத் துதிப்பம், (எ-று).

(குறிப்பு) :—கொள்ளை-மிகுதிப் பொருட்டு. நாற்கவி - ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் எனப் பெறும். வாரிஜம் — தாமரை. பிரசம் - தேன். (13)

## சரசுவதி

14. ஒருதனித் திகிரிக் கதிர்நிறம் கவின
ஒளிர்செய்பொன் உடைமருங் கிலங்கக்
குருமணி மௌலி இலகிவில் இமைப்பக்
குறுநகை முறுவல்முத் தரும்ப
மருமலர்க் கழுநீர் புத்தகம் வரத
மணிவடம் மலர்க்கரம் வயங்கத்
திருவருள் நிறைந்தென் உளம்குடி புகுந்த
செல்விபொன் சேவடி பணிவாம்.

**(பதவுரை):—**ஒரு தனித் திகிரி கதிர் நிறம் கவின ஒளிர் செய் பொன் உடை மருங்கு இலங்க - ஒப்பற்ற ஒற்றை யாழித் தேரினன் ஆன சூரியனது நிறம்போல் ஒளிர்கிற பொன்னுடை இடையில் மின்ன ;

குருமணி மௌலி இலகி வில் இமைப்ப - நிறமமைந்த மணி மகுடம் (உயர்ந்து) விளங்கி ஒளி செய்ய ;

குறுநகை முறுவல் முத்து அரும்ப - புன்னகையை யுடைய பற்கள் முத்துகள் போலத் தோன்ற ;

மருமலர் கழுநீர் புத்தகம் வரதம் மணிவடம் மலர்க் கரம் வயங்க - மணமுள செங்கழுநீர் மலரும், புத்தகமும், வரதமும், இரத்தின மாலையும் மலர்போலும் திருக் கரங்களில் விளங்க ;

திருவருள் நிறைந்து என் உளம் குடி புகுந்த - பெருங்கருணை நிரம்பி என் உளத்தில் குடிபுகுந்து இருக்கின்ற ;

செல்வி பொன் சேவடி பணிவாம் - (கலைச்) செல்வி யான நாமகளின் (வளமார்) செம்மைத் திருவடிகளை வணங்குவம், (எ-று).

(குறிப்பு) :—பொன்னுடை, மணிமகுடம், புன்னகை, கழு நீர் மலர், புத்தகம், வரதம் எனக் கலைமகள் கோலம் முழுதும் காட்டியது அறிக. 14

கடவுள் வாழ்த்து நிறைவு பெற்றது.

———

## பதிகம்

**15.** **நயிமிசா ரணியவனம் சூதமுனி**
**சென் றதுவும் நவையில் சூதன்**
**இயல்பிஞல் முனிவர்முகம் பார்த்துயர்வி**
**யாசமுனி யினிமை சார்ந்த**
**உயர்விஞ லருஞ்சுகற்குள் ளன்பொழுகக்**
**கங்கைநதி யோங்கு மூலத்**
**தயர்வுரு திருந்தருள்செய் சிந்துபுர**
**வளமனைத்து மடைவில் சூழா.**

(பதவுரை) :—நயிமிசாரண்யவனம் சூதமுனி சென்றதுவும் - நைமிச (தபோ) வனத்திற்குச் சூத புராணிகர் சென்ற வரலாறும் ;

நவையில் சூதன் இயல்பிஞல் முனிவர் முகம் பார்த்து - (எக்) குற்றமும் இல்லாத அச் சூதமுனிவர், (அன்பின்) இயல்பால் (அங்கிருந்த) முனிவர்கள் முகம் நோக்கி ;

உயர் வியாசமுனி......உயர்விஞல் - சிறந்த வியாச மாதவர் இனிமை மிகச் செய்த உயர்ந்த வழிபாட்டால் ;

அரும் சுகற்கு உள்ளன்பு ஒழுக - அருமையான சுக முனிவற்கு உளத்தில் அன்பு பெருக ;

கங்கை நதி ஓங்கும் மூலத்து அயர்வுருது இருந்து - உயர்ந்த கங்கை யாற்றின் கரையில் சோர்விலாமல் அமர்ந்து ;

அருள்செய் சிந்துபுர வளம் அனைத்தும் அடைவில் சூழா அருள்பாலிக்கும் செயந்திபுரச் சிறப்புகளை யெல்லாம் முறையாகச் சிந்தித்து, (எ-று).

குறிப்பு :—நைமிசாரண்யம் என்பது, நயிமிசாரண்யம் என முதல் போலியாயிற்று. இவ்வனம், இமய மலைக்கு அருகில் உள்ளது. இது, இருடிகள் எண்ணிருந்தோர் தவம் செய்யும் இடம். பிரமன் ஒரு தர்ப்பையை நேமிபோல் ஆக்கி உருட்ட, உருண்டு சென்ற அது நிலைத்து நின்ற இடம் ஆதலின், இப்பெயர் அதற்கு எய்தியது. இவ் வனத்தில் தான் நர நாராயணர் இருந்தனர் என்பர்.

சூதமுனி – இவர் உரோம ஹருஷணர் குமாரர். திரையாரணி முதலிய அறுவரிடத்தும் ஆறு சங்கிதைகளைக் கற்றவர். சுகரிடம் நான்கு மூல சங்கிதைகளை உணர்ந்தவர். வியாசரிடம் பல நூல்களைப் படித்த மாணவர்.

சூழா – செய்யா என்னும் வாய்ப்பாட்டு வினை எச்சம். இப்பாட்டு குளகம் ; ‘குளகமாவது பலபாட்டு ஒருவினை கொள்ளும்’ என்பது விதி. ஆல் இரண்டனுள் முன்னையது வினைத்தொகை ; பின்னையது சாரியை. ஆல் - நிறைதல் எனினுமாம். (1)

16. முறையினுற் சுகமுனிக்கு வியாசமுனி
 உபதேசம் மொழிந்த வாறும்
மறையுலாம் செயந்திபுர வைபவமுன்
 சொற்றதுவும் வைவேற் கந்தன்
பிறையுலாஞ் சடைக்கடவுள் கவுரியுடன்
 தோய்ந்தபெரும் போகந் தன்னில்
நிறைவினு லவதரித்துக் கடவுளர்தம்
 முகம்நோக்கி நிகரி லாத.

(பதவுரை) :—முறையினுல்.........மொழிந்த வாறும் - வியாச முனிவர் சுகமுனிவர்க்கு கிரமமாக உபதேசம் செய்ததையும் ;

மறை உலாம் செயந்திபுர வைபவம் முன் சொற்றதும் - சுருதிகளில் விரிவாக உள்ள திருச்செந்தூர் மான்மியத்தை முன்பொரு சமயம் அருளி யிருப்பதனையும் ;

பிறை உலாம் சடைக்கடவுள் கவுரியுடன் தோய்ந்த பெரும் லோகந்தன்னில்-இளம்பிறை உலவும் சடையினை யுடைய சிவபிரான் உமாதேவியுடன் கலந்த இன்பப் பெரும் கலப்பில் இருந்து ;

வைவேல் கந்தன் நிறைவினுல் அவதரித்து - கூரிய ஞான சக்தியை யுடைய கந்தப் பரமன் (எல்லாக் குண) நிறைவினுடன் திருவவதரித்து ;

கடவுளர்தம் முகம் நோக்கி - (தம்மை வழிபட்ட) வானவர்களுடைய முகங்களை அருளொடு நோக்கி, (எ-று).

குறிப்பு :—'நிகர் இலாத' என்பதை அடுத்த பாட்டொடு கூட்டிப் பொருள் கொள்க. வியாசர் — பராசர்க்கும் சத்திய வதிக்கும் பிறந்தவர். பிரம சூத்திரம் கூறியவர். வேதத்தைப் பல வியாசமாகச் செய்ததனுல், இவர் வியாசர் எனப் பெற்ருர். சுக முனிவரது தந்தை. விஷ்ணு அமிசம் ஆனவர். ஒவ்வொரு துவாபர யுகத்தும் ஒரு வியாசர் தோன்றுவது மரபு. (வியாசம் – கட்டுரைத் தொகுதி.) (2)

17. பாரதகண் டத்தினிடை மலைவளனும்
நதிச்சிறப்பும் பரம்புந் தெண்ணீர்
வாரிதியின் பெருவளனும் பெற்றநகர்
ஒன்றுநம்முன் வகுப்பீ ரென்ன
ஆரருளி னிறைகேட்ட வந்நகரம்
முன்னரெமக் கலக்கண் ஈந்த
சூரனுயிர் குடித்தருளா லிருந்தசிந்து
புரமெனமுன் சொற்ற வாறும்.

(பதவுரை) :—(நிகர் இலாத) பாரத கண்டத்தின் இடை......வகுப்பீர் என்ன - ஒப்பிலாத பரத கண்டத்தில் மலைச்சிறப்பும், ஆற்றுச் சிறப்பும், பரவி யிருக்கும் தெளிந்த நீருடைய கடலின் பெருவளமும் பெற்ற ஒரு பதியை நம்முன் கூறுக என ;

ஆர் அருளின்......ஆறும் - நிறைந்த பேரருளால் குமரன் வினவிய அப்பதி, முன்னொரு காலத்தில் எம் மனோர்க்குத் துன்பம் விளைவித்த சூரபதுமன் உயிரை ஒழித்து, அருளொடு எழுந்தருளி யிருந்த செயந்திபுரம் என்று திருமுன் தேவர்கள் கூறியதும், (எ-று).

(குறிப்பு) :—பரத கண்டம் - பரதனால் ஆளப்பட்ட நில எல்லை. இது அரசிலை உருவாய், ஆசிய கண்டத்திற்குத் தெற்கில் இருப்பது என்பர். திருச்செந்தூர் மலைவளம், நதிவளம், கடல்வளம் மூன்றும் கொண்ட மதிப்பிற்குரிய பதி என்பது கருத்து. (3)

18. தண்ணளியிற் குமரேசன் செயந்திபுரம்
போந்துலகந் தழைக்க மாயோன்
கண்ணிடத்துத் தோன்றுமிரு கன்னியர்பா
லினிதிருக்கும் காலை யானைப்
பெண்ணமுதை மானளித்த பேதையிகழ்ந்
திருந்ததனைப் பிரானுள் ளோர்ந்து
மண்ணளந்துண் டுடன்காத்த மாதவன்றன்
வலக்கணவ தரித்து வந்தாள்.

(பதவுரை) :—குமரேசன் தண்ணளியில் செயந்திபுரம் போந்து - குமாரஸ்வாமி குளிர்ந்த பேரருளால் திருச் செந்திலை யடைந்து ;

உலகம் தழைக்க.........இனிது இருக்குங்காலை - உயிர்கள் (மனையறத்தில்) உய்வதன் பொருட்டு, திருமால் கண்களிலிருந்து தோன்றிய இரு தேவியர் நடுவில் இன்பத் திருக்கோலமாக இருந்த பொழுது ;

யானைப் பெண் அமுதை......உள் ஓர்ந்து-(முன்னர்) (அமுதவல்லி என்று இருந்த) தேவயானை யம்மையை, மான் தந்த மகளான இளம் வள்ளியார் இகழ்ந்து கொண்டு இருந்த செய்கையை, முருகன் திருவுளத்து உணர்ந்து ;

மண் அளந்து உண்டு உடன் காத்த மாதவன் தன் வலக்கண் அவதரித்து வந்தாள் - (அடியால்) நிலவுலகை அளந்து, (மற்றொரு சமயம்) உண்டு, (இப்படியெலாம்) என்றும் காக்கும் மாதவரான திருமாலின் வலக்கண்ணில் அவதரித்து வந்த வள்ளி யம்மையை, (எ-று).

(குறிப்பு):—இது, ஆறும் பாட்டில் 'விளம்பு மாறும்' என்பதொடு முடியும். (4)

19. தன்னையெதி ருறவழைத்து நீயிடப்பா
லிருக்குமருந் தார மான
மின்னையவ மதித்திருந்த செய்கையினால்
கொடுஞ்சாபம் மேற்கொண் டோர்மான்
மன்னுதரத் துற்பவித்து வேடரிடத்
திருத்தியவெண் மறையின் வாய்ப்ப
உன்னையழல் சான்றாக யாம்வதுவை
யாற்றுவமென் றுரைத்த வாறும்.

(பதவுரை):—தன்னை எதிர் உற அழைத்து - (தன்) எதிரில் கூப்பிட்டு,

நீ இடப்பால் இருக்கும் அரும் தாரம் ஆன மின்னை அவமதித்திருந்த செய்கையினால் கொடும் சாபம் மேற்கொண்டு - நீ (எம்) இடப்புறத்தில் இருக்கும் துணைவியான மின்னல் கொடிபோன்ற (கிரியா சக்தியான) வளைத்தாழ்வு படுத்திய செயலால், (யாம் தரும்) கொடிய சாபத்தைத் தாங்கி ;

ஓர் மான் மன் உதரத்து உற்பவித்து வேடர் இடத்து இருத்தி - ஒருமானின் பெருமித வயிற்றில் பிறந்து மறவர்கள் இடத்தில் வளர்ந்து இரு ! ;

அவண் மறையின் வாய்ப்ப உன்னை அழல் சான்று ஆக யாம் வதுவை ஆற்றுவம் என்று உரைத்த ஆறும் - அங்கு வைதிக தர்மம் விளங்க, உன்னை அக்கினி சாட்சியாக யாம் திருமணம் புரிந்து கொள்வம் என்று அருளிய வரலாற்றையும், (எ-று).

(குறிப்பு):—**தரம் நிறைந்தவரைத் தாரம் எனல் மரபு; தரம் – தகுதி. உயர்ந்தாரைத் தாழ்வாக உணர்பவர்கள், விலங்கினிடம் பிறந்து, அநாசாரம் மூத்த மறவர் நடுவில் வளர்வர் என்பதை, அதி நுட்பமாக உயிர்கட்கு அறிவித்த இடம் இது.** (5)

20. உரைத்தகொடு மொழிதாங்கி மானிடத்திற்
பிறந்தெயினர் ஒருவா விந்தை
வரைப்புனத்தி லிருந்துதினை காத்ததுவும்
அம்மலையில் வயங்கும் கூர்வேல்
கரத்திறைவன் கண்டதுவும் வேடன்முனம்
போயுனது கன்னி தன்பால்
விரைத்தொடையல் யான்சூட்ட வேண்டுமெனக்
கருணையுடன் விளம்புமாறும்.

(பதவுரை) :—உரைத்த கொடுமொழி தாங்கி மான் இடத்தில் பிறந்து - (எம்மான்) உரைத்த சாபமொழியை ஏற்று, (வள்ளியார்) மானின் வயிற்றில் (தங்கிப்) பிறந்து;

எயினர் ஒருவா விந்தை வரைப் புனத்தில் இருந்து தினை காத்ததுவும் - வேடர்கள் நீங்காது வாழும் விந்தை மலைப்புனத்தில் இருந்து (புனித) தினைக் காவல் புரிந்ததுவும் ;

அம்மலையில் வயங்கும் கூர்வேல் கரத்து இறைவன் கண்டதுவும் - அம்மலையில், ஒளிரும் கூரிய வேல் ஏந்திய விமலன், (பாக்யவதியான) வள்ளியாரைப் பார்த்தது வும் ;

வேடன் முனம் போய்.........விளம்பும் ஆறும் - (வள்ளியாரை வளர்த்த) வேடனை வேல் நம்பியின் முன் சென்று, உன் மகளுக்கு (அழகிய) மணமாலையை யான் அணிய வேண்டும் என்று, (வளரும்) அருளுடன் கூறிய வரலாற்றையும், (எ-று).

(குறிப்பு) :—பிறந்தது மான் வயிற்றில் எனினும், மானிட உருவா யிருத்தலின், மறவர் பரிந்து வளர்க்க முடிந்தது. ஆதலின், மானிடத்தில் என்பதற்கு - மனித உருவில் என்று பொருள் கொள்ளலுமாம். எயினர் – (அம்பு) எய்யும் இனத்தவர் ; விழிப்பு நிலையிலும் உறங்கும் போதும் அம்பு ஏந்து கையர் ஆதலின், வேடர்கட்கு எயினர் என்று ஒரு பெயருண்டு. திருமாலமிச உபேந்திரனே வேல் நம்பி ; விண்ணவர்களே வேடுவர்கள் என்று வரலாறு உண்டு. ஈடு சொல்ல இயலாத விண்ணவர்கள் வேடுவர்களாக இருந்த மலையை, விந்தை வரை என்றார். விரைத் தொடையல் - மணமாலை. தொடை – தொடுத்த மாலைக்குப் பெயர். (6)

**21. கானவருக் கரசனவன் உடன்படா**
**திருந்ததுவும் கன்னி முன்போய்**
**வானளவும் தருவாகி நின்றதுவும்**
**கானவர்கோன் மலைப்பா லன்பிற்**
**போனதுவு மித்தருநம் புனத்தினிடை**
**வரலாறு புதுமைத் தாகும்**
**ஆனதருக் குறைமினெனச் சொற்றதுவும்**
**சொற்றதுகேட் டைய ஞங்கே.**

(பதவுரை):—கானவருக்கு அரசன் அவன் உடன் படாது இருந்ததுவும் - வேடர்கட்கு மன்னனான அவ்வேல் நம்பி, (அதற்கு) உடன்படாமல் இருந்தது வும் ;

கன்னிமுன் போய் வான் அளவும் தருவாகி நின்றதுவும் - (அதன்பின் குமரன்) கன்னிப் பருவ வள்ளியார் முன்சென்று, வானளாவிய (வேங்கை) மரமாகி நின்ற வரலாறும் ;

கானவர் கோன் மலைப்பால் அன்பின் போனதுவும்- (பிறகு) மறவர் தலைவனான மன்னன், (அம்) மலையின் கண் (மகளைக் காணும்) அன்பால் வந்ததும் ;

இத்தரு நம் புனத்தின் இடை வரலாறு புதுமைத் தாகும் - இம்மரம், நம் தினைப்புன நடுவில் வந்த செய்தி புதுமையா யுளது ;

ஆன தரு குறைமின் எனச் சொற்றதுவும் - விளைவு ஆன (இம்) மரத்தை வெட்டி வீழ்த்துங்கள் என்று கூறியதும் ;

சொற்றது கேட்டு ஐயன் ஆங்கே - (அங்ஙனம் வேல் நம்பி) உரைத்ததைச் செவிமடுத்து எம் பெருமான், அதே இடத்தில், (எ-று).

**(குறிப்பு) :—குறைமின் - அடி முதல் உச்சி வரை, உறுப்பு உறுப்பாக வெட்டிச் சாய்மின் என வியங்கோள் வெளிப்பட விளம்பியபடி. இது, அடுத்த பாட்டில் முடியும். (7)**

22. தாருவுருக் கரந்துதுணைக் குஞ்சரத்தின்
 இருசரணம் தாழ நோக்கி
வாரணத்தி னுருவாகி மாதினிடம்
 சென்றதுவும் மாது சோர்ந்து
வேரிமலர்க் கடம்பணியும் மார்பிறுகப்
 புல்லியதும் விருப்பாய் வேடன்
சீரருளிற் கன்னிகையை யுனக்களிப்பன்
 என்றுரைத்துச் சென்ற வாறும்.

**(பதவுரை) :—**தாரு உருக் கரந்து - வேங்கை உருவை மறைத்து ;

துணைக் குஞ்சரத்தின் இருசரணம் தாழ - சகோதரரான யானைமுக மூத்த பிள்ளையாருடைய இரு திருவடிகளை (எண்ணி) வணங்க ;

நோக்கி வாரணத்தின் உருவாகி மாதின் இடம் சென்றதுவும் - (அக்கடவுள் அருளொடு) நோக்கி, (முழு) யானை உருவாகி வள்ளியாரிடத்திற்கு வந்ததும் ;

மாது சோர்ந்து வேரி மலர்க் கடம்பு அணியும் மார்பு இறுகப் புல்லியதும் - (அஞ்சிய) வள்ளியம்மை, (தளரா உள்ளம்) தளர்ந்து, மணமுள கடப்ப மலர்

மாலையணிந்த முருகனது (தனிப் பெரும்) மார்பைத் தழுவியதும் ;

விருப்பாய் வேடன் சீர் அருளின் கன்னிகையை உனக்கு அளிப்பன் என்று உரைத்துச் சென்ற ஆறும் - (நிகழ்ந்ததை யறிந்த) வேடனான வேல்நம்பி, (இது முருகருள் ஆடல் என்றுணர்ந்து) அன்பு கொண்டு, சிறந்த அருள்மய இனிய கன்னிப் பருவ வள்ளியாரை, உமக்கு (மண முறையில்) அளிப்பன் என்று உரைத்துச் சென்ற வரலாற்றையும், (எ - று).

(குறிப்பு):—**தரு** என்பது, முதனீண்டு **தாரு** என்றுயது. **நான்மறை அடிப்பகுதியாய், ஆகமங்கள் இடைப் பாகமாய், பல கலைகள் கிளைகளாய், வண்மை யருளிறை மரமாய் நிற்றலின், அதனைத் தரு உரு என்று அறிவித்தார். வாரணம் - யானை.** சீர் அருளின் - சிறந்த திருவருளால் எனலுமாம். (8)

23. குறவனிடத் தமரர்தொழும் குமரேசன்
சென்றதுவும் குறவன் வாஞ்சைப்
பிறைநுதலை யளித்ததுவும் முருகேசன்
வேட்டுமனப் பெட்பி னோடு
நறவமலர்த் தேரேறிச் செயந்திபுரத்
துற்றதுவும் நவையி லாத
பொற்றைபடைத்த யானைமகள் எதிர்போந்து
பரவவண் பொருந்து மாறும்

(பதவுரை):—குறவன் இடத்து அமரர் தொழும் குமரேசன் சென்றதுவும் - குறவர் குல மன்னன் இருக்கும் இடத்திற்குக் குமரப் பெருமான் சென்றதுவும் ;

குறவன் வாஞ்சைப் பிறைநுதலை அளித்ததுவும் - மறமன்னன் அன்பு செலுத்தும் (எட்டாம்) பிறை போன்ற நெற்றியுள மகளை (மணத்தில்) அளித்ததுவும் ;

முருகேசன் வேட்டு மனப் பெட்பினோடு நறவமலர்த் தேர் ஏறி செயந்தி புரத்து உற்றதுவும் - முருக முதல்வன் மணந்து, திருவுள மகிழ்வொடு மணம்கமழ் மலர் மயமான விமானத்தில் அமர்ந்து, (அரிய) திருச்செந்திலை யடைந்ததுவும் ;

நவை யிலாத பொறை படைத்த யானைமகள் எதிர் போந்து பரவ அவண் பொருந்தும் ஆறும் - குற்றம் இல்லாத பொறுமையை அணிகலனாக வுடைய தேவ யானையார் எதிர் கொண்டு வந்து வரவேற்று வழிபட, (அத்தலத்தில்) அமர்ந்ததுமான வரலாறும், (எ - று).

(குறிப்பு) :—இப்பாடல், ஏடெழுதுவோரால் உருமாறிய செய்தியைக் கீழ்வரும் பாடல் கொண்டு அறிக.

‘ குறவிறை யவன்மனைபோய்க் குமரேசன்
சுரர்முனிவர் குழுமிப் போற்றப்
பிறைநுதலை மறைமுறையிற் பேரருளி
னொடுவேட்டுப் பெட்பி னாலே
நறவமலர்த் தேரேறி யுயர்செயந்தி
நகரடைந்து நவையி லாத
பொறைபடைத்த யானைமக ளெதிர்போந்து
பொருந்தவவ ணிருந்த வாறும் ’

ஆ ! எவ்வளவு பேதம் ! இத்தகைய பாட பேதங்களால், உரை எழுதுவார் படும் சிரமம் ஓத ஒருநாப் போதுவதோ ? (9)

**24. பொருந்தியவண் குமரேசன் இருந்துழிநான்**
**முகம்படைத்த புத்தேள் போற்றி**
**வரந்தனைப்பெற் றிடுமாறும் திரிசுதந்தி**
**ரத்தரெனும் மறைவல் லோராம்**
**அருந்தவத்தர் வரலாறும் பன்னிருமா**
**தப்பூசை விதிவ ழாது**
**திருந்துறச்செய் பயனினொடு குமரன்விபூ**
**திச்செயலைத் தெரித்த வாறும்.**

**(பதவுரை):—**அவண் குமரேசன் பொருந்தி இருந்துழி-அப்பதியில் குமரப் பெருமான் பொருந்தி இருந்த பொழுது ;

நான்முகம் படைத்த புத்தேள் போற்றி வரந்தனைப் பெற்றிடும் ஆறும் - நான்முகப் பிரமன் வணங்கி (வழிபட்டு) வரம்பெற்ற வரலாறும் ;

திரிசுதந்திரத்தர் எனும் மறை வல்லோராம் அருந்தவத்தர் வரலாறும் - திரிசுதந்தரர் எனப்பெறும் வேதம் வல்ல தவமேலோர் வரலாறும் ;

பன்னிரு மாதப் பூசை.........செயலைத் தெரித்த ஆறும்- (இறைவர்க்கு) பன்னிரு மாதங்களிலும் (குறித்த காலங்களில்) வழிபாடுகளை, (ஆகம) விதி தவருமல் திருத்தமாகச் செய்தலால் விளையும் பயனுடன், குமார சுவாமியின் சொரூப செய்கையை விளக்கிய வரலாற்றையும், (எ-று).

(குறிப்பு) ;—*திரிசுதந்தரர் - முக்காணி அந்தணர்.* **'வரந்தனைப் பெற்றிட்டமையும்' எனவும், விதிவழாது எனவும், "செயலைத் தெரிந்தவாறும்' எனவும் பாடம்.** (10)

**25. வயம்புனையும் வேள்வீர வாகுவுக்காத்**
**திருக்கோல வாய்ப்புக் காட்டி**
**நயம்பெறவாங் குதித்தவு மச்செயலை**
**நாரதன்போய் நறைத்து ழாய்சூழ்**
**புயஞ்சிறந்தாற் குரைத்ததுவு முரைத்தமுனி**
**புலந்தேறப் புயல்போல் மேனிச்**
**சுயம்பிரகா சக்கடவுள் குமரேசன்**
**சீரனைத்துஞ் சொற்ற வாறும்.**

(பதவுரை) :—வயம் புனையும் வேள்.........ஆங்கு உதித்தவும் - வெற்றிக் கோலம் கொள்ளும் செவ்வேள் பெருமான், வீரவாகு தேவர்க்காக (உலக முழுதுமான தன்) சொருபச் சிறப்பைக் காட்டி, இனிமை தோன்ற அப்பதியில் உதய பரிதிபோல் எழுந்தருளி யிருக்கும் அற்புதத்தையும் ;

அச்செயலை நாரதன் போய் நறைத்துழாய் சூழ் புயஞ் சிறந்தாற்கு உரைத்ததுவும் - மணம் கமழ் துளசி மாலையை யணிந்த திருமாலுக்கு, (அந்தச் செயலை வைகுந்தத்தில் சென்று) நாரதர் கூறிய வரலாற்றையும் ;

உரைத்த முனி புலம் தேற - கூறிய நாரதர் உள்புலம் உணர்ந்து தெளிவு பெறும்படி ;

புயல்போல் மேனி சுயம்பிரகாசக் கடவுள் குமரேசர் சீர் அனைத்தும் சொற்ற ஆறும் - மேக வண்ணரான திருமால், தானே மிளிரும் தனித் தெய்வமான முருகன் பரத்வ முழுமையையும் திருவாய் மலர்ந்தருளியதை யும், (எ - று.)

(குறிப்பு) ;—மேனி - மின்னும் தன்மை யுடையது ; வினை முதல் பொருள் உணர்த்தும் இ விகுதி புணர்ந்து கெட்ட பெயர். (11)

26. இந்திரனைத் தாங்கயிரா வதப்பகடு
நாரதன்மு னிறைஞ்சி யேத்த
அந்தமுனி வரனியானைக் குபதேசப்
பொருள்சிறக்க வளித்த வாறும்
சிந்துபுரச் சிறப்பதனை விதிமுறையா
ராய்ந்தயிற்கைச் செவ்வே ளன்பாய்
வந்தநம னுளந்தேறக் கருணையுட
னுங்கவற்கு வகுத்த வாறும்

(பதவுரை) :—இந்திரனைத் தாங்கு ஐராவதப் பகடு நாரதன் முன் இறைஞ்சி ஏத்த - இந்திரனைச் சுமந்த ஐராவத யானை, நாரதர் முன் வணங்கித் துதிக்க ;

அந்த முனிவரன் யானைக்கு உபதேசப் பொருள் சிறக்க அளித்த ஆறும் - அந்நாரதர் (அந்த) யானைக்குச் (சிறப்பாக) மெய்ப்பொருள் நுட்பத்தை உபதேசித்த விதத்தையும் ;

அயில்கைச் செவ்வேள் - முத்தி விருப்பளிக்கும் ஞான சத்திதரன் ;

அன்பாய் வந்த நமன் சிந்துபுரச் சிறப்பதனை விதிமுறை ஆராய்ந்து உளம்தேற - (தம்பால்) அன்பொடு வந்த இயமன் திருச்செந்தூர் மாண்பை விதிப்படி (ஊன்றி) ஆய்ந்து உளம் தெளியும்படி ;

கருணையுடன் ஆங்கு அவற்கு வகுத்த வாறும் - பெருங்கருணையுடன் அவனுக்குத் திருவாய் மலர்ந் தருளிய திறத்தையும், (எ - று).

(குறிப்பு) :—சில பிரதிகளில் '**இந்திரனோ டன்னவனைத் தாங்கயிரா வதயானை எய்துசாபம், அந்தமுறச் செய்தமையே ஆதிபல சரிதங்கள் அறைந்த வாறும்**' என்று முதலிரண்டடி யும்; '**ஆங்கவன்பால் வந்தவாறும்**' என்று இறுதி யிருசீரும் மாறியுள. (12)

27\. கடவுளர்கள் யாவருக்கு மெண்ணிறந்த
முனிவரர்க்கும் கமலப் புத்தேள்
உடனிருந்து செயந்திபுரச் செய்கைதனை
யுரைத்ததுவு முடற்று மாயைத்
தொடரகற்றும் சுகமுனிவன் சிந்துபுரந்
தனிற்போந்து சுடர்வேல் செங்கை
விடலைதுணைத் தாள்போற்றி யற்புதவான்
கடல்மூழ்கி வியந்த வாறும்

(பதவுரை) :—கடவுளர்கள் யாவருக்கும் எண்ணிறந்த முனிவரர்க்கும் - வானவர் அனைவர்க்கும் அளவிலாத முனிவர் பெருமக்கட்கும் ;

கமலப் புத்தேள் செயந்திபுரச் செய்கைகளை உரைத்ததுவும் - கமலபீட நான்முகன் திருச்செந்தில் அற்புதங்களை விளக்கி யருளியதும் ;

உடன் இருந்து உடற்றும் மாயை தொடர் அகற்றும் சுக முனிவன் சிந்துபுரம்தனில் போந்து - கூடியிருந்து குடிகெடுக்கும் மாயா விலங்கை முறிக்கும் (தவசிரேட்ட ரான) சுகமுனிவர் திருச்செந்திலை யடைந்து ;

சுடர்வேல் செங்கை விடலை துணைத்தாள் போற்றி - ஒளிவீசுகிற வேல்பிடித்த திருக்கரக் குமரன் இரு திருவடிகளையும் வழிபட்டு ;

அற்புத வான் கடல் மூழ்கி வியந்த ஆறும் - அதியற்புத (வதனாரம்பதீர்த்தம் எனும்) மகிமைக்கடலில் மூழ்கி வியந்த அற்புத வரலாறும், (எ-று).

(குறிப்பு) :—தொடர் - தொடர்ச்சியுமாம். விடலை - காளையான கந்தப்பிரான். துணை - (உயிர்த்) துணை எனினுமாம்.

" அற்புதவான் கடல் மூழ்கி வியந்த வாறும் " எனுமிடத்தில், " அருச்சனைசெய் திட்டமையும் விளம்புமாறும் " என்றும் பாடமுண்டு. (13)

28. விரிதருசீர்ப் புகழ்ச்செவ்வல் கிருட்டின சாத்
திரியெனுநால் வேதன் வேதம்
கருதரிய வடகலையை யாராய்ந்து
சொலவதனைக் கருதிச் செவ்வேள்
சரிதையென உணர்ந்துணராப் புல்லறிவி
னுலினிய தமிழே போலத்
தெரிதரத்தென் செயந்திபுர மான்மியமா
மெனவுலகிற் செப்பி னேனல்.

(பதவுரை) :—விரிதருசீர்........... வேதன் - பரவிய சிறந்த புகழுடைய திருச் செவ்வலூர் கிருஷ்ண சாஸ்திரி யெனும் நான்மறை யுணர்ந்த அந்தணர் பெருமான் ;

வேதம்.........சொல அதனைக் கருதி - அவ் வேதப் பொருளைச் சிந்திக்கச் செய்யும் அரிய வடநூற் கடலை ஆய்ந்து, (திருச்செந்தில் மகாத்மியத்தைத் தமிழில் மொழிபெயர்த்துச்) சொன்ன அதை உளங்கொண்டு ;

செவ்வேள் சரிதை......... தெரிதர - (இது) செக்கர் வேள் இறைவன் பிரபாவம் என்று உணர்ந்து, (ஒரு கருவி நூலும் கற்று) உணராத அற்ப அறிவால், (பேராவல் பிடர்பிடித்து உந்த,) இனிய பிற தமிழ் நூல் களுள் ஒன்று போல (எவர்க்கும்) விளங்கும்படி ;

தென் செயந்திபுர மான்மியமாம் என உலகில் செப் பினேனல் - தென்னாட்டில் உள்ள திருச்செந்தில் புராணம் என்று பெயரிட்டு, உலகில் வாய் மலர்ந்து வைத்தேன், (எ-று).

(குறிப்பு) :—செவ்வலூர்-திருநெல்வேலியை அண்மிய ஒரு கிராமம். (14)

29. வெண்திரைப்பாற் கடலிடத்துக் கருங்கடல்போல்
துயில்நெடுமால் வியப்போ வாது
பண்டுசனற் குமரனுக்குப் பகர்காதை
யக்காதைப் பண்பு வேதம்
உண்டுபடுத் தியசீர்த்தி வியாதமுனி
சுகமுனிவற் குரைத்த காதை
எண்தகைய சூதமுனி நயிமிசா
ரணியர்தமக் கிசைத்த காதை.

(பதவுரை) :—வெண்திரை...... பகர்காதை - (இது) மிகப்பழைய ஒரு காலத்தில் வெண்மை அலைகளையுடைய பாற்கடலில் கருங்கடல்போல் அறிதுயில் கொள்கின்ற

திருமால், அடங்காத அதிசயத்துடன் சனற் குமார முனிவர்க்கு உரைத்த கதை ;

அக்காதை......... சுகமுனிவர்க்கு உரைத்த காதை- அச்சரிதை இயல்பு கூறும் மறைகளைத் தொகுத்த சிறப்புடைய வியாசமுனி சுகப்பிரம முனிக்குச் சொன்ன தாகும் ;

எண்தகைய......... இசைத்த காதை - மதிக்கும் தகுதியுடைய சூத புராணிகர், நைமிசாரண்ய முனிவர் கட்கு எடுத்துரைத்த (தொன்று தொட்டு வழிவழியே) வரும் இனிய வரலாறு ஆகும், (எ-று).

(குறிப்பு) :—வியப்பொவ்வாது என்றும் பாடம் ; அங்ஙன மேல், ஒவ்வாது - சமம் கூற இயலாது என்று பொருள் கொள்க. (15)

## வேறு

30. நறைகமழும் செயந்திபுரத் தலபு ராண
 நால்வேதம் பயில்கிருஷ்ண சாத்ரி கூறப்
பொறையினெடு தமிழிசையால் புலவர் கேட்கப்
 புத்தமுதம் செவிக்கென்னப் புனைதல் செய்தான்
நிறைவடநூற் கடலையெலாம் தாமே நீந்தி
 நின்றளவி னெஞ்சகத்தி னிலையே கண்ட
மறையவர்கள் திலகனெங்கள் செந்தூர் வென்றி
 மாலைகவி ராசகலை வாணி யானே.

(பதவுரை) :—நறைகமழும்......... சாத்ரி கூற - (வட மொழியிலிருந்த) மணம் கமழும் திருச்செந்தூர்த் தல புராணத்தை நான்மறை பயின்ற கிருஷ்ண சாஸ்திரிகள் (தமிழ்ப்படுத்திக்) கூற ;

நிறைவடநூல்........ - வாணியானே - தலைமை யுடைய வடமொழிக்கடல் முழுதும் கரை கண்டு உணர்ந்து, அளவிலாது படரும் மனத்தில் ஒருமை யடைந்த அந்தணர் திலகன், கலைமகள் உறவு கொண்ட எங்கள் திருச்செந்தூர் வென்றிமாலைக் கவிராசன் ;

பொறையினொடு........... - புனைதல் செய்தான் - பொறுமையுடன் சந்தத் தமிழால் புலவர் பெருமக்கள் கேட்குமாறு, செவிக்குச் சுவைக்கும் சிறந்த அமுதெனும் படி இயற்றினன், (எ-று).

(குறிப்பு) :—வாணியான் எழுவாய் ; செய்தான் - பயனிலை. நூலாசிரியர் காலத்தோ, அவர்க்குப் பின்பு யாரோ ஒருவர் சிறப்புப் பாயிரமாகப் படிய பா இது. அடுத்த பாடலும் அதே செய்திதான். அல்லது கவி, தன்னையே பிறிதொருவராக வைத்துப் புனைந்ததெனினும் அமையும். (16)

31. கடலளறு படப்பருகும் எழிலி போலும்
 கனபிரபந்த மழைசொரியும் கவிதை மேகம்
வடவரையொப் பெனுமதுர கவிஞன் வென்றி
 மாலைகல்விக் கடலினிறை மதியால் வந்த
திடமுறுமாங் கனிசெழுந்தேன் ஒழுகு பாடல்
 செந்தமிழி னமுதை யுண்டு தேவலோகத்
திடமுடைய புலவர்தமக் கிணையாய் ஞானத்
 திருப்பவரும் புலவர்களா யிருக்கின் றரே.

(பதவுரை) :—கடலளறு........ கவிதை மேகம் - கடல் சேரும்படி (நீரை) உறிஞ்சும் மேகம் போன்ற சிறந்த நூல்மழை பொழியும் கவிக் கொண்டல்;

வடவரை......... - வென்றி மாலை - மேரு மலைக்கு ஒப்பானவன் என்று எவரும் போற்றும் மதுர வாக்கினன் ஆன வென்றி மாலைக் கவிராசன் ;

கல்விக் கடலின்............ - உண்டு - கலைக்கடலின் (உறவு கொண்ட) நிறையறிவால் உதித்த திடமான மாங்கனியின் செழுமையான (தேன் போலும் சாறு) ஒழுகும் பாடலான செந்தமிழ் அமுதைச் சுவைத்து ;

தேவ லோகத்து......... இருக்கின்றுரே - (இவ்) உலகில் ஞானிகளாய் இருப்பவர்களும், விண்ணுலகில் இடங் கொண்ட வானவர்க்கு ஒப்பானவர்களாய் வாழ்ந் திருக்கின்றனர், (எ-று).

**(குறிப்பு) :—பாற் கடல் அமுதைப் பருகும் விண்ணவர்க்கும், புலவர் என்ற பெயருண்டு. வென்றி மாலைக் கவிஞரின் உத்தமத் தமிழ் அமுதை உண்டு, இவ்வுலகரும் தேவ லோக இன்பம் காண்பர் என்பது குறிப்பு. (17)**

**பதிகம் நிறைவு பெற்றது.**

---

## 1. நைமிச வனத்தில் சூதமுனி சென்ற அத்தியாயம்

32. கோதமன் வசிட்டன் மங்கணன் மலையக்
குறுமுனி சத்தியன் வேத
வாதிய னுபத் தம்பன்மாண் டவியன்
வாமதே வன்விரூ பாக்கன்
காதிசேய் பிருகு சருச்சரன் சரபங்
கன்காத்தி யாயனன் கற்கன்
ஏதிலாக் கவண்டன் தூம்பிர னணிமாண்
டவியனென் றிருந்தவ முனிவன்.

(குறிப்பு) ;—கோதமன் - தீர்த்ததமர் குமாரர் ; அகலிகை மணாளர் ; ஞான நோக்கினர் ; சதாநந்தர் தந்தை; இவர் ஆசிரமம், மிதிலைக்குச் செல்லும் வழியில் இருக்கிறது.

வசிட்டன் - எழுமுனி மண்டலத்தில் இருப்பவர் ; அருந்ததி கணவர் ; முக்காலமும் உணர்ந்தவர்; எண்வகைச் சித்தியும் எய்தியவர்.

மங்கணன் - சிவபூசா துரந்தரர் ; சிவ மூர்த்தியால் எப்பேறும் எய்தியவர் ; இவர் மக்கள், மருத் கணங்கள்.

மலையக் குறுமுனி - பொதிகை மலையி லிருக்கும் அகத்தியர் ; இவர் வரலாறு பிரசித்தம்.

சத்தியன் - அம்பிகையின் பீஜ மந்திரத்தால் அருள் பெற்றவர்.

வேத வாதியன் - வேத மூலம் உணர்ந்து வாதிட்டு, களையான புறச் சமயங்களைக் களைந்தவர்.

ஆபத் தம்பன் - யஜுர்வேத விதிகளைப் பற்றி சூத்திரம் செய்தவர் ; இவர் செய்தது, ஆபஸ்தம்ப சூத்திரம்.

மாண்டவியன் - சூலம் தாக்கிய துன்பம் தீர, சிவபூசை செய்து இன்பம் கண்டவர்.

வாமதேவன் - சிவ வழிபாட்டால், சிரஞ்சீவித்வம் பெற்றவர்; பெற்றவள் வயிற்றில் இருந்த பொழுதே ஞானம் பெற்றவர்.

விருபாக்கன் - மேல் நோக்கிய கண்ணுடைய முனிவர்.

காதி சேய் - காதியின் மைந்தரான கோசிகர்; இவர் வரலாறு பிரசித்தம்.

பிருகு - பிரமன் மானச புத்திரருள் ஒருவர்; இவர் மகன் சுக்கிரன்.

சருச்சரன் - திருமேனி சுர சுரப்பாக, தவத்தில் எதனுடைய உபாதியும் இல்லாதிருக்கச் செய்து கொண்டவர்.

சரபங்கன் - காமன் கணைகளைப் பங்கம் செய்து, பேருண முத்தி பெற்றவர்.

காத்யாயனன் - இவர் பாணினி சூத்திரத்திற்குப் பேருரை செய்தவர்.

கற்கன் - பராவசு, அர்த்த வசுக்களின் தந்தை.

ஏதிலாக் கவண்டன் - குற்றம் என்பதே இல்லாதவர்; இவர், ஆசாரியர்க்குப் பதினன்கு கோடிப் பொன்தர எண்ணி, இரகுவிடம் பெற்று அளித்தவர்.

தூம்பிரன் - பிரம சரியத்தை இறுதி வரை அனுட்டித்த பெரியவர்.

அணிமாண்டவியன் - ஆணிமாண்டவ்யர்; இளம்பருவத்தில் தும்பிகளைப் பிடித்து, வாலில் துரும்பை நுழைத்து விளையாடிய பாவத்தால், பெருந்தவ முனியான பின்னுளில், கள்ளரென மயங்கிய காவலன் இவரைக் கழுவில் ஏற்ற, பிறகு பழைய

**தன் தவறை உணர்ந்து வருந்தியவர்; கழுத்தில் அழுந்திய கழுமுனை இரும்பின் இரு புறத்தையும், அரத்தால் அராவி, கண்டத்தில் நடுத்துண்டை விட்டமையின் இப்பெயர் எய்தியவர். அதன்பின் தூய சிவபூசை செய்து, இத் துன்பம் நீங்கியவர்.**

என்றிருந்தவ முனிவன் என்பதில், என்ற என்பதன் அகரம் தொகுத்தல். *(1)*

33. வசுமனு மௌன போசனன் பன்னு
சனன்மதங் கசன்பரா சரன்சீர்
வசுதவு மியன்க ணாதிபன் பரத்து
வாசனுங் கீரதன் சிலாதன்
இசைதகு ருசிய சிருங்கன்சா பாலி
அத்திரி வித்துவான் எழில்சேர்
சுசிநிக ராஞ்ச மதக்கினி காவன் சனைச்சரன்
காசிபத் தொல்லோன்.

(குறிப்பு) :—வசு - காசியில் வீரேச இலிங்கத்தை வழிபட்டு கவின்மிகு பேறு கண்டவர்.

மனு - பிரம புத்திரர்.

மௌன போசனன் - மவுனத்தையே உயர் விருந்தாக மதித்தவர்.

பன்னுசனன் - கௌதமி நதிக்கரையில் இருந்தவர்; இவர் குமாரர் திரணுசர்.

மதங்கசன் - மதங்க குலத்திற் பிறந்து, தவப்பயனாக மகாதேவியை மகளாகப் பெற்று, மாதங்கி என்று பெயரிட்ட மாதவர்.

பராசரன் - பரத்திற் சரித்த உணர்வினர்; இவர் வசிட்டர் பேரர்; சக்தி முனிவர் குமாரர். மாறுபட்டாரென்று, சண்முனிவரான தன் மக்களையே சபித்தவர்.

சீர்வசு - ஸ்ரீவசு; சிறந்த தவமே செய்கெனப் பிறர்க்குப் போதித்த பெரியர்; இவர் வியன் என்பவரது குமாரர்.

தவுமியன் - அருமைப் பாண்டவர்க்கு ஆசாரியர் ஆனவர்.

கணாதிபன் - புனித கணம்புல் அரிசியைப் புசித்தவர். சிறக்கத் தருக்கநூல் செய்தவர்.

பரத்துவாசன் - உசத்தியர் குமாரர்; சிருங்கிபேர புரத்தில் இவர்க்கு ஆசிரமம்; இது தற்போது பிரயாகை எனப்பெறும்; இருக்குவேத ஆறுவது காண்டத்தைச் செய்தவர் இவர்.

ஆங்கிரதன் - பிரமபுத்திரர்; அதர்வணவேதி; சிரத்தை, சுதா, சதி என மூவரை மணந்தவர்; தட்சன் மருகர்.

சிலாதன் - மங்கல சித்ரவதியை மணந்தவர்; கற்களை உணவாக் கொண்டு கடுந்தவம் செய்தவர். வேள்வி செய நிலம் உழ, அங்கொரு பெட்டி அகப்பட, அதனி லிருந்த ஒரு மைந்தரைக் கண்டெடுத்து வளர்த்தவர். அனைவர்க்கும் ஆநந்தம் அளிக்கும் நலம்மிக்க அம் மைந்தர்க்கு, நந்தி என நாமம் வைத்தவர்.

இசைதரு ருசிய சிருங்கன் - தக்க புகழுடைய கலைக்கோட்டு முனிவர்; இவர் விபாண்டகர் மைந்தர். உரோமபதன் நாட்டுப் பஞ்சத்தைப் புனித மழையை வருவித்துப் போக்கியவர்.

சாபாலி - பத்திய முனிவர் மாணவர்.

அத்திரி - அகரம் சிவத்தையும், திரி - முக்குணமாம் பிரகிருதியையும் அறிவிக்கும்; இந்த இரண்டினும் சமமான அன்பை வைத்தலின், இவர்க்கு இப்பெயர் வந்தது என்பர்; இவர் தேவி பெயர் அநசூயை. இவர் புதல்வன் சந்திரன்; தூர்வாசரும் இவர் மைந்தரே என்பர்.

வித்துவான் - கலைநல முழுதுணர் இவரை, இப்பெயர் கொண்டே உலகம் முழுதும் உணர்ந்தது.

**எழில்சேர் சுசி நிகராம் சமதக்னி** - எழுச்சி யுடைய அக்கினிக்குச் சமமானவர் இவர் ; ஜ - ஜனிப்பது ; ஜமத் - பட்சிப்பது ; யஜ - வேள்வி செய்வது ; இதனுட்பம் அறிந்தது பற்றி உண்டான பெயர் இது. இவர்க்குக் குடையும் செருப்பும் சூரியன் கொடுத்தான். இரேணுகை மணாளரான இவர் வரலாறு, எவரும் அறிந்த ஒன்று.

**காவன்** - கண்ணுவ முனிவர்க்கு மாமன் ; அட்டகோண முனிவர்க்கு மாதா மகர் ; கந்தப் பிரானிடம் பெருந் தரும விசேடம் கேட்கும் பேறு பெற்றவர்.

**சனைச்சரன்** - சநகாட்சயர் சந்ததியில் உதித்த ஒரு முனிவர்.

**காசிபர்** - மரீசியின் மைந்தர் ; தட்சன் மகளிர் பதின் மூவரை மணந்தவர். இவர் பரசுராமரிடம் உலகைத் தான மாகப் பெற்றாராதலின், பூமி காசினி எனும் பெயர் எய்தியது. (2)

34. திருந்துமா ணாக்க ரந்தமா ணாக்கர்
சீறடி பரவுமா ணாக்கர்
அருந்ததிக் கற்பிற் பன்னியர் தெக்கி
ணாக்கினி முதலமுத் தீகள்
விருந்தினர் தத்தம் மரபினி லுதித்த
மேலவர் நான்மறைக் கிழவர்
பொருந்தினர் சூழத் தவநெறிக் கினிய
புகரறு நைமிசம் போந்தார்.

(பதவுரை) :—திருந்து...... பரவுமாணாக்கர் - (அகமும் புறமும்) திருந்திய (மேல் இரு செய்யுள்களில் மதிக்கப் பெற்றவர்களது) மாணவர்களும், அம் மாணவர்களுடைய சிற்றடி வழிபடும் சீடர்களும் ;

அருந்ததி கற்பின் பன்னியர் - அருந்தி ஒத்த கற்பினை யுடைய (அம்முனிவர்களது) துணைவியர்களும் ;

தெக்கணுக்கினி முதல முத்தீகள் - (அவர்கள் வளர்க்கும் ஆகவநீயம் காருக பத்தியம்) தென் திசை யங்கி முதலிய மூன்று அக்கினிகளும் ;

விருந்தினர் - (அவர்களது) விருந்தினர்களும் ;

தத்தம் மரபினில்......பொருந்தினர் சூழ - தம் தமது (புனித) மரபில் உதித்த மேலவரான நான்மறை அந்தணர்களும் புடை சூழ்ந்துவர ;

தவநெறிக்கு......போந்தார் - தவ ஒழுக்கத்திற்கு உரிய சிறந்த குற்றமற்ற நைமிச வனத்தை யடைந்தனர், (எ-று).

(குறிப்பு) :—கிழவர் - உரியவர்கள் ; கிழமை - உரிமை. ‘ தங்கள் மரபினில் ’ என்றும் பாடம். (3)

35. அரியமா தவத்து முனிவரர் வரலு
மவர்தமைக் காண்டலு மன்பு
பெருகிமா தவர்க்கு மேன்மைசால் மறைகள்
பேசிய சவுனகன் என்பான்
வரிசையான் முகம னெடுத்தெடுத் துரைத்து
வாலிய தருப்பையா சனத்தில்
இருமென விருத்தி யருக்கிய முதல
வினிதளித் தருளுமேல் வையினில்

(பதவுரை) :—அரிய........... காண்டலும் - (மேற் சொன்ன) அரும்பெரும் தவ முனிவர்கள் (ஒருவர்பின் ஒருவராய்) வரவும், அவர்களைக் கண்டவுடன் ;

அன்பு பெருகி......எடுத்துரைத்து - சிறந்த தவசிகட்கு மேன்மை மிக்க வேத நுட்பங்களை உபதேசித்துக் கொண்டிருந்த சவுனகர் என்பவர், அன்பு மிகுந்து சிறப்பாக உபசார மொழிகள் பலவுரைத்து ;

வாலிய...... ஏல்வையினில் - தூய தர்ப்பையால் ஆன ஆசனங்களில் இரும் என்று சொல்லி, (அதனில்) அமரச் செய்து, அருக்கிய முதலானவைகளை இனிது உதவி அருளிய அச்சமயத்தில், (எ-று).

(குறிப்பு) :—அருக்கியம் முதல - அருக்கியம், பாத்தியம், ஆசமனம் முதலிய பதினாறு உபசாரங்கள்.

"பெருகிமா தவத்துச் சத்திரயாகம் பேணிய சவுனகன் என்பான்" என்றும் பாட பேதம் உண்டு. (4)

36. கண்டிகை நீறு மெய்யிடைக் கவினக்
கட்டுசெஞ் சடையொளி வாய்ப்பப்
பண்டரும் சுருதிக் கடலெலாம் கடந்த
பராசரன் மதலைதாட் கமலத்
தொண்டரிற் றலைமைச் சூதனுங் கெய்தித்
தோமறு புராணவா லயமாய்
விண்டுவின் வடிவாய் வந்தவற் பழிச்சி
மெய்ம்மயிர் புளகுற நின்றான்.

(பதவுரை) :—கண்டிகை...... சூதன் ஆங்கெய்தி - உருத்திராக்கமும் திருநீறும் திருமேனியில் விளங்க, கட்டி முடித்த செம்மைச் சடை ஒளியொடு கவின, இசைதரும் கடல்போல் பரவிய நூல்கள் அனைத்தையும் கற்றுக் கரைகண்ட பராசர் குமாரரான வியாச முனிவருடைய திருவடி மலர்களை வழிபடும் மாணவர்களுள் தலைமை பெற்ற சூதமுனிவர் அங்கு வந்து ;

தோம் அறு புராண...... புளகுற நின்ருன் - குற்றம் அற்ற புராணங்களின் ஆலயமாய், திருமாலின் அமிசமாய் அவதரித்த (அவ்) வியாசரைத் துதித்து, திருமேனி புளகாங்கிதத்துடன் நின்ருர், (எ-று).

(குறிப்பு) :—' சூதனென்ருேதும் ' என்றும் பாடமுண்டு; பொருள் நோக்கில் அது சிறவாமை யறிக.

## வேறு

37. நின்ற சூதமா முனிவனைக் காண்டலும் நெஞ்சில்
ஒன்று மன்பிஞ லருக்கியம் முதலன வுதவித்
துன்று காதலின் முனிவரர் யாவரும் தொடர்பால்
இன்று நீவரப் பெற்றன மினிதென விசைத்தார்.

(பதவுரை) :—நின்ற...... காண்டலும் - (கனிவொடு) நின்ற மாபெரும் சூதமுனிவரைக் கண்டதும்;

நெஞ்சில்...... உதவி - மனம் பொருந்திய அன்பால் அருக்கியம் முதலியவைகளை அளித்து;

துன்று...... யாவரும் - அழுந்திய அன்புடைய முனிவர் அனைவரும்;

தொடர்பால்...... இசைத்தார் - (யாம் செய்) நல்வினைப் பேற்ருல் இன்று நீர் இனிது (இங்கு) எழுந்தருளப் பெற்ருேம் என்று கூறினர், (எ-று).

(குறிப்பு) :—' கண்டு நெஞ்சகத்தில் ' எனவும் பாடமுண்டு. (6)

38. உரைத்த பின்னரும் மூவறு
புராணத்தி னூடு
பரித்த மான்மியத் தலங்களு
மவணுறு பலனும்
விரித்த தீர்த்தத்தி னுண்மையும்
மேன்மையும் விளம்பத்
தரித்து ளோமின்னும் வேண்டுவ
துளதுசாற் றுதுமால்.

(பதவுரை) :—உரைத்த...... தரித்துளோம் - (பெருக அங்ஙனம்) கூறிய பிறகும், பதினெண் புராணங்களுள் (உளதென ஓதப்பெற்ற) மகிமை மிக்க (தனிப்பெரும்) தலங்களையும், அவைகளை யடைதலால் ஆகும் பயன் களையும், (விரிவாக நூல்கள்) விவரித்த தீர்த்த விசேட உண்மையையும், (பிற) மேம்பாடுகளையும் (தேவரீர்) கூறியருள, (உயர்ந்த அவைகளை) உளத்தில் ஏன்றுளம்;

இன்னும் வேண்டுவது உளது சாற்றதும் - இனியும் (யாம்) அறிய வேண்டுவன உண்டு; (அதையும்) விண்ணப்பிக்கிறோம், (எ-று).

(குறிப்பு) :—ஆல் - ஆசை. பாட்டு குளகம்; இது, 9 ஆம் செய்யுளில் 'என்ன' என்பதொடு முடியும். (7)

39. சொற்ற காதையிற் றருக
ணேடெழுஞ் சூரைச்
செற்ற தன்மையும் செயந்திநன்
னகரிடைச் சேயோன்
உற்ற செய்கையுங் கந்தமா
தனப்பெய ருடைய
பொற்றை யவ்விடைப் போந்ததும்
தொகைப்படப் புகன்றாய்.

**(பதவுரை) :—**சொற்ற......தன்மையும் - (நீர் முன்பு எங்கட்கு) வாய் மலர்ந்த புராணத்தில், தாருகனுடன் உதித்த அச்சம் விளைவிக்கும் சூரபதுமனை அழித்த - செய்தியையும் ;

செயந்தி..........செய்கையும் - திருச் செந்திலம் பதியில் குமரன் எழுந்தருளிய வரலாற்றையும் ;

கந்தமாதன......புகன்றாய் - கந்த மாதனம் எனும் பெயருடைய மலை அப்பதியில் வந்த கதையையும், சங்கிரகமாகத் திருவாய் மலர்ந்தருளினீர், (எ - று).

**(குறிப்பு) :—பொற்றை - சிறுமலை. தொகைப்படப் புகலல் - தொகுத்து உரைத்தல். அவ்வரலாற்றை விரிவாக அறிய ஆவலிக்கிறோம் என்றபடி.** (8)

40. **என்ன மும்மலக் குறும்பெறி**
**சூதனுங் கெழுந்து**
**பன்னி ரண்டுகைக் குருபரன்**
**துணைப்பதம் பழிச்சித்**
**தன்னி ரண்டுகண் ணூடுமா**
**னந்தநீர் ததும்பச்**
**சென்னி மேற்கரம் குவித்தன**
**னன்றெனத் தெளிந்தான்.**

**(பதவுரை) :—**என்ன......எழுந்து - என்று (முனிவர்கள்) இயம்ப, மும்மலச் சேட்டைகளை முறிக்கின்ற சூத முனிவர் உடனே எழுந்து நின்று ;

பன்னிரண்டு......பழிச்சி - பன்னிரு திருக்கரப் பரம ஆசாரியனான குமார சுவாமியின் (தூய) திருவடிகளைத் துதித்து ;

தன்னிரண்டு...........குவித்தனன் - தனது இரு கண்களிலும் இன்பநீர் ததும்பச் சிரமேல் இரு கரங்களையும் கூப்பி ;

நன்றெனத் தெளிந்தான் -(புனிதம் மிக்க) புண்ணிய செயல் (இது) என்று, தெளிந்த உணர்வுடன் இருந்தான், (எ - று).

**(குறிப்பு) :—மும்மலக் குறும்பு - ஆணவ மாயா கன்மங் களின் சேட்டை.** (9)

**41. பொலன்மலைத் தலைநீ டருவிநீர் படிந்து**
**புழைக்கையான் பசித்தழு மென்றே**
**உலகளித் தவள்போங் காலையி லிறைவ**
**னுவந்தவட் புணர்தலும் நீற்று**
**நிலவினிற் கபோல ஆடியிற் றிகழும்**
**நிழலிணைக் கண்டுளம் சீறி**
**முலைசுவைத் துயிர்ப்பு வீங்குமும் மதத்து**
**மூரிமால் யானைதாள் துதித்தே.**

**(பதவுரை) :—**பொலன்மலை.........போம் காலையில் - (வெண்) பொன் மயமான இமயமலை யுச்சியி லிருந்து பொங்கிவரும் அருவி நீரில் ஆடி, துதிக்கையை யுடைய (மூத்த) பிள்ளை (அதிகம்) பசி கொண்டு அழுமே என்று உலகீன்ற உமாதேவி (விரைந்து) செல்லும் அமயம் ;

இறைவன்.........புணர்தலும் - சிவபிரான் அத்தற் பரியை மகிழ்ந்து தழுவலும் ;

நீற்று நிலவினில்......சீறி - (பெருமான்) திருநீற் றொளியால் உண்டான நிலவில் (அம்மையின்)

கன்னமாகிய கண்ணுடியில் விளங்கும் (அத்தழுவல்) நிழலைக் கண்டு சினந்து;

முலை சுவைத்து.........துதித்தே - (தேவியின்) திருமுலைப்பால் பருகியபடியே பெருமூச்சு விடும் மும்மத வலி முதிர்ந்த யானைமுக (தூய) கணபதியைத் துதித்து, (எ - று).

(குறிப்பு) :—'உவந்து முன் புணர்ந்துறு நீற்று' என்றும் பாடம். புழைக்கை - துளையுடைய துதிக்கை. மூரி - வன்மை மிகு நிலை. மால் - பெரிய. நீராடி வந்த நிமலையை, தற்பர இறைவர் தழுவினர். ககன வடிவியின் கண்ணுடிக் கன்னத்தில், நிமலர் நீறு, வடுப்போல் அடையாளம் வைத்தது. பரம கணபதி பால் பருகும் போது, அவ்வடுவிற்குக் காரணம் கருதாது கனன்றுர் என்பது கருத்து. 'நிலவறு' எனவும் பாடம். (10)

42. தோகைநிழல் குடைக்கவிப்பும் பசுஞ்சூட்டின்
மணிக்கொடியும், துண்டத் தேந்தும்
நாகமணிச் சுடர்விளக்கு முடன்விளக்கும்
மரகதப்பொன் ஞுக மானும்
கேகயத்திற் கதிர்விரிக்கு மிளம்பரிதி
போற்குலவும் கிரண வேல்வி
சாகனகத் தியற்குரைக்கு மொருகுமர
னிருசரணம் தலைக்கொண் டேத்தி.

(பதவுரை) :—தோகை நிழல் குடைக் கவிப்பும் - பீலியாகிய நிழல் அளிக்கும் குடையின் கவிப்பும்;

பசுஞ்சூட்டின் மணிக் கொடியும் - பசுமை யுடைய உச்சிக் கொண்டையான அழகிய கொடியும்;

துண்டத்து ஏந்தும் நாகமணிச் சுடர் விளக்கும் - வாயில் ஏந்திய பாம்பின் தலையில் உள்ள மாணிக்க மாகிய பெரும் பிரகாச தீபமும் ;

உடன் விளக்கும் மரகதப் பொன் நாகம் மானும் கேகயத்தில் - ஒருசேர ஒளிரும் மரகத மணியால் ஆகிய அழகிய மலைபோன்ற தோற்றமும் உள்ள மயில் மேல் ;

கதிர் விரிக்கும் இளம் பரிதிபோல் குலவும் கிரண வேல் விசாகன் - ஒளி பரப்பும் இளம் சூரியன் போல் விளங்கும் சந்திரிகை வீசுகின்ற வேல் ஏந்திய விசாக நாமனும் ;

அகத்தியற்கு உரைக்கும் ஒரு குமரன் இரு சரணம் தலைக் கொண்டு ஏத்தி - அகத்தியர்க்கு (உள் பொருள் நூல்களை) உபதேசித்தருளிய ஒப்பற்றவனுமான குமரனது (தூய) இரு திருவடிகளையும் தலைமேல் வைத்துத் துதித்து, (எ - று).

(குறிப்பு) :—குடையும் கொடியும் விளக்கும் கொண்ட மரகத மயிலாகிய மலைமேல், பரிதிபோல் விளங்கும் வேல் ஏந்திய பரன் என்று பரமகுமரனைப் பாராட்டியபடி. ஒருகுமரன் இருசரணம் எனும் பிராசம் அருமையினும் அருமை. அகத்தி யற்கு உபதேசித்த அறுமுகன், தன்னுள் இருந்து, நைமிசாரணிய வாசிகட்குத் தான் இனி செய்யவுள உபதேசத் திற்கு உதவ வேண்டும் என்று கருதி ஏத்தினர் என்க. (11)

43. சூதமா முனிவ னைமிசா ரணியத்
தொன்முனி வரர்முகம் நோக்கி
ஆதரம் பெருக விருகையும் குவித்துள்
ளன்பொடு செயந்திநன் னகர
மேதகுங் காதை சுகமுனி வினவ
வியாசன்முன் புகன்றது நுங்கட்
கோதுவன் கவற்சி வேறிலா துணரு
மென்றுளம் புலப்பட வுரைப்பான்.

(பதவுரை) :—சூதமா முனிவன்......முகம் நோக்கி - மாபெரும் சூத புராணிகர், நைமிச வனத்தில் இருக்கும் பழந்தவ முனிவர்களைப் பார்த்து ;

ஆதரம் பெருக......புகன்றது - பெருகிய அன்பொடு இரு கரங்களையும் குவித்து, உள்ளன்புடன் திருச்செந்தில் பதியின் சிறந்த மகிமை யுடைய புராணத்தை, (முன் பொரு சமயம்) சுக முனிவர் கேட்க, வியாச முனிவர் விளம்பியது ;

நுங்கட்கு........உரைப்பான் - உங்கட்கு (அதை) உபதேசிக்கிறேன்! கவலையும் பிறமன விகாரங்களும் இல்லாமல் உணர்மின்கள் என்று, உளம் தெளிய உரைக்க லாயினர், (எ - று).

(குறிப்பு) :—அன்று வியாசர் அருளிய செந்தில் மகாத்மியத்தை, இன்று நான் கூறுகிறேன்; இப்புராண சிரவணம் செய்பவர்கள், எத்தகைய மனவிகாரமும் இல்லாமல் இருக்க வேண்டும் என்ற குறிப்பு கோடிட பெறும். (12)

நைமிசாரண்யத்திற் சூதமுனி சென்ற அத்தியாயம் நிறைவுபெற்றது.

---

## 2. வியாசர் சுகர்க்கு உபதேசித்த அத்தியாயம்

44. மரக தத்தனித் தாவர நீற்ஜெளி வயங்கப்
புரிச டைக்குலம் விழுதென வெரிநிடைப் பொலிய
இருவி னைத்தொடர் பகற்றிய வியாதனென் றிசைக்கும்
ஒருவன் மெய்க்கதிக் கங்கைமூ லத்துவந் துற்றான்.

(பதவுரை) :—மரகதத் தனி..........தாவர நீற்றொளி வயங்க - மரகதம் போலும் ஒப்பற்ற மேனியில் திருநீற்றுப் பேரொளி விளங்க ;

புரிசடைக்குலம் விழுதென வெரிநிடை பொலிய - முறுக்கேறிய சடைத் தொகுதி (ஆலின்) விழுதுபோல் முதுகுப்புறம் தொங்க ;

இருவினைத் தொடர்பு அகற்றிய..........ஒருவன் - நல்வினை தீவினைகளின் தொடர்பு தீர்ந்த வியாசர் என்று பெரும் புகழ் பெற்ற ஒப்பற்ற முனிவர் ;

மெய்க்கதிக் கங்கை மூலத்து வந்து உற்றான் - மெய்ப்பயனைத் தரும் கங்கைக் கரையோரம் வந்திருந்தார், (எ - று.)

(குறிப்பு) :—தாவரம் - உடல். மூலம் - கரையின் அடிவாரம். (1)

தலைம யங்கிய வேதங்க டம்மைநான் காக
நிலைவ குத்தியாப் பத்தொடெண் புராணநூ னெறியா
உலக மேழினு நிறுத்தியே வுமாபதி யருள்சேர்
கலையின் வன்மையான் யாவையு மகத்திடைக் காண்பான்.

(பதவுரை) :—உமாபதி........வன்மையான் - உமை மணாளர் திருவருள் செறிந்த மெய்ந்நூல் உணரும் திட்பம் மேவிய வியாசன் ;

தலை மயங்கிய......நிறுத்தியே - (ஒரு காலத்தில்) தலை தடுமாறிய மறைகளை நான்கு வகையாக வகுத்து, பதினெண் புராணங்களை, நேர் முறையாக ஏழுலகங் களினும் நிலைபெற வைத்து ;

யாவையும் அகத்திடை காண்பான் - (காணத் தக்க) எவைகளையும், (தன்) சிந்தனையில் காண் பவன், (எ - று).

(குறிப்பு) :—" நிலைமை பெற்றிடப் பதஞ்சடைக் கிரமத்தி னெறியா உலகமேழுக்கும் " என்றும் பாடபேதம் உண்டு.

நெறி ஆய் - என்பதில் பிறவினை விகுதி தொக்கது. பெயர்ப் பயனிலை வருவித்து உரைக்கப் பெற்றது. (2)

**அன்ன வன்சர ணத்தினை யஞ்சலி செலுத்தித்**
**துன்னு நான்மறைச் சுகனெனுந் தவமுனி தொழுது**
**சென்னி மேற்கரங் குவித்துமுன் பொருணையின் றென்பால்**
**மன்னு கின்றதோர் செயந்திநன் னகரென வகுத்தாய்.**

(பதவுரை) :—துன்னு......முனி - புனித நான்மறை ஒழுக்கம் பொருந்திய தவத்தரான சுக முனிவர் ;

அன்னவன் சரணத்தினைத் தொழுது - (மேற் சொன்ன) அப் பெருமைகளை யுடைய வியாசர் திருவடி களை வணங்கி ;

கரம் அஞ்சலி செலுத்தி சென்னிமேல் குவித்து - (தம்) கைகளை அஞ்சலித்துத் தலைமேல் குவித்து ;

முன் பொருநையின்......வகுத்தாய் - முன்னொரு நாள் பொருநை நதியின் தென்புறத்தில் திருச் செந்தில் எனும் நலம் சிறந்த பதி ஒன்றுளது என்று அருளினீர், (எ - று).

(குறிப்பு) :—இதுவும் குளகம். (3)

47. சிந்து நன்னக ரத்துள சீர்மையுஞ் செவ்வேள்
வந்த தன்மையுந் தொகைப்பட வுணர்த்தினை மதலைக்
கெந்தை நின்சொலி னாரமு தத்தினை யினிதா
உய்ந்தி டும்படி செப்புதி யாலென வுரைப்பான்.

(பதவுரை) :-சிந்து......உணர்த்தினை - செயந்தி எனும் நலம் மிகுந்த தலத்தின் உள்ள சிறப்பையும், (அப்பதி யில்) செவ்வேள் இறைவன் எழுந்தருளிய இயல்பையும் (அன்று) உணருமாறு தொகுத்து உணர்த்தினீர் ;

எந்தை மதலைக்கு - எந்தையே! உமது புதல்வ னை அடியேற்கு ;

நின் சொலின்......உரைப்பான் - உமது திருவாய் மொழியான அரிய அமுதை (உட்கொண்டு) இனிது உய்யும்படி, (விரித்து) விளக்கி யருளும் என்று விண்ணப்பிக்க, (வியாசர்) சொல்லத் தொடங்கி னர், (எ - று).

(குறிப்பு) :—உரைப்பான் - உரைப்பானாய் எனும் பொருளில் வரும் வினையெச்சமுற்று, அடுத்த பாட்டில் 'நன்றால் என' என்பது கொண்டு முடியும். (4)

குற்ற மூன்றகற் றியசுக முனிவனைக் குறிப்பால்
உற்று நோக்கிநின் னெண்ணநன் றுலென வொளிகூர்
கற்றை யஞ்சுடர் வேலவன் காதைக ளனைத்தும்
முற்ற வோதுவன் சோர்வறவுணர்குதி முறையால்

(பதவுரை) :—குற்றம்........நோக்கி - முக்குற்றம் தீர்ந்த சுகரை (வியாசர் சிந்தனைக்) குறிப்பொடு சிறப்பாகப் பார்த்து ;

நின் எண்ணம்......முறையால் - உன் சிந்தனை நலமானது என்று, புகழ்மிகத் திரண்ட அழகிய ஒளியுடைய வேல் முருகன் ஆடல் வரலாறுகள் அனைத்தையும் முழுமை பெற விளம்புவன் ; சோர்விலாமல் முறைப்படி உணர்ந்து கொள், (எ - று).

(குறிப்பு) :—குற்றம் மூன்று - காம வெகுளி மயக்கங்கள். உண்டான பரிபாகத்தை 'குறிப்பால் உற்று நோக்கி' என்பதில் பெற வைத்தார். இது, 17-ஆம் பாட்டில் 'விண்டான்' என்பதனோடு முடியும். (5)

49. ஞான வீட்டுறு திறவுகோல் கடாவுடை நடுவன்
மான சோத்திரக் கதவெட்டி யோகத்தின் மதிப்பார்
ஆன நெஞ்சகத் திருஞ்சுடர் விளக்கதா மமரர்
சேனை காவலற் குரியதாஞ் செயந்திநன் னகரம்.

(பதவுரை) :—அமரர் சேனை......நகரம்...—தேவ சேனாதிபதிக்கு உரியதான செயந்தி புரமானது ;

ஞான வீட்டுறு திறவுகோல் - ஞானத்தால் அடையப் பெறும் வீட்டினுள் புகுவிக்கும் திறவு கோலாகும் ;

கடாவுடை நடுவன் மானசோத்திரக் கதவு - (எருமைக்) கடாவை ஊர்தியாக வுடைய இயமனது மான சோத்திரம் (எனும் நகரின் உட்புகாதபடி அடைக்கும்) கதவாகும் ;

எட்டு யோகத்தின்........விளக்கதாம் - அட்டாங்க யோக சாதனையால் தியானிப்பவர்களது உளத்தில் விளங்கும் பேரொளி விளக்கு ஆகும், (எ - று).

(குறிப்பு) :—*திருச்செந்தூர் திறவுகோல், கதவு, விளக்கு எனும் அருமை என்றும் மறக்க இயல்வதில்லையே. நடுவன் - தென்திசை அதிபன்.* (6)

**உடைந்த தெண்டிரை முகாரம்ப தீர்த்தத்தோர் பொழுது**
**படிந்து மும்முறை குமர நா யகன் பதம் பணிவார்**
**மிடைந்த தேவரு முனிவரர் யாவரும் விரைவில்**
**அடைந்தன் னுர்பதம் பரவவீற் றிருந்தருள் புரிவார்.**

(பதவுரை) :—உடைந்த.........பணிவார் - (கரை) உடைத்தெழும் தெளிவான அலைகளை யுடைய வதனா ரம்ப தீர்த்தத்தில் ஒருநாள் நீராடி, மூன்று காலங்களிலும் (பரம) குமரன் திருவடிகளைப் பணிபவர்கள் ;

மிடைந்த தேவரும்......அருள்புரிவார் - நெருங்கக் கூடுகிற வானவரும், முனிவர் பெருமக்கள் அனைவரும் விரைந்து வந்து, அவர்கள் திருவடிகளை வணங்க, வீறு தோன்ற இருந்து (அவர்கட்கு) அருள் பாலிப்பவர் ஆவர், (எ - று).

(குறிப்பு) :—**உடைத்த என்பது, உடைந்த என விகாரப் பட்டது. மற்றும் ஓசை யடங்கின எனவுமாம். முகாரம்பம் - இருபத்து நான்கு தீர்த்தங்களுள் ஒன்று. அது, சந்நிதிக்கு**

**எதிரில் உள்ள கடல். இச்சமுத்திர தீர்த்தம் மகா புனித மானது. பதம்பணிவார் - எழுவாய்; அருள்புரிவார் - பயனிலை.** (7)

**மூன்று வைகலிம் முகாரம்ப மூழ்கிவேல் முருகற்(கு)**
**ஆன்ற சோடச விதியினு லருச்சிக்கு மவர்கள்**
**கான்ற மும்மத வெண்களிற் றிந்திரக் கடவுள்**
**ஏன்று வந்தனை புரிந்திட வினிதுவீற் றிருப்பார்.**

(**பதவுரை**) :—மூன்று வைகல்......அருச்சிக்கும் அவர் கள் - மூன்று நாள் இந்த வதனுரம்ப தீர்த்தத்தில் நீராடி, வேல் முருகனுக்கு நிறைவுடைய பதினறு உபசார விதிப்படி அர்ச்சித்து வழிபடுமவர்;

கான்ற மும்மத......வீற்றிருப்பார் - மும்மதம் பொழி யும் வெள்ளை யானை (மேல்) வரும் தேவேந்திரன் எதிர் கொண்டு வந்து விரும்பி வணங்க, இன்பமான வீறுடன் எழுந்தருளி யிருப்பர், (எ - று).

(**குறிப்பு**) :—**கான்ற - வெளிப்படுத்திய. வானவர் அதிப ருதலின் ' இந்திரக் கடவுள் ' என்றுர்.** (8)

**52. பரியின் வேள்வியி லாயிர கோடியிற் பலமும்**
**உரிய நூன்முறை யுஞற்றுமெய்க் கதிகளு முலவா**
**அரிய மாதவப் பயன்களும் வேதவா கமத்துச்**
**சுருதி யாய்ந்திடு கடவுளர் தருங்கதித் தொகையும்.**

(**பதவுரை**) :—பரியின்......பலமும் - ஆயிரம் கோடி அசுவ மேத யாகங்களைச் செய்வதால் வரும் பயனும்;

உரிய......கதிகளும் - தகுதியுடைய ஆகம விதிப் படி (நோன்பு, வைதிகம் அனுட்டிப்பதால்) வரும் மெய்ம்மைப் பயன்களும் ;

உலவா......பயன்களும் ; அழியாதபடி செய்யும் பெருகிய தவப் பேறுகளும் ;

வேத ஆகமத்து......கதித் தொகையும் - வேத ஆகமக் கேள்விகளை (ஐயம் திரிபு அற) ஆயும் (பிரமன் முதலினோர்) வழங்கும் பெரும் தொகுதிகளான கதிகளும், (எ - று).

(குறிப்பு) :—இது அடுத்த பாட்டின் 'அமையும்' என்பதொடு முடியும்.

53. கங்கை யேமுத லாகிய நதிகளின் கதியும்
திங்க ளஞ்சடை யரன்கயி லாயத்தின் சிறப்பும்
பொங்கு மந்திர நிலைதரும் கதிகளும் போர்வேல்
அங்கை யானெழுத் தாறினென் றேத்திட வமையும்.

(பதவுரை) :—கங்கையே........கதியும் - கங்கை முதலிய நதிகளில் (தோய்தலால்) உண்டாகும் பயனும் ;

திங்களஞ்சடை......சிறப்பும் - பிறையுலவும் அழகிய சடையுள சிவபிரானுடைய கயிலையின் (வாழ்தல் ஆகிய) கவுரவமும் ;

பொங்கு மந்திர நிலைதரும் கதிகளும் - மிக்க மந்திர செப நிலைகளால் விளையும் பயன்களும் ;

போர்வேல்...........அமையும் - போரிடும் வேல் படையை அழகிய கரத்தில் கொண்ட குமரன் (நாமமான) ஆறெழுத்தை (ச்செந்திலில் இருந்து) ஒருமை மனம் கொண்டு உருவேற்றலால் உண்டாகும், (எ - று.)

(குறிப்பு :—கயிலாயத்தின் சிறப்பு, மந்திரகதி யாவும், திருச்செந்தூரில் இருந்து ஆறெழுத்தை உருவேற்ற அமையும் என்றபடி. ஒன்று எனும் முதனிலை, வினையெச்ச விகுதி கெட்டு நின்றது. (10)

## வேறு

54. மறைகொழிக்கும் செயந்திபுரத் தெல்லையைநீங்
காதிருந்து வாழு மாந்தர்
குறைவிறவச் செயலாள ரவர்புரியும்
தருமமொன்று கோடி யாமால்
அறுமுகனைச் சேவைசெயும் கண்ணுடையார்
கண்ணுடையா ரன்னோன் சீர்த்தி
முறையுரைக்கு நன்றேவே நன்றுவென்
றேசுருதி மொழியு மாதோ.

(பதவுரை) :—மறை கொழிக்கும்.........செயலாளர் - வேத (நாதங்கள்) மிக்கு ஒலிக்கும் செந்தில் எல்லையை அகலாமல் இருந்து வாழ்கிற மக்கள், எக்குறையும் இல்லாத (உயர்ந்த) தவ ஒழுக்கம் உடையோர் ஆவர் ;

அவர் புரியும் தருமம் ஒன்று கோடி ஆமால் - அவர்கள் செய்கிற நல்வினை ஒன்று, ஒரு கோடி புண்ணியமாக உரு எடுக்கும் ;

அறுமுகனை.........கண்ணுடையார் - அறுமுகப் பரமனைச் சேவிக்கும் கண்களை யுடையவர்களே கண் பெற்றவர் ஆவர் ;

அன்னான் சீர்த்தி.........மொழியும் மாதோ - அப் பெருமானுடைய புகழை முறையாகப் பேசும் நலஞ் சிறந்த நாவே புண்ணியமான நாவாகும் என்று, அருள் நூற்கள் பெரிதும் அறிவிக்கும், (எ - று).

(குறிப்பு) :—**காணும் கண்களே கண்கள், காணாக் கண்கள் புண்கள் ; உரைக்கும் நாவே நாக்கு, மற்றையவை பிண்ணாக்கு என்பது** குறிப்பு. (11)

## வேறு

55. வேதாவுமவ் வேதாவினை வியனுபியி னமைத்த
தாதார்பசுந் துளவத்தனுந் தவத்தோர்களுஞ்சுரரும்
காதார்விழி யுமையாள்தரு கந்தன்புரம் வந்தோர்
ஓதார்நமையென்றேவியந் துரைப்பாரிவை யுணர்நீ

(பதவுரை) :—வேதாவும்......சுரரும் - நான்முகனும், அந் நான்முகனை உயர்ந்த (தன்) உந்தியில் இருந்து உதவிய மகரந்தங்கள் பொருந்திய பசிய துளசி மாலை தரித்த திருமாலும், தவ முனிவர்களும், தேவர்களும் ;

காதார் விழி......உணர்நீ - காதளவு ஓடிய கண் களையுடைய உமாதேவி யருளிய கந்தப் பரனின் செந்தில் பதிக்கு வந்தவர்கள், நம்மை (ஒரு பொருளாக மதித்துப்) பேசார்கள் என்று, (செந்தில் மகிமையை) வியந்து கூறுவர் ; இச் செய்திகளை, (மகனே சுகர் !) நீ உணர்ந்துகொள், (எ - று).

(குறிப்பு) :—செந்திற் பதியில் வந்த சிறப்பினர்க்கு, எவரையும் மதியாத ஏற்றம் உண்டாகும் என்பது கருத்து. (12)

56. எவராகிலுஞ் சனனம்முத லீறுமள வும்மா
தவமாற்றினுஞ் சருகாரினுந் தானம்பல செயினும்
உவமானமில் செயந்திப்பதி ஒருநாளுப வசியார்க்
கவமாமவர் சனனம்பசு வாமாமிவை யறிநீ.

(பதவுரை) :—எவராகிலும் - யாவரே ஆயினும் ;

உவமானமில்...உபவசியார்க்கு - உவமை சொல்ல முடியாத செந்தில் பதியில் (தங்கி), ஒரு நாளாயினும் உபவாசம் மேற்கொள்ளாதவர்க்கு ;

சனனம் முதல் ஈறு ஆம் அளவும் - பிறந்த நாள் முதல் இறுதி நாள் வரையும் ;

மாதவம்.....செயினும் அவமாம் - பெருந்தவம் புரியினும், (உணவை மறுத்து) சருகுகளையே (உணவாக) உண்டிருப்பினும், (அவைகளுடன் பதினொரு வகையான) தானம் செய்யினும், (அவைகளால் யாதொரு பயனுமின்றி) வீணாகும் ;

அவர் சனனம் பசு ஆம் - அவரது பிறப்பு விலங்குப் பிறப்பிற்குச் சமம் ;

ஆம் இவை உணர்நீ - ஆன இவைகளை நீ உணர்ந்துகொள், (எ - று).

(குறிப்பு) :—செந்திலில் ஒரு நாளேனும் விரத மிருப்பவர், உயர்ந்த பிறப்பினர் என்பது கருத்து. (13)

**உரைச்சிந்துநற் புரமேசுர ருலகம்மவண் ணுறுவோர்**
**பரிக்குஞ்சுர ரவரன்பொடு பகர்வார்த்தைக ளனைத்தும்**
**இருக்கின்பெரு மிதமந்திர மவரோடினி திருத்தல்**
**பெருக்குங்கதி பெறுகின்றதில் பெரிதாமிவை யுணர்நீ.**

(பதவுரை) :—(சிறக்க) உரைக்கும் செந்தில் பதியே தேவ உலகம்; (வளமான) அப்பகுதியில் வாழ்பவர்களே தாங்கும் தேவர்கள்; அவர்கள் அன்பொடு மொழியும் அனைத்துமே இருக்கு மறையின் உயர்ந்த மந்திரங்கள்; அவர்களோடு சேர்ந்து வாழ்ந்து இருத்தல், பேரின்ப வீடுபேற்றைப் பெறுதல் போன்ற உயர்ந்த பெருமை யுடையதாம்; (இவைகளை நீ) உணர்ந்து கொள், (எ - று).

(குறிப்பு) :—*உரை – புகழ். பரிக்கும் – தாங்கும். கதி – முத்தி.* (14)

**நாராயணன் முனமேசொல நவைதீர்சனற் குமரன்**
**ஆராவமு தெனவேசிந்து புரமான்மிய மனைத்தும்**
**பேராதர வுடன்பேசிய பெருங்காதையி னுட்பம்**
**சோராதுனக் குரைக்கேனிது துணிவாகவுந் துணிநீ.**

(பதவுரை) :—திருமால் முன்னொரு சமயம் சொல்ல, குறை ஒன்றும் இல்லாத சனற்குமார முனிவர், தெவிட்டாத அமுது போல் இனிக்க, திருச்செந்தில் பெருமை முழுதையும், பேரன்புடன் (எனக்கு) உரைத்த பெரிய வரலாற்றின் நுட்பங்களை, சோர்விலாமல் உனக்குச் சொல்கின்றேன்; இதை நீ நிச்சயமென நம்பு, (எ - று).

(குறிப்பு) :—**நவை – களங்கம். ஆராத – சுவை அடங்காத. ஆதரவு – அன்பு முகம்.** (15)

**இருமூவகைக் களைவேரறுத் தின்பம்பெற வேண்டின்**
**ஒருமூவைகல் முருகேசனை யுள்ளன்பொடு பரவித்**
**திரையார்வத ஞரம்பமெ னுந்தீர்த்தமும் படிந்து**
**கரையேறுதி பெருநான்மறை கரைகண்டுயர் கருத்தாய்.**

**(பதவுரை) :—**பெரு நான்மறை கரை கண்டு உயர் கருத்தாய் - பெருமையை யுடைய நால்வேத முடிபை ஓதி உணர்ந்து உயர்ந்த உள்ளம் கொண்டவனே ! ;

இரு மூவகைக் களைவேர் அறுத்து இன்பம் பெற வேண்டின் - வலிமிகு மும்மலங்களாகிய களைகளை வேரொடு களைந்து, பேரின்பப் பயிரைப் பெற விரும்பினுல் ;

ஒரு மூவைகல்......கரையேறுதி - மூ ன் று நாள் (செந்திலில்) முருகனைத் தூய உள்ளன்பொடு துதித்து, அலைகள் நிறைந்த வதனாரம்பரம் எனும் தீர்த்தத்திலும், (பிற தீர்த்தங்களிலும்) முழுகிக் கரை ஏறுவை, (எ - று.)

**(குறிப்பு) :—மூன்று நாள்** வழிபாட்டில் மும்மலங்கள் **தீரும் ; நான்**மறையின் **கரைகண்டு** உயர் **கருத்தனை நீ,** வதனாரம்ப **தீர்த்தமும் படிந்து கரையேறுதி என்ற அருமையே** அருமை. **கரை கண்டவர்தான் கரையேற** முடியும் **என்பது கருத்து.**

**இரு மூவகை என்பதில், இருமை வலிமை எனும் பொருட்டு ; மற்று இருமூவகை – காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சர்யம் எனும் அறுவகைக் களைகள் எனினுமாம்.** (16)

60. உனக்கேசொலும் பொருளாமிந்த
உண்மைச்சரித் திரத்தை
நினைத்தேட்டினி லெழுதித்தினம்
படிப்போர்நிக ரில்லா
மனத்தேசர வணத்தெம்மிறை
வாழ்வானெனச் சுகற்குக்
கனைத்தோலிடு மறைநான்கெனக்
கண்டான்முனம் விண்டான்.

(பதவுரை) :—உனக்கு (யான்) உரைக்கும் இந்த உள் பொருளான வரலாற்றை உணர்ந்து, ஏட்டில் எழுதி, (ஓயாது) நாள்தோறும் ஓதுவார்தம் ஒப்பிலாத உள்ளத்தில் எம் சரவண பவன் சார்ந்திருப்பன் என்று, (முதல்வனை எண்ணி) முழங்கி முறையிடும் மறைகளை நான்காக வகுத்த (நலஞ்சிறந்த) வியாசர், (குதூகலத்தொடு) சுகர் முன் கூறினர், (எ - று).

(குறிப்பு) :—கனைத்தல் – ஒலித்தல். ஓலிடல் – அபயம் இடுதல். கண்டான் முனம் விண்டான் எனும் பிராசம், கருதுவார் கருத்தைக் கனிவிக்கும். (17)

வியாசர் சுகர்க்கு உபதேசித்த அத்தியாயம்
நிறைவெய்தியது.

———

## 3. திருச்செந்தூர் சிறப்புரைத்த அத்தியாயம்

61. ஆங்காரக் குறும்பகற்றி ஆதிவே
தாகமத்திற் காதியான
ஓங்காரத் திருவடிவாங் குமரேசன்
செயந்திபுரத் துற்ற காதை
நீங்காதைம் புலனுமொன்ருய்ப் பரபோகத்
துண்மையென நினைத்து நீயென்
பாங்காக வுணர்தியென வியாசமுனி
சுகன்கேட்கப் பகர்ந்தான் மாதோ.

**(பதவுரை) :—**(*சிவபிரான் திருவாய் மலர்ந்த*) *முதன்மை வேத ஆகமங்களின் மூலமான பிரணவமே திருமேனியாக் கொண்ட குமாரபரனது திருச்செந்தூர் புராணத்தை, (இது) சிவபோக உள்பொருள் செறிந்த செய்தியென்று சிந்தித்து, அகங்காரச் சேட்டைகள் அனைத்தையும் அடக்கி, (சுவை ஒளி ஊறு ஓசை நாற்றமாம்) ஐம்புலன்களும் ஒரு முகமாகி, நீ என்முன் பகுதி பகுதியாக உணர்ந்து கொள் என்று, வியாசர் சுகர்கேட்ப மேலும் கூறல் ஆயினர், (எ - று).*

**(குறிப்பு):—"ஆங்காரம் உள்ளடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்துத் தூங்காமல் தூங்கிச் சுகம்பெறுவ தெக்காலம்" எனும் அனுபவத்தை இப்பாட்டில் அறிக.**

**இராஜசம், தாமஸம், சத்வம் என, மோதும் அகங்காரம் மூவகை. அவைகளால் பிள்ளைமைக் குறும்பு பெரிது நிகழும்.**



ஸ்ரீ வதனரம்ப தீர்த்தமும், திருக்கோயிலின்
தெற்குத் திருக்கோபுரமும்



திருச்செந்திலாண்டவர்
ஆறுமுக விலாஸம்

" ஆங்காரமும் அடங்கார், ஒடுங்கார், பரமாநந்தத்தே
தேங்கார், நினைப்பும் மறப்புமறார், தினைப் போதளவும்
ஓங்காரத்துள் ஒளிக்குள்ளே முருகன் உருவங் கண்டு
தூங்கார், தொழும்பு செய்யார் என்செய் வார்யம
தூதருக்கே "

என்ற கந்தர் அலங்காரமும், இங்குக் கருதத் தகும். (1)

62. சிந்துபுர மெப்புரத்துஞ் சிரபுரமா
மப்புரத்திற் சிறந்த தீர்த்த
முந்துநதி பலகோடி யவற்றினுக்கு
மேலாகு முதியோர் வைகும்
அந்தநக ரிடையிருந்து தனித்தொருமந்
திரஞ்செபிக்கி னலகி லாத
மந்திரத்தின் கதியுதவு மனைத்துயிர்க்கும்
போகமுத்தி வழங்கு மாதோ.

(பொ - ரை):—செந்தில் பதி, எந்த நகரத்தும் தலை சிறந்த தலம். அப்பதியில் உள்ள சிறந்த தீர்த்தங்கள், மேதகு நதிகள் பலவற்றினும் மேம்பட்டதாகும். (எண்ணத்தக்க) மேலோர் வாழும் அந்நகர் நடுவில் ஏகாந்தமாயிருந்து, (உயர்ந்த) ஒரு மந்திரத்தை உருவேற்றினால், (அது) அளவிலா மந்திரங்களை உருவேற்றுதலால் உண்டாகும் பயனை உதவும். (அது,) எல்லா உயிர்களுக்கும் இகபோக பரபோகம் இரண்டையும் தரும், (எ-று).

(குறிப்பு) :—அலகு – அளவு. போகம் - அனுபவிக்கும் பொருள்கள்.

நகரில் சிறந்தது செந்தில்பதி, தீர்த்தங்களில் உயர்ந்தது செந்தில் தீர்த்தம்; இங்கு ஒரு மனுவை உருவேற்றினால் அது அளவிலா மந்திர செபப் பயன் ஆகும்.

இம்மையில் போகமும், மறுமையில் முத்தியும் சித்திக்கும் என்பது, சால்புடையோர் அறியுமாறு செய்த சமிக்ஞை. (2)

**63. காசியினிற் புனன்மூழ்கிக் களித்தகொல்லா**
**புரியிருந்து கரநி யாச**
**மாசில்செபஞ் செபித்துணவு மாகுதியி**
**லாக்கிமற்றவ் வானோர் வைகுந்**
**தேசமுழு வதுங்குலவிச் சையத்தி**
**னுற்றதெத்தாத் திரேயன் றன்பால்**
**நேசமுடன் தினந்தோறு மிவ்வாறு**
**விடாதொழுகு நிகரின் மேலோர்.**

(பொ - ரை) :—காசிப் பதியில் (உள்ள) கங்கையில் நீராடி, (தன்னில் வாழ்வார்க்கு) மகிழ்வளிக்கும் கொல்லாபுரியில் இருந்து, (கைவிரல்களை முறைப்படி குறித்த இடங்களில் மந்திர உச்சரிப்புடன் வைத்துத் தூய்மை செய்து, தன் உடலை சிவமேனியாகப் பாவித்துச் செய்யும் கிரியையான சகளீகரணத்துடன்,) மாசற்ற (உத்தம) மந்திரங்களை உருவேற்றி, உணவை (வேள்வி யில்) பூரண ஆகுதியின் இடத்தில் (உம்பர்கட்கு) உளதாக்கி ;

அதன்பின், அந்தத் தேவர்கள் வாழும் பதங்கள் யாவற்றினும் நடமாடி ;

ஸ்ரீ சயில மலையில் இருக்கும் தத்தாத்திரேயரிடத்தில் (குரு) பக்தியுடன் இருந்து, இவ்விதம் நாள்தோறும் இடையறுது (மேதகு) செயல் புரியும் ஒப்பிலாத மேலோரும், (எ - று).

(குறிப்பு) :—

“ திருவளர் ஆரூர் மூலம் திருவானைக் காவே நாபி
மருவளர் பொழில்சூழ் அண்ணு மலைமணி பூரம் நீவிர்
இருவரும் கண்டமன்றம் இதயமாம் திருக்காளத்தி
பொருவரும் கண்ட மாகும் புருவமத் தியமாம் காசி ”

என்ற திருவிளையாடல் புராண வெள்ளியம்பலத் திருக் கூத்தாடிய படலம் தெரிவித்தபடி, காசி புருவ நடுவிடம் ஆகும். கொல்லாபுரி – இது சத்தி பீடம் அறுபத்து நான்குள் ஒன்று; அங்கநியாசம், கரநியாசம் என இருவகை. அங்கநியாசம், இருதயம் முதலிய இடங்களில் மந்திரத்தொடு கையால் தொடும் அனுட்டான முறை.

கரநியாசம் – கைவிரலால் தொட்டுச் செய்யும் கிரியை. சீவபோதத்தை நிவேதித்தலே, 'உணவும் ஆகுதியில் ஆக்கி எனலிற் பெற வைத்தார்.

ஸ்ரீசையிலம்—மல்லிகார்ச்சுன மலை; இது நந்தி தேவர் ஆட்சி யுடையது. தத்தாத்ரேயர் – ஒரு முனிவர்; அத்திரிக்கு அநசூயை யிடத்துப் பிறந்த புதல்வர்; இவரை விஷ்ணு அமிசம் என்பர்.

தத்தாத்ரேயர் காசியில் நீராடி, கொல்லாபுரியில் இருந்து, கரநியாசம் கண்டு, மந்திர செபம் செய்து, உயிர்ப் போதத்தை உணவாக நிவேதித்து, உம்பர்கள் வாழும் உலக முழுதினும் உலவி, சைய மலையில் தங்கி யிருக்கிறார் எனும் தத்துவம் கருதத் தகுவது. (3)

64. கருதுகந்த ளேந்திரர்கோ ரக்கர்கொங்க
ணேந்திரர்வெங் காமந் தீர்ந்த
பெருமையினு கார்ச்சுனர்மச் சேந்திரர்மா
தவநிலைமைப் பீமநாதர்
அருணகிரி நாதரரும் புசங்ககுரு
நாயகர்பே ராதி நாதர்
உரிமைநவ நாதசித்தர் வானவர்கண்
முனிவரர்க ளொழுக்க மிக்கார்.

(பொ - ரை) :—மதிக்கப்படுகிற கந்தளேந்திரர், கோரக்கர், கொங்கணேந்திரர், கொடிய காமத்தை விலக்கிய பெருமையை யுடைய நாகார்ச்சுனர், மச்சேந்திரர், பெரும் தவநிலைமை யுடைய பீமநாதர், அருணகிரிநாதர், அருமையுள புசங்க குருநாயகர், பெரிய ஆதி நாதர் எனும் உரிமை யுடைய ஒன்பது வகைச் சித்தர்கள், தேவர்கள், (முதன்மை) ஆசார சீலரான முனிவர்கள் முதலினோரும், (எ - று).

(குறிப்பு) :—கவசம் தரித்த பிரபு ஆதலின் ஒரு சித்தர், 'கந்தளேந்த்ரர்' எனப் பெறுவர். கோரக்கர் - இவர் மச்சேந்திரர் மாணவர் ; காயகற்பம் செய்து கொண்டவர். கஞ்சா முதல் சரக்கென்று கண்டவர்.

கொங்கணர் — போகரின் மாணவர். பேறான குளிகையைச் சிவத்திடம் பெற்றவர். கோயமுத்தூர்க்கு அருகில் இருந்தவர். தஞ்சையில் சிவலிங்கம் தாபித்தவர். நாகார்ச்சுனர்- திருவேங்கடத்தில் இருந்தவர். மச்சேந்திரர் - தம் மாணவரான கோரக்கரால் உலக மலைப்பு ஒழிந்தவர். பீமநாதர் — அதி பயங்கர நாதம் எழுப்பி, எவரும் தம்மிடம் அணுகாதபடியிருந்து தவம்செய்த பெருந்தகை. புஜங்க குரு – பாம்பு லோகர்க்குத் தவவுணர்வைப் பயப்பித்தவர். ஆதி நாதர் – அநாதி நாதரின் மாணவர்.

65. அருத்திதரும் யமநியமம் பிராணா யாம
மாஞ்சிரவ ணம்மனன மளக்கொ ணாத
நிருத்தியா சனந்தியா னஞ்ச மாதி
நெறியுணர்ந்து சிவன்பாத நேசித் தேத்திப்
பொருத்துமணி மாமகிமா லகிமா ஞானம்
பூத்தகரி மாவீசத் துவமே பூண்டு
திருத்துவசித் துவம்பிராத்தி பிராகாம் யம்மாத்
தேர்ந்தவட்ட சித்தியெனுந் திறத்து வாய்ந்த

**(பதவுரை) :—** அருத்தி தரும் யமம் - (காயத்தையே ஒரு கருவியாக் கொண்டு) அன்பு காட்டும் (மெய்யுரை, கொல்லாமை முதலியன மேற்கொள்ளும்) **இயமமும்** ;

நியமம் - (நீர் முதலியவைகளைக் கொண்டு செய் சந்தியா வந்தனம் முதலான) **நியமமும்** ;

பிராணயாமம் - (சுவாசத்தை அடக்கி, மந்திரங் களை உருவேற்றல் ஆகிய) **பிராணயாமமும்** ;

ஆம் சிரவணம் - (திருவருட் பேற்றால்) விளைவதாம் (குருமுன் மெய்ப்பொருள் கேட்டலாகிய) **சிரவணமும்** ;

மனனம் - (சிரவணித்ததை நெஞ்சில் நிறுத்தல் ஆகிய) மனனமும் ;

அளக்கொணுத நிருத்தியாசனம் - அளக்க முடியாத (நெஞ்சில் நிறுத்திய பொருளை இடையருது ஆய்தல் ஆகிய) **நிதித்தியாசனமும்** ;

தியானம் - (அந்த ஆய்வால் உண்டான மெய்யறிவால் இறைவனை எண்ணலாகிய) **தியானமும்** ;

சமாதி - (அத் தியான முதிர்வால், மனத்தைப் பரனிடம் முழுதும் பதித்தலாகிய) சமாதியும் ;

நெறி உணர்ந்து - (ஆன இவைகளை) வழி முறையே உணர்ந்து ;

சிவன் பாதம் நேசித்து ஏத்தி - தூய சிவத்தை அன்பு கொண்டு துதித்து ;

பொருத்தும் அணிமா - (அருந்தவ ஆற்றலால் மிகச் சிறிதாகத் தன்னைப்) பொருத்திக் கொள்ளும் **அணிமா** ;

மகிமா - (மிகப் பெருத்தல் எனும்) **மகிமா** ;

லகிமா - (மிக லேசாக ஆதலெனும்) **லகிமா** ;

ஞானம் பூத்த கரிமா - அறிவாக மலர்ந்த (மிகத் திட்பம் ஆதல் எனும்) **கரிமா ;**

ஈசத்துவமே பூண்டு - (யாவும் ஆளும் வன்மை யாதல் எனும்) **ஈசத்துவத்தை** மேற்கொண்டு ;

திருத்து வசித்துவம் - (எதையும்) திருத்துகின்ற (தன்வயமுடைமை எனும்) **வசித்துவம் ;**

பிராத்தி - (விரும்பியவற்றை எய்தல் எனும்) **பிராத்தி ;**

பிராகாம்யம் - (விரும்பிய எந்த இடத்தும் தடை படாது செல்லும் வன்மை எனும்) **பிராகாம்யம் ;**

தேர்ந்த அட்ட சித்தி எனும் திறத்து வாய்ந்த - தேர்ச்சியான (இந்த்) எண்வகைச் சித்திகள் எனும் ஆற்றல் அமைந்த, (எ - று).

(குறிப்பு) :—இது அடுத்த பாட்டில் சனகர் என்பதுடன் முடியும். எண்வகை சித்திகள், வலிந்து பெறும் ஒன்றன்று ; தவ முதிர்விற்குத் தக்கபடி தாமே நேர்பவை. நிதித்தியாச னம் என்பது, எதுகை நோக்கி நிருத்தியாசனம் என்று ஆயது. (5)

66. சாற்றரிய சனகர்சனந் தனர்மெய்ஞ் ஞானந்
தழுவுசனு தனர்முதிய சநற்கு மாரர்
போற்றுசனர் சுசாதரிவர் முதலா யுள்ள
பொருவரிய முனிவரர்கள் புணரி சூழ்ந்த
நாற்றிசையா மெண்டிசையின் வைகி வேத
நான்கினெறி யுளஞ்சேர்த்தி நவையி லாது
கூற்றுயிருண் டருள்பரமற் பணிந்து நித்தம்
கூறரிதாம் செயந்திபுரத் தென்றும் வாழ்வார்.

**(பொ - ரை) :**—சொலற்கரிய சிறப்புடைய சனகர், சனந்தனர், மெய்ஞ்ஞானத்தைத் தழுவிய சனாதனர், பழைய சனற்குமாரர், துதி பெறற்குரிய உசனர், சுசாதர் எனும் இவர் முதலாக உள்ள ஒப்பற்ற முனிவர் பெரு மக்கள் ;

கடல்புடையுடுத்த (கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக் கெனும்) நான்கு திசைகளும், (அதனுள் அடங்கிய) எட்டுக் கோணத் திசைகளும் (ஆகப் பல இடங்களில்) தங்கி, (நான்மறை வழிகளையும், அவைகள் கூறும்) இனிய (வைதிக) நெறிகளையும் உளம் கொண்டு, (எக்) குற்றமும் இல்லாதவர்களாய், காலன் உயிரைக் கவர்ந்து திருவருள் பாலித்த (வரத) சிவத்தை நாள்தோறும் வணங்கி, (வாயால்) சொல்லற்கு அரிதான திருச்செந் தூரில் எந்நாளும் வாழ்வார்கள், (எ - று).

(குறிப்பு) :—மேலுள நான்கு பாடல்களும் குளகம் ஆயின. நாற்றிசையாம் என்றவர், மீட்டும் நான்கு நான்கு திசையாம் என இரட்டித்து கூறினர். இவற்றைத் திக்கு, விதிக்கு என்பது பழைய மரபு. (6)

67. சொல்லு தற்கரி தாகிய ஞானவேர் சூழ்ந்து
கல்லு மட்டறு காமமுன் னுறென்றாய்க் கலந்து
மல்ல லஞ்சிந்து புரத்துளோர் தம்மொடு மாறாய்ச்
செல்ல வெண்ணினும் பரிதிமுன் பனியெனச் சிதையும்

(பொ - ரை) :—(இத்தகையது என்று எவரும்) கூறு தற்கு அரிய ஞானத்தின் வேரைச் சுற்றித் தோண்டுகிற அளவற்ற காமம் ஆதிய ஆறும் ஒரு சேரக் கூடி ;

வளம் பொருந்திய அழகிய செந்திற்பதி வாழ் பெரு மக்களுடன் மாறுபட்டுச் செல்ல நினைத்தாலும், (அந் நினைவு) சூரியன் முன் பனிபோல் (தாமே) அழியும், (எ - று).

**(குறிப்பு) :—கல்லும் - பெயர்த்து எறியும். மல்லல் - வளம். மாறு - விரோதம். காமம் முன் ஆறு - காமம் குரோதம் உலோபம் மோகம் மதம் மாற்சர்யம் என்பவை. (7)**

**68. தாக்கு மோகவா காமியஞ் சஞ்சிதக் கட்டு**
**நீக்கு நீக்கமில் லாவுயிர்த் தொகைதொறு நிறைந்து**
**தேக்கு மாநந்தச் செயந்திநன் னகரென சிறந்தார்க்**
**காக்க மேல்வருஞ் சனனமு மில்லையா மளக்கின்.**

(பொ - ரை) :—நீக்கம் இல்லா...........நிறைந்து - (தன்னைப்) பிரிதல் இன்றி யிருக்கின்ற உயிர்கள் ஒவ்வொன்றிலும் (கம்பீரமான அத்துவிதமாக்) கலந்து இருந்து ;

தேக்கும்...நகர் - (நியதியாக) இன்பத்தை நிரப்பு கிற செந்தில் எனும் சிறந்த நகரானது ;

அளக்கின்......(அருமையான தன்னை) ஆய்வா ராயின், (அவர்கட்கு) ;

மோக ஆகாமியம் தாக்கும் - மயக்க அறிவால் விளையும் ஆகாமிய வினையை அழிக்கும்.

சஞ்சிதக் கட்டு நீக்கும் என - கட்டுப்படுத்தும் வினையான சஞ்சிதத்தை வீழ்த்தும் என்று நிச்சயித்து ;

சிறந்தார்க்கு - (அப்பதியின்பால் அன்பு செலுத் தும்) மேலோர்க்கு ;

ஆக்கம் மேல்வரும் சனனமும் இல்லையாம் - (அருள் பொருள் ஞானச்) செல்வங்கள் அதிகரித்து வரும்; (இனி அவர்கட்கு) வேறு பிறப்பிறப்பும் இல்லை, (எ-று).

(குறிப்பு) :—செந்தில் முருகன் பெருமையை, இங்ஙனம் செந்திலின் மேல் வைத்துக் கூறினார். சஞ்சிதக் கட்டு – இரு பெயரொட்டு; கட்டுப்படுத்தி நிற்கும் கர்மம். ஆக்கம் – மென்மேல் பெருகிவரும் பெருந் திரு; இடத்தில் நிகழ் பொருளின் தொழிலை, இடத்தின் மேல் வைத்துத் தாக்கும் நீக்கும் என உபசரித்து உரைத்தார். (8)

**தழைத்த கங்கையில் வாழ்திரி வேணிசங் கமத்தின்**
**உழைத்த நல்வினை செயந்திநன் னகரென வொருகால்**
**குழைத்த வன்பினிற் கூறுமக் கதிக்கெதிர் கூறி**
**அழைக்க வேபதி னறிலொன் றில்லைகா ணன்றே.**

(பொ - ரை) :—என்றும் பெருகும் (ஜீவ நதியான) கங்கா நதியிலும், வாழ்விக்கும் (கங்கை, சரஸ்வதி, யமுனை) மூன்று நதிகள் கூடும் இடத்திலும் (புனிதம் பெற) மூழ்குதலால் விளைந்த புண்ணியங்கள், (தெய்வ) நலம் மிக்க திருச்செந்தூரே என ஒரு தரம் குழைந்த அன்பால் கூறுதலால் உண்டாகும்; அப்புண்ணியத்திற்கு ஒப்பாகச் சொல்லி வருவிக்க, பதினறில் ஒரு பங்குகூட இல்லை; (அதை நீ) அறிந்து கொள், (எ - று.)

(குறிப்பு) :—திரிவேணி சங்கமம் – புண்ணிய நதிகள் மூன்று கலந்து புகுமிடம். அன்றே – அசை; தேற்றமுமாம். திரிவேணி சங்கமத்தில் பல காலம் மூழ்கிய பயன்கள் யாவும், திருச்செந்தூர் என ஒரு தரம் சொல்லவே சித்திக்கும் என்பது, அருமையினும் அருமை. (9)

70. வாசபேயமோ ராயிரம் வாம்பரி மகநூ
றுசி லாதுசெய் குநர்பெறு மருங்கதி யவைதாம்
வீசு தெண்டிரைச் செயந்திநன் னகர்வயின் மேவ
நேசம் வைத்தவர் தங்கள்பா னித்தமுந் தருமால்.

(பொ-ரை) :—ஓர் ஆயிரம் வாஜபேயம் எனும் வேள்வி களும், தாவுகின்ற நூறு அஸ்வமேத வேள்விகளும் பழுதின்றிச் செய்பவர் அடையும் அருமையான பயன் கள் யாவும், தெளிந்த அலைகள் கொழிக்கும் சிறந்த திருச்செந்தூரில் விரும்பித் தங்க அன்பு கொண்டவர் இடத்தில் நாடோறும் விளையும், (எ - று).

(குறிப்பு) :—அக்னிஷ்டோமம் முதல், சாவித்ர சயனம் வரை யாகங்கள் முப்பது ; அவைகளுள் ஒன்று வாஜபேயம்.

அசுவமேதம் எனும் வேள்விக்கு உரியதாய் இருக்கும் அசுவம், விராட்டிற்கு அடையாளமாக இருக்கிறது. தைத்திரிய யஜுர்வேத கடைசிப் பிரகரணத்தில், அந்த அசுவ உடலின் உறுப்புகள், காலப் பிரிவுகள் முதலியன காட்டப் பெற்றுள.

காலைப் பொழுது அதன் சிரம் ; சூரியன் அதன் கண் ; வாயு மூச்சு ; சந்திரன் செவி என்றும் கூறப்பெற்றுள. அசுவமேதம், புருடமேதங்களில் அவைகள் பலியாவதில்லை.

அந்த வேள்விச் சடங்கில், அறுநூற்றெண்பது காட்டு விலங்குகள், குடிமுறைக்கு அடுத்த நாட்டு விலங்குகள், பறவைகள், மச்சங்கள், புழுப் பூச்சிகள் இருபத்தொரு தம்பங்களில் கட்டப்படும். சில தோத்திரங்கள் ஓதப் பெற்ற பின், அவைகள் யாதொரு துன்பமும் அடையாதபடி அவிழ்த்து விடப்பெறும். சுருதி உரைத்ததை ஓராமல், இது குறித்துக் கண்டவாறு கரைவது மரபாக மாட்டாது. ஆதலின், இது குறித்து ஓரளவு கூறினம். (10)

**செயந்தி நன்னக ரிருந்தறந் திணைத்துணை செய்யின்**
**வியந்த முன்னுவா மதியென நாடொறும் விளங்கும்**
**பயந்த தீவினை பின்னுவா மதியெனப் பாரிற்**
**கயந்த ருங்கொலாம் யாதெனப் புகலுவன் கருத்தால்.**

(பொ - ரை) :—நலஞ் சிறந்த திருச்செந்திலில் தங்கித் திணையளவு தருமம் செய்யின், (அந்த அறம்,) பாராட்டப் பெறும் வளர்பிறை மதிபோல் (வகை பெற) நாள் தோறும் (வளர்ந்து) விளங்கும் ;

(அப்பகுதியில் இருந்து அறியாது) செய்த பாவம், தேய்பிறை மதிபோல் உலகில் வரவரத் தேயும் ; (அங்ஙனம்) ஆதற்குக் காரணம் எது என்று குறிப்பாகச் சிந்தித்துக் கூறுவம், (எ - று).

(குறிப்பு) :—கொல் ஆம் இரண்டும் அசைகள். முன் உவா -உவாவின் முன் ; பின் உவா – உவாவின்பின். உவா - பௌர்ணமி. கயம் – அழிவு ; இது, க்ஷய என்பதன் திரிபு. கயம் தரும் - அழிவடையும். (11)

**காழ கந்தரு சங்கிலி கரணமுங் கருத்திற்**
**பீழை தந்திடு மாலினி கரணமும் பெற்ற**
**மாழை யொண்கணூர் தங்கள்பால் வைத்திடு மனமும்**
**ஊழி ழுற்பெற்ற பெண்கள்பால் வேட்கையற்**
**றனவும்.**

(பொ - ரை) :—கடின சித்தம் கொண்ட மாறுபட்ட பாவப் போகமும், மனத்தில் துன்பம் விளைவிக்கும் காமக் கடுங்கலப்பும் பொன்னிறமும் ஒளிநிற விழிகளு முடைய பூவையர்கள் இடத்தில் வைத்த நெஞ்சமும்,

(திருமண) முறையினால் (பிறர்) அடைந்த பத்தினியர் இடத்தில் பற்றற்ற மனமும், (எ - று).

(குறிப்பு) :—காழ் - வயிரம். பீழை – பெருந்துயர். மாழை - பொன்; அழகுமாம். சங்கிலி கரணம் – இயல்பிற்கு விரோத மான புணர்ச்சி. மாலினி கரணம் – இயல்புப் புணர்ச்சி; இவை நவபாதகங்களுள் ஒன்று என்பர். வழினால் - முறையே. (12)

73. பாலர் வேட்டவப் பன்னியர்க் கிச்சையாம் பண்பும்
ஆல வெம்பத்தி நீயமு மப்பத்தி நீய
மேலு ருதசா திப்பிருங் கிசகர மென்னுஞ்
சீல மில்லதோ ரளவிலாப் பாவத்தின் செயலும்

(பொ – ரை) :—(மாபெரும்) காளைகள் மணந்த அம் மனைவியர்க்கு விளைந்த போக விருப்பமான (பாவக்) குணமும்; ஆலகாலம் போன்ற உக்ரமான பத்தினித் தருமமும், அப்பத்தினித் தருமத்தை ஏற்காத தாழ்ந்த குலத் தையல் சம்பந்தமும் எனப் பெறும் ஒழுக்கம் அற்ற ஒரு அளவில் அடங்காத (சீரற்ற) பாவச் செய்கைகளும், (எ - று).

(குறிப்பு) :—பன்னியர் - மணந்த மங்கையர். ஆறிய கற்பிற்கு மாறான சீறிய கற்பும் தலைவேதனை தான். ஆதலின், 'ஆலவெம் பத்திநீயமும்' என்றார். சாதிப் பிருங்கிசகரம் – வட சொல் தொடர்; இது ஈன சாதிப் பெண் போகம் எனும் பொருளது. இது அடுத்த பாட்டுடன் முடியும். (13)

74. சிந்து நன்னக ரத்தினி லன்புடன் சென்று
கந்த வேள்சர ணத்துணைக் கமலமுங் கண்டு
முந்து மன்பிற் றெரிசிக்கச் சுடரவன் முன்னம்
வந்த தண்பனிக் குறும்பெனத் தொலைந்திடு மாதோ.

(பொ – ரை) :—சிறந்த திருச்செந்தூரில் அன்புடன் சென்று, கந்தப்பரன் இரு திருவடித் தாமரைகளையும் கண்டு, முற்பட்ட சிறந்த அன்புடன் சேவிக்க, பரிதி முன் பட்ட குளிர்ந்த பனியின் சிறுமைபோல் அடியோடு அழியும், (எ - று).

(குறிப்பு) :—வேள் - முத்தி வேட்கை எழுப்பும் முதல்வன். சுடரவன் – சுடர்கிற சூரியன். குறும்பு - சேட்டையுமாம். (14)

75. தருமமோமமா தானநற் றமஞ்சமம் வேள்விக்
கருமமந்திர மிவைதருங் கதிகளும் செயந்தி
புரமிருந்துளார் பெறுங்கதி யதற்கிணை புகலின்
உரிய கோடியி னொன்றிலை யெனமறை யுரைக்கும்.

(பொ - ரை) :—பேரறங்களான தேவ யக்ஞங்களும், பெருங் கொடைகளும், அரிய புறப் பொறிகளின் அகக் கரணங்களின் அடக்கமும், (ஐவகை) வேள்விச் செயல்களும், மந்திர உருவேற்றல்களும் ஆகிய இவைகள் தரும் பயன்களும், திருச்செந்தூரில் வாழ்பவர்கள் அடையும் பயனிற்கு ஒப்புக் கூறில், கோடியின் ஒரு பங்கிற்கும் உரியன அல்ல என்று (உயர்ந்த) மறைகள் உரைக்கும், (எ - று).

(குறிப்பு) :—தமம் – புறக்கருவி அடக்கம் ; சமம் – அகக்கரண ஒடுக்கம். கதி – பயன். (15)

76. ஆயநல்குர வாலத்தி யாசன மருந்தல்
மேயவன்பிணற் போயதி பானமே விரும்பல்
தூயதாங்குர வன்மனை யார்பவஞ் சுருதி
மாயுமென்றிடுஞ் செயந்திநன் னகர்வதிந்
தவர்க்கே.

(பொ - ரை) :—திருச்செந்திலில் வாசம் செய்தவர்களுக்கு, வறுமை காரணத்தால் (அகப்பட்ட இடத்தில்) அளவிலாது உண்ணல்; பொருந்திய அன்பால் (அடிக்கடி) சென்று, (தகாத இடத்தில்) அதிக நீர் குடித்தலை அவாவுதல்; தூயவரான குரு பத்தினியைத் தொடுதல் ஆகிய இப்பாவம் யாவும் தொலையும் என்று (குறிப்பாக நூற்கள்) கூறும், (எ - று).

(குறிப்பு) :—அத்தியாசனம் - மிகும் உணவு; அதிபானம் - மிகும்நீர் பருகல் ; வடசொல். (16)

77. ஈரு வாவினு மேவத ஞரம்பத் தெறிநீர்
வாரி யிற்படிந் தாறெழுத் தையுமன மதித்து
வீர வேற்றடக் கரத்தனைத் தரிசிக்கின் வெற்பில்
நாரி பாகனுக்குரியபொன் கயிலைநண் ணுவரால்.

(பொ - ரை) :—(அமாவாசை பௌர்ணமி எனும்) இரண்டு உவாக்களிலும், வதஞரம்பம் எனும் (அலை) வீசுகின்ற நீரையுடைய (முதன்மைக்) கடல் தீர்த்தத்தில் மூழ்கி, மனத்தால் ஆறு எழுத்தையும் மனனம் செய்து, வீரவேல் திருக்கர விசாகனைச் சேவித்தவர், பார்வதி பாகனை சிவபிரானுக்கு உரிய அழய கயிலையை யடைவர், (எ-று).

(குறிப்பு) :—தடக்கரம் - பெருமையுடைய ஈகைத் திருக்கரம் ; ஆஜானுபாகு என்பர் வட மொழிவாணர். (17)

விலங்க தாயினு மாக்களே யென்னினும் விரிநீர்
அலங்கு சிந்துநன் னகர்வயி னுடலம்விட் டகன்றோர்
மலங்கு பாவவெங் குறும்பற மாய்த்துவாட் டிறலான்
குலங்க ளோடினி திருந்துவே ளன்பரிற் குழைவார்.

(பொ - ரை) :—விலங்கு இனமே ஆயினும், மனிதரே எனினும், விரிந்த தீர்த்தங்கள் விளங்குகின்ற செந்தில் பதியில் உடல் பிரிந்த உயிரினர், மயங்க வைக்கும் பாவ மாகிய கொடிய கூட்டத்தை நீக்கி, வாளேந்திய வீர வாகுதேவர் கூட்டத்துடன் இன்பமாக இருந்து, முருகன் அடியருடன் (உளம்) குழைந்து (உறவு கொண்டு) இருப்பர், (எ-று).

(குறிப்பு) :—விலங்கு - ஐயறிவுயிர். மக்கள் - ஆறறிவு இனம். வாள் திறலான் – வாள் வீரரான வீரவாகு தேவர். குலம் - நவவீரர் கூட்டம். அலங்கு சிந்து நன்னகர் - திருச்சீரலைவாய் எனும் பொருட்டு. மலங்குதல் - மயங்கல். குறும்பு – குறும்பு சேஷ்டைகள் எனினுமாம். (18)

79. செல்லுமார்க்கங்கடவறுறச் செயந்திநன் னகரத்
தெல்லை சென்றுளார் யாவரும் குமரவேள் இருதாள்
மல்ல லஞ்சிறப் பெய்துவ ரெய்துவர் வாய்மைச்
சொல்லி தென்றனன் சுகனுக்கு வியாசனுந்
தொல்லோன்.

(பொ - ரை) :—செல்லும் வழி தவறி திருச்செந்தில் பதியின் எல்லையை மிதித்தவர் எவரே யாயினும், குமார சுவாமியின் மாண்புடைய இருதிருவடி நிழல் எய்தும் பேறு நிச்சயம் பெறுவர்; இது வாய்மை மொழி என்று, வியாச முனிவர் சுகர்க்கு விளக்கினர், (எ-று).

(குறிப்பு) :—மார்க்கங்கள் – வழிகள். மல்லல் – வளம். (19)

80. காசி காஞ்சிபொன் னம்பலங் காளத்தி கமலை
தேசு லாவன லக்கிரி செயந்திநன் னகரம்
மாசி லானைக்கா வண்புரு டோத்தமா நகரம்
ஓசை மாக்கட லுடுத்தபா ரிடத்தினென் பதினும்.

(பொ - ரை) :—ஒலிக்கின்ற பெருங்கடல் சூழ்ந்த நில உலகில் உள்ள காசி, காஞ்சி, சிதம்பரம், திருக்காளத்தி, திருவாரூர், ஒளி உலாவும் திருவண்ணுமலை, திருச்செந்தூர், மாசு இல்லாத திருவானைக்கா, வளமான புருடோத்தம நகர் (எனப் பெறும் புண்ணியத் தலங்கள்) ஒன்பதினுள்ளும், (எ-று).

(குறிப்பு) :—கமலை - கமலாலயம் எனும் திருவாரூர். அனலக்கிரி – அருணுசலம். புருடோத்தம நகரம் – துவாரகை. (20)

**அருங்கு ரோசமோ ரைந்துள வவ்வயி னடைந்து**
**சுருங்கு கூபமும் வாவியுங் குளனும்வான் சுருங்கா**
**திரங்கும் யாறுமாம் புண்ணிய தீர்த்தத்தி னிறையிற்**
**பரம்பு மந்நகர் தருங்கதி யாவரே பகர்வார்.**

(பொ–ரை) :—அருமையான ஐந்துகுரோச அளவினையுடைய திருச்செந்தூர் எனும் அப்பதியில், (அவ்வத் தலங்களி லிருந்து) வந்து (உருவம்) சுருங்கிய கிணறுகளும், நீரோடைகளும், குளங்களும், பெருமையொடு வற்ருமல் மிக ஒலிக்கும் நதிகளும் ஆகிய தீர்த்த விசேடங்களாலும், மூர்த்தி விசேடங்களாலும், (தல விசேடங் கொண்டு) பிரசித்தி யுடையதாய் விளங்கும் அப்பதியின் பயனை அறிவிக்க வல்லவர் யார்? (எ-று).

(குறிப்பு):—குரோசம் – கூப்பிடுதூரம். இறை – மூர்த்தி. பரம்பும் - எங்கும் பரவிய (புகழுள). கதி - பேறு. மூர்த்தி தலம் தீர்த்தம் எனும் மூன்ருனும் உயர்ந்தது இப்பதி என்று உணர்த்தியபடி. (21)

**அவையின் மிக்குறுஞ் செயந்திநன் னகரிடத் தடைந்த**
**புவனம் யாவையுங் கூப்பிடு மெல்லையிற் புகுந்த**
**தவவு டம்புவிட் டொழிகுநர் குமரசா ரூபம்**
**உவமை யின்றெனப் பெறுகுவர் எனமறை யுரைக்கும்.**

(பொ - ரை) :—(மேலுரைத்த) அத்தலங்கள் ஒன்ப தினும் உயர்ந்த திருச்செந்தூருள், தலத்தேவதை கள் யாவும் ஒரு குரோச அளவில் வந்து அடைக்கலம் ஆயின; (அப்பதியில்) தவம் செய்த உடல் நீங்கி இறந்தவர்கள், (இவர்கட்கு) உவமை இல்லை எனும்படி, (பேருன) குமர சாரூபத்தைப் பெறுவர் என்று (உத்தம) மறைகள் உரைக்கும், (எ-று).

(குறிப்பு) :—புவனம் - இருநூற் றிருபத்தா று ; அவைகளை இங்குக் குறித்தார் எனலுமாம். கூப்பிடும் எல்லை - குரோச தூரம். சாரூபம் - சமமான திருவுருவம். (22)

**அன்பு தித்திடச் செயந்திநன் னகர்வயி னடைந்து**
**தென்பு லத்தினோர்க் கருத்தியோ டூட்டிய சிராத்த**
**முன்பு ணர்த்திய கயைச்சிராத் தத்துமுக் கியத்தின்**
**இன்பு டைச்சத மடங்கென வேதநின் றிசைக்கும்.**

(பொ - ரை) :—அன்பு வெளிப்பட திருச்செந்திலை யடைந்து பிதிரர்கட்கு ஆர்வத்தொடு ஊட்டிய சிரார்த்த மானது, (உயர்ந்தோர்களால்) முதன்மையாகச் சொல் லப் பெற்ற கயா தீர்த்தத்தில் செய்யும் சிரார்த்த விசே டத்தினும், இன்பத்தை யுடைய நூறு மடங்கு மேல் என்று (குறிப்பாக) மறைகள் கூறும், (எ-று).

(குறிப்பு) :—சிராத்தம் - சிரத்தையொடு செய்யும் புண்ணிய கிரியை. கயை - கங்கா நதியில் பிண்டம் இடும் விசேடமான இடம். முக்கியம் - விசேடம். சதம் - நூறு. (23)

84. கடவு ளர்க்கரி தாகிய கந்தபுட் கரிணித்
தடம லம்புதெண் ணீர்படிந் தவ்விடைத் தயையி
னுடனி ருந்துதென் புலத்திேனார்க் கூட்டுகவுருதே
லிடிகொண் மாவினுற் பிண்டமே யாயினு மிடுக.

(பொ – ரை) :—வானவர்க்கு அரியதான கந்தபுஷ்கரிணி எனும் தடாகத்தின் ஒலிக்கின்ற தெளிந்த நீரில் மூழ்கி, அந்த இடத்தின் இரக்க மனத்துடன் இருந்து, பிதுர்த் தேவதைகட்கு (ச்சிரார்த்த உணவை) உண்பிக்க; அது இயலாதேல், இடித்து எடுத்த மாவினுல் பிண்டத்தை யாயினும் இடுக, (எ – று).

**(குறிப்பு) :—இதனுல் கந்த புஷ்கரிணியின் மகிமையும், அதன் கரையில் செய்யும் சிரார்த்த விசேடமும் குறிக்கப் பெற்றன. (24)**

இல்லை யென்றிடி லெள்ளுடன் புனல்கையா லிறைக்க
வல்ல வம்பெரு தாயினு மாவின மருந்தப்
புல்ல தாயினும் போடுக விவ்வகைப் புணர்ப்பா
லல்ல லுற்றிடு பிதிர்கள்வே தாவுல கடைவார்.

(பொ - ரை) :—(அதுவும் செய்ய இயைபு) இல்லையாயின், எள்ளொடு நீரைக் கைகளால் இறைத்தல் ஆகிய தர்ப்பணத்தைச் செய்க ;

(அதற்கும்) சக்தி யில்லை யாயினும், பசுக்கூட்டம் உண்ண, புல்லையாவது (அறுத்துக்) கொடுக்க ; இவ்வகைச் செயல்களால், (பல நாள் நரகத்) துன்பம் அடைந்திருக்கும் பிதிரர்கள், அயன் உலகத்தை அடைவர், (எ-று).

(குறிப்பு) :—வல்லவம் - ஆற்றல் ; வல்லபம் என்பது வல்லவம் என்றாயது. போகடல் என்பது, போடலென மருவி, போடுக என ஆயது என்க. புணர்ப்பு - செயல் தொடர்பு. (25)

பிரம லோகத்து முன்புள பிதிர்களாம் பெரியோ
ருரிய முத்திபெற் றிருப்பரா லவர்குலத் துற்றோ
ரரிய புத்திர ரில்லரே யாயினு மநாத
மரண முற்றன லின்றியே கிடந்துமா யினுமே.

(பொ - ரை) :—முன்னமே பிரமலோகம் சேர்ந்துள்ள பிதிரர்களாகிய மேலோர், (தம் சந்ததியார் கந்தபுட்கரிணியில் செய்த கிரியைச் சிறப்பால்) உரியதான வீடு பேறு பெற்று இருப்பர் ; (அப்புஷ்கரிணியில் பிண்டம் இடுகின்ற) அவரது கால்வழியில் வந்தவர்கள், அருமை மகப்பேறு அற்றவரே ஆயினும், ஆதரவு இல்லாமல் தனியே இறந்து (அவரைத் தகித்தற்குச்) சிவாக்கினி யில்லாமல் வீழ்ந்து இறந்தாலும், (எ-று).

(குறிப்பு) :—அநாத மரணம் உற்று - திக்கற்ற பிணமாகி. இது குளகம் ; அடுத்த பாட்டுடன் முடியும். (26)

சிந்து தீர்த்தத்துக் கந்தபுட் கரிணியாந் தீர்த்தத்
துந்து மன்பொடு படிந்தெண்ணீ ரிறைத்துப வசிக்கில்
லந்த மற்றவர் யாவரு மடல்களி றுகைக்கு
மிந்தி ரப்பதம் பெறுகுவ ரெனமறை யிசைக்கும்.

(பொ-ரை) :—வதனாரம்ப தீர்த்தத்தி லாயினும், கந்த புட்கரிணி தீர்த்தத்தி லாயினும் மிக்க அன்புடன் மூழ்கி, எள்ளும் நீரும் இறைத்துப் பட்டினி நோன்பு இருந்தால், (மேலுரைத்தபடி) மரணம் அடைந்தவர் அனைவரும்,

வலிமை மிக்க (ஐராவத) யானையை ஏறிச் செலுத்தும் இந்திர பதத்தை எய்துவர் என்று, (விமல) வேதங்கள் விளம்பும், (எ-று).

(குறிப்பு) :—சிந்து - கடல். எண்ணீர் - எள்ளும் தண்ணீரும். உபவசித்தல் – உபவாசம் இருத்தல். (27)

முத்தி நல்கிய கந்தபுட் கரிணிநீர் மூழ்கார்
பத்தி மைச்செய லாற்கும ரேசனைப் பரவார்
நித்த நித்தமு மாறெழுத் துண்மையை நினையார்
சித்தி யற்றதென் புலத்துளோர் சிந்தையி னினையா.

(பொ - ரை) :—(தாம் நிலவுலகில் இருந்த பொழுது) வீடு பேறு வழங்கும் கந்தபுட்கரிணியில் நீராடாதவராய், அன்பின் செயலால் குமார சுவாமியை ஆராதியாதவராய், நாள்தோறும் உள்பொருளான ஆறு எழுத்தை உருவேற்ருதவராய், (அதனல்) நற்பயனை இழந்தவர்களாய்ப் பிதிர் உலகத்தில் இருப்பவர் அனைவரும் சிந்தனை செய்து, (எ-று).

(குறிப்பு) :—மூழ்கி, பரவி, நினைத்து சித்தியற்ற தென் புலத்துளோர் என்றும் பாடம் உண்டு. இது முதல் 30 ஆம் பாடல் வரை குளகம். (28)

89. நமது தொல்குலத் துதித்தவ ரொருவரா னுலுங்
குமர நாயகன் செயந்திநன் னகரிடைக் குறுகி
அமரர் போற்றிய கந்தபுட் கரிணிநீ ராடிக்
கமையு டன்றில மிட்டெறி நீர்க்கடன் கழித்தால்.

(பொ - ரை) :—நம்முடைய பழைய குலத்தில் (இப்போது) உதித்திருப்பவர் ஒருவராயினும், குமரேசன் திருச்செந்திலே யுடைந்து, தேவர்களால் துதிக்கப் பெற்ற

கந்த புஷ்கரிணியில் நீராடி, பொறுமையுடன் எள்ளை யிட்டுத் தருப்பிக்கும் நீர்க்கடனைச் செய்து விட்டால், (எ-று).

(குறிப்பு) :—க்மை – க்ஷமை என்பதன் திரிபு. நீர்க்கடன் - பிதுர் தர்ப்பணம். (27)

யாமெ லாஞ்சுரர் நாட்டுள வின்னமு தருந்திக்
காமர் பெற்றித ழாயிரப் பொன்னலர் கமலப்
பூமி னுரெதிர் புகுந்தடி வணங்கநேர் போந்து
நாம நீடய னவைக்கணெய் துவமென நவில்வார்.

(பொ - ரை) :—நாம் அனைவரும் தேவ லோகத்தில் உள்ள உயர்ந்த அமுதத்தை உண்டு, அழகு அமைந்து ஆயிரம் இதழ்களை யுடைய பொன்னிறத் தாமரையில் (பொலிவு பெற்றிருக்கும்) திருமகள் கலைமகள் முதலினோர் எதிர் கொண்டு வந்து நம் திருவடிகளை வணங்க, நேரே சென்று, பெருமை மிக்க பிரம சபையில் இருந்து வாழ்வம் என்று கூறுவர், (எ-று).

(குறிப்பு) :—காமர் - காமிக்கத் தக்க அழகு. இது ஆயிர இதழ்த் தாமரைக்கு அடை. பூமினுர் - மலர் மேல் மின்னும் தெய்வ மங்கையர். அயன் – பிரமன்; அஜன் என்பதன் திரிபு; அ - விஷ்ணுவி லிருந்து; ஜன் - உதித்தவன். (30)

நிரய முற்றுளார் தங்கள்வாண் முகத்தைநேர் நோக்கி
உருமெ னத்தெழித் தழலெனச் சீறியுள் ளுடைந்து
கரத லம்புடைத் தந்தகன் முறுவலுங் கனிய
விரைவி னுலவர் தம்முட னிருந்திது...

(பொ - ரை) :—இயமன், நரகத்தில் இருப்பவர்களுடைய முகத்தை ஏறிட்டுப் பார்த்து, இடியேறு போலக் கர்ச்சித்து, கனல் போலச் சினந்து, மனநிலை அழிந்து, கைகொட்டி, நகையும் தோன்ற, அவர்களிடம் விரைந்து அணுகி யிருந்து, பின்வருமாறு கூற லாயினன், (எ - று).

(குறிப்பு) :—நிரயம் - நரகம். உரும் - இடி. தெழித்தல் - உரப்புதல். இது முதல் 38 ஆம் பாட்டுவரை ஒரு முடிவு. (30)

92. மோன மோடுபோய்க் கந்தபுட் கரிணிநீர் மூழ்கி
வான நாடர சளித்தவேள் சரணமே வணங்கி
ஞான காரண செயந்திநன் னகரநண் ணுமல்
ஈன மாஞ்சன னச்சுமை சுமந்ததென் னென்று.

(பொ - ரை) :—(சிறந்த) மௌனத்துடன் சென்று, (நியதியுடன்) கந்த புட்கரிணியில் நீராடி, இமையவர் நாட்டை இந்திரனுக்கு அளித்த (பரம) வேள் திருவடிகளையே பணிந்து, ஞானத்திற்குக் காரணமான திருச்செந்தில் பதியை அடைக்கலம் என்று அடையாமல், இழிவான உடல் சுமையைச் சுமந்தது ஏன் என்று (கேள்வி எழுப்பி), (எ-று).

(குறிப்பு): சனனம் - பிறவி. சுமை - உடல் பொறை. அரசு அளித்த வேள், ஞானகாரண செயந்தி, கந்த புட்கரிணி என மூர்த்தி தலம் தீர்த்தம் மூன்றின் சிறப்புணர்த்திய இயமன், இங்கு மௌன அநுட்டானம் தேவை என அறிவிக்கும் அருமையை அறியாதார், எதுவுமே அறியாதார். (32)

**மோது தெண்டிரை நீர்வத ஞரம்ப மூழ்கச்**
**சீத நீர்க்கந்த புட்கரி ணியும்பரி சிக்கச்**
**சோதி வேற்குமரேசனைத் தெரிசிக்கத் தொன்றுண்**
**மாத வஞ்சிறி தியற்றினர் பெறுகுவர் மாதோ.**

(பொ - ரை) :—மோதுகின்ற தெளிந்த அலைகளை யுடைய வதனாரம்ப தீர்த்தத்து மூழ்கவும், குளிர்ந்த நீரையுடைய கந்த புஷ்கரிணியைத் தீண்டவும், ஒளி பொருந்திய வேற்படையை யுடைய (செந்தில்) குமரனைச் சேவிக்கவும், சிறந்த தவத்தை முன்னாளில் சிறிது செய்தவர்களும் பெறுவரே, (எ-று).

(குறிப்பு) :—மூழ்க, பரிசிக்க, தரிசிக்கச் சிறிது தவமே போதும் என, புனித அதன் எளிமையைப் புலப்படுத்தியபடி. மாது, ஓ இரண்டும் அசைகள். (33)

**சிந்து நன்னக ரத்திலே பிறக்கினுஞ் சிறந்த**
**சிந்து நன்னக ரத்தையே தெரிசனஞ் செயினுஞ்**
**சிந்து நன்னக ரத்திலே யிறக்கினுந் தெய்வச்**
**சிந்து நன்னக ரெண்ணினு முத்திசேர்ந் திருப்பார்.**

(பொ - ரை) :—திருச் செந்தூரில் பிறந்தாலும், சிறப் பமைந்த செந்தில் பதியையே சேவித்தாலும், நலஞ் சிறந்த கடற்கரை ஓரத் தலமான இனிய அந்நகரில் இறந்தாலும், தெய்வீகமான செயந்தி மாநகரைத் தியானித்தாலும், (அவர்கள்) இனிய பரகதியை அடைந்து இருப்பர், (எ-று).

(குறிப்பு) :—சிந்து நகர் – செயந்திபுரம் எனப் பெறும். (34)

**உரைத்தநால்வகைச்செய்கையினென்றுபெற் றுலும்**
**வருத்த மின்றியே முத்திசென் றெய்துவர் வடிவேற்**
**கரத்த னணையாற் பாரத கண்டத்திற் கதிக்கே**
**பரித்த வேழுநன் னகருள வவைபெயர் பகர்வாம்.**

(பொ - ரை):—(பிறத்தல், தரிசித்தல், இறத்தல், எண்ணல் என) உரைத்த நால்வகைச் செயல்களுள் ஒன்று பெறினும், வடிவேல் இறைவன் கட்டளைப்படி (ஒரு) வருத்தமும் இல்லாமல் பேருன கதியைப் பெறுவர்; பரத கண்டத்தில் முத்தி தருதற்கு என்றே பொறுப் பேற்ற ஏழு பதிகள் இருக்கின்றன; அவைகளின் பெயர் களை அறிவிக்கிறோம், (எ-று).

(குறிப்பு):—பாரத கண்டம் - பரதன் எனும் ஒரு மன்ன னல் ஆளப்பெற்ற பூமி. பரித்த - பொறுப்பேற்றுக் கொண்ட. (35)

**திருவ யோத்திமா மதுரைமா யாபுரி தேவர்க்**
**குரிய காசிமெய்க் காஞ்சிபே ரவந்திவா னுரைக்க**
**விரிது வாரகை முத்தியை யளித்திடும் வேதப்**
**பரிதி வேலவ னுறைந்தருள் செயந்தியம் பதியே.**

(பொ - ரை):—(முத்திதரும் தலங்கள் என்று முன் னோர் கண்டு கூறிய) திருவயோத்தி, சிறந்த மதுரை, மாயாபுரி, வானவர்க்கு உரிய வாரணசி, மெய்ம்மை யான காஞ்சி, பெரிய அவந்தி, வானோரும் துதிக்கப் பரவிய துவாரகை (எனும் ஏழும் அரிய) முத்திதரும் தலங்கள் ஆகும்; மறை ஞான சூரியனை வேல் இறைவன் எழுந்தருளிய திருச்செந்தில் பதியே, (எ-று).

(குறிப்பு) :—இது, 'செயந்தியம் பதியே........முத்தி...... நண்ணுவித்திடும்' என அடுத்த பாட்டொடு முடியும். வான் உரைக்க - தேவர்களும் புகழ; வான் - ஆகுபெயர். வேதப்பரிதி - மறை யுருவான ஒளி; ஆகுபெயர். (36)

97. எண்ணு தற்கரி தாகிய முத்திபெற் றிருக்க
நண்ணு வித்திடு மென்பது சொல்வதென் ஞானப்
புண்ணி யத்திருச் செயந்திமா புரம்புகா தவமாய்
மண்ண கத்தினிற் பாவகா ரியரென வதிந்தீர்.

(பொ - ரை) :—நினைத்தற்கு அரிய சிறந்த முத்தியில் சேர்த்து விடும் என்பது சொல்ல வேண்டுமோ? (நீங்கள் அப்) புண்ணிய ஞானமான திருச்செந்தூர்ப் பதியை அடையாமல், வீணாகப் பூவுலகில் பாவமே தொழிலாகப் பொருந்தி யிருந்தீர்களே, (எ-று).

(குறிப்பு) :—மேற் கூறிய ஏழு தலங்களிலும் சிவகலையை உதவுபவன், செந்தில் செல்வனே என்றபடி. நிலவுலகில் பிறந்தும் எளிதில் வீடு தரும் செந்திலைச் சேவிக்காமல், பாவப் பயில்வில் இருந்தது பழுது என்றவாறு. (37)

98. என்று கூற்றுவ னிரயத்தார் தங்களுக் கிசைய
ஒன்று மன்பினு லுரைத்தசொல் லவர்செவி யுறலாற்
கன்று மாநிர யத்தினை யிகந்துமேற் கதிக்கே
சென்று ளாரெனச் சுகனுக்கு வியாசன்செப் பினனால்.

(பொ - ரை) :—என்று இயமன் நரகில் உள்ளவர் கட்கு (ப் பாவநீக்கம்) உண்டாதற் பொருட்டுப் பொருந்திய அன்பால் புகன்ற மொழிகள், அவர்களது செவியிற் சேர்தலால், (பலநாள் தம்மை) வருத்திய நரகை நீங்கி, மேலாகிய பதவிக்கே போயினர் என்று வியாசர் சுகர்க்கு மேலும் கூறினர், (எ-று).

(குறிப்பு) :—திருச்செந்தில் பிரபாவம் கேட்ட அளவில் நரக வேதனை தீர்ந்தது ; சிறந்த நற்கதி சித்தித்தது என்பது குறிப்பு. (38)

99. ஆத லாற்சிந்து புரமெலா நகர்க்குமே லாமா
லோது மந்நகர்த் தீர்த்தமெத் தீர்த்தத்து முயர்ச்சி
மேத குஞ்சுரர் தங்களிற் குமரவேண் மேலாஞ்
சோதி வானவ னெமென நான்மறை துதிக்கும்.

(பொ - ரை) :—ஆகையால், திருச்செந்தூர் எத்தலத்தினும் மேலானது ஆகும் ; உரைக்கும் அத்தலத் தீர்த்தம் எந்தத் தீர்த்தத்தினும் உயர்ந்தது ; மேன்மையும் ஒளியுமுடைய தேவர்களினும், குமாரசுவாமி பேரொளிப் பிழம்பான தெய்வமாம் என்று, (தூய) மறைகள் நான்கும் துதிக்கும், (எ-று).

(குறிப்பு) :—ஆல் - அசை.

100. பருவ நூறுமா கப்புனல் காசியிற் படியும்
பெருமை மாதவப் பதிசிந்து புரமெனப் பேசி
ஒருத ரங்கந்த புட்கரி ணிப்புன லூடு
மருவி மூழ்குநர்க் கந்தமா தவக்கதி வழங்கும்.

(பொ - ரை) :—நூறு ஆண்டுகள் மாசி மாதங்களில் காசிக் கங்கையில் மூழ்கும் பெருமிதமான பேற்றை, சிறந்த தவத்தலம் செந்திலம் பதியே என்று ஓதி, ஒரு தரம் ஸ்கந்த புஷ்கரிணி நீருள் இறங்கி முழுகியவர்கட்கு, (உயர்ந்த அந்த ஒரு முழுக்கே) உதவும், (எ-று).

(குறிப்பு) :—பருவம் - வருடம். மாகப்புனல் - மாசிமாதநீர் ; இது மாக ஸ்நானம் எனப் பெறும். (40)

**பிறந்த நாண்முத வீறுறு மளவையும் பிரியா**
**துறைந்து தெய்வதப் ரயாகையின் மாகமா டுநர்க்குஞ்**
**சிறந்த வான்றிரைக் கந்தபுட் கரிணியிற் றிளைத்து**
**நிறைந்த மூன்றுநா ளாடுநர்க் குங்கதி நிகர்க்கும்.**

(பொ - ரை) :—பிறந்த காலம் தொடங்கி இறுதியடையும் அளவும், தெய்வீகமான பிரயாகை தீர்த்தத்தில் பிரியாதிருந்து மாக ஸ்நானம் செய்பவர்க்கும், மாபெரும் அலைகளை யுடைய கந்த புட்கரணியில் (மனம்) படிந்து, நிறைவாக மூன்று நாள் நீராடுனர்க்கும் விளையும் பயன் சமம் ஆகும், (எ-று).

(குறிப்பு) :—**பிரயாகை - காசியில் உள்ள கங்கையில் விசேடமாகிய ஓர் இடம்.** (41)

**முன்னு வோருக்கு முன்னுவோர் தங்கண் முன்னுக**
**மன்னு வோருக்குந் தினந்தினம் படியுமா தவர்க்கு**
**நன்ன லந்தரு தீர்த்தங்க ளிருபத்து நான்குஞ்**
**சென்னி யாறுளார்க் கினியகா யத்திரிச் செல்வி.**

(பொ - ரை) :—(தம்மை அன்புடன்) தியானிப்பவர்க்கும், (அங்ஙனம்) தியானிப்பவர்களின் எதிரில் இருப்பவர்க்கும், நாள் தோறும் (தம்மிடத்தில்) மூழ்கும் பெருந்தவத்தினர்க்கும் நன் மங்கலம் தரும் செந்திலில் உள்ள தீர்த்தங்கள் இருபத்து நான்கும், ஆறுமுகப் பெருமானுக்கு இனிய காயத்திரி மந்திர தேவதை, ஆகும் (இவை என்று தோன்றும்), (எ-று).

(குறிப்பு) :—முன்னல் – **எண்ணல். ஆம் எனும் பயனிலை வருவித்து உரை செய்க.** குளகமான **இப்பாடல், 44 ஆம் பாட்டொடு முடியும்.** (42)

**103.** எழுத்தொ ராறுநான் கானவுஞ்
சுரர்பணிந் தேத்தி
வழுத்து தாட்கும ரேசன்முன்
புண்ணிய வடிவாய்
அழுத்து தீர்த்தமோ ரெழுத்ததா
யாழிநீர்க் கயலின்
விழுத்த கும்பெயர் வேறுகொண்
டிருத்தல்வேண் டினன்யான்.

(பொ - ரை) :—(என்னுடைய) எழுத்துகள் இருபத்து நான்கும், வானவர் வணங்கி வழிபடும் திருவடிகளை யுடைய குமரப் பெருமான் திருமுன் புண்ணிய உரு வாகி, ஒவ்வொரு எழுத்தும் (புண்ணியம் எண்ணி) மூழ் கப் பண்ணும் ஒவ்வொரு தீர்த்தமாகி, கடலின் கரை யோரத்தில் சிறப்பும் தகுதியுமுடைய வேறு வேறு பெயர் கொண்டு இருத்தலை யான் விரும்பினேன், (எ-று). (43)

என்று நின்றுகா யத்திரிச் செல்விவாக் கெடுத்துக்
குன்றெ றிந்தவே லாறுமா முகத்தன்முன் கூற
நன்று ளத்தொடு கூறினை நாமுள மகிழ்ந்தா
மன்ற நிற்குதி யென்னநின் றுண்மறை மாதா.

(பொ - ரை) :—என்று காயத்திரி தேவதை கிரவுஞ்சத் தைப் பிளந்த வேலுடைய ஆறுமுகப் பரன் திருமுன் நின்று துதித்து விண்ணப்பிக்க ; (அதைச் திருச் செவியேற்றிட்ட திருச் செந்திலான்,) நலஞ் சிறந்த உளத்தொடு (நன்மொழி) கூறினை ; (அது கேட்டு) திருவுளம் உவகை யடைந்தோம் யாம் ; (அப்படியே

என்றும்) நிலைபெற நின்றருள் என்றருள, காயத்திரி தேவி, (அன்று முதல் செந்திலில் இருபத்தேழு தீர்த்தங் களாக) இருந்தாள், (எ-று).

(குறிப்பு) :—மன்ற - நிலைபேறு பெற. மறைமாதா - காயத்திரி மந்திரமாகிய தாய். நின்ருள் - (தன் எழுத்துக்கள் இருபத்தேழும் இருபத்தேழு தீர்த்தங்களாக) இருக்கச் செய் தாள் என்றபடி. நிற்பித்தாள் என்பதில், பிறவினைப் பொருள் தரும் பிவ் விகுதி தொக, நின்ருள் என நின்றது. இந்த இரு பாடலும் ஒரு தொடர். (44)

105. கந்தன்முன் னுகந்த முகாரம்ப தீர்த்தங்
களிற்றிளம் பிடியரு டீர்த்தங்
கொந்தலர்க் கமல வீட்டுளா டீர்த்தங்
கூறருஞ் சித்தர்தந் தீர்த்த
முந்திய திக்கு வேந்தர்தந் தீர்த்த
முதியகா யத்திரி தீர்த்த
மிந்திர பவனிக் கேதுவ தாகு
மினியசா வித்திரி தீர்த்தம்.

(பொ-ரை):-(திருச்செந்தில்) ஆண்டவன் சந்நிதி முன் (அவ்விமலன்)விரும்பிய (தீர்த்தங்களாவன),வதனுரம்ப தீர்த்தம், அருளுடைய தெய்வயானை தீர்த்தம், கொத் தாக மலர்ந்த தாமரைக் கோயிலில் எழுந்தருளிய திரு மகள் தீர்த்தம், கூறுதற்கு அரிய சிறப்பினை யுடைய சித் தர்கள் தீர்த்தம், முதன்மையான திக்குப் பாலகர் தீர்த் தம், பழைய காயத்திரி தீர்த்தம், இந்திரன் உலாவிற்குக் காரணமான இனிய சாவித்திரி தீர்த்தம், (எ-று). (45)

106. மேயவெண் கமலத் தரசிதன் றீர்த்தம்
வெள்ளைவா ரணத்தருந் தீர்த்தந்
தூயமுச் சூலக் காரிதன் றீர்த்தந்
தோமறு குறக்கொடி தீர்த்த
மாய்விலா துயர்ந்த துர்க்கைதன் றீர்த்தம்
வயங்கொளி ஞானவான் றீர்த்தம்
பாயொளி பரந்த சத்திய தீர்த்தம்
பகர்தருந் தருமத்தின் றீர்த்தம்.

(பொ-ரை):-வெண்கமலத்தில் பொருந்தி வீற்றிருக்கும் கலைமகள் தீர்த்தம்; அருமை வெள்ளையானை தீர்த்தம்; தூய்மையுள முத்தலைச் சூல வைரவர் தீர்த்தம்; குற்றம் அற்ற வள்ளியம்மை தீர்த்தம்; அழிவு இன்றி உயர்ந்த துர்க்கை தோற்றுவித்த தீர்த்தம்; பிரகாசிக்கும் ஒளி யுடைய சிறந்த ஞானதீர்த்தம்; பரந்த ஒளிபரப்பும் சத் திய தீர்த்தம்; பலர் பாராட்டும் தரும தீர்த்தம், (எ-று).

(குறிப்பு) :—வெள்ளை வாரணம் – ஐராவத யானை; இது இந்திரனது ஊர்தி. காரி – பயிரவர். (46)

107. முனிவர்க ளர்த்தந் தேவர்க ளர்த்த
முயல்பவ நாசன தீர்த்தங்
கனியுமா னந்தக் கந்தபுட் கரிணி
கம்பலை யருதவான் சேது
நனிமுழக் கருத பத்தெனுங் கங்கை
நான்மறைக் கந்தமா தனத்தின்
புனிதமாந் தீர்த்த மாதுரு தீர்த்தம்
போற்றுதென் புலத்துளார் தீர்த்தம்.

(பொ-ரை):–தவசிகள் தீர்த்தம், தேவர்கள் தீர்த்தம், பற்றவரும் பாவ நாச தீர்த்தம், கனிந்த இன்பம் தரும் கந்தபுட்கரிணி தீர்த்தம், அலை முழக்கம் ஓயாத சிறந்த சேது தீர்த்தம், மிக்க ஒலி அடங்காத தச கங்கா தீர்த்தம், நால்வேத நாதமுடைய தூய்மை யான கந்தமாதன தீர்த்தம், மாதுரு தீர்த்தம், போற்றப் பெறும் பிதிரர்கள் தீர்த்தம், (எ-று).

(குறிப்பு) :—முயன்ற வாழ்க்கையில் முளைத்த பாவங்களை நாசம் செய்யும் தீர்த்தத்தை, 'பாவநாசனம்' என்றார். கம்பலை - முழக்கம். தாய்க்கடன் முடிக்க உதவும் தீர்த்தம் 'மாதுரு தீர்த்தம்' எனப்பெற்றது. (47)

108. அன்ன தீர்த்தமுந் தீர்த்தத்தின்
மகிமையு மவண்போய்த்
துன்னி மூழ்குறு முறைமையு
மம்முறைத் தொடர்பாற்
பன்ன ருஞ்சிறப் பெய்திய
பான்மையும் பரிவாய்ச்
சொன்ன லம்பெற வியாதன்முன்
சொற்றவா சொல்வாம்.

(பொ – ரை):–அத்தீர்த்தங்களையும், (மாண்புள) தீர்த்தங்களின் மகிமாதிசயங்களையும், அங்கு (முதலிற்) சென்று பொருந்தி மூழ்கும் முறைமையையும், அம் முறையால் சொல்லற்கரிய சிறப்படைந்த தகுதியையும், சொற்சுவை தோன்ற (அன்று) வியாசர் அன்பாகச் சொன்னபடி, (உனக்குச்) சொல்கிறோம், (எ-று).

(குறிப்பு) :—அன்ன - அத்தகைய; சுட்டடியாப் பிறந்த பெயர். (48)

**இந்த மாநிலத் துயர்ந்தவான் றீர்த்தங்கள் யாவும்**
**வந்து சிந்துநன் னகர்வயின் மரகத மயூரச்**
**சுந்த ரச்சுடர்ப் பரிதிவை வேலொடுந் தோன்றுங்**
**கந்த வேள்திருக் கருணையாங் கதியளிப் பதுவே.**

(பொ - ரை):—பெரிய இந்நிலவுலகில் உள்ள அரிய தெய்வ தீர்த்தங்கள் அனைத்தும், திருச்செந்தூரில் வந்து, மரகதம் போலும் (பச்சை நிறமுள) அழகிய மயிலில், பேரொளி வீசும் ஞான சூரியனை வேலொடு விளங்கும் கந்த வேளின் திருவருட் பேற்றை, (வாழுமாறு எவர்க்கும்) வழங்கும், (எ-று).

(குறிப்பு):—**மரகதம் - பச்சை. பரிதி - சூரியன். சிந்து - கடல். கடல்கரை ஓரப் பதியாதலின், சிந்து நன்னகர் என்றூர்.** (49)

**110.** அறந்தி றம்பினோர் தங்கட்கு
மறத்துளோர் தமக்கு
நிறைந்த தேவர்க்கு மூவர்க்கும்
யாவர்க்கு நெறியா
லுறைந்த வாறுமா முகத்தவ
னருளெலா மொன்றுய்ச்
சிறந்தி ருந்தது மாவத
ஞரம்ப தீர்த்தம்.

(பொ - ரை):—சிறந்த வதஞரம்ப தீர்த்தமானது, தருமத்தில் தவறினர்க்கும், (மேலான அத்) தருமத்தை மேற்கொண்டவர்க்கும், (தெளிவு) நிறைந்த தேவர்கட்கும், (முத்தொழில் புரியும்) மூவர்கட்கும், பிற அனைவர்க்கும் (அருளும்) வழிமுறைப்படி, வீறு தோன்ற எழுந்தருளியிருக்கும் ஆறுமுகப் பெருமானுடைய அருள் முழுதும், ஒருமுகமாகிச் சிறந்திருக்கின்றது, (எ-று).

(குறிப்பு):—நெறி - வைதிக வழி. உறைந்த - அநாதி காலம் முதல் எழுந்தருளிய. (50)

111. எவ்வமில் கவுரி கங்கை யமுனைகா
விரிநீர்த் தோயை
கவ்வையோ டிரங்குந் தெண்ணீர்
கவுசிகை வித்தை யாற்றி
னவ்விடைப் படிந்து ளோர்சே
ரரும்பெற லாக்க நல்குஞ்
செவ்விநான் மறைக்கு மேலாந்
தேவகுஞ் சரமான் தீர்த்தம்.

(பொ - ரை):-சிறந்த நான்கு மறைகட்கும் மேம்பட்ட தேவயானை தீர்த்தமானது, குற்றம் இல்லாத கவுரியாறு, கங்கை நதியு, யமுனை யாறு, காவிரி நதி, தோயமா நதி, மிக்க பேரொலி எழுப்பும் தெளிந்த நீருடைய கவுசிக நதி, வேத நதி (எனப் பெறும்) அவ்வந் நதிகளில் நீராடினோர் அடையும் பெறுதற்கரிய பேறுகளை, (உயரிய முறையில்) உதவும் (எ-று).

(குறிப்பு):—பல நதிகளில் மூழ்கும் பயனை, செந்திலில் உள்ள தெய்வயானை தீர்த்தத்தில் மூழ்கி அடையலாம் என்றபடி. எவ்வம் - துன்பமுமாம். கவ்வையோடு என்பதில் உள்ள ஓடு – ஒடு என்பதன் விகாரம், இசை நிறைக்க வந்தது. செவ்வி - அழகு . (51)

112. மாதவக் குமரிதோகை வந்தனை தூத பாவை
வேதநற் சுருதி துங்க பத்திரை விபாசை பூவை
காதலிற் பலகால் மூழ்குங் கதிதனைக் காட்டுந் தோட்டுச்
சீதளக் கமல வீட்டுத் திருமக டீர்த்த மாதோ.

(பொ-ரை):-இதழ்களை யுடைய குளிர்ந்த (மணம்கமழ்) தாமரை மாளிகையில் எழுந்தருளி யுள்ள திருமகள் தீர்த்தமானது, கூடிய தவத்தை யுடைய குமரி, தோகை, வந்தனை, தூத பாவை, வேதம், நல்ல சுருதி, துங்க பத்திரை, விபாசை, பூவை (எனப் பெறும் நதி)களில் முதிரும் அன்புடன் பலகால் மூழ்குதலால், காணும் பயனைக் கைவல்யம் ஆக்கும் (எ-று).

(குறிப்பு) :—மேலுரைத்த ஒன்பது தீர்த்தங்களில் மூழ்கும் பயனை, திருமகள் தீர்த்தம் ஒன்றே தரும் என்பது கருத்து. (52)

113. வாலுவா கினிவி வாதை
வைகைதே வகிமெய்ஞ் ஞானங்
கோலிய கண்ண வேணி
கோதைகண் டகையாந் தீர்த்த
நூலுள முறையின் மூழ்கி
னோர்க்குள கதியைக் காட்டுஞ்
சீலமா மறைக்கு மேலாய்ச்
சிறந்துள சித்தர் தீர்த்தம்.

(பொ-ரை):—வைதிகஞ் சிறந்த வேதங்கட்கும் மேம்பட்டுச் சிறந்திருக்கும் சித்தர் தீர்த்தமானது,

வாலுவாகினி, விவாதை, வைகை, தேவகி, மெய்ஞ் ஞானம் உதவும் அழகிய கண்ணவேணி, கோதை, கண்டகி எனும் தீர்த்தங்களில், (அருள்) நூல்களில் அறிவித்த முறைப்படி நீராடினர்க்கு, உள்ள வித்தகப் பயனை விளைவிக்கும், (எ-று).

(குறிப்பு):—வால் - தூய்மை; அதை யுடைய நதி வான்மை உவாகினி. புனித நதியில் இப்படி முழுக வேண்டும் என்ற

விதி முறைகளை, வைதிக நூற்கள் வரையறுத் திருக்கின்றன. அதன்படி நீராடினர்க்கு, தெளிவான வித்தகப் பயன் விளையும் என்றபடி. (53)

114. தக்கதோ ருவதி பம்பை தாமசி சரயு நாதந்
தொக்கநீர்க் கம்பை துர்க்கை சோபனை யிவற்றி னூடு
மிக்கவான் கதியை நல்கும் வேதத்தின் மரபாய் நின்று
திக்கெலாஞ் சிறந்து காக்குந் தேவர்க ளூர்த்தந் தானே.

(பொ - ரை):-வேதத்தின்...தீர்த்தந்தானே-(இனிய) வைதிக நூல் முறையில் இருந்து, (பரவிய) திசையனைத்தும் சிறக்கப் பரிபாலிக்கும் திக்குப் பாலகர் தீர்த்தமானது;

தக்கதோர்.......நல்கும் - (உயர்ந்த தன்) தகுதியை உணர வைக்கும் உவதி, பம்பை, தாமசி, சரயு, கனஒலி நீருடைய கம்பை, துர்க்கை, சோபனை (எனும்) இத்தீர்த்தங்களில் நீராடுதலால் விளையும் வித்தகப் பயனைப் பெரிதும் விளைவிக்கும், (எ-று).

(குறிப்பு) :—மேற்குறித்த ஏழு தீர்த்தங்களில் மூழ்கும் பயனை, திசைபரிபாலகர் தீர்த்தம் ஒன்றே தரும் என்றபடி. (54)

நிருமதை தெசாணை வாய்ந்த நிருவிந்தை தரபி யாதிக்
கருமநா சனியி னூடுங் கதிதருங் கமல வீட்டி
னருமறைக் கடவுள் போற்று மாறுமா முகத்துச் செவ்வே
டிருமுனஞ் சிறந்த காயத் திரியெனுந் தீர்த்த மாதோ.

(பொ - ரை):—கமல......மாதோ - கமல ஆலயத்தில் (தங்கிப்) பயனுன மறைகளைப் பாராயணம் செய்யும் பிரம தேவர் வழிபடும் சண்முகப் பெருமான் திருமுன், கம்பீரமாகத் தோன்றும் காயத்ரி எனும் தீர்த்தமானது;

நிருமதை.........கதிதரும் - நர்மதை, தெசாணை, (நெடிது) அமைந்த நிருவிந்தை, தரபி, (கம்பீர) முதன் மைக் கன்மநாசனி (நதிகளில்) நீராடலால் விளையும் பயனை விளைவிக்கும், (எ-று).

**(குறிப்பு) :—கடவுள் - பிரமன். முன் கூறிய ஐந்து தீர்த் தங்களில் நீராடலால் விளையும் பயனை, காயத்திரி தீர்த்தம் ஒன்றே கைவல்யம் ஆக்கும் என்றபடி. (55)**

116. பொன்மய முகரி கோதா
வரிபெண்ணை பொருவில் சோதி
வின்மணி தரங்கந் தூற்றும்
வேத்திர வதியின் ஆடு
நன்மைய தனைத்துங் காட்டு
நான்மறை முடிவின் மேலாஞ்
சின்மயத் துருவாஞ் சாவித்
திரியெனுந் தீர்த்த மாதோ.

(பொ - ரை):—நான்மறை......மாதோ - உயர் நான் மறைச் சிரமான அறிவுமய உபநிடதங்கட்கும் மேம்பட்ட சாவித்திரி எனும் (தெய்வ) தீர்த்தமானது ;

பொன்மய......காட்டும் - பொன்முகரி, கோதாவரி, பெண்ணை, ஒப்பிலாத சோதி, ஒளிமயமான நவமணி களை (அலைகள்) கொழிக்கின்ற வேத்திரவதி (எனும் நதி)களில் நீராடலால் உண்டாகும் நலம் சிறந்த பயன் யாவும் நல்கும், (எ - று).

**(குறிப்பு) :—பொன்மயமுகரி - காளத்தியில் காணப்பெறும் தெய்வ நதி. பெண்ணை - நடு நாட்டு நதி. மற்ற நதிகள் வடநாட்டிற் பாய்ந்து வளம் தருவன. இந்த ஐந்து ஆறுகளில் மூழ்கு பயனை, சாவித்திரி தீர்த்தம் ஒன்றே தரும் என்று சாற்றியபடி. (56)**

**விதிசைவை தரணி மந்தா கினிசிலா சலியேவேக**
**வதிவிரே பதிபலாகை வழங்குவான் கதிகள் எல்லாந்**
**துதியுடன் அளிக்கு ஞானச் சுவேதப்பூப் போலென் னெஞ்சப்**
**பதியினீங் காது மேவும் பாரதி தீர்த்த மன்றே.**

(பொ - ரை) :—ஞான......தீர்த்தமன்றே - வெண் தாமரை மலர் போன்ற என் உளமாகிய ஞானக் கோயிலில் (என்றும்) நீங்காது இருக்கும் (தெய்வீக) பாரதி தீர்த்தமானது ;

விதிசை, வைதரணி, மந்தாகினி, சிலாசலி, வேகவதி, விரேபதி, பலாகை (எனும் நதி)கள் அளிக்கும் பெரும்பயன் அனைத்தையும் அரிய புகழுடன் அருளும், (எ-று).

(குறிப்பு) :—கதிகள் - பேறுகள். சுவேதப்பூ - வெண் கமலம். பாரதி - கலைமகள். ஏழு தீர்த்தங்களில் ஆடும் பயனை, தகுதியுற சரஸ்வதி நதியே தரும் என்றபடி. (57)

சந்திர பதாகை பன்னு சையுலோ கிதைவி பாசை
சிந்துவா குதையின் மூழ்குந் திறன்வழா தென்று நல்கு
முந்துநான் முகனைக் குட்டு மோதிரச் செங்கை யான்மு
னந்தர நாதற் றுங்கை ராவத தீர்த்த மம்மா.

(பொ - ரை):-முந்து......அம்மா-முன்னொரு காலத்தில் பிரமனைக் குட்டிய மோதிரம் அணிந்த செவ்விய கரதல முருகன் திருமுன் (உள்ள,) அமர லோக அதிபதியான இந்திரனைச் சுமந்த ஐராவத தீர்த்தமானது ;

சந்திர.........நல்கும் - சந்திரபதாகை, பன்னுசை, உலோகிதை, விபாசை, சிந்து, வாகுதை (என்பவை) களில் நீராடும் பயன் தப்பாமற்படி என்றும் தரும், (எ-று).

(குறிப்பு) :—திறம் - உறுதிப்பயன். முந்து - இறந்த காலத்தையும், முன் - திருமுன்பு எனும் பொருளையும் தந்தன. அந்தர நாதன் - வானோர் தலைவனான இந்திரன். ஆறு நதிகளில் ஆடுபயனை, ஐராவதம் ஒன்றே அருளும் என்றபடி. (58)

சரசசாதி சோணை யாற்றிற் றண்புனன் முத்தங் காலும்
பொருநைபூங் கம்பை யாற்றிற்புகுந்துளோர்க்களிக்குங்காட்சி
விரைவுட னுதவுங் கஞ்ச வீட்டுளா னகந்தை நீக்கி
ஒருதலைக் கபால மேந்து மொருவன்மா தீர்த்த மாதோ.

(பொ — ரை):-கஞ்ச...மாதோ - (செழும்) கமலத்தின் இருந்த பிரமனது செருக்கினைத் தவிர்த்து, (அவனது) தலை ஓட்டைக் கரத்தில் ஏந்திய ஒப்பற்ற (தெய்வ கணமான) வைரவர் தீர்த்தமானது,

சரசோதி......உதவும் - சரசோதி, சோணை எனும் ஆறுகளிலும், குளிர்ந்த நீருடைய முத்துக்களைக் கொழிக்கும் தாமிர பரணியிலும், அழகிய கம்பா நதியிலும் மூழ்கினவர்க்கு விளையும் பயனை விரைந்து அருளும், (எ-று).

(குறிப்பு) :—சரம் - நாணற் புற்கள். சோதி - ஆற்றின் பெயர். காட்சி - ஞானம். வீட்டுளான் - பிரமன். ஒருவன் - பயிரவர். மேற் குறித்த நான்கு நதிகளில் மூழ்கு பயனை, செந்திலில் இருக்கும் வயிரவர் தீர்த்தம் ஒன்றே வழங்கும் என்று அறிவித்தபடி. (59)

அம்பிகைத்தலங்கண்மூன் றுமருண்மொழிகண்ணின் பேராய்ப்
பம்பிய தலமோர் மூன்றும் பரவினர்க் குரிய ஞான
நம்புற வளிக்கும் வேற்கை நாயகன் புயமீ ராறும்
கொம்பினில் படரு மானின் குறக்கொடி தீர்த்த மன்றே.

(பொ - ரை):—வேற்கை......மன்னே-வேல் ஏந்திய திருக்கர நாயகனுன விமலன் பன்னிரு தோள் களாம் கொம்புகளில் படர்கிற மான் பெற்ற குறவர்குலக் கொடியான வள்ளியம்மை தீர்த்தமானது ;

அம்பிகை......அளிக்கும் - முதல்விக்குரிய கோயில் கள் மூன்றிலும், கருணை பொழியும் (அவள்) கண்களின் பெயரால் முதன்மை பெற்ற (அம்) மூன்று தலங்களிலும், வழிபட்டவர்க்கு உரிய ஞானத்தை வழங்கும், (எ-று).

(குறிப்பு) :—முதல்விக்கு முக்கியமான கோயில்கள் மூன்று. அம் மூன்றிலும், தேவியின் கண்கள் புனித அருள் மழை பொழிகின்றன. அதனல் அத்தேவி விசாலாட்சி, காமாட்சி, மீனுட்சி என்று எவரும் எண்ணும் நாமம் எய்தினள். அப் பெயர் தாங்கும் அம்பிகைக்குக் காசி, காஞ்சி, மதுரை எனும் முதன்மைத் தலங்கள் மூன்றுள. அம்மூன்றிலும் ஆராதிப்பார் பெறும் பேற்றை, செந்திலில் வள்ளியம்மை தீர்த்தம் ஒன்றே வழங்கும் என்றபடி. 'குறக் கொடி' என்ற தற்கு ஏற்ப, 'புயம் ஈராறும் கொம்பு' என்றுர். ஞானத்தால் விளையும் முத்தியை ஞானம் என்றது ஆகு பெயர். நம்புற - விரும்புமாறு ; நம்பும்படி எனினும் ஒக்கும். (60)

121. இகத்தி லேசெயு மிடும்பை நீக்கியே
மகத்து வப்பரம் வழங்கு மாறுமா
முகத்தன் முன்னரே முழங்கிக் காட்டிவான்
சுகத்தை யீந்திடுந் துர்க்கை தீர்த்தமே.

(பொ - ரை):—ஆறுமா......தீர்த்தமே - சண்முகப் பரமன் திருமுன் (துதி) ஒலிகாட்டி, (எவர்க்கும்) தூய இன்பத்தை வழங்கும் துர்க்காதேவி தீர்த்தமானது ;

இகத்திலே - வழங்கும் - (தன்னில் படிந்தார்க்கு) இப்பிறப்பில் (தடுமாற்றம் தரும்) துன்பங்களைத் தவிர்த்து, உயர்ந்த பரஞானத்தை உதவும், (எ-று).

(குறிப்பு) :—இகம் - இம்மை, இடும்பை - துன்பநிலை. மகத்துவம் - மகிமாதிசயம். பரம் – முத்தி என்பாருமுளர். வான்சுகம் - பேரின்பம். செந்திலில் உள்ள புனித தீர்த்தங்களின் பிரார்த்தனை ஓசை, திரு முருகன் சந்நிதியில் தினமும் கேட்கும். அவ்வொலியே எவர்க்கும் இன்பகரமா யிருக்கும். அவ்வரிசையில் ஒன்று துர்க்கை தீர்த்தம். அந்தத் தீர்த்தமே தன்னில் படிந்தார்க்குப் பேற்றைத் தரும் ஆற்றலை யுடையது என்று அறிவித்தபடி. (61)

122. பரவு வார்க்குமுட் பரவ நெஞ்சகங்
கருது வார்க்குநற் கதியைக் காட்டுமாற்
சுரர்வ ணங்குதாட் டோகை யான்முன
நரலை வாய்த்திரு ஞான தீர்த்தமே.

(பொ - ரை):—சுரர்......தீர்த்தமே - வானவர் (நாள் தோறும்) வணங்கும் மயிலூர் முருகன் திருமுன் உள்ள கடற்கரையைச் சார்ந்த திருஞான தீர்த்தமானது,

பரவு......காட்டு மால் - (தன்னுள்) தோய்வார்க்கும், (அவ்வாறு) நீராட மனத்தில் நினைப்பார்க்கும் (அதி) உயர்ந்த கதியை அளிக்கும், (எ-று).

(குறிப்பு) :—பரவுதல் - நீராடல் ; பரனை வழிபடல் எனினுமாம். சுரர் - வணங்குதாள் என்பது, தோகைக்கு அடை ; தோகையானுக்கு அடை எனலுமாம். நரலை - கடல். (62)

123. அல்லல் யாவையு மகற்றி நீக்கருந்
தொல்லை யூழறத் தொலைத்து வேதநூற்
கல்வி காட்டிச்செங் கமலத் தாளருட்
செல்வங் காட்டுஞ்சத் தியத்தின் தீர்த்தமே

(பொ-ரை):—சத்தியத்தின் தீர்த்தமே......காட்டும் - இனிய சத்திய தீர்த்தமானது, (தன்னில் படிந்தார்க்குப்) பொல்லாத துன்பங்கள் அனைத்தையும் போக்கி, நீக்க முடியாத தொன்மைச் (சஞ்சித) வினைகளை அடியொடு தொலைத்து, (உயர்ந்த வைதிக) அருள் நூற்களை உணர்த்தி, செந்தாமரை போலும் திருவடிகளைச் சேவிக்கும் செல்வத்தைக் காட்டிவைக்கும், (எ-று).

(குறிப்பு) :—சத்திய தீர்த்தம் அல்லலை அகற்றும்; சஞ்சிதத்தை சாகடிக்கும். கல்வி செல்வம் இரண்டையும் காட்டித் தரும் என்பது கருத்து. (63)

124. தொடர்ந்த மும்மலத் துரிசு நீக்குவா
ணடங்க லும்படிந் தாடி னோர்க்குறுந்
திடம்பெ றத்தருஞ் செயந்தி யம்பதி
தடங்கொள் வாரிவாய் தரும தீர்த்தமே

(பொ - ரை):—செயந்தியம்பதி..............தீர்த்தமே- செந்திலம் பதியில் உள்ள தனிப்பெரும் நீர்மயமான தரும தீர்த்தமானது ;

தொடர்ந்த......தரும் - பந்தித்த மும்மல (ப்பொல்லா)க் குறைகளைப் போக்குதற் பொருட்டு, (பிற தீர்த்தங்கள்) அனைத்தினும் நீராடினர்க்கு எய்துகின்ற திடமான பேற்றைத் தானே தரும், (எ-று).

(குறிப்பு) :—அநாதி காலமாக மலங்கள் அடுத்திருந்தவையாதலின், 'தொடர்ந்த' என்ற அடைபுணர்த்தினர். துரிசு - களங்கம். அங்கங்குச் சிலகாலம் தங்கி நீராடினமையின், 'அடங்கலும் படிந்து ஆடினோர்' என்றார். வாரிவாய் - நீர்மயமான ; கடற்கரை அண்மையில் எனினுமாம். (64)

125. இருவி னைத்தொட ரிரும்பு தேய்த்திடற்
கரமெ னச்சிறந் தாறு மாமுகக்
குருப ரற்குமுன் குலவிக் காட்டுநூன்
முரற ரும்பல முனிவர் தீர்த்தமே.

(பொ - ரை):—முனிவர் தீர்த்தமே......பலம் காட்டும்- முனிவர் தீர்த்தமானது, (தன்னில் படிந்தாருடைய) இருவினையாகிய இரும்புச் சங்கிலியை அராவுதற்கு (உரிய) அரம் போலச் சமைந்து, அறுமுகனும் பரம குரவனின் திருமுன் கூடி, பலநூல் நுட்பங்களை ஓதுத லாம் பயனை உண்டாக்கும், (எ-று).

(குறிப்பு) :—தொடர் - சங்கிலி; முரல் என்பது, கற்கும் ஒலி யைக் காட்டியது. 'முனிவர் தீர்த்தம், நூல் முரல் தரும் பலம் காட்டும்' என இயைக்க. (65)

126. காம மேமுத லாறுங் காய்ந்தநற்
சோம சேகரச் சுருதி யான்பதப்
பூம லர்க்குளாய்ப் புகுத்து ஞானத்தின்
சேம மாம்பல தேவர் தீர்த்தமே

(பொ - ரை):—ஞானத்தின்......தேவர் தீர்த்தமே - ஞானப் புதையலான தேவர் தீர்த்தமானது;

காமமே முதல்......புகுத்தும் - காமம் முதலிய ஆறு பகைகளையும் கடிந்த சிறந்த சந்திர மௌலீசர் எனும் வேத நாயகன் திருவடித் தாமரை நிழலிற்குள் சேரும் படிச் செலுத்தும், (எ-று).

(குறிப்பு) :—அப்ராக்ருத திங்களை, 'நல் சோமன்' என்றார். சுருதியான் – நான்மறையின் உள்ளுறைப் பொருளானவன். பதப்பூ – உருவகம். (66)

127. கோப மாய்த்தவக் கோதி லார்சொலுஞ்
சாபம் யாவுக்குந் தாப மாகுமே
நீப மாலையா னிறைந்த சந்நிதிப்
பாப நாசமாய்ப் பரம்பு தீர்த்தமே

(பொ-ரை):—நீபமாலையான்......தீர்த்தமே - கடப்ப மலர் மாலையணிந்த கந்தப் பெருமான் பரிபூரணமான திருமுன் உள்ள பாவநாசப் (பெயரால்) பரவிய தீர்த்த மானது ;

கோபமாய்......தாபம் ஆகுமே - தவத்தினை யுடைய குற்றமற்ற முனிவர்கள் கோபம் கொண்டு கூறிய சாப மொழிகள் அனைத்தையும், (காட்டுத் தீப்போலாகத்) தபிக்கச் செய்துவிடும், (எ-று).

(குறிப்பு) :—பாபநாசம் ஆதலின், சாபம் போக்கும். சபிப்பது சாபம் ; அச்சாபத்தைத் தபிப்பிப்பது தாபம் என்க பரம்புதல் - வியாபித்தல். (67)

128. ஈட்டுந் தீவினைக் கிலக்க மாகவே
மூட்டுஞ் சஞ்சித முடித்து மோலிநீர்
சூட்டு வான்பதம் சூட்ட மேல்கதி
காட்டுங் கந்தபுட் கரிணி யானதே

(பொ – ரை):-கந்த புட்கரிணி......ஈட்டும்...முடித்து - கந்தபுட்கரிணி தீர்த்தமானது, (ஆன்மா) செய்து சேர்க் கும் தீவினைக்கு மூலமாக இருந்து, மூட்டுகின்ற சஞ்சித கன்மங்களைச் சாய்த்து ;

மோலிநீர்......கதி காட்டும் - திருமுடியில் கங்கை யைப் புனையும் சிவபிரானது திருவடிகளைத் தலைமேல் ஏற்கும்படி, (பயனை) பரகதியைப் பாலிக்கும், (எ-று).

**(குறிப்பு) :—இலக்கம் தீவினை - அநேகபாவம் எனலுமாம். மூட்டும் - (அவ்வக்காலத்தில்) மூள்விக்கும். சஞ்சிதம் — இது அநாதி வினை. மோலி - திருமுடி. நீர் சூட்டுவான் - கங்காதரேசன்.** (68)

129. வையம் யாவுக்கு மலினந் தீர்த்தவே
ஐயன் பாதமா மம்பு யத்துணை
கையி னெல்லிபோற் காட்டு மாதவச்
செய்யு ளாய்வருஞ் சேது தீர்த்தமே

(பொ - ரை):—மாதவ......சேது தீர்த்தமே - மாபெரும் தவத்தினர்தம் பாடல்களால் ஆயப் பெறுகிற சேது தீர்த்தமானது ;

வையம்......காட்டும் - உலகம் அனைத்திற்கும் களங்கம் போக்கிய வேலாயுதப் பெருமான் திருவடிகளாகிய தாமரைகளை, உள்ளங்கை நெல்லிபோல் தரிசிக்கும் புண்ணியத்தைத் தரும், (எ-று).

(குறிப்பு) :—**வையம்** - பூமி. மலினம் - மாசு. **துணை** — இரண்டு ; **உயிர்த்துணை** எனினுமாம். (69)

130. முத்திக் கின்பமூ லிகையு மாய்த்தரி
சித்துப் போற்றுவார் செனன மாகுமா
வத்துக் காக்கவா னமுத மாகுமாற்
பத்துப் பேரினுல் பரம்பு கங்கையே

(பொ - ரை):—பத்து...கங்கையே - பத்துப் பெயரால் பரவிய (தச) கங்கை தீர்த்தமானது ;

முத்திக்கு......அமுதம் ஆகுமால் - (தன்னிற் படித்தார்) முத்தி பெறுதற்கு உரிய இன்ப மூலிகையாகி, (தன்னைச்) சேவித்துத் துதிப்பவர்களை பிறவியாம் ஆபத்திலிருந்து காக்கும் சிறந்த அமுதம் ஆகும், (எ-று).

(குறிப்பு) :—முத்தி கிட்டச் செய்யும் மூலிகை; பிறவி தீர்க்கும் பேரமுதம் தசகங்கை என்றபடி. ஆகும் ஆவத்து - விளையும் ஆபத்து. (70)

**131.** இந்த்ர சாலமா யெடுத்து மானிடர்க்
கந்த மாதியில் லாத வாதியான்
சந்த நாண்மலர்ச் சரணங் காட்டுமாற்
கந்த மாதனக் கருணைத் தீர்த்தமே

(பொ - ரை) :—கந்த......தீர்த்தமே - கருணையுடைய கந்தமாதனத் தீர்த்தமானது ;

அந்தம் ஆதி....காட்டும் - முதலும் முடிவும் இல்லாத முதலாளியான முருகனது அழகிய அன்றலர்த்த மலர் போன்ற திருவடிகளை ;

மானிடர்க்கு - (மாபெரும் தன்னில் மூழ்கிய) மனிதர் கட்கு ;

இந்திரசாலமா எடுத்துக் காட்டும் - இந்திரசால வித்தைபோல (தன்பால்) தாங்கிக் காண்பிக்கும், (எ-று).

(குறிப்பு) :—ஆய் - ஆக எனும் எச்சத் திரிபு. இந்திரசாலம் - அதியற்புதச் செயல். மூழ்கிய போதே முருக தரிசனம் என்றபடி. சந்தம் - அழகு ; (அருள்) நாத அனுபவமுமாம். நாள் மலர் - புதுமலர். (71)

132. கோதி லாததங் குலத்து ளோர்கதிக்
கேது வாகநீ ரெள்ளி றைத்திடு
நீதி யார்க்கெலாம் நெறியைக் காட்டுமால்
மாதுர் தீர்த்தமாய் வயங்கும் தண்புனல்.

**(பொ - ரை) :-மாதுர்......தண்புனல் - மாதுருதீர்த்தம்** எனும் பெயரில் விளங்கும் குளிர்ந்த நீர்நிலை ;

கோதிலாத......நெறியைக் காட்டுமால் - குற்ற மற்ற தமது குலத்தவர் கதி பெறுவதற்குக் காரணமாக, தர்ப்பணம் செய்யும் நியதியர் யாவர்க்கும் (வாய்ப்பான நல்) வழியைக் காட்டும், (எ-று).

**(குறிப்பு) :—ஏது - மூலம். நீதி - வைதிக நியதி. நெறி - வழி. எள்நீர் இறைத்திடும் என இயைத்துப் பொருளறிக. (72)**

133. ஒருத ரம்படிந் துள்ளங் கையினீர்
மருவு மெள்ளுடன் மறித்து விட்டுளா
ரிருமை யுஞ்சிறந் திருக்க வீசன்று
ளருளுந் தென்புலத் தார்க டீர்த்தமே

(பொ - ரை) :—தென்புலத்தார்கள் தீர்த்தமே - பிதுரர் தீர்த்தமானது ;

ஒருதரம்......அருளும் - (தன்னிடம்) ஒரு தரம் நீராடி, உள்ளங் கையில் பொருந்திய எள்ளுடன் நீரைக் (கைகளை) மடக்கி (த்தருப்பணித்து) விட்டவர்கள், இம்மை மறுமை யிரண்டினும் சிறப்பெய்தி இருக்க (ச்செய்து, இறுதியில்) அமலன் திருவடிப் பேற்றையும் அருளும், (எ-று).

**(குறிப்பு) :—தென்புலத்தார் - இவர்கள் தென்திசையில் இருப்பவர்கள் ; பிதிரர் என்னும் பெயரினர். மறிதல் — குடங்கை கவிழ்த்தல் ! (73)**

134 நாட்டுந் தீர்த்தமோ ராறு நான்கையும்
பாட்டி னுற்றினம் பகர மூழ்கநீ
டேட்டி னுட்டிக்கொண் டெழுதிப் பூசிக்க
மூட்டு வார்க்குமெய்க் கதியை மூட்டுமே

**(பொ - ரை)** :-நாட்டும்......நான்கையும் - (இதுவரை) எடுத்துக் கூறிய இருபத்து நான்கு தீர்த்தங்களையும் ;

தினம் - பாட்டினுல் பகர மூழ்க-(உரிய சிறப்புரைக்கும்) பாடல்களால் நாள்தோறும் பாடவும், (அவைகளில்) நீராடவும் ;

நீடு ஏட்டின்......பூசிக்க - நீண்ட ஏட்டில் ஊன்றி எழுதி வைத்து அர்ச்சிக்கவும் ;

மூட்டுவார்க்கு......மூட்டுமே - (அச் செயல்) செய்கெனப் (பிறரை) ஊக்குவார்க்கு, (அவைகள்) மெய்ஞ் ஞான வீட்டை மேவச் செய்யும், (எ-று).

(குறிப்பு) :—நாட்டும் - நிலைபெற வுரைக்கும். மூட்டல் - முன்னூக்கி முயலல். மூட்டுவார்க்கு - பிறர்க்குப் போதிப்பார்க்கு எனினுமாம். (74)

செயந்திபுர வைபவம் உரைத்த அத்தியாயம் நிறைவுபெற்றது.

— ———

## 4. திருவவதார அத்தியாயம்

135. சுரும்ப ரின்னிசை முரன்றுபண் பாடுதண் டுளவக்
கரும்பு யற்படி வத்திருச் செங்கணுன் கனகத்
தரும்பி தழ்க்கம லாசனத் தண்ணல்வா னரசு
விரும்பு வச்சிர பாணிமற் றுள்ளவான் விபுதர்.

(பொ - ரை):—வண்டுகள் இன்னிசை எழுப்பிப் பண் பாடுகின்ற குளிர்ந்த துளசிமாலை யணிந்த கார்மேக மேனியரான சிவந்தகண் திருமாலும், கனக நிறமான அரும்பிய இதழ்களையுடைய தாமரையாகிய ஆசனத்தில் இருக்கும் நான்முகனும், விண்ணுலக ஆட்சியை விரும்பி நடத்தும் வச்சிரபாணி எனும் இந்திரனும், மற்றுமுள வானோரும், (எ-று).

(குறிப்பு) :—சுரும்பர் - வண்டு; ஈற்றுப்போலி. முரலல் — ஒலித்தல். கரும்புயல் — கார்மேகம். படிவம் - வடிவம். விபுதர்-தேவர்கள்; மேலான அறிவினர் எனும் பொருட்டு. (1)

136. அருந்த வங்களு மறைகளு மவரவ ரரசு
மிருந்த தானமு மவுணர்தந் தீமையா லிழந்து
முருந்தின் வாணகைக் கவுரியோர் பங்குடை முதல்வன்
பொருந்து வெள்ளிமால் வரைபுகுந் தவனடி போற்ற.

(பொ - ரை) :—அவுணர்களினுடைய அக்கிரமத்தால் அவரவர்களுடைய அரிய தவங்களையும், நான்மறைகளையும், (பயனுன) அரச பதவிகளையும், இருந்த இடங்களையும் துறந்து, மயில் இறகின் அடிபோன்ற ஒளியுள பற்களையுடைய பார்வதியாரை ஓர்பாகங் கொண்ட பரமன் வீற்றிருக்கின்ற (அரிய) வெள்ளி மலையை

அடைந்து, (தூய) அவ்விறைவனது திருவடிகளைத் துதிக்க, (எ-று).

(குறிப்பு) :—**தானம் - உலகம். முருந்து - மயிலிறகின் அடி. வாள் - ஒளி. நகை - பல். வெள்ளி மால்வரை - கயிலை.** (2)

137. அன்ன பான்மையை யுணர்ந்திம யத்தர சளித்த
கன்னி வார்முலைக் களபநாற் புயந்தொறுங் கமழத்
தன்ன தாலயந் தணப்பிலா துளத்தொடுந் தழுவிப்
பன்னெ டும்பக லிருந்தனன் யாவர்க்கும் பகவன்.

(பொ - ரை):-எவர்க்கும் தலைவரான சிவபிரான், (தம் ஆலய வாயிலில் வானவர் ஆதியர் வந்து துதிக்கும்) அத் தன்மையை அறிந்து, இமயமலை மன்னன் பெற்ற கன்னியான தேவியின் கச்சிறுக்கிய குயங்களில் பூசிய கலவைச் சாந்து (தம் கம்பீரமான) நான்கு தோள்களிலும் கமழ, அகமுகமாகி அணைந்து, நெடுங்காலமாகத் தனது ஆலயத்தை நீங்காது இருந்தார், (எ-று).

(குறிப்பு) :—சொருப சோதியான், தடத்த உருக் கொண்டு தங்கினன் என்பது குறிப்பு. உலகீன்ற அன்னையின் இயல்பு நிலையை அறிவிக்க, 'கன்னி' என்றார். குயங்களில் உள்ள களபமணம் கமழ் தோள்கள் என்றுரைத்த அதே நேரத்தில், 'யாவர்க்கும் பகவன்' என்றதும், சிவபிரான் சொருபம் படித்த செய்திதான். "பவன் பிரமசாரியாகும் பால்மொழி கன்னி யாகும்" என்பது சிவஞானசித்தி. பகவன் - அறுகுண அமலன். (3)

நெற்றி நாட்டத்த னிந்தவா றமைந்தரு ணெறியை
முற்று நாடிய வமரர்கள் யாவரு முறையிட்
டற்ற மில்லதோர் புணர்ப்பினுண் டாகிய போகத்
துற்ற தன்மையெத் தன்மையோ யாமிவ ணுரைக்கின்.

(பொ - ரை):-நெற்றிக் கண்ணுடைய நின்மலன் இவ் வாறு எழுந்தருளி யிருந்து, (பயனை) அருள் பாலிக்கும் முறையை முற்றும் உணர்ந்த வானவர் யாவரும், (நாம் இங்கு எம்குறையை) முறையிட்டு விண்ணப்பித்தால், சோர்வு இல்லாத ஒப்பற்ற (தேவியுடன்) அத்து வித சம்பந்தத்தில் பொருந்தி யிருந்தருளும் தகுதி எவ் வாறாக முடியுமோ? (எ-று).

(குறிப்பு):—**எம் முறையீடு கேளாதபடி, சொருப நிலையில் நீர் சத்தியுடன் இன்பப் பேரொளி மயமாக இருந்தால், எம்கதி யாதாவது? சொருபம் தடத்த உருவம் கொண்டாலன்றி, எம்குறை தீர்வது இல்லையே! எவர் முறையீட்டிற்கும் பயன் விளையாதே! சொருப இன்பத்தி லிருந்து வெளிப்படும் என்று கேட்க, எங்கட்கு ஏது உரிமை என்றெல்லாம் இரங்கிப் பிரார்த்தித்தபடி.** (4)

139. பரையும் நீயுமுண் டாக்கிய போகத்தின் பாரந்
தரைம டந்தையும் பரிப்பரி தாமெனத் தளர்வா
ளுரைசெ யும்பொழு தேழையேம் பையுளுற் றுளைவேம்
விரைய நீக்குதி யெனச்சுரர் குழாங்கொடு விளம்ப.

(பொ-ரை):-அம்மையும் நீரும் கொண்டுள அத்துவித மகிமையால், நிலமகளும், (தானவர் பெருகும் அப் பாரம்) தாங்க முடியவில்லையே என்று (உடல்) தளர் கின்றனளே; (இதைச்) சொல்லும் பொழுதே, எளி யேங்கள் (வறள்விக்கும்) துன்புற்று வருந்துகின்றேம்; விரைந்து (சொருபத்தி லிருந்து) வெளிப்பட்டருள்க என்று, விண்ணவர்கள் (தம்) கூட்டத்தொடும் வந்து விண்ணப்பிக்க, (எ-று).

(குறிப்பு) :—முதல் பாட்டில் வானவர் திரண்டு வந்ததைக் கூறினர். அடுத்த பாட்டில் விமலன் தரிசனம் வேண்டி ஏத்தினர். அருளுருவானோன் வெளிப்படாமையின், சொருப நிலையில் சக்தியுடன் சத்தன் சார்ந்துளன் என்று அறிந்து, தடத்த நிலையில் வெளிப்படு தற்பரா! உமது அருணோக்கம் இன்மையால் அவுணர்கள் பெருகினர். அவதி யடைந்துளம்; பூமகளும் புலம்புகின்றளே என்று, இங்ஙனம் அரிய துதிகள் ஆயிரம் செய்தனர் என்று அறிவித்தபடி. (5)

140. மூர லுந்திரு வுள்ளமுங் கனியமுக் கண்ண
ஞர ருள்கொடு சயனத்தை நீத்தன மாதி
வீரி யப்பொறி நம்வயி னீங்கின வெற்பி
ஞரி பக்கமும் வைந்தில மதற்கிட நவில்வீர்.

(பொ - ரை):-(திருமுகத்தில்) புன்னகையும் திருவுளத்தில் (வித்தகக்) கனிவும் வெளிப்பட, முக்கண் முதல்வன் நிறையருள் திருமேனி தாங்கி, (நியதியுள சொருப) மலரணை நீங்கினம்; முதன்மை (ப் பேரருள் ஆற்றல் ஆன) வீரியப் பொறிகள் எம்மி லிருந்து வெளிப்பட்டு விட்டன; (அதை) மலைமகள் இடத்திலும் வைத்தேம் இல்லை; அவைகட்கு (இருக்கும்) இடத்தை அறிவியுங்கள், (எ-று).

(குறிப்பு) :—மலைமகளை மணந்த மாதேவர், வித்தக அருட்கனலைக் காலத்தில் வெளிப்படுத்துவர். அதற்குள் அவசரப்பட்ட அமரர்கட்கு, அவைகள் கவினத் தங்கும் இடத்தைக் காட்டுங்கள் என்று அவர்களையே வினவலாயினர். ஆதி வீரியப் பொறி – புனித அருட்கனல் பொறிகள். மூரல் - புன்னகை. உள்ளம் - மகிழ்ச்சி; ஆகு பெயர். கனிய – முதிர. (6)

என்று ரைத்தசொற் கேட்டுணர் கின்றவா னிமையோ
ருன்ற னக்குள மூர்த்திக ளெட்டுள வவையிற்
றுன்று கின்றதோர் பார்மக ளாகுமத் தொடர்பான்
மன்ற வைத்தெமைக் காத்தரு ளெனச்சிவன் மகிழ்ந்து.

(பொ - ரை):—என்று இறைவன் அருளிய திருமொழி கேட்டுச் சிந்தித்த இமையவர், உமக்கு என்று உணரப் பெறுகிற எட்டுத் திருமேனிகள் இருக்கின்றன ; அவைகளுள் (ஒன்ருகப்) பொருந்துகிற ஒப்பிலாத நிலம் (ஒரு) பெண் சொரூபம் ; அவ்வுரிமையால், (அவளிடத்து) நிலை பெற வைத்து எளியேங்களைக் காத்தருளும் என்று விண்ணப்பிக்க, அமலர் திருவுளம் மகிழ்ந்தவராகி, (எ-று).

(குறிப்பு) :—எட்டு மூர்த்திகள் – அட்ட மூர்த்த வடிவங்கள் ; அவை மண், நீர், நெருப்பு, காற்று, விண், மதி, பரிதி, ஆன்மா எனப் பெறுவன. மன்ற - நிலைபெற. (7)

142. நிலம டந்தைபால் வீரியஞ் சேர்த்தலு நிலமான்
பெலமொ டுங்கிவெப் படையவீ ரியவழற் பிழம்பைப்
புலன டுங்குற வெயர்ப்பெழ வுடலம்வெய் துயிர்த்துச்
சுலன லைக்கொளத் தேவர்க ளறைந்திடச் சுமந்தான்.

(பொ - ரை):-நிலமகள் இடத்தில் (உக்கிர அருள்) வீரியத்தை ஒப்படைத்தலும், (அதன் வேகம் தாங்க முடியாமல்) பூதேவி (தன் உரிய) வலி முழுதும் ஒடுங்கி (அதிக) வெப்பம் அடைதலும் ; (அது கண்ட) அமரர்கள், தீக்கடவுளை வீரிய வெப்பைச் சுமக்குமாறு விளம்ப, (அவன் தன் பொறி) புலன்கள் நடுங்க, உடல் வியர்க்க, நெடு மூச்செறிந்து சுமந்தனன், (எ-று).

**(குறிப்பு) :—நிலமான் - மான்போல் மருளும் பூதேவி வெய்து உயிர்த்து-வெப்பமாகப் பெருமூச்சு விட்டு. சுலனன் - தீக்கடவுள்.** (8)

143. வெய்ய செந்தழ ருங்கமாட் டாதுள மெலிந்துற்
றைய கோவெனக் கங்கையிற் சேர்த்தலு மவடான்
மொய்யி னுற்பனி மால்வரை யொருபுடை முளரிச்
செய்ய பூஞ்சர வணத்திடப் பெருமிதஞ் சிறந்து.

**(பொ-ரை)**:-வெப்பமான செந்தீக்கடவுள் சுமக்க முடியாமல் மனம் வருந்தி, ஐயையோ என்று அலறி (சிறந்த) கங்கையில் சேர்ப்பிக்கவும், அவள் (அவைகளைத் தன்) வன்மையால் மாபெரும் இமய மலையின் ஒருபுறம் உள்ள செந்தாமரை மலர்களை யுடைய சரவணப் பொய்கையில் சேர்க்கவும், (எ-று).

**(குறிப்பு) :—மொய் - வலிமை. பனிமால்வரை - குளிர்ந்த மிகப்பெரிய மலை. புடை - பக்கம். முளரி - தாமரை; முள்களை அரையில் உடையது பற்றிப் போந்த பெயர்; இது, காரண இடுகுறி. 'பெருமிதம் சிறந்து' என்பதை அடுத்த பாட்டுடன் கூட்டிப் பொருளறிக.** (9)

144. விளங்கும் வீரியக் காந்தியி னற்சுடர் மேய
களங்க றுத்தவோ ரெட்டெனு முருவத்திற் கவின்று
வளங்கொ டெண்டிரை பரம்புநீர்ப் புணரிசூழ் வைப்பிற்
றுளங்கி யெங்கணும் வான்பொரு ளெனத்துலங்கியதால்.

**(பொ-ரை)**:-(முன்னையினும் சிறந்த மகிமை எய்தி,) விளங்குகின்ற வீரியப் பேரொளி மயமான தீப்பிழம்பு, பொருந்திய குற்றம் அற்ற ஒப்பற்ற அட்ட மூர்த்தம்

என்னும் கம்பீரத் திருவுருவாய்க் கவின்செய்து, வளம் கொண்டு, தெளிந்த அலைகளைப் பரப்புகின்ற நீருடைய கடல் புடை யுடுத்த நிலவுலகில் உள்ள (எல்லா) இடங்களிலும் விளங்கி, எங்குமான (பிரமமெனும்) பெரிய பொருளாகப் பிரகாசித்தது, (எ-று).

(குறிப்பு) :—மேய - அமைந்த. கவின்று - கவின் காட்டி; கவின் – பொலிவு. பரம்பு - பரந்த. புணரி - கடல்; நீர் அணுக்கள் நிறைந்தது எனும் பொருட்டு; ஆகு பெயர். வைப்பு - நிலவுருண்டை. துளங்கி - அசைந்து. வான் பொருள் – பிரமம். 'எட்டெனும் லோகங்கள் ஈன்று' என்று பாடம் கொண்டு, எண் வகை உலோகங்களைப் பிறப்பித்து என்று பொருள் புகன்றுளர் பிறர். வடமொழிச் செயந்தி மான்மியமும், உலோகங்களை உருவாக்கிய செய்தியையே உரைக்கின்றது. (10)

145. விள்ளு தற்கரி தாகிய வீரிய வெற்புப்
பொள்ளெ னக்கதி ராயிர கோடியிற் பொலிந்து
நள்ளி ருட்பர சமயவேர் நாமற வீட்ட
அள்ளி லைச்சுடர் வேலிறை யாயவ தரிக்க.

(பொ-ரை):-(இத்தகையது என்று) சொல்லற்கு இயலாத மலைபோல் எழுந்த வீரியத் திரட்சி, விரைந்து ஆயிர கோடி பரிதியர் போல் விளங்கி, நடு இரவு போன்ற புறச் சமயங்களை வேரின் பெயர்தானும் இல்லையாம்படி வீழ்த்த, கூரிய வெற்றிலை வடிவான ஒளிமய வேல் இறைவனாய் வெளிப்பட்டருள, (எ-று).

(குறிப்பு) :—விள்ளுதல் – பேசுதல். வீரிய வெற்பு – உருவகம். பொள் என என்பது, விரைவுக் குறிப்பு. நள்–நடு; பாதி. நாம் - நாமம் என்பதன் விகாரம்; நாம் - அச்சம். அள் - கூர்மை. (11)

இரண்டு மூன்றிடத் துற்றதாற் கந்தனென் றிசைத்துத்
திரண்ட வானவர் கார்த்திகை யாந்தெரி வையரைச்
சுருண்ட குஞ்சியஞ் சேய்க்குநும் வரைத்துணைமுலைப்பால்
அருண்டி டாதுநீ ரூட்டுமி னென்றறைந் தனரால்.

(பொ - ரை):-(அது கண்டு) திரண்ட தேவர்கள், (சிவன், நிலமகள், தீக்கடவுள், கங்கை, சரவணப் பொய்கை எனும்) ஐந்து இடங்களில் பொருந்தி அமைந்ததனுல், (அவதரித்த பெருமாற்குக்) கந்தன் என்று பெயர் அமைத்து, கார்த்திகைப் பெண்களை (ப்பார்த்து), சுருட்டைத் தலைமயிருடைய அழகிய (இப்) பிள்ளைக்கு, மலைக்கு இணையான உங்கள் முலைப்பாலை அஞ்சாமல் நீங்கள் அருத்துங்கள் என்று அறிவித் தனர், (எ-று).

(குறிப்பு) :—'' சேயவன் வடிவம் ஆறும் திரட்டி ஒன்ருகச் செய்தாய் ஆதலால் கந்தன் நாமம்'' என்று, கந்தபுராணம் இப் பெயர்க்கு வேறு காரணம் கூறிற்று. குஞ்சி - தலைமயிர். வரை - குன்று. அருண்டிடாது - அஞ்சாமல்; அசையாது எனினுமாம். ஸ்கந்த் எனும் தாதிற்குப் போதல் என்றும் பொருள் உண்டு; அ - விகுதி. (12)

147. அந்த வேலையி லறுபத்து நாற்கலை யனைத்து
முந்து தோன்றிட வுணர்ந்தொன்பான் மணியின் மொய்ம் பினர்தாம்
வந்து மொய்த்திட வள்ளியை மணஞ்செய்து வயத்தால்
வெந்தி றற்கொடுஞ் சூருரம் வேலினுல் வென்று.

(பொ - ரை):-(ஆரல் மாதர் பாலருத்திய) அதே நேரத்தில், அறுபத்து நான்கு கலைகள் அனைத்தையும் (உணர்த்துவார் இன்றியே) முன்னைப் புலப்பட உணர்ந்து,நவரத்தின (சத்திகளில் இருந்து வெளிப்பட்ட

இலட்சத்தொன்பது) வீரர்கள் (பரிவாரங்களாய்) வந்து மொய்க்க, (திருமால் கண்ணிலிருந்து வெளிவந்த) வள்ளியம்மையைத் திருமணம் செய்து, (தாரகன் ஆதியரைத் தடிந்த) வெற்றியுடன், கொடிய ஆற்றல் கொண்ட (விறு விறுத்த) சூரபதுமன் (பெரிய) மார்பை (பெரிய) வேல் சத்தியால் வென்று, (எ - று).

(குறிப்பு) :—உணர்ந்து, செய்து, வென்று என்று கூட்டுக. வயம் - பெருவெற்றி. (13)

148. சுரர்கள் யாவருந் துதித்திடச் சுந்தரித் தோகை
திரும ணச்செயல் புரிந்தபின் றேவர்கோன் முதலாய்
விரவு தேவர்கள் யாரையு முருகவேள் விளித்துக்
கருணை கூர்ந்தவர் தங்கள்பா லின்னவை கழறும்.

(பொ - ரை) :—வானவர்கள் அனைவரும் வழுத்த, மயில்போல் சாயலும் (கனக) சுந்தரி (யெனும் பழம் பெயரும் கொண்ட தேவயானை யம்மை)யைத் திருமணம் செய்தபின், முருகபிரான் இந்திரன் முதலாக இருந்த அமரர் அனைவரையும் அழைத்து, திருவருள் மிகுந்து, அவர்களிடத்தில் (பின்வரும்) இம்மொழிகளை வாய்மலரல் ஆயினர், (எ - று).

(குறிப்பு) :—விரவு - விரவிய; கலந்த. விளித்து — கூப்பிட்டு. (14)

149. சிந்து தீரமு மடுக்கலு நதிதருஞ் சிறப்புங்
கொந்த லர்க்கம லாசனத் திருவருட் குறிப்புஞ்
சுந்த ரம்பெறு மோரிடன் வேலைநீர் சூழ்ந்த
அந்த மற்றசீர்ப் பாரத கண்டத்தி னறைவீர்.

(பொ - ரை) :—கடல் நீரால் சூழப் பெற்ற அளவற்ற சிறப்புடைய பரத கண்டத்தில், கடற்கரையும், மலை

யும், நதிதரும் வளமும், கொத்தான இதழ்களை யுடைய கமல பீடத்தில் எழுந்தருளி யிருக்கும் இலக்குமியின் கருணைக் குறிப்புமான பொலிவு பெற்றுள ஒரு இடத்தை, அறிவியுங்கள், (எ - று).

**(குறிப்பு) :—சிந்து - கடல்; நீர் சிந்தும் இடம் எனும் காரணக் குறி. தீரம் - கரை. அடுக்கல் - மலை; கற்களை அடுக்கி வைத்திருப்பது போன்று இருத்தலின், மலைக்கு இப்பெயர் வந்தது. கொந்து – கொத்து. இடன் – இடம்; ஈற்றுப் போலி. அந்தம் – முடிவு. (15)**

இன்ன செய்கைபெற் றிருக்குமோ ரிடத்தினி திருந்து
மன்னு கின்றமா முனிவர்க்குந் தேவர்க்கும் வையந்
துன்னு மாக்கடங் குழுவுக்கு மருண்மழை சொரிந்து
நன்ன லம்பெற வீற்றிருப் பாமென நவில.

(பொ - ரை) :—இத்தகைய செயல் பெற்று இருக்கும் ஒரு இடத்தில் இனிதாக அமர்ந்து, நிலைபெறுகின்ற முதன்மையரான முனிவர்கட்கும், வானவர்கட்கும், நிலவுலகில் நிறைந்த மக்கள் கூட்டத்திற்கும் (புனித) கருணை மழை பொழிந்து, (அவர்கள்) நலஞ் சிறந்த இன்பம் அடைய எழுந்தருளி யிருப்பம் என்று திருவாய் மலர்ந்தருள, (எ - று).

**(குறிப்பு) :—வையம் - பூமி; எப்பொருளையும் வைக்கும் இடம் எனும் காரணக்குறி. குழு – தொகுதி. (16)**

151. தெரிந்த வானவர் யாவரு மம்முறை தெளிந்து
விரிந்த போதத்தா லடியரேம் விரும்பினே மேனாட்
புரிந்த மாதவப் புணர்ப்பினா லீதுநீ புகன்றாய்
அருந்த வந்தரு செயந்திநன் னகரநின் னருள்போல்.

(பொ - ரை) :—(அது கேட்டு) ஆராய்ந்த அமரர் அனைவரும், அந்த (ஆய்வு) முறைப்படி (இன்னதே இடம் என்று) நிச்சயித்து, விரிந்த அருளறிவின் துணை யால், (நிலவுலகில் நீர் எழுந்தருள வேண்டும் என்று) விரும்பினோம்; முன்பிறப்பில் (அடியரேம்) செய்த தூய தவத்தின் தொடர்பால், இதனைத் தேவரீர் திருவாய் மலர்ந்தருளினீர்; அரிய தவப் பயனை அளிக்கும் நின் அருளே போல்வது, நலம் சிறந்த செந்தில் நகரம், (எ - று).

(குறிப்பு) :—தெரிந்த - ஆய்ந்த. போதம் - தெளிந்தமதி. புணர்ப்பு – சம்பந்தம். (17)

புணரி வானிரைத் தரங்கமும் பொற்றையும் பொழிலும்
மணிவ ரன்றிய சாகர சங்கம வளத்தி
னணிவி ளங்கிய பொருநையுந் திருமக ளன்பின்
குணமு முள்ளது செயந்திநன் னகரங்கூ றுதுமால்.

(பொ - ரை) :—கடலின் பெரு முழக்குடைய அலை களும், மலையும், (மலர்ச்) சோலையும், மணி கொழித்த கடல் சங்கமமும் ஆன வளத்தின் அழகு புலனாகிற தாம்பிரபரணி யாறும், திருமகள் அன்பு கொளற்கு உரிய பண்பும் உள்ளதாகிய செந்தில் மாநகரச் சிறப்பைக் கூறுகின்றோம், (எ - று).

(குறிப்பு) :—கடலும் ஆறும் கலக்கும் இடம், மாபெரும் புனித இடம் என்று மதிக்கப் பெறும். இதை, 'சாகர சங்கம வளத்தின் அணி விளங்கிய பொருநை' என்று அறிவித்தார். தரங்கம் – அலை. பொற்றை - மலை. வரன்றிய - கொழிக்கின்ற, பொருநை – தாமிரபரணி. (18)

திருவவதார அத்தியாயம் நிறைவுபெற்றது.

---

## 5. செயந்திபுர அத்தியாயம்

153. கந்த மாதனப் பிறங்கலின் கவின்களும் கனிதேன்
சிந்து தென்பொரு நைத்திரு நதியுறு சிறப்பு
முந்து மாதவச் செயந்தியம் பதிவள முழுது
மெந்தை கேளென வமரர்க ளிறைஞ்சிநின் றிசைத்தார்

(பொ - ரை) :—(மாபெரும்) கந்தமாதன மலையின் மாண்புகளையும், கனிகளையும், தேன் (கூடு)களையும் (வாரி வந்து கரையில்) ஒதுக்குகின்ற தென்னாட்டில் உள்ள தாமிரபரணி நதியின் மிக்க சிறப்புகளையும், முற்பட்ட தனிப்பெரும் தவப் பயனைத் தருகின்ற திருச் செந்தில் பதியின் மகிமைகள் அனைத்தையும், எந்தையே! (உள்ளபடியே உரைக்கின்றோம்;) திருச் செவி ஏற்றருள் என்று, இமையவர்கள் வணங்கி நின்று இயம்பலாயினர், (எ - று).

(குறிப்பு) :—பிறங்கல் – மலை. எந்தை - எம்தந்தை என்பதன் மரூஉ. (1)

### சிலேடைகள்

154. காந்த ளுங்குர வுங்குர வந்தரு கடம்புஞ்
சாந்த முங்கய வல்லியும் வல்லியுந் தழுவி
வாய்ந்த பன்மணிக் குவைகளுந் தாங்கிய மரபாற்
சேந்த னொத்தது முத்தமிழ்ச் சந்தனச் சிலம்பு.

(பொ - ரை) :—முத்தமிழ்ச் சந்தனச் சிலம்பு - (இயல், இசை, நாடகம் எனும்) மூவகைத் தமிழ் வழங்கும் (இடமான) சந்தன மரங்களை யுடைய கந்த மாதன மலையானது,

காந்தளும்......வல்லியும் தழுவி - காந்தள் மலர்களை யும், குரா மலர்களையும்; மணம் வழங்கும் கடப்ப மலர் களையும், சந்தன மரங்களையும், குளங்களில் (உள்ள) அல்லி மலர்களையும், கொடிகளையும் தழுவிக் கொண்டு,

வாய்ந்த பன்மணி......சேந்தன் ஒத்தது - சிறந்த பலவகை இரத்தினக் கூட்டங்களையும் தன்னிடம் கொண்டுள்ள தன்மையால், (புனித) முருகனையே போன்றுளது, (எ - று).

(குறிப்பு) :—காந்தள் மலர்கள் கார்த்திகையில் மலரும்; ஆதலின் அது, கார்த்திகை மலர் என்றும் பெயர் பெறும். குரவம் இரண்டில் முதலது குராமலர்; அடுத்தது நறுமணம் எனும் பொருளது. சாந்தம் — சந்தனம். கயவல்லி—குளங்களில் உள்ள அல்லி மலர்களையும், (இந்திரன் ஊர்தியான ஐராவதம் வளர்த்த) தெய்வ யானையாரையும்; வல்லி - பூங்கொடிகளை யும், கொடிபோல் துவளும் இடையினையுடைய வள்ளியம்மை யையும் நினைவூட்டின. சேந்தன் — செந்நிற மேனிச் செவ் வேள் பெருமான். சந்தனச் சிலம்பு, மேல் சொன்னவைகளைத் தழுவி யிருத்தலின், அவைகளைக் கொண்ட முருகனையே ஒத்திருக்கிறது என்றபடி.

காந்தள், குரா, கடம்பு, சந்தனம், அல்லிமலர், பூங்கொடி, இரத்தினங்கள் முதலியவைகளை யணிந்து, கஜவல்லி, வனவல்லியரைத் தழுவி, அணி பல அணிந்த ஆறுமுகம்போல் நலம்பெற விளங்குகிறது சந்தனுசலம் என இது, செவ்வேட்கும் நதிக்குமான சிலேடை. (2)

குரவுங் கொன்றையுங் கூவிளத் தணியுங்கூ ரெயிற்ற
அரவுந் திங்களுங் கங்கையுந் தரித்துவா னகிலம்
பரவுந் தன்மையும் பெற்றுல கத்துயிர்ப் பரிப்பின்
விரிவுஞ் சங்கர னொத்தது சந்தன வெற்பு.

(பொ - ரை) :—சந்தன வெற்பு - சந்தன மரங்களை யுடைய (அம்) மலையானது,

குரவும்......தன்மையும் பெற்று - குரா மலர்களையும், கொன்றை மலர்களையும், அழகு செய்யும் வில்வ தளங் களையும், கூர்மையான பற்களையுடைய பாம்புகளையும், மதியையும் கங்கையையும் தாங்கி, விண்ணுலகும் மண்ணுலகும் வழிபடும் இயல்பையும் பெற்று;

உலகத்துயிர்......சங்கரன் ஒத்தது - (தனிப்பெரும்) உலகத்தில் உள்ள (எல்லா) உயிர்களையும் தாங்குத லால், (எதனிலும்) கலந்துள்ள (சால்புடைய) சங்கரனை ஒத்திருக்கின்றது, (எ - று).

(குறிப்பு) :—இது, சந்தன மலைக்கும் சங்கரற்குமான சிலேடை ஒப்புவமை. கூவிளம் – வில்வம். எயிறு - பற்கள். பரிப்பின் – சுமத்தலால். குரா, கொன்றை, வில்வம் முதலிய கொண்டது; பாம்புகள் எங்கும் படர்ந்தது; மதிநலமும் உயர்வும் உடையது; கங்கை தவழ்வது; விண்ணும் மண்ணும் போற்ற விளங்குவது ஆன சந்தனமலை, அதே செய்தியை யுடைய சங்கரர்போல் விளங்குகிறது என்றவாறு. (3)

சொல்லு மாழியா னன்றிறைஞ் சப்படுந் தொடர்பா
லெல்லை நின்றள விடற்கரி தாகிமீ தெழுந்து
பல்வ ளத்தொடை யானனஞ் சிறந்துபைங் கொடியும்
புல்ல லாற்சிவ னொத்தது சந்தனப் பொருப்பு.

(பொ - ரை):—சொல்லும்......தொடர்பால் - (சிறப்பித் துக்) கூறப்பெறும் கடலால் நிலையாகச் சூழப்படும் உரிமை யாலும்,

எல்லை நின்று......சிவன் ஒத்தது - (எவராலும் தன்) எல்லை அளவிட்டுத் தாண்டற்கு அரிதாகி, மேல் உயர்ந்து, பசுமையான கொடிகள் சூழ்ந்து இருக்கும் சந்தன மணமுள கந்தமாதன மலையானது,

சுருதி கூறும் சுதர்சனமெனும் சக்கரமேந்திய திருமால் நிலைபேருக வணங்கப் பெறும் தொடர்பால், (அடியும் முடியுமான) எல்லைகாண முடியாதபடி மேலும் கீழும் ஆழ்ந்து உயர்ந்து, பலவகை மாலை சூடி, ஐந்து திருமுகங்கள் கொண்டு சிறந்து, பசுங் கொடியான பார்வதியாரும் தழுவி யிருக்கும் சிவபிரானைப் போன் றுளது, (எ - று).

(குறிப்பு) :—ஆழி – கடல், சக்கரம். பல்வளத் தொடை யானனம் என்பதில், வளமார் பலவகை மாலையொடு ஐம்முகம் எனவும், பலவகைச் சிறப்பொடு சிங்கங்கள் எனவும் பொருளறிக. ஐ ஆனனம் – ஐம்முகம், சிங்கம். பைங்கொடி - பசுமைக்கொடி ; அது உவம ஆகு பெயராய்ப் பார்வதி யாரையும் அறிவித்தது. ஆழி சூழ்தல், ஆழ்ந்து உயர்தல், வளம்பல வாய்த்தல், ஐயானனம் எனும் சிங்கங்கள் இருத்தல், பசுங்கொடி படர்தல் முதலியவுள கந்தமாதனம், ஆழியான் வணங்க, அடிமுடி காண முடியாத, ஐம்முகம் கொண்ட, பார்வதி பதியான சிவம்போ லுளதெனும் செம்மொழிச் சிலேடை இது. (4)

157. அறுகும் வன்னியுஞ் சிகரமீ தாதரித் தயில்வே
லுறுகு மாரநா யகன்றனைத் தன்வயி னுடைத்தாய்க்
குறுகு மாரியை யிடனமைத் தும்பர்கைக் கொளலால்
பிறையின் வேணியா னொத்தது சந்தனப் பிறங்கல்.

(பொ – ரை) :—அறுகும் - யானைகளையும்; வன்னியும்- கிளிப் பிள்ளைகளையும் ; சிகரம் மீது ஆதரித்து - சிகரத் தின் மேல் தாங்கி ; அயில் வேல் உறு குமார நாயகன்

தனை தன்வயின் உடைத்தாய் - வேல்படை ஏந்திய குமரக் கடவுளைத் தன்னிடம் உடையதாய்; குறுகும் மாரியை இடம் அமைத்து - அணுகும் மேகங்களை ஒரு பால் கொண்டு; உம்பர் கைக்கொளால் - வானை அளாவி வளர்தலால்;

அறுகும் வன்னியும் சிகரமீது ஆதரித்து - அறுகை யும் வன்னிப் பத்திரத்தையும் சிரமேற் கொண்டு,

அயில்வேல் உறு குமார நாயகன்றனைத் தன்வயின் உடைத்தாய் - கூரிய வேல் ஏந்திய குமார பரனைத் தன்னிடத்தில் கொண்டு; குறுகும் ஆரியை இடன் அமைத்து - அணுகிய உமையை இடப்புறத்தில் இருத்தி; உம்பர் கைக்கொளால் - வானவர் கரங் கூப்பி வணங்குதலால்;

சந்தனப் பொருப்பு - சந்தன கந்த மாதன மலையானது; பிறையின் வேணியான் ஒத்தது - பிறையணி திருமுடிச் சிவபிரானை ஒத்தது, (எ - று).

(குறிப்பு) :—இதுவும் மேற்படி சிலேடை. அறுகு - யானைமுக யாளி; அறுகம்புல். வன்னி - கிளி, வன்னிப் பத்திரம். குறுகும் மாரியை, குறுகும் ஆரியை எனப் பிரித்துப் பொருள் கொளப் பெற்றது. அறுகும் வன்னியும் உச்சியில் உளது; தனி வேல் முருகன் தன்பால் உளன்; குறுகுமாரியை இடம் கொண்டது; உம்பர் கைக் கொண்டுளர்; இதனால் கந்தமாதனம் கண்ணுதல் போல்வது என்றபடி. (5)

சுரரும் மாதவக் குழுக்களும் விழுத்தகு துணர்ப்பூந்
தருவுஞ் சுந்தர வரம்பையும் வேழமுஞ் சசியும்
பொருவின் மேனகை யும்புடை துலங்கலாற் பொன்னாட்
டரசன் பேரவை போன்றது சந்தன வடுக்கல்.

(பொ - ரை) :—சந்தன அடுக்கல் - சந்தன மரங்களை யுடைய கந்தமாதன மலையானது ;

சுரரும் மாதவக் குழுக்களும் - வானவரும் சிறந்த முனிவர் கூட்டமும் ;

விழுத்தகு துணர்ப்பூந் தருவும் - சிறந்த தகுதி யுள பூங்கொத்துகளை யுடைய மரங்களும், (பஞ்ச தருக்களும் ;)

சுந்தர அரம்பையும் - அழகிய வாழைகளும், (தேவ அரம்பையரும்) ;

வேழமும் - யானைகளும், (ஐராவத யானையும் ;)

சசியும் - சந்திரனும், (இந்திராணியும் ;)

பொருவில் மேனகையும் - ஒப்பு இல்லாத மேலான பேரொளியும், (ஒப்பிலாத மேனகை எனும் தெய்வ மகளும்;)

புடை துலங்கலால் - எப்புறமும் விளங்குதலால் ,

பொன்னாட்டு அரசன் பேரவை போன்றது - பொன் னுலக மன்னனை இந்திரனுடைய (சுதன்மை எனும்) தேவ சபை போன்றது, (எ - று).

**(குறிப்பு) :—சுரரும் மாதவர்களும் கந்தமாதனத்தில் உளர்; தேவலோகத்திலும் உளர்.**

**பூந்தருக்கள் இங்கும் உண்டு, அங்கும் உண்டு.**

**அரம்பை என்பது வாழையையும், தேவமாதரையும் அறி விக்கும் ; அந்த அரம்பை இங்கும் உண்டு, அங்கும் உண்டு.**

**வேழம் – யானை ; அது இங்குமுண்டு அங்கும் உண்டு.**

**சசி - சந்திரனேயும், இந்திராணியையும் உணர்த்தும். அந்தச் சசி இங்கும் அங்கும் இருக்கிறது.**

**மேனகை – மேலான ஒளியையும், மேனகை எனும் அப்சரசையும் அறிவிக்கும்; அந்த மேனகை அங்கும் உண்டு, இங்குமுண்டு. இந்த அனுபவங்களால் கந்தமாதனம், சுவர்க்கம் போன்றது எனும் மாபெரும் இப் பாடல் சுவையை மறக்க முடிவது இல்லையே.** (6)

159. இரவும் நண்பக லும்விழி யிமைப்பிலா திருந்து
கருத ரும்பல வருத்தமு மேதினங் கவர்ந்து
பரவும் வானகக் குறியைமேற் காட்டியே பண்பில்
விரக மங்கையர்ப் போன்றது சந்தன வெற்பு.

(பொ - ரை) :—சந்தன வெற்பு - இரவும் நண் பகலும் விழி இமைப்பு இலாது இருந்து - (தன் இடையருத ஒளியின் சிறப்பால்) இரவும், பொருந்துகிற பகலும் (பார்ப்பார்) கண்கட்குத் தோன்றுது இருந்து; கருத அரும் பல வருத்தமுமே தினம் கவர்ந்து - (தனேச் சார்ந்தார்க்கு உளவான) கருதற்கு அரிய பல கவலேகளேயும் நாடோறும் கழித்து; பரவும் வானகக் குறியை மேல்காட்டியே - (தான் மிக்கு உயர்ந்து இருத்தலால்) புகழப் பெறுகிற விண்ணுலக இலக்கைத் (தன்) மேல் விளங்க வைத்து;

(மற்ருெரு பொருள்.)

இரவும் நண்பகலும் விழி இமைப்பு இலாது இருந்து - இரவிலும் பகலிலும் கண்கள் இமையாமல் இருந்து; கருத அரும் பல அருத்தமுமே தினம் கவர்ந்து – (தம்பால் வரும் காமுகரிடத்து) எண்ணற்கு அரிய பல பொருள்களேயும் அபகரித்து; பரவும் வான்

நகக் குறியை மேல்காட்டி - பரவிய சிறந்த நகத் தழும்பு களை(த் தம் உடல்) மேல் காண்பித்து; பண்பு இல் விரக மங்கையர் போன்றது - (இனிய) குணம் இல்லாத (பாழும்) மோகத்தை உண்டாக்கும் பரத்தை யர் போன்றது, (எ - று).

**(குறிப்பு):—சந்தன வெற்பு, விரக மங்கையர் போல்வது என்றபடி.** (7)

160. *திணிகொள் சாந்தமு நானமும் பலபல திறத்த*
*பணிக ளுங்களி யானைவெண் கோடும்பன் மணியுங்*
*கணித மின்மருந் தானவுங் கைக்கொளுந் திறத்தால்*
*வணிக மாக்களை நிகர்த்தது சந்தன மலையே.*

**(பொ – ரை):**—சந்தனமலையே - கந்தமாதன மலை யானது; திணிகொள் சாந்தமும் - திண்மை கொண்ட சந்தனத்தையும்; நானமும் – கஸ்தூரியையும்; பலபல திறத்த பணிகளும் - பலப்பல வகை அணிகளையும் (பாம்புகளையும்); களியானை வெண் கோடும் - மதக் களிப்பினை யுடைய யானையின் வெண்ணிறத் தந்தத்தை யும்; பல மணியும் - பல இரத்தினங்களையும்; கணிதம் இல் மருந்து ஆனவும் - அளவிலாத மருந்தாய் உள்ளன வற்றையும்; கைக்கொளும் திறத்தால் - தன்னிடம் கொண்ட தகுதியால்;

வணிக மாக்களை நிகர்த்தது - செட்டி மக்களைப் போன்றது, (எ - று).

**(குறிப்பு):—மலையினிடம் உள்ள எல்லாம் வணிகரிடம் உளது ஆதலின், சந்தனமலை வணிக மாக்களை நிகர்த்தது என்க. பணி - மலையினிடத்தில் பாம்பு; வணிகரிடத்து அணிகலன் என உணர்க.** (8)

மழைக்கண் ணீரிறைத் தருஞ்சினைக் கையின்மல ரேந்திக்
குழைத்த தாதகத் தடக்கியோர் நிலைமையிற் குறுகி
அழுத்து பேரளி யொடுசெவ்வே டனையருச் சிக்கத்
தழைத்த மாதவர்ப் போன்றது கந்தமா தனமே.

(பொ - ரை) :—மழைக் கண்நீர் இறைத்து - மேகங்களின் இடத்து வந்த நீரைச் சொரிந்து; அரும் சினைகையில் மலர் ஏந்தி - அருமையான (மரக்) கிளைகளின் இடங்களில் மலர்களைத் தாங்கி; குழைத்த தாது அகத்து அடக்கி - (பொன் முதல்) குலவிய தாதுக்களைத் தன்னிடத்திற் கொண்டு; ஓர் நிலைமையிற் குறுகி கந்தமாதனமே - ஒரே நிலையில் நின்ற கந்த மாதனம்,

மழைக் கண்ணீர் இறைத்து - குளிர்ந்த (ஆநந்தக்) கண்ணீரைச் சிந்தி; அரும் சினைக் கையில் மலர் ஏந்தி - அரிய உறுப்பான கையில் மலர்களை ஏந்தி; குழைத்த தாது அகத்து அடக்கி - நெகிழப் பெற்ற சுக்கிலத்தைத் தம்முள் அடங்கச் செய்து; ஓர் நிலைமையிற் குறுகி - ஓர்தலுக்குரிய (புனித) ஞான நிலைமையிற் பொருந்தி; அழுத்து பேர் அளியோடு - அழுந்தச் செய்யும் பேரன்புடன்; செவ்வேள்தனை அருச்சிக்க - திருமுருகனை வழிபட; தழைத்த மாதவர்ப் போன்றது - தழைத்த (அறிவுள) சிறந்த தவத் தொண்டர்களைப் போன்றுளது, (எ - று).

(குறிப்பு) :—மழை – குளிர்ச்சி; மேகம். சினை - கிளை; அவயவம். தாது - பொன் முதலிய உலோகம்; வீரியம். ஓர்நிலை - ஒரேநிலை, ஓரும் நிலை. அளி – அன்பு. மாதவர் போன்றது கந்தமாதனம் என்னும் இப்பாடல், எவரும் மனனம் செய்தற்கு உரியது. (9)

162. தூங்க லோசையுஞ் செப்பலி னோசையுந் துள்ளல்
தாங்கு நீர்மையி னோசையுங் கனியுந்தண் பூவும்
ஓங்கு காயுந்தே மாவுங்கூ விளமுமொன் றலிற்சீர்
தேங்கு செந்தமிழ் போன்றது சந்தனச் சிலம்பு.

(பொ - ரை):—கந்த மாதன மலையானது, யானை களின் பிளிறிடுதலும், (மக்களின்) பேச்சொலியும், துள்ளிவரும் நீரையுடைய முகில்களின் முழக்கும், கனிகளும், (மலர்ந்த) குளிர்ந்த மலர்களும், பருத்த காய் களும், இனிய மாமரங்களும், வில்வதருக்களும் (இனிது) பொருந்தி யிருத்தலால், சிறப்பு நிறைந்த புனிதத் தமிழ் யாப்பிலக்கணம் போன்றுளது, (எ - று).

(குறிப்பு):—தூங்கல் - யானை. தூங்கல் ஓசை – ஏந்திசைத் தூங்கல், அகவல் தூங்கல், பிரிந்திசைத் தூங்கல் எனவும்; செப்பல் ஓசை - ஏந்திசைச் செப்பல், தூங்கிசைச் செப்பல், ஒழுகிசைச் செப்பல் எனவும்; துள்ளல் ஓசை – ஏந்திசைத் துள்ளல், அகவல் துள்ளல், பிரிந்திசைத் துள்ளல் என்றெல் லாம் யாப்பிலக்கணத்தில் தனிபற்றி விதித்த ஓசை வேறு பாடுகள் பல உள. அதனுடன், நிரை நேர் முதலிய அசை விகற்பங்கட்குரிய வாய்பாடுகளான கனி, தண்பூ, காய், தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் முதலியனவும் உள. இது, சந்தனச் சிலம்பு எனும் கந்த மாதன மலைக்கும் யாப் பிலக்கணத்திற்குமான சிலேடை. சந்தனச் சிலம்பு, தேங்கு செந்தமிழ் போன்றது எனக் கூட்டுக. நீர் மையின் ஓசை – நீருடைய மேகங்களின் முழக்கொலி என அறிக. (10)

மாலி னுந்தியின் விளங்கிநான் மறைமுறை வகுத்துக்
கோல நான்முக மாகியெண் கையுமேற் கொண்டு
பாலி னன்கலை மானையும் பரித்துப்பங் கயத்தோன்
போல நின்றது தென்றலஞ் சந்தனப் பொருப்பு.

(பொ - ரை) :—தென்றல் அம் சந்தனப் பொருப்பு - தென்றல் காற்றின் அழகினை யுடைய (மாபெரும் கந்தமாதன) மலையானது ; மாலின் உந்தியின் விளங்கி- மேகங்களை, காட்டாறுகளை(த் தன்னிடம்) கவினக் கொண்டு ; நான் மறை முறை வகுத்து - (தன்னிடம் வாழ்வார் உயர்) நான் மறைகளை முறையாக ஓதப் பெற்று ; கோல நான்முகம் ஆகி-(அருவி) நீரொழுக்கம் நாற்புறமும் ஆகி ; எண்கையும் மேல் கொண்டு - தன்மேல் பல கரடிகளைத் தாங்கி ; பாலின் நன்கலை மானையும் பரித்து - பக்கங்களில் சிறந்த கலைமான்களை யும் கொண்டு ;

(மற்றொரு பொருள்)

மாலின் உந்தியின் விளங்கி - திருமாலின் உந்திக் கமலத்தில் இருந்து உதயமாகி ; நான்மறை முறை வகுத்து - (முதன்மை) மறைகளை நான்காக முறைப்பட வகுத்து ; கோல நான்முகம் ஆகி - அழகிய நான்கு முகம் ஆகி ; எண்கையும் மேல் கொண்டு - எட்டுக் கைகளையும் உடையவனாகி ; பாலின் நன்கலை மானையும் பரித்து - பால்போல் நிறமுள அழகிய கலைமகளையும் தாங்கி ; பங்கயத்தோன் போல நின்றது - கமல பீட பிரமன் போல் கவினியுளது, (எ - று).

(குறிப்பு) :—மால் - மேகம் ; மயக்கம் செய்விக்கும் திருமால். உந்தி – தொப்புள் ; காட்டாறு. கோலம் – நீர் ; அழகு. எண்கை - கரடிகளை; எட்டுக் கைகளை, பால் – பக்கம்; வெண்ணிறம். கலைமான் – மானின் இனம் ; கலைமகள். (11)

கந்த மாதனச் செய்கையைத் தேவநங் கருத்தின்
வந்த வாறுனக் குரைத்தன மிதுநிற்க மலர்த்தேன்
சிந்து தென்பொரு நைத்திரு நதிச்சிறப் பனைத்து
முந்து மார்வத்தா லறைகுதுங் கேளென மொழிந்தார்.

(பொ – ரை):-தேவா! கந்தமாதன மலையின் செயலை, எம் சிந்தனையிற் புலனான அளவு உமக்குப் புகன்றோம்; இது இவ்வளவில் இருக்க, (புனித) மலர்த்தேனைப் பொழிகின்ற அழகிய தாமிரபரணி யெனும் அருமை நதியின் மகிமை அனைத்தையும், முற்படும் மகிழ்ச்சியால் விண்ணப்பிக்கிறோம்; செவி சாய்த்தருளும் என்று, (இமையவர் மேலும்) இயம்பலாயினர், (எ-று).

(குறிப்பு) :—தேவ – விளி. முந்தும் ஆர்வம் – (வாளா இருப்பினும்) முற்பட்டு வரும் ஆசைப் பெருக்கம். திரு நதி – கண்டார் மனத்தைக் கவரும் கம்பீர தாம்பிரபரணி; மற்று, வற்றாத ஜீவநதி; பல்வளம் தரும் பேராறு எனினுமாம். (12)

## தாமிரபரணியும் கணபதியும்

விரைத்த மான்மத மாமதத் தானமேற் கோலிக்
கரைத்து முக்கனி யவலொடு கடலையுங் கலந்து
திரைத்து வான்மருப் புடனெடுத் திமைத்தலாற் செயந்தி
புரத்து நான்மறைக் குஞ்சரம் போன்றது பொருநை.

(பொ - ரை):-விரைத்த மான்மதம்-(கம்பீர) மணம் கமழும் கஸ்தூரி; மாமதம் தான மேல் கோலி - யானை மதம் முதலியவைகளை இடந்தோறும் வாரி எடுத்துக் கொண்டு; முக்கனி கரைத்து - (வாழை, மா, பலா முதலிய) முக்கனிகளையும் உதிர்த்து, அவலொடு கடலை யும் கலந்து - (தனி யிருந்த) பள்ளங்களிலும் சமுத்திர நீரிலும் சங்கமம் ஆகி; திரைத்து - (ஓ என்று) இரைக் கும் அலைகளுடன்; வான் மருப்பு எடுத்து இமைத்த லால் பொருநை - நெடுமரக் கிளைகளை ஒரு சேர எடுத்து மின்னுதலால் தாமிரபரணி,

நறுமணமுடைய கஸ்தூரியை, புனித மதம் பாயும் (கபோலமாகிய) இடத்தின் மேல் பூசிக் கொண்டு, முக்கனிகளைப் பிசைந்து, அவலுடன் கடலையையும் கலந்து உட்கொண்டு, (திருமேனியில் பல) மடிப்புடையதாய், சிறந்த ஒற்றைத் தந்தத்தை (ஒரு கரத்தில்) ஏந்தி விளங்கும் செந்திலில் உள்ள வைதிக கணபதி போல் வருகிறது, (எ-று).

(குறிப்பு) :—**விரைத்த** - மணம் கமழ்கின்ற ; **விரை** - **வாசனை**. மான்மதம் - கஸ்தூரி. மாமதத் தானம் - கம்பீர **மதம்** பாயும் கபோலம். அவல், கடலைகள் ஒருவகைத் **தின்பண்டங்கள்; மற்று**, பள்ளம், கடல் எனும் பொருளையும் பயக்கும். *திரைத்தல் - அலை கொழித்தல் ; தசை மடிப்பு.* **மருப்பு - மரக்கிளை ; தந்தம். குஞ்சரம் - யானை ; இங்கு செந்தில் கணபதி எனும் பொருளில் நின்றது.** (13)

## பொருநையும் பிட்சாடனரும்

கூன வெண்பிறை யின்வளை குரண்டவான் சிறையிற்
பேண மின்றரக் கால்பல சடையினிற் பிறங்க
ஆன வம்புயக் கபாலநேர் திரைக்கர மமைத்துப்
போன கம்பெறப் போந்தவர்ப் போன்றது பொருநை.

(பொ - ரை):-பொருநை - தாமிரபரணி; கூன வெண் பிறையின் வளை - வளைந்த வெள்ளிய பிறைத்திங்கள் போன்ற சங்கும் ;

குரண்ட வான் சிறையில் பேனம் மின் தர - கொக்கின் பெரிய இறகுகள்போல் நுரையும் விளங்க ; பல சடையினில் கால் பிறங்க - பல சடைகள்போல் (பிரிந்து புறப்படும்) வாய்க்கால்கள் (போகும் வழியெல்

லாம்) புலனுக; கபாலம் நேர் ஆன அம்புயம் திரைகரத்து அமைத்து - (பலிப்பாத்திரமான பிரமன்) மண்டை ஓடு போல் மலரும் கமல மலர்களை, அலைகளாகிய கைகளில் அடக்கி ; போனகம் பெறப் போந்தவர் போன்றது-(சீவ போதப்) பிட்சை வாங்க வந்த சிவபெருமான் போல் வருகிறது, (எ-று).

(குறிப்பு) :—கூனல் - வளைவு. வளை - சங்கு. குரண்டம் — கொக்கு. வான்சிறை - எடுப்பான இறகுகள். பேனம் - நுரை. மின்தரல் - மின்னுதல். கால் - கால்வாய். அம்புயம் - தாமரை . போனகம் - உணவு. பிறைபோல் சங்கும், இறகு போல் நுரையும், சடைகள் போல் கால்வாயும், மண்டை யோடு போல் கமல மலர்களையும் கொண்டுவரும் தாமிரபரணி, பிறையும் இறகும் சடையிற் சூடி, கபாலம் ஏந்திவரு கண்ணுதல் போன்றது எனும் அருமையே அருமை. (14)

## நதியும் நம்பனும்

167. அரவந் தாங்கிவன் தோலெடுத் தம்பர விடமார்ந்
திரும ருங்குநால் வேதபா ரகர்படிந் திறைஞ்சச்
சுரரும் வந்தனை புரிதர யாவருந் தொழுமுப்
புரமெ ரித்தகண் ணுதற்பரன் போன்றது பொருநை.

(பொ - ரை) :—பொருநை - தாமிரபரணி ; அரவம் தாங்கி - பேரொலி மேலிட்டு ; வன்தோல் எடுத்து - வலியுள யானைகளை வாரிக் கொண்டு ; அம்பர இடம் ஆர்ந்து - கடலின் இடத்தில் கலந்து ; இரு மருங்கும் நால் வேத பாரகர் படிந்து இறைஞ்ச - இரு கரைகளிலும் வைதிக அந்தணர்கள் ஆழ்ந்து நீராடி ஆராதிக்க ; சுரரும் வந்தனை புரிதர - வானவரும்

(வந்திருந்து) வழிபட ; யாவரும் தொழ-(பொதுவாக) எல்லோரும் இறைஞ்சப் பெறுதலால்,

அரவம் தாங்கி - அரவாபரணம் அணிந்து ; வன்தோல் எடுத்து-வலிய (யானைத்தோல் புலித்) தோல் உடுத்து ; விடம் ஆர்ந்து - (பழங்) கடல் விடம் பருகி ; இருமருங்கும்......இறைஞ்ச - இரு புறமும் (புலிக்கால் பாம்புக்கால் முனிவர்கள் ஆன) வைதிகர்கள் வணங்கி வழிபட ; சுரரும் வந்தனை புரிதர - இமையவரும் வந்து இறைஞ்ச ; யாவரும் தொழ - (விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் எனப்பெறும்) மூவகையினரும் முன் வந்து வணங்க உள ; புரம் எரித்த கண்ணுதல் போன்றது-முப்புரம் எரித்த கண்ணுதல் பரனைப் போல் காட்சி யாகிறது, (எ-று).

(குறிப்பு) :—அ ர வ ம் - ஓசை; பாம்பு. தோல் - யானை ; (யானை புலிகளின்) தோல்கள். அம்பரவிடம் - கடலிடம் ; கடலில் எழுந்த ஆலகாலம். மருங்கு - கரை ; பக்கம். படிதல் - மூழ்கல், வழிபடல். (15)

## நதியும் குமரனும்

168. செங்க டம்பெடுத் துங்குறிஞ் சித்திணை திரிந்துஞ்
சங்க முந்தியுஞ் சீரலை வாய்க்கரை சார்ந்து
மெங்கு மாசுர மொழித்தலாற் குமரவே ளென்னப்
பொங்கு கின்றது மன்றலந் தென்றலார் பொருநை.

(பொ-ரை):-மன்றல் அம் தென்றல் ஆர் பொருநை - மணம் கமழ் அழகிய தென்றலுடன் வருகின்ற தாம்பிர பரணி, செங்கடம்பு எடுத்தும் - செங்கடப்ப மலர்களை மிதக்கக் கொண்டும் ; குறிஞ்சித் திணை திரிந்தும் -

(உயர்ந்த) மலை நிலங்களில் உலவியும்; சங்கம் உந்தியும் - (உயர்ந்த) சங்குகளை (க் கரையில்) ஒதுக்கியும்; சீரலைவாய்க் கரை சார்ந்தும் - சிறந்த அலைகளையுடைய கடற்கரையை அணுகியும்; எங்கும் மாசுரம் ஒழித்தலால் - எங்குமுள பாலை நிலத்தை (அதன் வெம்மையை) விலக்குவதனால்,

கடம்ப மலரணிந்தும், குறிஞ்சி நிலங்கள் தோறும் நடமாடியும், (தமிழ்ச்) சங்கத்தில் (உருத்திர சன்மர் என) முந்தியும், திருச்சீரலைவாய் எனும் பதியில் அமர்ந்தும், எங்குமுள அசுரர்களை அழித்த குமரன் போல் (வாவிப்) பொங்கி வருகிறது, (எ-று).

(குறிப்பு) :—குறிஞ்சித் திணை - மலையும் மலைசார் நிலமும். சங்கம் - (முத்தீனும்) சங்குகள்; (மதுரைத்) தமிழ்ச் சங்கம். மாசுரம் - பாலைவனம்; இதை ஆசுரம் எனப் பிரித்து, அசுர உலகம் எனவும் அறிக. (16)

## தேவரும் நதியும்

169 விரவு பூந்துணர் சிந்துசெந் தாதின்மெய் சிவந்து
மருவு கந்தர நுழைந்துவந் தமரர்வாழ்த் தெடுப்பப்
பரவை மேனடந் தொற்றெனச் சூரன்முன் பகர்ந்து
பொருத வீரவா குவைநிக ரானது பொருநை.

(பொ - ரை) :—பொருநை-தாமிரபரணி; விரவு பூந்துணர் சிந்து செம்தாதின் மெய் சிவந்து - கலந்த மலர்க் கொத்துக்களில் இருந்து சிந்திய சிவந்த மகரந்தங்களால் (பொன் போல்) மேனி செந்நிறமாகி; மருவு கந்தரம் நுழைந்து வந்து - (இடந்தோறும்)

கலந்து இருந்த (புனித) குகைகளுள் புகுந்து வெளிப் பட்டு; அமரர் வாழ்த்து எடுப்ப - இமையவர் பேரொலி யிட்டுத் துதிக்க; பரவை மேல் நடந்து - (தழைத்த) கடல் மேல் தவழ்ந்து; ஒற்றென சூரன் முன் பகர்ந்து பொருத வீரவாகுவை நிகரானது - (தூய குமரன்) தூதன் (நான்) என்று, சூரபதுமன் முன் (வீரமாக உரை) விளம்பி, போரிட்டு வென்ற வீரவாகு தேவரைப்போல வருகிறது, (எ-று).

(குறிப்பு):—துணர் - கொத்து; தாது - மகரந்தம். கந்தரம் - குகை. பரவை - கடல். ஒற்று - தூது. மகரந்தங்களால் நிறம் சிவந்து, இடை வழியில் உள்ள சுருங்கைகளில் நுழைந்து வெளிப்பட்டு, வானோர் வாழ்த்த கடலில் கலக்கும் தாமிரபரணி, மாணிக்க நிறமான மேனியுடன், கிரவுஞ்சமலைக் குகையுள் புகுந்து வெளியாகி, இமையவர் இறைஞ்சக் கடல் மேல் சென்று, தூதனெனச் சூரன்முன் வாது பகர்ந்த வீர வாகுவைப்போல் விளங்குகிறது என்றபடி. (17)

## நதியும் கவுரியும்

170 வரையி னிற்பிறந் தீசர்தம் மேனியு மாகித்
தரைம கட்குமே லாய்ச்சர மசரமுந் தழைத்துக்
கருவு யிர்ப்பதற் கின்னருண் முழுவதுங் காட்டிப்
பொருவில் கற்புடைக் கவுரிபோ லானது பொருநை.

(பொ - ரை):-வரையினிற் பிறந்து—(உயர்ந்த) மலை யில் உதித்து, ஈசர்தம் மேனியும் ஆகி - அமலனது இலிங்கத் திருமேனியில் (அபிஷேக நீரும்) ஆகி; தரை மகட்கு மேலாய் - (மேதகு) நிலமகட்கும் மேற்பட்டு;

சரம் அசரமும் தழைத்து - இயங்குதிணை, நிலைத் திணைகட்கு வளம் பிறப்பித்து; கரு உயிர்ப்பதற்கு

இன்னருள் முழுவதும் காட்டி - (அவைகள்) மூலத்தில் இருந்து முளைப்பதற்கு உரிய கனிந்த திருவருளை முற்றும் காண்பித்து, பொருவில் கற்புடைக் கவுரிபோல் ஆனது - ஒப்பிலாத கற்புடைய உமாதேவியார் போலுளது, (எ-று).

(குறிப்பு) :—வரை - மலை. தரைமகள் - பூதேவி. மலையிற் பிறந்து, அபிஷேக வகையில் அமலனைத் தழுவி, அனைத்தும் வாழும் அருள் புலனுக வரும் ஆறு, இமய மலையில் அவ தரித்து, இறை பாதித் திருவுருவில் இணைந்து, ஆன்மாக்கள் உய்ய அருள்நோக்கம் பாலிக்கும் அம்பிகை போல் தோன்று கிறது என்றபடி. "சோதிப் பதியன்றி வேறு ஒரு தெய்வம் தொழுதற் கில்லை - உயிர்கள் எல்லாம் நீதிப் புதல்வர்கள் ஆயினர் - ஆதலின், நீ கொள் கற்பு பேதிப்பதன்று கண் டாய்!' எனும் துறைமங்கலத்தாரும், அமலையின் பொருவில் கற்பைப் புகலுமா றுணர்க. (18)

## நதியும் திருமாலும்

171 சங்க மேந்தியுஞ் சக்கரந் தரித்துமா தரையுந்
துங்க முற்றசெம் பொன்னொடு தழுவியுந் துணர்ப்பூங்
கொம்பு யிர்த்தமா மருதொடித் தகிலமுங் கொளலாற்
புங்க வர்க்கமு தளித்தமா லொத்தது பொருநை.

(பொ - ரை):—சங்கம் ஏந்தியும்-(முத்துக்களை யீனும்) சங்குகளைச் சுமந்தும், சக்கரம் தரித்தும் - நீர்ச்சுழிகளைக் கொண்டும்; மாதரையும் துங்கம் உற்ற செம் பொன்னொடு தழுவியும் - (தன்பால் நீராடுகின்ற) தையலரையும், (அவர்கள் அணிந்துள) மிகவுயர்ந்த அணிகளொடு தழுவியும் ; துணர்ப் பூங் கொம்பு உயிர்த்த மா மருது ஒடித்து - மலர்க்கொத்துகள் மலிந்த கிளைகளை யுடைய மருத மரங்களை முறித்தும், அகிலமும் கொளலால் -

(வழியிடைப் பட்ட) அனைத்தையும் வாரிக் கொண்டு வருதலினால்,

சங்கம் ஏந்தியும் - (பாஞ்சசன்ய) சங்கம் தாங்கியும்; சக்கரம் தரித்தும் - (சுதர்சன) ஆழியை ஏந்தியும்; மாதரையும்......தழுவியும் - பூதேவியையும் சீதேவியை யும் இருபுறம் தழுவியும்; துணர்ப்பூ.....மருதொடித்து - (கிருஷ்ணாவதாரத்தில்) மருத மரத்தை முறித்து, அகிலமும் கொளலால் - பதினாலு உலகங்களையும் (தம் வயிற்றுட்) கொள்ளுதலால்; புங்கவர்க்கு......மால் ஒத்தது பொருநை - வானவர்க்கு அமுதை வழங்கிய தாமோதரனைப் போலுளது தாமிரபரணி (எ - று).

(குறிப்பு) :—மாதரை - பெருநிலப் பரப்பை எனினுமாம். அங்ஙனம் பொருள்கொள் பொழுது, பொன் - பொன் பொடி என்று பொருள் கொள்க. உயிர்த்த - தோற்றுவித்த. கொளல் - உண்டல். (19)

## வேதனும் நதியும்

மலர்ப ரித்தன மேற்கொடு சதுர்மறை வகுத்திவ்
வுலக னைத்துமுண் டாக்கியு மாதவத் தொருங்காய்ப்
பலக லைத்திரு நாமிசைப் பழகலாற் படைத்தோன்
பொலிவு பெற்றது கற்றமா தவர்தொழும் பொருநை.

(பொ - ரை) :—கற்ற மாதவர் தொழும் பொருநை - கலையுணர்வு கைவந்த சிறந்த தவத்தினர் வணங்கும் தாமிரபரணி நதி; மலர் பரித்து - மலர்களைச் சுமந்து, அனம் மேற் கொடு - அன்னப் பறவைகளை(த்தன் மேல்) தாங்கி; சதுர்மறை வகுத்து - வைதிக நான் மறைகளை வகைபெற வைத்து; இவ்வுலகனைத்தும்

உண்டாக்கியும் - இந்த உலக வளம் யாவற்றையும் உளதாக்கியும்; மாதவத்து ஒருங்காய் பல கலைத்திரு நாமிசைப் பழகலால் - செம்மைத் தவத்தில் ஒருமை சிறக்க, பல கலை பயின்ற (நாவலர்) நாவில் (தாமிர பரணி, பொருநை என்று பல காலம் சொல்லிப்) பயிலப் பெறுதலால்;

தாமரையால் தாங்கப் பெற்று, அன்ன ஊர்தியன் ஆகி, வைதிக மறைகளை நான்காக வகுத்து, பண்டே உலகங்களைப் படைத்து, சிறந்த தவத்தையும் ஏற்று, கலைமகள் நாவில் குடியிருக்கும் புனித நான் முகனைப்போற் பொலிவு பெற்றுளது, (எ - று).

(குறிப்பு) :—பரித்தல் – சுமத்தல். அனம் – அன்னம்; இடைக்குறை. ஒருங்கு - ஒருமை. திரு - சரஸ்வதி. (20)

## நதியும் இந்திரனும்

173. பலத ருக்களும் வெள்ளைவா ரணமுமோர் பாலிற்
செலநி றைந்தெழு மீனினங் கண்களிற் றிகழத்
தலைமை பெற்றிமை யோர்தினந் தாழ்ந்திறைஞ் சுதலாற்
**பொலனி லத்திறை போன்றதா லான்றநீர்ப் பொருநை.**

(பொ - ரை) :—ஆன்ற நீர் பொருநை - நிறை வெள்ள மான தாமிரபரணி;

பல தருக்களும் வெள்ளை வாரணமும் ஓர் பாலிற் செல - பல வகையான மரங்களும், வெண்ணிறச் சங்கங் களும் ஓர் புறம் ஒதுங்க; நிறைந்து எழும் மீன் இனம் கண்களில் திகழ - (புறப்படல் கருதி) நிறைந்து எழுகிற மீன் இனங்கள் கண்கள் போல் கவின,

தலைமை பெற்று - (நதிகளில்) தலைமை யானது எனும் பெயர் தாங்கி, இமையோர் தினம் தாழ்ந்து இறைஞ்சுதலால் - விண்ணவர் நாள் தோறும் விநயமுடன் வணங்குதலால், பொலன் நிலத்து இறை போன்றது - பொன்னாட்டு இந்திரனைப் போல் இருக்கிறது, (எ - று).

(குறிப்பு) :—தருக்கள் - மரங்கள்; பஞ்சதருக்கள். வாரணம் - சங்கு; யானை. கண்களில் - கண்கள்போல். பொலன் நிலம் - பொன் உலகம். மரங்களை சங்குகளைக் கரையில் ஒதுக்கி, விரைந்து செலும் மீன்கள் கண்கள்போல் விளங்க, வானவர் தொழ வருகிற பொருநை, ஐந்தரு நிழலில் அமர்ந்து, வெள்ளை யானை மேல் ஏறி, தேவர்கள் தலைவனாகி, உடம்பெல்லாம் கண்ணுடைய இந்திரன் போல இருக்கிறது என்றபடி. (21)

## தாமிரபரணியும் தமிழும்

174. ஆசின் மிக்குமென் மதுரமாய்ச் சித்திரத் தளவி
யோசை பெற்றுவித் தாரமா யைந்திணை யுடன்று
காசு நாண்மலர் பிறப்புடன் காட்டிமெய்க் கலசப்
பூசு ரன்தமி ழொத்தது வித்தகப் பொருநை.

(பொ - ரை) :—ஆசில் மிக்கு - மிக விரைந்து; மென் மதுரமாய் - மென்மை இன் சுவையாய்; சித்திரத்து அளவி - பல நிறம் பல்கி; ஓசை பெற்று வித்தாரமாய் - ஓசை யுடையதாய்ப் பரவி; ஐந்திணை உடன்று - (குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனும்) ஐந்து திணைகளிலும் மோதி; காசு - இரத்தினங்களை யும்; நாள்மலர் - புதிய பூக்களையும்; பிறப்புடன் காட்டி - (தான்) உற்பத்தியான இடத்தையும் உணர்த்தி;

ஆசு, மதுரம், சித்திரம், விஸ்தாரம் எனும் நாற்பால் கவிகளின் நயம்செய்து, உத்தம ஓசை வேறுபாடு களுடையதாய், ஐந்திணைப் பொருள்களையும் அழகுற விளக்கி, காசு நாள் மலர் பிறப்பு எனும் வெண்பா வாய்பாடுகளைக் காட்டுவதான மெய்ம்மைக் கும்ப முனி எனும் அகத்தியரது (வித்தகத்) தமிழைப்போல் தாமிரபரணி வருகிறது, (எ - று).

(குறிப்பு) :— ஆசு - விரைவு ; ஒருவகைக் கவி. **மதுரம் - சுவை** ; ஒருவகைக் கவி. சித்திரம்-அழகிய நிறம்; ஒருவகைக் கவி. **வித்தாரம்** - விரிவு ; பெருங்காப்பியக் கவி. **பூசுரன்** - பூதேவரான அகத்தியர். **வித்தகம்** - மிகும் ஆற்றல். (22)

## பொருநையும் காவிரியும்

175 மன்னு வெங்கர டங்கவிழ் தேறன்மா ருது
சென்னி யம்புவி மேற்றலை கொண்டுதென் னரங்கம்
துன்னி வானவர் முனிவரர் தினந்தினந் தொழலால்
பொன்னி நன்னதி யன்னது துன்னுநீர்ப் பொருநை.

(பொ - ரை) :— துன்னு நீர் பொருநை - நிறை நீருடைய பொருநை நதி, மன்னும் வெம் கரடம் கவிழ் தேறல் மாருது - உக்கிரம் பொருந்திய யானை மதமும், கவிழ்ந்து வரும் தேனும் நீங்காமல், சென்னி அம் புவி மேல் தலைகொண்டு - (வெள்ளத்தில் இறந்த உடலின்) தலைகளை, நீரானது நிலமேல் முதன்மையாக மிதப்பித் துக் கொண்டு ;

தென்னர் அங்கம் துன்னி - பாண்டி மன்னர்கள் (நீராடும்போது அவர்கள்) உடலிற் படிந்து ; வானவர்... தொழலால் - விண்ணவர் தவசிகள் (யாவரும்) நாடோ றும் வணங்க வருதலால்;

மன்னு வெம் கரடம் கவிழ் - விருப்பமுடைய (விநாயகராகிய) காகத்தால் கவிழ்க்கப்பெற்று; தேறல் மாறுது - தெளிவு நீங்காமல்; சென்னி அம்புவிமேல் தலைக்கொண்டு - சோழனுடைய அழகிய நிலத்தின் மேலிடத்தைத் தனக்கு இடமாக் கொண்டு; தென் அரங்கம் துன்னி - அழகிய திருவரங்கத்தில் நெருங்கி; வானவர்......பொருநை - வானவர் முனிவர் வணங்கப் பெறுதலால், காவிரிபோல் உளது தாமிரபரணி, (எ-று).

(குறிப்பு) :—கரடம் - யானை மதம்; காகம். தேறல் - தேன்; தெளிவு. சென்னி - தலை; சோழன். அம் - நீர்; அழகு. தலை - முதன்மை; மேலிடம். தென்னரங்கம் - பாண்டியர் உடல்; திருவரங்கம். (23)

## முத்தேவியரும் நதியும்

176. வாய்த்த மங்கையர் மஞ்சளும் வாள்விழி மையும்
தேய்த்த பாலொடும் படிதலின் மும்மையுஞ் சிறந்து
ஏத்தும் வாணியும் யமுனையுங் கங்கையி னியல்பும்
பூத்து வெம்பவங் காய்த்தருள் கனிந்தது பொருநை.

(ப - ரை) :—வாய்த்த......படிதலின் - சிறப்பான சேயிழையர் (பூசியுள) மஞ்சளும், வாள் (போலும் கூரிய) கண்(களில் தீட்டிய)மையும், (முதலில்) தேய்த்துக் கொண்ட பாலுடனும் (முன்னேறி) முழுகுதலால், உள் மும்மையும் சிறந்து - தன்னுள் (செம்மை கருமை வெண்மை எனும்) முந்நிறங்கள் சிறப்பாக அமைந்து, ஏத்தும்......பூத்து - போற்றப் பெறும் சரசுவதி, யமுனை, கங்கைகளின் மாபெரும் தன்மை மலர்ந்து, வெம்பவம்......பொருநை - பொல்லாத பிறவியைக் கடியும் கருணை முதிர்ந்தது பொருநை நதி, (எ-று).

(குறிப்பு) :—மஞ்சள் பொன்னிறம். மை கருநிறம். பால் வெண்ணிறம். மாதர்கள் நீராட, பொருநை இம் முந்நிறமும் பொருந்தி வருகிறது. சரஸ்வதி - வெண்ணிறம் என்பது பொதுவகை; செந்நிறமும் உண்டு என்பதை, சிறக்க உரைப்பர் தியான யோகிகள். அதன்படி சரஸ்வதியின் செந்நிறமும், யமுனையின் கருநிறமும், கங்கையின் வெண்ணிறமும் தாமிரபரணியில் தோன்றலால், அது மேற் சொன்ன முந்நதிகளையும் நினைவூட்டுகிறது. (24)

## மதனனும் நதியும்

177. ஓங்க லின்களி யானைமேற் கொண்டுகா லுற்றுப்
பாங்கின் முல்லைய சோகமா நீலபங் கயப்பூத்
தாங்கி வான்படை வீட்டிளஞ் சோலைசார் தலினாற்
பூங்க ழைச்சிலை மன்மதன் போன்றது பொருநை.

(ப - ரை) :—ஓங்கலின்......கொண்டு - மலைநிலத்து மதக் களிப்புடைய யானைகளை உருட்டிக் கொண்டு; கால் உற்று - தென்றல் காற்றை வீசி; பாங்கின்...... தாங்கி - இருபுறத்தும் முல்லை, அசோகு, மா, நீலோற்பலம், தாமரை (முதலிய) மலர்களைத் தாங்கி, வான்...... சார்தலினால் - உயர்ந்த அடுக்குகளுடைய மாளிகை சூழ்ந்த இளம் சோலைகள் வளமடைய வருதலால் தாமிரபரணி,

ஓங்கலின் களி யானை மேல் கொண்டு - (எடுப்பாகி) மகிழும் இருளாகிய யானைமேல் அமர்ந்து; கால் உற்று - தென்றல் காற்றான தேரில் ஏறி; பாங்கில்......தாங்கி - முல்லைப்பூ, அசோகப்பூ, மாம்பூ, நீலப்பூ, கமல மலர் முதலிய ஐங்கணைகளை பக்கத்தில் சுமந்து; வான்படை...பொருநை-விரகப்போர் விளைவிக்

கும்) உயர்ந்த படை வீடான இளஞ் சோலைகளில் தங்கி யிருக்கும் கரும்புவில் காமனைப் போன்றுளது, (எ-று).

(குறிப்பு) :—ஓங்கல் - மலை ; இருள். கழைச்சிலை - கரும்புவில். இது காமனுக்கும் பொருநைக்கும் சிலேடை. (25)

## பொருநையும் பொதுமடந்தையும்

கரைக டந்துளங் கலங்கிவான் பொருளெலாங் கவர்ந்து
விரைக லந்தமென் போதுசெந் தாதுடன் விளங்கி
யுரனொ டும்பல வணைதொறும் படுத்துல கடுத்த
பொருண்ம டந்தைய ரொத்தது தத்துநீர்ப் பொருநை.

(பொ-ரை) :—தாவிவரும் நீருடைய தாமிரபரணி, எல்லை மீறி, உள்ளிடம் குழம்பி, அரிய பொருள்களை எல்லாம் அடித்துக் கொண்டு, மணம் விரவிய மென்மை மலர்களும், சிவந்த மகரந்தங்களுமாக விளங்கி, திண்மை யுடன் பல அணைக்கட்டுகள் தோறும் படிந்து ;

வரம்பு மீறி, மனம் குழம்பி, (அயலாரது) சிறந்த செல்வம் அனைத்தையும் அபகரித்து, மணம்கமழ் மலர் களையும் பொன் அணிகளையும் புனைந்து, உறுதி யுளத் துடன், பல மலரணைதோறும் படுக்கும் உலகில் உள்ள பொருட் பெண்டிரைப்போல் உளது பொருநை நதி, (எ-று).

(குறிப்பு) :—கரை – வரம்பு. உளம் – (நீரின்) உள்ளிடம்; மனம். வான் - சிறந்த. விரை - மணம். தாது – மகரந்தம்; பொன் அணி. அணை - செய்ரை ; படுக்கை. பொருள் மடந்தையர்—விலைமகளிர். தத்தும்-தாவும். மென்போது எனு மிடத்து 'மலரும்' எனவும், 'போன்றதா லான்றநீர்ப் பொருநை' எனவும் பாடம். (26)

## தலைவியும் நதியும்

**179.** மணிவ ரன்றிய கடனையு மணிமுத்த நதியுந்
திணிகொள் சந்தனச் சித்திர நதியுஞ்செம் பவளம்
பணில முந்திய பச்சைமா நதியும்பாங் கியராய்ப்
புணரி யாடுவான் போவது போன்றது பொருநை.

(ப – ரை) :—நவமணிகளை அடித்துக் கொண்டு வரும் (நலம்மிகு) கடனை நதியும், மணிமுத்தாறும், உறுதி மிக்க சந்தனச் சித்திரா நதியும், சிவந்த பவளங் களையும், (முத்துக்களை யினும்) சங்குகளையும் (பயன் விளையத்) தள்ளிவரும் பச்சை நதியும், (இருபுறமும் இணைந்து வரும்) தாதியராக; கடலில் (தகவுடன்) நீரா டும் பொருட்டுச் செல்லும் தலைவி போல்வது தாமிர பரணி, (எ-று).

(குறிப்பு) :—வரன்றிய - வாரிக் கொண்டு வருகின்ற. கடனை - கடனு நதி. பணிலம் - சங்கு. உந்தி - நெட்டித் தள்ளி. புணரி - கடல்; நீர் புணர்ந்து நிற்பது எனும் காரணக் குறி. (28)

**180.** பொருநை மாநதிப் பெருமிதஞ் சிலசில புகன்றே
முருக கேளெனக் கடவுள ருச்சிமேன் முகிழ்த்த
கரத லத்துடன் செயந்தியம் பதிவளன் கந்தன்
திருவு ளங்களி தரநனி மகிழ்ந்துரை செய்வார்.

(ப - ரை) :—சிறந்த தாமிரபரணியின் செல்வ நிலை களை, ஒரு சில அளவு உரைத்தேம் ; முருகா ! (இன்பத்) திருச்செவி ஏற்றருள் என்று, (கனிவுடன்) உச்சிமேல் குவித்த கரத்தராய், திருச்செந்திலம் பதியின் வளத் தைக் கந்தப் பரமன் திருவுளம் களிக்குமாறு, பெரிது உவந்து (மேலும்) பேசுவார் ஆயினர், (எ-று).

(குறிப்பு) :—மா - திரு. பெருமிதம் - பெருமை காட்டும் விளைவுகள். கடவுளர் - வானவர். முகிழ்த்த - கூப்பிய. (28)

## வேறு

181. வரியரவ மணியிசைக்கும் பாலினர்க்கும்
பாணருக்கு மழையே போல
வரியரவ மணிபிசைக்கும் பாலனமுந்
தினங்கொடுத்து மகிழ்கின் ருரு
மிரவலருக் கினைந்தருப்போல் தினந்தினமுங்
கொடுத்துமகிழ்ந் திருக்கின் ருரு
மிரவலருக் கினைந்துமடந் தையரிடந்தாள்
தொடர்ந்துபடிந் திறைஞ்சு வாரும்.

(ப - ரை) :—வரி அம் அரமணி இசைக்கும் பாலினர்க்கும் - கீற்றுக்களை யுடைய அழகிய உருத்திராக்க மணி அணியும் இயல்புடைய அடியவர்கட்கும் ;

வரி அரவம் அணி இசைக்கும் பாணருக்கும் - வரிப் பாட்டுக்களின் இசைகளை வனப்பொடு பாடுகின்ற பாணர் கட்கும் ;

வரி அரவ மணி பால் பிசைக்கும் அனமும் மழையே போல தினம் கொடுத்து மகிழ்கின்ருரும் - நிரையாகிய நாகரத்தினங்களையும், பாலிட்டுப் பிசைந்த சோற்றையும் மேகம்போல் (கைம்மாறு கருதாது) நாள்தோறும் உதவி உவகை யடைகின்றவர்களும்;

இரவலருக்கு......இருக்கின்ருரும் - யாசகர்கட்கு இனிய ஐந்தருக்களைப்போல் ஒவ்வொரு நாளும் ஈந்து இன்புற்று இருப்பவர்களும் ;

இரவு அலருக்கு இனைந்து......இறைஞ்சுவாரும் - இரவில் (காமன் கணைகளாகிய) மலர்களால் வருந்தி, காரிகையர் உள்ள இடங்களைத் தொடர்ந்து சென்று, (அவர்கள்) கால்களில் வணங்கிக் கலப்பவர்களும், (எ-று).

(குறிப்பு) :—'வரி அம் அரமணி' எனவும், 'வரி அரவம் அணி' எனவும் முதலடியையும், 'மடந்தையரிடம் தொடர்ந்து தாள் படிந்து' என இறுதியடியையும் இயைத்துப் பொருள் கொளப் பெற்றது. வரி -இரேகை. வரிப்பாட்டு. **அர மணி** - அரன் மணி; உருத்திராட்சம். இரவலர்-யாசகர். **இன்** - இனிய. **தரு** - தேவலோகப் பஞ்சதரு. இரவு அலர் - இரவுக் காலத்து மலர்க்கணை. இனைதல் - வருந்தல். (29)

182. கதிர்வரவு தனைப்பார்த்துக் கொண்டுழவர்
பலர்சூடு களஞ்செய் வாருங்
கதிர்வரவு தனைப்பார்த்து வாளுழவர்
பலராடு களஞ்செய் வாரும்
பதிகமுடன் றிருமுறைபார்த் தங்கங்கே
படித்தருத்தம் பகர்கின் றாரும்
பதிகமுடன் கனைக்குவளை கனையுமெனப்
பள்ளரிடம் பகர்கின் றாரும்.

(ப-ரை) :—கதிர் வரவு......செய்வாரும் - (நெற்) கதிர்கள் (விளைந்து) வந்தமையைக் கண்டு கொண்டு, (அறுத்த அவைகளால்) களத்தில் நெற்போர் செய்யும் பல உழவர்களும் ;

கதிர் வரவு......செய்வாரும் - பரிதி உதயம் செய்தலைப் பார்த்து, போர் பயிலும் (வளமார்) களங்களை அமைப்பவரான வாள் வீரர்களும் ;

பதிகமுடன்......பகர்கின்றரும் - பதிகமுடன் திருமுறைகளை (சிந்தித்துப்) பார்த்து, படித்து, அந்தந்த இடத்திற்குப் பொருத்தமான பொருள் பகர்பவர்களும்;

பதிகமுடன்......பகர்கின்றரும் - பாசிகளுடன், களைகளாகிய குவளைகளைக் களையுங்கள் என்று, (உரிய) பள்ளர்களிடம் உரைப்பவர்களும், (எ-று).

(குறிப்பு) :—கதிர் இரண்டில், முதலது நெற்கதிர்; அடுத்தது சூரியன் எனும் பொருளது. சூடு - நெற்கதிர். களம் இரண்டில் முதலது நெற்களம்; அடுத்தது சிலம்பக் கூடம். பதிகம் இரண்டுள் முதலது, தேவாரப் பதிகம்; அடுத்தது பாசி எனும் பொருளது. 'களைவாரும் பதியதனின் வதிவாரன்றே' எனவும் பாடம். (30)

## வேறு

183. தளவம் புயத்து மடந்தையெனத்
தழைப்பார் தலைவ ருடனூடித்
தளவம் புயத்தி னிடைநீபத்
தண்டே ஞெழுகும் பெருக்காற்றிற்
களபந் திமிரம் புயப்பாகர்
கருத்துக் கடங்காக் கறையடிப்போர்க்
களபந் திமிரக் குருளையெனக்
களிக்கு மளிக்கா வகமெல்லாம்.

(ப - ரை) :—தள அம்புயத்து...ஊடித் தள-இதழ்களையுடைய தாமரையில் இருக்கும் திருமகள் எனவுள மங்கலக் கோல மடந்தையர், (தம்தம்) கணவர்களுடன் பிணங்கி, (அவர்களை அப்பால் ஆம்படித்) தள்ள;

அம் புயத்தின்.....ஒழுகும் பெருக்காற்றில் - (ஆடவர் தம்) அழகிய தோள்களில் (இருந்து நெரிந்த)

கடப்ப மலர்களில் உள்ள குளிர்ந்த தேன் (பரவிய) ஆறுபோல் பெருகிப்பாயும் ;

களபம்திமிர்......களபம் - கலவைச் சாந்து பூசிய அழகிய தோள்களை யுடைய பாகர்களின் கருத்திற்கு அடங்காத யானைக் கன்றுகள் ;

அளிக்கா அகம் எல்லாம் - வண்டுகள் இருக்கும் சோலைகளின் இடம் முழுதும் ;

திமிரக் குருளை எனக் களிக்கும் - இருளீன்ற குட்டிகள்போல் களிப்புற்று இருக்கும், (எ-று).

**(குறிப்பு) :—தளம் - இதழ். அம்புயம் – தாமரை. தள - தள்ளிவிட. அம்புயம் – அழகிய தோள். நீபம் - கடம்பு. களபம் – யானைக் கன்று. திமிர் - பூசிய. கறையடி - உரல் போலும் காலுடைய யானை. போர்க் களபம் – போரிடும் கன்று. திமிரக் குருளை - இருள் பிரசவித்த குட்டி. அளி – வண்டு. கா – சோலை. (31)**

184. கரும்புருவச் சிலைமடவார் கந்துகநின்
றுடவுயர் கவின்செய் மாடங்
கரும்புருவச் செலுமதன்மேற் கற்பகப்பூந்
தேன்சாய்க்குங் காமர் வீதி
கரும்புருவக் குரிசிலன்னூர் வளர்க்கவளர்
கங்குல்நிறங் கடுக்குங் காழ்த்த
கரும்புருவை செம்மையும்போ ராட்டோதை
யெவ்வயினுங் கனைப்ப றுதால்.

(ப - ரை) :—கரும்புருவச்சிலை......கரும்பு உருவச் செலும் - கருமைப் புருவங்களாகிய வில்களை யுடைய பருவப் பெண்கள், நின்று பந்து விளையாடுகின்ற மேலான அழகுடைய (ஒவ்வொரு) மேல்மாடங்களும்,

(உம்பரில் உள்ள) புனர்பூச நட்சத்திரத்தை ஊடுருவிச் செல்லும்;

அதன் மேல்......சாய்க்கும் - அம்மாடத்தின் மேல் (விண்ணில் உள்ள) கற்பகத் தருக்களில் உள்ள மலர்கள் தேனைச் சிந்தும்;

கரும்பு உருவக் குரிசில் அன்னார் வளர்க்க வளர் - உருவம் கொண்ட கரும்பு வில் காமன்போலும் கட்டழகுடைய காளைகள் வளர்க்க வளர்ந்த;

கங்குல்......ஓதை - இருள் போலும் நிறமுடைய உரமேறிய வெள்ளாடுகளும், செம்மறி யாடுகளும் போரிடலால் விளையும் பெருமுழக்கம்;

காமர் வீதி எவ்வயினும் கனைப்பு அருது - அழகிய வீதிகளின் எவ்விடத்தும் எப்பொழுதும் பெருமுழக்கம் இருக்கும், (எ-று).

(குறிப்பு) :—புருவச்சிலை - உருவகம். கந்துகம் - பந்து; செண்டு. கரும்பு உருவம் - புனர்பூச மீன். காமர் - அழகு. அருவமதன் உருவு கொண்டது போன்ற என்பார், 'கரும்பு உருவக்குரிசில்' என்றார். கடுக்கும் - போல எனும் உவம உருபு. காழ்த்தல் - வயிரம் போன்ற உடல் வளம். புருவை - ஆடு. செம்மை - செம்மறியாடு. ஒதை - ஓசை. கனைப்பு - முழக்கம். (32)

## வேறு

185. தானத் தோடு தழுவுமவ் வாரணந்
தானத் தோடு தழுவுமவ் வாரணம்
வானத் தோடு மலையும் வலம்புரி
வானத் தோடு மலையும் வலம்புரி.

(ப - ரை) :—தானத்தோடு தழுவும் அவ் ஆரணம்- (செயந்திப் பதியில் செய்யும்) தானங்களுடன் சேர் கின்ற அநாதி நித்தியமான வேத மந்திர நாதமும் ;

வலம்புரி வானத்து ஓடும் அலையும் - வலம்புரிச் சங் கின் ஓசையும் விண் முழுதும் அளாவிப் பரவும் ;

வானத்தோடு மலையும் வலம்புரி - மேகங்களையும் மலைகளையும் வென்றனபோல் உயர்ந்து ;

அவ் வாரணம் தானத்தோடு தழுவும் - அங்கு இருக்கும் யானைகள், மதநீர் பெருக்கொடு நடமாடும், (எ-று).

(குறிப்பு) :—இது கொண்டு கூட்டுப் பொருள் கோள். தானம் செய்யும் காலத்தில் வேத மந்திரம் கூறல் மரபு. எங்குமுள வலம்புரிச் சங்கின் ஓசையும், மந்திர ஓசையும், நாதத்திற்கு இடமான விண்ணளாவி விளங்கும் என முதலடியையும், மூன்றும் அடியையும் இணைத்துப் பொருளறிக. செயந்திப் பதியில் உள்ள யானைகள், மலைபோல் உயர்ந்து, மழைபோல் மதநீர் பெருக்கித் திரிகின்றன என்று, இரண்டாமடியும் நான்காம் அடியும் இணைந்து பொருள் தரல் உணர்க. தானம் - 11 வகை ; மதநீர். ஆரணம் — வேதம். வாரணம் - யானை. (33)

186. செல்லு மீனுந் திகழ்தரு மாசினி
செல்லு மீனுந் திகழ்தரு மாசினி
யெல்லை நிக்கு மிருஞ்சுனை யாரமே
யெல்லை நீக்கு மிருஞ்சினை யாரமே.

(ப - ரை) :—திகழ் தரும் ஆசினி - (இனிது விளங் கும்) ஈரப் பலாக்கள் ;

செல்லும் மீனும் திகழ்தரும் ஆசினி செல்லும் ஈனும் - மேகங்களும் நட்சத்திரங்களும், ஒளிபரப்புகின்ற விண்ணளாவி உயரும்; (காய்கள் பலவாகவும்) காய்க்கும்;

இரும் சினை ஆர் அம் எல்லை நீக்கும் - பெரிய சுனைகளில் உள்ள நீர்கள், வெய்யிலி(ன் வெப்பத்தி)னை விலக்கும்;

இரும் சினை ஆரம் எல்லை நீக்கும் - மாபெரும் கிளைகளையுடைய சந்தன மரங்கள், (விண்ணளாவி) பரிதியையும் (செல்ல ஒட்டாது) தடைப்படுத்தும், (எ-று).

**(குறிப்பு):—ஆசினி - பலாமரங்கள்; ஆகாயம். செல் - முகில்கள். மீன் - நட்சத்திரங்கள். ஈனும் - காய்க்கும். சினை - கிளை. சுனை - பொய்கை. ஆர் அம் - நிறை நீர். ஆரம் - சந்தன மரங்கள். எல் ஐ-சூரியனை; செல்லும்வழியை. இது, உயர்வு நவிற்சியணி.** (34)

187. காலுந் தேறல் கழனியின் கண்ணெலாங்
காலுந் தேறல் கரும்புறு கண்ணெலாஞ்
சாலி யூடு செலுந்திரட் சங்கமே
சாலி யூடு செலுந்தருச் சங்கமே.

(ப - ரை):—கழனியின் கண் நெல் கால் உந்து ஏறல் ஆம் - வயல்களில் உள்ள நெற்கதிர்கள், வாயு மண்டலத்தினையும் ஊடுருவி மேல் ஏறுதலை யுடையன;

கரும்பு உறு கண் எலாம் தேறல் காலும் - கரும்புகள் (தாம்) இருக்கும் இடம் முழுதும், (வளமான) சாரம் வடியும்;

திரள் சங்கம் சாலி ஊடு செலும் - சங்குகள் கூட்டமாக (வளமான) நெற்பயிர்களின் நடுவே பவனி வரும்;

தருச் சங்கம் சாலி யூடு செலும் - (கற்பகத்) தருவைப்போன்ற மாபெரும் மரங்கள், அருந்ததி மண்டலத்தை ஊடுருவி உயரும், (எ-று).

(குறிப்பு) :—கால் - காற்று. உந்துதல் - செலுத்துதல். தேறல் - தேன்; சாரம். கண் - இடம். காலும் - சிந்தும். சாலி - நெற்பயிர்; அருந்ததி. இதுவும் உயர்வு நவிற்சியணி. (35)

188. ஓடை காட்டு மொளிர்வனப் போதகம்
ஓடை காட்டு மொளிர்வனப் போதகம்
கோடு காட்டுங் குளிர்ந்ததண் ணாரமே
கோடு காட்டுங் குளிர்ந்ததண் ணாரமே.

(ப-ரை) :—ஓடை அகம் ஒளிர் வனப் போது காட்டும் - ஓடைகளின் இடங்கள், ஒளிர்கின்ற கவின்மிகு மலர்களைக் காண்பிக்கும்;

ஒளிர் வன போதகம் ஓடை காட்டும் - (கருமை) ஒளிர்கின்ற காட்டு யானைகள், நெற்றிப் பட்டங்களைக் காண்பிக்கும்;

கோடு குளிர்ந்த தண் நாரம் காட்டும் - (நீர்க்) கரைகள், மிகக் குளிர்ந்த நீரைக் காண்பிக்கும்;

குளிர்ந்த தண் ஆரம் கோடு காட்டும் - குளிர்ந்த தட்பம் உடைய சந்தன மரங்கள், (கம்பீர தம்) கிளைகளைக் காண்பிக்கும், (எ-று).

(குறிப்பு) :—போது - மலர்; பொழுது கண்டு மலர்வது எனும் பொருட்டு. போதகம் - பத்து வயது யானைக் கன்றின் பெயர். கோடு - (பொய்கைக்) கரை; கிளைகள். தண் நாரம் - குளிர்ந்த நீர்; தண் ஆரம் எனப் பிரித்து, பசுமைச் சந்தன மரங்கள் எனவும் அறிக. (36)

189. வாலி பத்தின் மதர்ப்புமிக் காகிய
வாலி பத்தினை யொப்பவர் வைத்துள
மூல மட்டுறு முட்கனி யின்பலா
மூல மட்டுறு மொய்ப்பன வண்டெலாம்.

(ப-ரை):—வாலிபத்தின் மதர்ப்பு மிக்கு ஆகிய வால் இபத்தினை ஒப்பவர் - இளம் பருவக் களிப்பு மிகுந்த தூய யானைக் கன்றுகளை ஒத்தவர்(களான) ஆடவர்கள்;

வைத்து உள மூலம் மட்டு உறு பலா முள்கனியின்- பயிராக்கிய மூல நட்சத்திரம்வரை உயர்ந்த பலாக் களின் முள்களையுடைய பழங்களில் ;

வண்டு எலாம் மூலம் மட்டு உறு மொய்ப்பன - வண்டுகள் யாவும், (முடிமுதல்) அடிவரையும் மொய்த் துக் கொண்டு இருப்பன, (எ-று).

(குறிப்பு):—மதர்ப்பு - களிப்பு. **இபத்தினை - யானையை.** மூலம் - மூல நட்சத்திரம் ; **வேர்.** (37)

190. வான ரம்பை வளவயற் கோடெலாம்
வான ரம்பயி லும்மரக் கோடெலாம்
பான லத்திடை பாயுஞ்செந் தேன்களே
பான லத்திடை பாயுஞ்செந் தேன்களே.

(ப-ரை):—வள வயல் கோடு எலாம் வான் அரம்பை - வளமான வயலின் வரம்புகள் தோறும் பெரிய வாழை மரங்கள் ;

மரக் கோடு எலாம் வானரம் பயிலும் - மரக்கிளைகள் தோறும் குரங்குகள் குடி யிருக்கும் ;

செம் தேன்கள் பானலத்து இடைபாயும் - சிவந்த வண்டுகள், கருங்குவளைகளின் நடுவில் (தேன் பருக) வீழும் ;

பா நலத்து இடை செந்தேன்கள் பாயும் - நலமான பாக்களுள், (இன்சுவைப் பொருள்களான) இன்பத் தேன் பெருகும், (எ-று).

(குறிப்பு):—வான் அரம்பை, வானரம் பயிலும்; பானலத்து இடை, பாநலத்து இடை எனப் பிரித்துப் பொருளறிக. பானலத்திடை என்பதில், அத்துச் சாரியை. கோடு - கரை; கிளை. (38)

## வேறு

191. வாழ்த்தலை மதகு தோறு
மடுத்தலை கொழித்துத் தெண்ணீர்
வீழ்த்தலை நோக்கி நாரை
மிசைத்தலை விரும்பி வாளைக்
காழ்த்தலை முளைவாய் குத்தக்
கதிர்த்தலை சாய்த்துத் தண்சாய்க்
கீழ்த்தலைப் பதுங்கி மீண்டு
கிளர்ந்தலை புனலிற் பாயும்.

(ப - ரை):-தெளிந்த நீருடன் (திகழும்) பொருநை, தலைமை கொண்ட மதகுகள்தோறும்(உள்ள) மடு இடங்களில் ஆரவாரித்து (மீன்களை) வாரி வீசுதலைக் கண்ட நாரை, (வீழும் அவைகளை)உண்ண விரும்பி, வாளை மீன்களின் வயிரமான தலைகளைக் கூரிய (தன்) அலகால் குத்த, (அம்மீன்கள்) ஒளியுள தலைகளைச் சாய்த்து, குளிர்ந்த (பசுமைக்) கோரைப் புற்களின் கீழ் இடங்களில் பதுங்கித் திரும்பி யெழுந்து, பல அலைகளையுடைய நீருள் பாய்ந்து தப்பும், (எ-று).

(குறிப்பு) :—தலை வாழ் மதகு என இயைக்க. தலை - இடம். கொழித்து - (எடுப்பான) ஓசையை எழுப்பி. மிசைதல் - உண்ணல். காழ் - வயிரம். முளைவாய் - வாய் அலகு; இலக்கணப் போலி. கதிர் - ஒளி. சாய் – கோரைகள். (39)

192. காரெனத் திரண்டு பால்வாய்க்
கன்றுள்ளிக் கனைத்து லாவி
நீரிடைப் படிந்த மேதி
நெரிமருப் பூர்ந்த சங்கம்
ஆரமுத் துகுப்பத் திங்க
ளமுதவான் ருரை யென்னக்
கூரிதழ்ப் பசுந்தாள் வாசக்
குவளைவாய் மலரு மாதோ.

(ப - ரை):—கருமுகில்கள் போல் உருவம் காட்டி, கடைவாயிற் பாலொழுகும் கன்றுகளை நினைந்து கனத்த குரல் எழுப்பித் திரிந்து, நீருள் மூழ்கிய எருமையின் முறுகலான கொம்புகளின்மேல் ஊர்கின்ற சங்குகள் நிறைய முத்துகளைச் சிந்த, குவளைகளின் பசுமையான தண்டுடன் நறுமணம் கமழும் கூரிய இதழ்களை யுடைய அரும்புகள், (அம்முத்தின் ஒளியை) மதியினுடைய சிறந்த அமுத கிரணமென மதித்து மலரும், (எ-று).

(குறிப்பு) :—கார் – மேகம். உள்ளி - எண்ணி. மேதி - எருமை. நெரிமருப்பு - முறுக்கு ஏறிய கொம்புகள். ஆர — நிறைய. உகுப்ப-சிந்த. வான்தாரை - சிறந்த கிரண ஒழுக்கு. மாது, ஓ இரண்டும் அசைகள். (40)

193. வண்டலை யிழைக்கும் வாட்கண்
மகளிர்பூங் காம ரோதி
கொண்டலென் றயிர்த்துத் தோகைக்
குலஞ்சிறை விரிப்ப வாசத்
தண்டலை கிடந்த மேகந்
தண்புனல் சொரியுந் தோறும்
விண்டலை யளப்பச் சாலி
வேலிமீக் கிளரு மாதோ

(ப - ரை) :—விளையாடல் புரியும் வாள்போலும் கூரிய விழிகளை யுடைய வனிதையரது மலர் அணிந்த அழகிய கூந்தலைக் கருமேகங்கள் என்று ஐயுற்று, மயில்கள் (தம்) சிறகுகளை விரிக்க, நறுமணமுள்ள சோலைகளில் தங்கி யிருந்த முகில்கள், குளிர்ந்த(புனித) நீரைப் பொழியும் ஒவ்வொரு காலத்தும், விண்ணிடத்தை அளாவி நெற்பயிர்கள் நிலத்தி னின்றும் மேலோங்கி வளரும், (எ-று).

(குறிப்பு) :—வண்டல் - மகளிர் விளையாட்டு. காமர்-அழகு. ஓதி - கூந்தல். கொண்டல் - மேகம். அயிர்த்தல் - சந்தேகித்தல். தோகைக் குலம் - மயில் இனங்கள். தண்டலை - சோலை. விண்தலை - ஆகாயத்தில். சாலி - நெற்பயிர். வேலி - நிலம். மீக்கிளரல் - மேல் உயர்தல். (41)

194. வீதியின் மறையோ ரோதும்
வேள்விக்கா ரிசைநூல் கேட்டுப்
போதுகொய் கிளியும் பாடற்
பூவையு மிழற்றுந் தீஞ்சொற்
கேதமின் முனிவர் தேவர்
கேட்டவி நமக்குண் டாமென்
றேதிலாப் பொதும்ப ரெல்லா
மிமைப்பிலா திருப்பர் மாதோ.

(ப - ரை) :—வீதிகளில் அந்தணர்கள் வேள்வி செய் காலங்களில் ஓதும் அரிய ஏழு சுரமான (சிறந்த) மறை ஓசையைச் சிரவணித்து, (அவைகளை மனனம் செய்து) மலர்களைக் கொய்கின்ற கிளிகளும், பாடலில் உயர்ந்த மைனப் பறவைகளும் (திருப்பிப்)பாடும் (அவ்வேதச்) சொற்களை, குற்றம் இல்லா முனிவர்களும்

விண்ணோரும் (குதூகலித்துக்) கேட்டு, நமக்கு அவிர்ப் பாகம் உள்ளதாம் என்று, குற்றம் அற்ற சோலைகள் உள்ள எந்த இடங்களிலும், இருவிழிகளும் இமைத்தல் இன்றி இருக்கின்றனர், (எ-று).

(குறிப்பு) :—வேள்விக்கு ஓதும் ஆர் இசை நூல் என இயைக்க. நூல் - வேத நூல். போது - மலர். பூவை - நாகணவாய்ப் பறவை. மிழற்றும் - மழலை ஒலியெழப் பாடும். கேதம் - துன்பமுமாம். ஏது இல் - எக்குற்றமும் இல்லாத. பொதும்பர் - பொழில்கள். இடையருது அந்தணர்கள் வேள்விகளை இயற்றுகின்றனர். ஓயாது அக்காலத்தில் வேதம் ஓதப் பெறும். உயர்திணையரான அவர்கள் ஓதுவதை, அஃறிணைக் கிளிகள் உவந்து கேட்டு உருப் போடுகின்றன. ஓயாது அவைகளும் மந்திரங்களை ஓதுகின்றன. அவ்வொலி யுணர் தேவர்கள், வேள்வி செந்திலில் விளைகிறது ; அவிசு அதிகம் அகப்படும் என்று, அவர்கள் அழைக்கும் நேரம் அறிய, இமைத்தகண் மூடாது இருக்கின்றனர் என்றபடி. (42)

195. அம்புரு வங்கோ டாம லயில்விழி யிமையா டாமல்
தம்புரு மூவே ழான தானத்திற் கான மூட்டிக்
கம்புருக் களம்விம் மாமற் கனியனூர் பாடுந் தோறுந்
தும்புரு முதலோர் கேட்டுச் சுடர்முடி துளக்கு வாரால்.

(பொ - ரை):-கனிந்த (கனிபோலும் உள்ள) பருவக் காரிகையர், தம்புரு எனும் இசைக் கருவியில் இருபத் தொரு தானங்களில் (அரிய) இசையை எழுப்பி, அழ கிய புருவங்கள் வளையாமலும், வேல் போலும் விழி களின் இமைகள் அசையாமலும், சங்கு போன்ற அழகிய கழுத்து விம்மாமலும், பாடுந்தோறும் தும்புரு முதலிய மேலோர் சிரவணித்து (த்தம்) ஒளிமயமான சிரம் பலதரம் அசைப்பர், (எ-று).

(குறிப்பு) :—கோடுதல் - வளைதல். கானம் - இசை. கம்புரு - சங்குருவம். களம்- கழுத்து. கனிஅனார் - பெண்கள். துளக்கல் - அசைத்தல். (43)

196. வாளொளி மதியுந் தங்கள் வதனமும் பதண மாதர்
கேளுட னிருந்து செங்கைக் கிசலயக் கவின்செய் யாடி
நீளொளி முழுது நோக்கி நிழன்மதி களங்கா மென்று
சாளரங் கதவு சாத்தித் திங்களைத் தடைசெய் வாரால்.

(பொ - ரை) :—உயர்ந்த மேடைகளில் மகளிர் உறவினருட னிருந்து, பசுந்தளிர்போலும் கைகளில் பற்றிய ஒளியுள கண்ணாடிகளினுள், மிக்க (தம்முக) ஒளி முழுதையும் ஒத்திட்டுப் பார்த்து, மதி ஒளி களங்கம் உடையது என்று (அவமதித்து) உரைத்து, (முன்தோன்றும்) பலகணிக் கதவுகளை மூடி, (அத்) திங்கள் ஒளி (உள் புகாதபடித்) தடை செய்வர், (எ—று).

(குறிப்பு) :—பதணம் - மதிலுள் அமைந்த மேடை. கேள் - (நலம் தீங்கு வினவும் காரணத்தால்) உறவினர்க்கு அமைந்த பெயர். கிசலயம் - தளிர் ; உவம உருபு தொக்கது. ஆடி - கண்ணாடி. நிழல் - சந்திரிகை. களங்கம் - முயல் களங்கம். சாளரம் - சன்னல். (44)

197. ஒருதலைக் காமத் துற்றோ
ரோவியத் தலைமை பூண்டோர்
வருதலைக் குறித்து நோக்கி
மானுருக் கிழியிற் கோட்டித்
தருதலைப் புரிதி ராயிற்
றனதனைப் பாக்கு வோமென்
றிருதலைப் பேரி னாரு
மிரங்கிநேர்ந் தழுங்கு வாரே.

(பொ - ரை) :—பிரிந்த துணையை நினைந்து வருந்தும் தலைவன் தலைவியர் ஆன இரு திறத்தரும், ஓவியம் வரைதலில் முதன்மை பெற்றவர்கள் வருவதை (ப்பரிவொடு) குறிப்பாகப் பார்த்து, (யாம் குறிப்பிடும்) அழகிய உருவத்தைப் படத்தில் எழுதித் தருவீராயின், (உம்மைக்) குபேரன் (போன்ற) செல்வர் ஆக்குவம் என்று நேர்வந்து மனமுருகி அழுது வேண்டுவர், (எ-று).

(குறிப்பு) :—ஒரு தலைக்காமம் - ஒருவர் தம்மைக் கருதாதிருப்ப, அவர்தமைத் தாம்மட்டும் காதலிப்பவர் எனலும் ஒருவகை. மாண் உரு - சிறந்த ரூபம். கிழி - படம்; திரைச் சீலை எனினுமாம். கோட்டி - (எழுது கோலால்) எழுதி. தனதன் - தனம் மிக்க அளகேசன் எனும் பொருட்டு. (45)

198. சூதினிற் பொருது வென்றோர்
தோற்றவர் நிதியம் வாங்கி
வீதியிற் குவித்த றேர்ந்து
வெள்கிய தன்மை யாலோ
தாதகிச் சடையான் றோழன்
தன்மையு மாக மேனிக்
கேதமுற் றியக்கர் வேடத்
திருந்தன னளகைக் கோமான்.

(பொ - ரை) :—(வீணான) சூதாட்டத்தில் மோதி வெற்றி கொண்டவர்கள், தோற்றவர்களுடைய பொருளைக் கவர்ந்து, (அவைகளைத்) தெருக்களில் குவித்திருத்தலைக் குபேரன் அறிந்து நாணிய இயல்பாலோ என்னவோ, ஆத்தி மாலையை அணிந்த சடைமுடியுடைய அமலனுக்கு நண்பனும் தன்மை உளதாகவும், (இயல்பான) மேனியில் குற்றம் இருத்தலின், இயக்கர் கோலத்தில் (மறைந்து) இருந்தான், (எ-று).

(குறிப்பு):—தாதகி - ஆத்திமாலை. ஏதம் - களங்கம். சூதாடி வென்ற பணத்தை வீட்டுள் வைப்பது பாவம் என்று, வீதியில் சேமிப்பர். தவறான வழியில் வந்த பணம் என்று எவரும் அதை எடுப்பது இல்லை. குவிந்த அந்நிதிகளைக் கண்ட குபேரன், தம்மினும் மிக்க இவர் தன்மை கண்டு வெட்கப்படுகிறான். சிவனார் தோழனா யிருந்தும், பாவ அப் பணத்தைப் பார்த்த பாவமோ என்னவோ கண் குருடாயினான் என்பது கருத்து. "சந்திரனுக் குடலூனம், தனதனுக்கோர் கண்ணூனம், தருவினீழல் இந்திரற்கோ பகக்குறியாம் இயமனுக்கோ புழுக்காலாம், இரவியீன்ற மைந்தனுக்கோ கால்முடமாம், வனசனுக்கோர் தலைக்குறையாய் வாழ்வாரானால், பந்தமுள மானுடரை விதிவிடுமோ? ஆலவாய்ப் பதியுளானே" என்ற தனிப் பாடல் இங்கு அறியத் தகும். (46)

199. ஆறெனு மங்கத் தாற்றி
னமைந்துமா மகத்தின் செய்கை
தேறுநான் மறையோ ரெல்லாஞ்
சிறந்துமுப் போது மாற்றிக்
கூறிரு வினைக ணீக்கிக்
குமரநா யகன்ற ளொன்றே
பேறென விதயத் தெண்ணிப்
பெருமிதத் தடைவ ரம்மா.

(பொ-ரை):—தெளிந்த நான்மறை அந்தணர் யாவரும், ஆறு எனப்பெறும் அங்கங்களுடைய (வைதிக) நெறியில் அமைந்தவராய், செம்மையான வேள்விச் செயல்களாற் சிறப்பெய்தி, முக்கால நியமங்களையும் முடித்து, (நெடிது) கூறப் பெறும் இருவினைகளையும் நீக்கி, குமரவேளின் (உத்தமத்) திருவடிகளில் ஒன்று தலே பெரும்பேறு என்று திருவுளங் கொண்டு பெருமிதம் அடைவர், (எ-று).

(குறிப்பு) :—தேறுதல் – தெளிதல்; அல்லது ஒரு முடிவான தேற்றம் பெற்றிருத்தல். ஆறு அங்கம் - ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல். மற்று, ஷடங்கம் எனும் வேத அங்கங்களிற் சிறந்தவர் எனலுமாம். முப்போது—காலை பகல் மாலை. (47)

200. மைந்தர்தஞ் சிறுபொற் றேரும்
வாம்பரி மகநூன் முற்றி
யந்தணர் வருந்திண் டேரு
மரசர்மாக் கடவு தேரு
மிந்திரன் முதலாந் தேவ
ரேறுபொற் கொடிஞ்சித் தேருஞ்
சந்தத மளவ ளாவித்
தலைமயக் குற்ற வீதி.

(பொ - ரை) :—சிறு பிள்ளைகள் செலுத்தும் அழகிய சிறுதேரும், (விளக்கமான) நூல் விதிப்படி பரிவேள்வியை நிறைவேற்றி (த்தெளிவு பெற்ற) அந்தணர்கள் ஏறிவரும் திண்ணிய தேர்களும், மன்னர்கள் (தேர்ந்த) குதிரைகள் பூட்டிச் செலுத்தும் தேர்களும், இந்திரன் முதலிய இமையவர் ஏறிவரும் தலையலங்காரமான தேர்களும், வீதிகளில் என்றும் விரவி இடமயக்கம் செய்யும், (எ-று).

(குறிப்பு) :—அந்தணர் வாம்பரி மகநூல் முற்றிவரும் திண்தேரும் எனக் கூட்டுக. வாம் - தாவிவரும். பரிமகம் - அஸ்வமேதயாகம். முற்றுதல் - நிறைவு செய்தல். மா - குதிரை. கடவுதல் - செலுத்துதல். கொடிஞ்சி – (தேரின்) மேல் மொட்டு. சிறுர் உருட்டி விளையாடுவது சிறுதேர். வேதியர் ஏறுவது வைதிகத் தேர். மன்னர்கள் கடவுவது மாபெரும் தேர். இந்திராதியர் ஏறும் பொன்தேர் முதலியன

வீதிகளில் இயங்கலின், எது எவருடைய தேர் என்று அறிய இயலாமல் இடம் மயங்கின என்பார், 'தலை மயக்குற்ற' என்றார். (48)

## வேறு

201. ஏர்க்காலின் றலைப்பிடிப்பா ரிணைக்காலி
லெழுந்தகய லினமார்த் தாண்டன்
தேர்க்காலின் வெடிதாவிச் செருக்காற்றிங்
களினமுதச் சேறா டாடிப்
போர்க்காலிற் போய்வானப் புதுக்காலிற்
குடைந்தாடிப் பொழியு மேக
நீர்க்காலின் மீண்டிறங்கி நெடுங்காலின்
றலையுலவி நிகழு மாதோ.

(பொ - ரை) :—மேழிகளைப் பிடிக்கும் உழவரது இரு கால்களின் (மிதிபட்டுக் குதித்து) மேலெழுந்த கயல்மீன் கூட்டம், பரிதியின் தேர்ச்சக்கரத்தின் அதிர்ச்சி கண்டு அஞ்சி, அங்கிருந்து துள்ளி, அமுதமதிக் குழம்பில் அழுந்தி, களிப்பொடு மோதும் காற்றைப் போல் விரைந்து சென்று, விண்ணில் உள்ள கங்கையிற் பாய்ந்து விளையாடி, மேகங்கள் பொழியும் மழை நீர் வழியாக மீண்டும் கீழ் வந்து, பெரிய ஆற்றில் உலாவி விளங்கும், (எ-று).

(குறிப்பு) :—ஏர்க்கால் – கலப்பை. தலை – உச்சி. கயல் இனம் - ஒருவகை மீன் கூட்டம். மார்த்தாண்டன் - சூரியன். தேர்க்கால் - தேர்ச்சக்கரம். வெடி - அச்சம். செருக்கு - எக்களிப்பு. சேறு - குழம்பு. ஆடி - முழுகி. போர்க் காலில் - பொருதலை யுடைய காற்றைப் போல. வானப் புதுக்கால் - ஆகாய கங்கை. குடைந்து-முழுகி. ஆடி– விளையாடி. மேக நீர்க்கால் – மழைத்தாரை. நெடும்கால் - ஆறு. தலை - இடம். இது மிகையுயர்வு நவிற்சி அணி. (49)

## வேறு

202. மதுநவ பானஞ் செய்யு
மாதர்கண் மாட மேற்போய்
மிதுன நல் யாழென் றெண்ணி
விண்ணிடைக் கரங்க ணீட்டக்
கதுமெனச் சேடி மார்கள்
கல்லென நகைத்துத் தங்கைப்
பதுமயாழ் கொடுத்து முன்னர்ப்
பண்பிணை யமைத்தல் செய்வார்.

(பொ - ரை):—புதுக்கள்ளைக் குடித்த பூவையர், (எடுப்பான)மேல் மாடத்தில் ஏறி,(உருவ ஒப்புமையால்) மிதுன ராசியை நல்ல யாழ் என்று நம்பி, (எடுத்து இசைக்கலாமென்று) நெடுங்கைகளை வானில் நீட்ட, (கண்ட) தோழியர் கல் என்று நகைத்து, மிக விரைந்து, தமது கையில் உள்ள யாழைத் தந்து, (ஆவலித்த) முன்னைய குண வேகத்தை அடக்குவர், (எ-று).

(குறிப்பு) :—நவம் - புதிது. மிதுனம் - மிதுனராசி; இது யாழ் போலும் தோற்றமுடையது. கதும் - விரைவுக் குறிப்பு. பண்பு - குணம். இது, மயக்கவணி. (50)

## வேறு

203. பழமறை முறைமுறை தெரிதொனியும்
பலசுரு தியினிசை பயிறொனியும்
விழைவுறு வதுவையின் முழவொலியும்
விகலமின் மனுநெறி பயிறொனியு
மழல்வழி மதகய முரறொனியு
மயில்விழி யினர்நட மிடுமொலியு
மழையென வுதவினர் தமதொலியு
மறிகட லினும்ஒலி தருமறுகு

(பொ – ரை) :—பழமையான மறைகளை முறை தவறாமல் ஆயும் கன ஒலியும், பல மறைகளின் சுரங்களைப் பயில்கிற ஒலியும், விரும்பும் திருமணப் பறையொலியும், களங்கம் இலாத மனு நீதிகளைக் கற்பதால் உண்டாகும் ஓசையும், நெருப்பெழ விழிக்கும் கண்களையுடைய மத யானைகள் பிளிறிடும் முழக்கமும், வேல் (போலும் கூரிய) விழிகளை யுடைய வனிதையர் நடம் புரிவதால் உண்டாகும் சத்தமும், முகில்கள்போல் (கைம்மாறு கருதாது) உதவும் வள்ளல்களுடைய கொடை ஒலியும், அலை கடலினும் (மேற்பட்டு) வீதிகளில் ஆரவாரிக்கும், (எ-று).

(குறிப்பு) :—தெரி - ஆராயும். பயில் - பழகும். வதுவை - மணம். விகலம் இல் - குற்றம் இல்லாத. மதகயம் - யானை. முரல் - பிளிறிடும். மறுகு - வீதிகள். (51)

204. தரளவெண் மணிபல தரமிடுவார்
தமதெதி ரெதிர்தலை விலைபகர்வார்
பருமணி வயிரமி தெனவறைவார்
பவளமி தொளியில தெனவிகழ்வார்
விரைகமழ் பரிமள நலதெனவே
மிகுதிலை யிதுபண வெடையினுமே
யரிதென விலைபக ரினைஞர்கள்கூ
றமலைகள் கடல்பொரு மணிமறுகே.

(பொ - ரை) :—அழகிய தெருக்களில் வெண்ணிற முத்துக்கள் பலவற்றைத் தரம் பிரித்து ஆய்வர்; தம் முன் (வாங்குபவர்) எதிரில் (தம் முத்துகட்கு) முதலில் கூறிய விலையே கூறுவர்; இது பருமையான வயிரமணி என்று உரைப்பர்; இது ஒளியற்ற பவளம் என்று இழித்துரைப்பர்; மணம் கமழ் (இவ்) வாசனைத் திரவியம், (உடல்) நலம் உதவும் என்று (புகழ்ந்து) உரைப்பர்; இது

(ஒரு) பண எடையினும் மிக்கதாக (எம்மிடத்தில்) இல்லை ; (இது எங்கும்) அகப்படாதது என விலை கூறு கின்ற இளைஞர்கள் பேசுகின்ற ஒலிகள், (முன்னேறிக்) கடலொலியுடன் மோதும், (எ-று).

(குறிப்பு) :—**தரளம் – முத்து. தரம் - உயர்வு தாழ்வு காண்டல். தமது – தம் முத்துகட்கு. தலைவிலை - முதல் சொன்ன விலை. நலது – நலமானது. மிகுதிலை – மிகுதியாக இல்லை. அமலைகள் – ஓசைகள். பொரும் - (ஒலியை) அடக்கும்.** (52)

205. பரிநிரை விலையொடு சுழிதெரிவார்
பணிமணி யொருவயின் விலையிடுவார்
கரிநிரை ஒருபுடை விலைபகர்வார்
கதிர்திகழ் கனகம துறையிடுவார்
மருமலி மலையச நிலைதெரிவார்
வடகலை தமிழுரை முறையறைவார்
விரிகலை பலபல விலைதெரிவார்
மிகுதிக ளளவில தெருநிரையே.

(பொ - ரை):—வரிசையான (பெரிய) வீதிகளில் (அரிய) குதிரைகட்குரிய விலைகளையும் சுழிகளையும் ஆய் வார்கள் ; ஒருபுறத்தில் மாணிக்கங்கட்கு விலை மதிப் பார்கள் ; ஒருபால் யானைகட்கு (உரிய) விலையை உரைப்பார்கள் ; ஒளி விளங்குகின்ற பொன்னை (மாற்றுக் காண) உறைப்பார்கள் ; மணம் மிக்க (அரிய) சந்தனக் கட்டையின் இயல்பை ஆய்வார்கள் ; வடநூல் தமிழ் நூல்களின் (பெருகிய) நுட்பம் குறித்துப் பேசுவார்கள் ; விரித்து வைத்த ஆடைகள் பலவற்றின் விலைகளைக் கணிதம் செய்வார்கள் ; (இவ்வோசைகள்) மிகுதிப்பட்டு எங்கும் அளவிலவாகி இருக்கும், (எ-று).

(குறிப்பு) :—பரி–குதிரை. நிரை - பெருக்கத்தை உணர்த்தியது. சுழி - சுழி இலட்சணங்கள். தெரிதல் - ஆய்தல். வயின் – இடம். கரி - யானை. கதிர் - ஒளி. உறையிடல் – மாற்றுக் காண முயறல். மலையசம்–(பொதிகை) மலையில் விளையும் சந்தனம். வடகலை தமிழுரை என முன் கூறியதால், விரிகலை என்பதற்கு ஆடை என்று பொருள் கொளப் பெற்றது. (53)

206. விரிதரு கொடைபொழி வியன்முரசும்
வியனுறு வதுவையி னதிர்முரசும்
மருவல ரடன்முடி கொளுமுரசு
மறையவர் மகமுறை தருமுரசு
மருவிமு மதகய மறைபுனலுண்
ணமைதியி னடிபடு கடிமுரசு
மிரவொடு பகலுமன் மதன்முரசி
னிகல்புரி வனசில சிலமறுகு.

(பொ – ரை) :—சில சில தெருக்களில் (நலமிகு) தானம் பல நடத்தலை அறிவிக்கும் பருமையையுடைய பறைகளும், முதன்மை பொருந்திய மணம் நிகழ் இடங்களில் முழங்கும் மங்கலப் பறைகளும், பகைவர்களது முடிகளைப் (போரில்) பறிக்கும் (வெற்றிப்) பறைகளும், அந்தணர் வேள்வியில் முறையாக (அவிசு) அளிக்கும் பொழுது ஒலிக்கும் வைதிக வாச்சியங்களும், அருவிபோல் (ஒழுகும்) மும்மத யானைகள், ஒலிக்கும் நீரை உண்ணும் பொழுது, அமைதி தோன்ற மோதும் காவல் முரசுகளும், இரவு பகல் இரு நேரத்தும் காமன் முரசமான கடலொடு மாறுபட்டு ஒலிப்பன, (எ–று).

(குறிப்பு):—மக்கள் எது செய்யினும் பலரறிய அதைப் பறைசாற்றிச் செய்வர். கொடைமுரசு, மணமுரசு, வெற்றிமுரசு,

**வேள்விமுரசு, காவல்முரசு முதலியன ஏக காலத்தில் ஒலித்தலின், அவ்வோசை கடலொலியினும் மேம்பட்டு இருக்கும் என்பது குறிப்பு.** (54)

**207.** சுளுகுகள் விவரமொ டுரையிடுவார்
சுடர்விடு மணிமுடி விலையிடுவா
ரொளிவளை மணிபல தரமிடுவா
ருறையிடு சுரிகைநெய் துவரிடுவா
ரளியொடு மிரவல ரெதிரெதிர்கூஉ
யறுசுவை தருமச னமுமிடுவார்
களியின ரெழுதிய கிழியெதிரே
களியொடு திரிபவ ரளவிலரே.

(பொ - ரை) :—(கருதிய காரியம் கை கூடற்கு உரிய) தந்திரங்களை விவரமாக விரித்துரைப்பவரும், ஒளிபரப்பும் இரத்தினங்கட்கு முடிவான விலையை உரைப்பவரும், ஒளியுடைய சங்கீன்ற முத்துக்கள் பலவற்றைத் தரம் பிரிப்பவரும், உறைகளில் இடப்பெறும் வாட்படைகட்கு நெய் பூசுபவரும், அன்பொடு ஏழைகளை நேருக்கு நேராகக் கூவி அழைத்து, அறுசுவை பயக்கும் அன்னதானம் அளிப்பவரும், களிப்பை யுடையவர்களாய், (தம்மால் விரும்பப் பட்டவர்களை) எழுதிய ஓவியங்களின் முன், இன்பங் கொண்டு உலாவுநரும் எண்ணிலர், (எ-று).

(குறிப்பு) :—சுளுகு - உபாயம். தரமிடல் - (உயர்விது, தாழ்விது எனத்) தரம் பிரித்தல். கூஉய் - கூவி யழைத்து ; உயிர் அளபெடுத்தது. அசனம் - உணவு. களியினர் - காமச் செருக்கினர். கிழி - படம். களி - மகிழ்ச்சி. திரிபவர் - திரியும் ஆடவர். (55)

**208.** மலர்மக ளரியுடன் வருவதென
மணிகெழு சிவிகையி னிடைவருவா
ரிலைதளிர் மலர்சிவ னடியிடவே
யிரவிவி ணெழுமுன மவைதெரிவார்
பலகலை தெரிகுர வரினிடையே
பணிவிடை முழுவது முறைபுரிவார்
துலையறு சதுர்மறை முறைமுறையோ
துநர்பெரு கியதெரு வளவிலவே.

(பொ - ரை):—திருமகள் திருமாலுடன் வருவது போல், இரத்தினங்கள் பதித்த (தக்க) பல்லக்குகளில் வரும் தம்பதிகளும், பத்திர புட்பங்களைச் சிவனார் திருவடிகளில் இடுதற்கு, அருக்கன் விண்ணில் உதிக்குமுன் அவைகளை ஆய்ந்து பறிப்பவரும், (அரிய) பல கலைகளை ஆய்ந்துணர்ந்த குரவர்களின் இடங்களில் (முதன்மைத்) தொண்டுகளை முறையாகச் செய்பவரும், ஒப்பற்ற நான் மறைகளை முறை வழுவாது ஓதுபவரும் அதிகரித்துள வீதிகள் அளவிறந்தன, (எ-று).

(குறிப்பு):—மலர்மகள் - செந்தாமரை மேலுள இலக்குமி. அரி - (பகை) அழிக்கும் நாரணர். சிவிகை - பல்லக்கு வகையுள் சிறந்த ஒன்று. இரவி - பரிதி. அவை – இலையும் தளிரும் மலர்களுமானவைகளை. தெரி - தெரிந்த. குரவர் - ஆசிரியர். துலையறு - சமானமற்ற. (56)

## வேறு

209. இனைய தாகிய செயந்திநன் னகரென விமையோர்
முனைவை வேலவன் முன்னநின் றெடுத்துரை மொழிய
வனைய செய்கையை யாறுமா முகப்பிரா னறிந்தே
வினைய மோர்ந்துபோர் வீரவா குவுக்கிவை விளம்பும்.

(பொ - ரை) :—இத்தன்மைய இயல்பை யுடையதான திருச்செந்திலே நலம் சிறந்த நகரம் என்று, விண்ணவர்கள், கூரிய நுனியை யுடைய வேல் இறைவன் திருமுன் இருந்து விரிவாக எடுத்து விண்ணப்பிக்க; பெருமித ஆறுமுகப் பெருமான், செயல் முகமான அச்சிறப்பை அறிந்து, விநயம் உணர்ந்து போர் புரியும் வீரவாகுவை நோக்கி(ப் பின்வருமாறு) விளம்ப லாயினர், (எ-று).

(குறிப்பு) :—முனை - நுனி. வை - கூர்மை. அனைய செய்கையை - முன்பாட்டுகளில் குறித்த அச்சம்பவங்களை. வினயம் ஓர்ந்து - இமையவர்கள் அடக்க ஒடுக்கம் காட்டி அறிவித்த குறிப்பை உணர்ந்து எனினுமாம். (57)

210. வீர வாகுநீ கேளென யாவர்க்கு மேலோன்
பேர வாவுறு நினக்கிளை யார்தமைப் பெரிதாம்
பாரி டத்தொகை யவர்தமைப் பதாதியாந் தலைவர்
யாரை யும்மிவட் கொணருதி யாலென விசைத்தான்.

(பொ - ரை) :—வீரவாகு! நீ கேட்பாயாக! பெரும் புகழ் விரும்பும் உனக்கு இளையவரான எண்மரையும், விரிவான இரண்டாயிரம் பூத வெள்ளங்களையும், சேனை அதிபர்களான நூற்றெட்டுப் பூத ராசர்களையும் இவ்விடம் அழைத்து வருக என்று, எவர்க்கும் மேம்பட்ட இறைவன் அருளினன், (எ-று).

(குறிப்பு) :—பரம குமரனுக்குப் பணி செய்ய வேண்டும்; அவனுக்கு மாறுபட்டார் இனத்தை அழிக்க வேண்டும் எனும் அப் புகழை ஆவலிப்பவர் நவவீரர்கள் எனலே, 'பேர் அவாவுறு' என்பதில் பெறவைத்தனர். பாரிடத் தொகை - பூத சேனைகள். பதாதியாம் தலைவர் - சேனாபதிகள். நவவீரர்கள் - வீரவாகு தேவர், வீரகேசரி, வீரமகேந்திரர், வீரமகேச்சுரர், வீரபுரந்தரர், வீரராக்கதர், வீரமார்த்தாண்டர், வீராந்தகர், வீரதீரர் முதலினோர். (58)

இசைசெய் வாசக மனைத்தையுங் கருத்திற லெண்ணி
விசைய மொய்ம்பனும் பாரிடத் தொகையையு மேலா
மசைவில் பூதசே னாதிபர் யாரையு மடங்காத்
திசைதொழும்பினோர்தம்மையும்விளித்தனன் சிறந்தான்.

(பொ - ரை) :—(அமலன்) அருளிய திருவாய் மொழி கள் அனைத்தையும், சிறந்த வீரவாகுவும் (சிறக்கத்) திரு வுளத்திற் சிந்தித்து, பூத சேனைகளையும், மேம்பட்ட (போரிலும் பணியிலும்) சளைக்காத பூதசேனை அதிபர் கள் அனைவரையும், வன்மை குறையாத எத்திசையரும் தொழும் (அன்புள) தம்பியரான நவவீரர்களையும் அழைத்தருளினார், (எ-று).

(குறிப்பு) :—எம்மான் கட்டளை, 'இசைசெய் வாசகம்' எனப் பெற்றது. விசைய மொய்ம்பன் - வெற்றித் தோள் வீரவாகு. பின்வாங்காப் பெருமிதம், 'அசைவு இல்' எனப் பெற்றது. பினோர் -பின் உதித்த தம்பியர். 'சிறந்தான் (ஆகிய) விசைய மொய்ம்பனும்' என இயைக்க. (59)

212. விளித்த போதுபூ தாதியர் யாருமுள் வியந்து
களித்து வானமும் வையமும் ஒன்றெனக் கலந்து
துளிக்கும் வல்விடச் சேடனும் பணமுடி துளக்கி
நெளிக்க நின்றுகூத் தாடினர் வயங்கொடு நிரம்பி.

(பொ - ரை) :—அழைத்த (அப்) பொழுதே பூதவீரர் முதலினோர் அனைவரும், வியந்த மனத்துடன் மகிழ்ந்து, விண்ணும் மண்ணும் ஒன்றாக வியாபித்து, வெற்றிப் பெருமித நிரம்பி, கடும் நஞ்சைக் கக்கும் ஆதிசேடனும் படமுடைய முடிகளை அசைத்து (ப்பாரம் பொறுக்க முடியாமல்) நெளியுமாறு நின்று ஆனந்தக் கூத்தாடினர், (எ-று).

(குறிப்பு) :—வியந்து கலந்து வயங்கொடு நிரம்பி நின்று கூத்தாடினர் எனக் கூட்டுக. வயம் - வெற்றிப் பெருமிதம். கலத்தல் - செறிவு தோற்றுவித்தல். பணைமுடி - படங்களை யுடைய ஆயிரம் தலைகள். (60)

213. வந்த காலையின் மாருதத் தலைவநீ மனத்தின்
முந்து தேரினைக் கடவுதி யாலென மொழிந்தே
யிந்தி ரன்மகண் மான்மக ளொடுங்கடி தெழுந்து
சிந்து ரப்பகைப் பீட நின் றொருவினன் சேயோன்.

(பொ - ரை) :—(அவர்கள் அனைவரும்) வந்து சேர்ந்த அவ்வமயம், வாயு தேவா! நீ மனோ வேகத் தினும் முற்பட்ட தேரைச் செலுத்தி வா என்று கட்டளை யிட்டு, இந்திர குமாரியான தேவயானையொடும், மான் மகளான வள்ளி யம்மையுடனும், செவ்வேள் விரைந்து எழுந்து, யானைக்குப் பகையான சிங்க ஆதனத்தில் இருந்து நீங்கினன், (எ-று).

(குறிப்பு) :—மாருதத் தலைவன் - காற்றின் அதிபன். மனத் தின் முந்துதேர் - மனோவேகத் தேர். கடவுதி - செலுத்துக. ஆல் - அசை. சிந்துரம் - யானை. அதற்குப் பகையானது சிங்கம். சிங்கத்தின் வடிவு தோன்றச் சித்திரித்த பீடம் என்பார், 'சிந்துரப் பகைப் பீடம்' என்றார். சேயோன் மொழிந்து எழுந்து ஒருவினன் எனக் கூட்டுக. சேயோன் - செவ்வொளி மயமான பரன். ஒருவுதல் - நீங்குதல். (61)

214. சீய மெல்லணைப் புறந்தனை நீங்கிச்செங் கதிரின்
பாயொ ளிச்சுடர்ப் பாதுகை மேற்பதஞ் சேர்த்தி
நாய கன்பெருங் கோபுர வாயிலி னண்ணி
வாயு வுக்கிறை கொணர்ந்ததேர் ஏறினன் மகிழ்ந்தே.

(பொ - ரை) :—(ஆன்ம) நாயகன் ஆனபரன், மென்மையான சிங்காதனத்தின் மேல் இருந்து எழுந்து, செஞ்ஞாயிறு போலும் பரவிய ஒளியுள பாதுகையின் மேல் திருவடிகளை இட்டு, (அரிய) பெரிய கோபுர வாயிலை அணுகி, வாயுதேவன் கொண்டுவந்த (மனோவேகத்) தேர்மேல் மகிழ்ந்து ஏறினன், (எ - று).

(குறிப்பு) :—செங்கதிரின் - சிவந்த ஒளியுடைய சூரியன் போல். பாய் ஒளி - படர்ந்த பேரொளி. சுடர் - சுடரும் பொன்னுக்கு ஆகு பெயர். நாயகன் நீங்கி, சேர்த்தி, நண்ணி, மகிழ்ந்தே தேர் ஏறினன் எனக் கூட்டுக. (62)

தேரின் ஏறிய வேல்வையிற் செம்பொனின் அடைப்பை
மாரன் ஏந்தினன் களாசியை வருணனின் றெடுத்தான்
கோர வீரவாள் கூற்றுவன் தனதுகைக் கொண்டான்
ஏரு லாவிய சாமரை யிந்திரன் எடுத்தான்.

(பொ - ரை) :—தேரில் ஏறிய அமயம், மன்மதன் (தனிப்பெரும்) பொன்னால் சமைந்த வெற்றிலைப் பாத்திரத்தைத் தாங்கினான்; வருணன் படிக்கத்தை ஏந்தி நின்றான்; இயமன், பயங்கரவீரம் விளங்கிய வாட்படையைத் தன் கரத்தில் கொண்டான்; இந்திரன் அழகமைந்த வெண்சாமரையை எடுத்தான், (எ - று).

(குறிப்பு) :—ஏல்வை - சமயம்; காலம். அடைப்பை - தம்பலப் பெட்டகம். களாசி - தம்பலம் துப்பும் பாத்திரம். வருணன் களாசியை எடுத்து நின்றான் எனவும், கூற்றுவன் கோர வீரவாள் தனதுகைக் கொண்டான் எனவும் கூட்டுக. கூற்றுவன் - (உயிரையும் உடலையும் இரு) கூறு படுத்துபவன் எனும் பொருட் பெயர். (63)

**216.** ஆத வத்தனிக் கடவுளு மமுதவான் ருரைச்
சீத வெண்மதிக் கடவுளுங் குடையுடன் செல்ல
நாத மிக்கெழு தந்திரி நகங்கொடு தடவி
மாத வத்துயர் தும்புரு நாரதர் வணங்க.

(பொ - ரை):—ஒப்பற்ற ஞாயிறுத்தேவனும், உயர்ந்த அமுத ஒழுக்கினையுடைய குளிர்ந்த வெள்ளிய திங்களாகிய தேவனும் (சிறந்த) குடை பிடித்துச் செல்ல, பெருந் தவத்திஞல் உயர்ந்த தும்புரு நாரதர் (இருவரும்,) நாதம் மிகுந்து விளங்குகின்ற (யாழிலுள்ள) ஏழு நரம்புகளை நகத்தால் வருடி (ப்பாடி) வழிபட, (எ - று).

(குறிப்பு):—இது விண்ணவர் பெருமான் வந்தான் எனும் அறுபத்தேழாம் பாட்டொடு முடியும்; குளகம். ஆதபன் எனும் வடசொல் ஆதவன் எனத் திரிந்தது. ஆதபம்-நன்ருகக் காய்வது எனும் பொருட்டு. ஒளி வழங்கும் தேவருள் முதல் வனை, 'தனி ஆதவக் கடவுள்' என்ருர். தாரை - ஒழுக்கு. குடை - உட்குடைவா யிருத்தல் பற்றிப் போந்த பெயர். தந்திரி - (யாழில் சரிகமபதநி என) ஏழிசை யெழுப்பும் நரம்புகள். (64)

217. தால மேழுடைக் கடவுடீ வர்த்திகை தாங்கிப்
பாலின் வந்திட நிருதியுங் குபேரனும் பரவி
யால வட்டமும் விசிறியுங் கைக்கொள வலராக்
கோல நாண்மலர் மாரிதூஉய்க் கடவுளர் குழும.

(பொ - ரை):—ஏழு நாவுடைய தீக்கடவுள் தீவட்டியைக் கரத்தில் பிடித்துப் பக்கத்தில் வர, நிருதியும் குபேரனும் வழிபட்டு, ஆலவட்டமும் விசிறியும் கைக ளில் பற்றிவர, வானவர்கள் மலர்ந்து அழகான புதுமலர் களை மழையெனப் பொழிந்து சூழ்ந்து வர, (எ - று).

(குறிப்பு):—ஏழ் தாலம் உடை கடவுள் எனவும், கடவுளர் மலர்மாரி தூஉய்க் குழும எனவும் கூட்டுக. தாலம் – நாக்கு.

**தீக்கடவுள் நாக்கு ஏழு என்பது மரபு. இவன் தென்கீழ்த் திசை அதிபன். நிருதி - தென்மேற்கு அதிபன். குபேரன் — வடதிசைத் தலைவன். கடவுளர் - தேவர்கள். அலராக் கோல நாள்மலர் — மலர்ந்த அழகிய புதுமலர். குழும — கூடிவர.** (65)

218. ஆயி ரக்கம லாசனத் திறையவ னன்னத்
தூய புட்கொடு புறஞ்செலச் சுடர்மணிக் கிரணப்
பாயொ ளிப்பணிப் பாயலான் படரிருஞ் சிறைய
நாய கத்தனிக் கருடன்மீ தேறின னடப்ப.

(பொ - ரை) :—ஆயிரம் இதழ்களை யுடைய தாமரை ஆசனத்தில் தங்கிய அயன், தூய அன்னப் பறவை மேல் அமர்ந்து ஒருபுறம் (தொடர்ந்து) வர, ஒளி விளங்கும் கிரண மாணிக்கங்களைக் கொண்ட பரவிய ஒளியுள ஆதிசேடனாகிய பாயலில் இருக்கும் திருமால், பரவிய பெரிய இறகுகளை யுடைய (பறவைக்கு) மன்னனை ஒப்பற்ற கருடன்மேல் அமர்ந்து தொடர்ந்து வர, (எ - று).

(குறிப்பு) :—கமல ஆசனத்து - கமலாசனத்து எனப் புணர்ந்தது. இறையவன் - நான்முகன். புள் — பறவை. பாய் - பரவிய. பணிப் பாயலான் - பாம்புப் படுக்கையி லுள்ள பரந்தாமன். இரும் சிறைய-பெரிய இறகுகளுடைய. (66)

சுரர்க ளார்த்தனர் முனிவர்க ளார்த்தனர் தொழுதே
நரர்க ளார்த்தன ரார்த்தன மறையொரு நான்கும்
தரையின் மேயசீ ரறஞ்சிறந் தார்த்தன தரங்கப்
பரவை யார்த்தென வார்த்தன பாரிடப் படையே.

(பொ - ரை) :—(ஆநந்தம் மிக்க) தேவர்கள் ஆரவாரித்தனர்; முனிவர்கள் (தெய்வமந்திர) ஒலி எழுப்பினர்; மனிதர்கள் தொழுது (துதி) ஒலி எழுப்பினர்;

ஒப்பற்ற நான்மறைகளும் ஒலித்தன ; நிலவுலகில் இருக்கும் சிறப்புடைய அறக்கடவுள் பொலிவு கொண்டு ஆரவாரித்தது; அலைகளை யுடைய கடல் பேரிரைச்சலை எழுப்பியது போல், பூதகணங்கள் மகிழ்ந்து முழக்கம் எழுப்பின், (எ - று).

(குறிப்பு) :—சுரர்கள் – தேவர்கள் ; சுராபானம் செய்த தால் வந்த பெயர்; சுரை - அமுதம். முனிவர்-சாந்தசீலர்கள் ; இது வட சொல்லாம் பொழுது, முநிவர் என நிற்கும். உள்ளாழ்ந்த பொருளுடைமையின், வேதங்கள் மறையெனப் பெற்றன. அறம் - அறக்கடவுளுக்கு, முதலாகு பெயர். தரங்கம் – அலை. பரவை - பரவியுள கடல். ஆர்த்தனர் என்ற சொல் பலதரம் ஒரே பொருளில் வருதலின், இது சொற் பொருள் பின்வரு நிலையணி. (67)

220. துடிமு ழங்கின பேரிகை முழங்கின சொரிகார்
இடிமு ழங்கின போலவான் துந்துபி யிரைத்த
படக மேங்கின பதலைகள் பம்பின பரம்புங்
கடன்மு ழங்கின போலொலி பரந்தகா களமே.

(பொ - ரை) :—உடுக்கைகள் ஒலித்தன ; பேரிகைப் பறைகள் ஓசை எழுப்பின. மழை பொழியும் மேகங்கள் முழங்கிய இடிபோல் (தேவ) துந்துபிகள் ஒலிகளை எழுப்பின ; பெரிய பேரிகைகள் பேரிசை விளைத்தன ; ஒரு கண் பறைகள் ஒலித்தன ; நெருங்கி ஒலிக்கும் கடல் போல், காகளம் எனும் பறை ஒலியைப் பரப்பின, (எ—று).

(குறிப்பு) :—துடி - உடுக்கை. கார் - கருமேகம். வான துந்துபி - தேவ வாத்தியம் ; இது, தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக் கருவி, மிடற்றுக் கருவி, கஞ்சக் கருவி

என ஐவகைப்படும். "அதிர்தரும் ஓசை ஐந்தும் ஆர்கலி முழக்கம்" என்பது பெரிய புராணம். படகம் - பெரும் பேரிகை; பேரிகை என்றே வேறு ஒரு பறையுண்டு; அதை முதல் அடியிற் குறித்தார். பதலைகள்-ஒருகண்பறைகள். காகளம் – இது ஒருவகைப் பறை. (68)

## வேறு

221\. விண்ணவர் பெருமான் வந்தான்
வேனெடும் படையான் வந்தான்
பண்ணவர் மகுடந் தேய்க்கும்
பதாம்புயக் கடவுள் வந்தா
னண்ணலங் குமரன் வந்தா
றுமா முகத்தன் வந்தான்
தண்ணற வொழுகு நீபத்
தாமவேள் வந்தான் வந்தான்.

(பொ - ரை):—தேவ தேவன் வந்தான்; உயர்ந்த வேற்படை யுடையான் வந்தான்; உம்பர் முடிகளில் உராயும் திருவடிக் கமலத் தேவன் வந்தான்; பெருமை யிற் சிறந்த குமரன் வந்தான்; ஆறுமாமுகப் பரமன் வந்தான்; குளிர்ந்த தேன் ஒழுகும் கடப்ப மலர்மாலைக் (கந்த) வேள் வந்தான், வந்தான், (எ - று).

(குறிப்பு) :—பண்ணவர் - தேவர்கள். தேய்த்தல் – வருடுதல்; 'ககன சுரர்கள் முடிகள் தடவு கமல சரண கடவுளே" என்பது திருப்போரூர் சந்நிதிமுறை. பத+அம்புயம்– பதாம்புயம் என்று ஆயது, தீர்க்க சந்தி. அம்புஜம் - நீரில் தோன்றுவது எனக் காரணக்குறி. கடவுள் - உள்ளிருந்து ஊக்குபவன் எனும் பொருட்டு; எதனையும் கடந்தோன் எனினுமாம். குமரன் - பதினாருட்டைப் பருவத்தான். நமக்

குமாராய என இந் நாமத்தைச் சிவனுர் கைக் கொண்டார் என்று, வடமொழிக் காந்தம் வாய்மலரும். ஆறுமுகம் – ஆறுதிசை நோக்கிய திருமுகங்கள்; இது காப்புக் கருதிய கனிவு நிலை. நறவு - தேன். நீபத்தாமம் – கடப்ப மாலை. (69)

222. கழுமலத் துதித்த ஞானக்
கான்முளை வந்தான் வந்தான்
மழையெனக் கருணை யெம்பால்
வழங்கிய செவ்வேள் வந்தான்
தழையுமுச் சங்கத் தேறுந்
தலைமைப்பா வலவன் வந்தான்
செழுமறைப் பெருமான் வந்தா
னென்றன சின்ன மெல்லாம்.

(பொ - ரை):—சீகாழியில் உதயமான சிவஞானச் சேய் வந்தான், வந்தான்; (சிறந்த) மழைபோல் திருவருளை எம்பால் பொழிந்த செவ்வேள் வந்தான்; வளர்ந்த முச் சங்கங்களில் ஏறிய (பயனுன) முதன்மைப் பாவலன் வந்தான்; வளமார் வேத நாயகன் வந்தான் என்று, (உயர்ந்த) சின்னம் பலவும் ஒலித்தன, (எ-று).

(குறிப்பு):—கழுமலம் - மலமகற்றும் தலம்; இது, சீகாழியின் பன்னிரு பெயர்களுள் ஒன்று. ஞானக் கான்முளை - திருஞான சம்பந்தர்; இது முருகன் அவதாரங் களுள் ஒன்று. செவ்வேள் - செவ் - செம்மை; வேள்-விருப்பு; எனவே முத்தி விருப்புதவும் முதல்வன் என்பது குறிப்பு. முச்சங்கத்து ஏறல் - உருத்திர சன்மரென ஆதல். முச் சங்கம் - முத்தமிழ்ச் சங்கம். (70)

223. ஆறுமா முகத்துப் புத்தே
 ளணிகெழு தேரி னீங்கிக்
கூறுநான் மறையு மொன்றுங்
 கோயிலிற் குறமான் யானைப்
பேறதாந் தெய்வ யானைப்
 பெண்ணொடு மடியர் வாழ்த்த
மாறிலாக் குமர மூர்த்தி
 மகிழ்ந்துவீற் றிருந்தான் மாதோ.

(பொ - ரை):—சிறந்த ஆறுமுகப் பெருமான் அழகு மிக்க தேரிலிருந்து இறங்கி, ஓதும் நான்கு வேதங்களும் ஒன்று பட்டுள திருக்கோயிலுள், குறவர்குல மானனை வள்ளியம்மை, ஐராவதம் வளர்த்த பேறுடைய தெய்வ யானை யம்மையுடன், அடியவர்கள் வாழ்த்துக் கூற, மாறுபாடு இல்லாத குமார சுவாமி மகிழ்ந்து எழுந்தருளி இருந்தனர், (எ - று).

(குறிப்பு):—புத்தேள் – தேவன் எனும் பொருட்டு. அணிகெழு - அழகு செய்த. வேதக் கோயிலை, 'நான் மறையும் ஒன்றும் கோயில்' என்றார். பேறு - பெற்ற பயன். மாறு இலா - பகையிலாத. (71)

224. வீற்றிருந் தருளி னேடும்
 வேதற்கும் விளங்குஞ் சோதி
யாற்றலந் திகிரி யார்க்கு
 மமரர்க்கும் விடைமு னீந்து
தேற்றுநான் மறைவல் லோராந்
 திரிசுதந் திரத்தர் வாழ்த்திப்
போற்றவேற் கரத்துப் புத்தேள்
 புவனிகாத் தளிக்கு நாளில்.

(பொ - ரை) :—வேல்படைப் பெருமான் (வேறு எவர்க்கும் இல்லாச் சிறப்புடைய) அருளொடும் அமர்ந் தருளி, பிரமனுக்கும், விளங்கும் ஒளியுள ஆற்றல் கொண்ட அழகிய சக்கரத்தையுடைய திருமாலிற்கும், தேவர்கட்கும், முதலில் (சென்று வருக என) விடை யளித்து, நான்மறை கற்று வல்லவரான திரிசுதந்தரர் வாழ்த்தி வழிபட, (அருளொடு) உலகைக் காத்தருளும் (அந்) நாளில், (எ - று).

(குறிப்பு) :—வேல் கரத்துப் புத்தேள் வீற்றிருந்து எனக் கூட்டுக. திகிரியான் - திருமால். (72)

செயந்திபுர அத்தியாயம் முற்றிற்று.

---

## 6. வள்ளியம்மை திருவவதார அத்தியாயம்

225. அகிலம் யாவுக்கு மந்துரு வாணிபோ
னிகரி லாதுயர் நீடுபொற் குன்றின்வா
யிகலும் செற்றமு நீக்கிய வேமனுந்
தகைமை சேர்ந்த தவமுனி யென்றுளான்.

(பொ - ரை):—அனைத்துலகிற்கும் (அசையா நிலை செய்யும்) அச்சாணிபோல், ஒப்பிலாது உயர்ந்து நீண்ட (மேரு எனும்) பொன் மலையில், பகைமையும் சினத்தையும் அகற்றிய ஏமன் எனும் தகுதி பொருந்திய தவமுனிவர் ஒருவர் உளர், (எ - று).

(குறிப்பு):—அகிலம் - கிலப்படுவதுபோல் தோன்றிக் கிலப்படாத உலகம்; கிலம் - அழிவு. அம் துருவ ஆணி - அரிது துருவி யழுந்திய ஆணி. பொன்குன்று — மேரு மலை. இகல் — பகை. செற்றம் - (பகைக்கு ஏதுவான) கோபம். தகைமை - தகுதியுடைய நல்லொழுக்கம். (1)

226. சங்கு சக்கரந் தாங்கு தடக்கையும்
பங்க யத்திருப் பாரப் படீரப்பொற்
கொங்கை வெற்பிற் குளிர்ந்த பசுந்துழாய்த்
தொங்க லுக்கிசைந் தோங்குதிண் டோள்களும்.

(பொ - ரை):—(திருமாலின்) சங்கு சக்கரங்களை ஏந்திய பெரிய திருக்கரங்களையும், கமல மலரில் இருக்கும் திருமகளின் சந்தனக் குழம்பு பூசிய அழகிய குயங்களாகிய மலைகளில், குளிர்ந்த பசுமைத் துளசி மாலைத் தொடர்பு கொண்டதுபோல் உயர்ந்த திண்மைப் புயங்களையும், (எ - று).

(குறிப்பு) :—இது குளகம் ; எண்ணி எனும் அடுத்த பாட்டொடு முடியும். பாரம் - மகிமை. படீரம் - சந்தனம். வெற்பின் - மலைகளொடு. தொங்கல்-மாலை. (2)

227. எண்ணி யுள்ளத் திருத்திமெய்ந் நாசியிற்
கண்ணி ரண்டுங் கவிழ்தர நோக்கியே
விண்ண வர்க்கும் வியப்புற யோகத்து
நண்ணு கின்ற துணர்ந்தன னாகர்கோன்.

(பொ - ரை) :—தியானித்து, (அத்திருவுருவை) உள்ளத்தில் எழுந்தருள வைத்து, கண்கள் இரண்டும் கவிழ்ந்து நாசி நுனியை நோக்கச் செய்து, உம்பர்க்கும் வியப்பு உண்டாகும்படி (இனிய) யோகத்தில் (ஏமன்) இருப்பதை, (ஊன்றித்) தேவேந்திரன் உணர்ந்தனன், (எ - று).

(குறிப்பு) :—எண்ணி உள்ளத்து மெய் இருத்தி எனவும், நாகர்கோன் உணர்ந்தனன் எனவும் இயைக்க. நாசி நுனியை இருபார்வையாலும் பொருந்த நோக்குதல், தியான நிலை ; இதை 'நாசியில்......கவிழ்தர நோக்கி' என்று குறித்தார். (3)

228. கான யாழிசைக் கந்தரு வத்தரும்
வான நாடக மாதரும் வம்மினென்
றூன சொல்லொன் றுணர்த்துவ னன்னது
தானு ளத்திற் றரிக்குதிர் நீரென.

(பொ – ரை) :—யாழில் பண்களை (கருத்தைக் கவர) இசைக்கின்ற கந்தர்வர்களும், வானுலக நடன வனிதையர்களும் வருக என்று அழைத்து, (உங்கட்கு உரியது) ஆன ஒரு மொழியை உரைக்கின்றேன் : அதனை நீங்கள் உள்ளத்தில் கொள்ளுங்கள் என்று, (எ - று).

(குறிப்பு) :—இதுவும் குளகம் ; 'மாற்றும் என்று ஓதலும்' என்ற அடுத்த பாட்டுடன் முடியும். கானம் - இசை. தரிக்குதிர் - தாங்குங்கள். கந்தருவர் – வித்யாதர நகரினர் ; அவர்கள் பாடகர் ; அரம்பையர் ஆடுநர். தான்-அசை நிலை. (4)

பொருளின் மேற்படு பொற்றையிற் போய்த்தவத்
தெருளி னேமத் திருமுனி யென்பவ
னருளின் வைகின னுங்கவ னெஞ்சக
மருள நீவிர்மெய் மாற்றுமென் றோதலும்.

(பொ - ரை) :—பொன்னின் மேம்பட்ட பொலிவுடைய (மாபெரும்) மேரு மலையில், ஞானச் செல்வனை ஏம முனிவன் என்பவன் சென்று, அருள்கருதி (த்தவத்தில்) அமர்ந்துளன் ; நீங்கள் அவன் மனம் மயங்கும்படிச் செய்து, அவனது (நிலைத்த) மெய்யறிவை நீக்கி விடுமின்கள் என்று கூறுதலும், (எ - று).

(குறிப்பு) :—குளகம் ; இது, போயினர் எனவரும் அடுத்த பாட்டொடு முடியும். பொருள் - பொன்னை உணர்த்தியது. பொற்றை - (மேரு) மலை. தெருள் - தெளிவு. மெய் - மெய்யறிவு ; ஆகுபெயர். (5)

230. சொற்ற வாசகங் கேட்டிசை தும்புருக்
கற்று ணர்ந்துள கந்தரு வத்தரும்
பற்று நாடகப் பைந்தொடி யார்களு
முற்று ணர்ந்த முனிவன்முன் போயினர்.

(பொ - ரை) :—(இந்திரன்) சொன்ன சொற்களைக் கேட்டு, தும்புரு முனிவனிடம் இசை பயின்று தேறியுள கந்தருவர்களும், விரும்பப்பெறும் நாட்டிய மகளிர்களும், முற்றறிவுடைய (ஏம) முனிவர்முன் சென்றனர், (எ-று).

(குறிப்பு) ;—தும்புரு-இவர் விபுலன் புதல்வர்; தவமியற்றிச் சித்தி பெற்றவர். கந்தருவ இனத்தவரான இவர் செய்த நூல், தும்புரீயம் எனப்பெறும். பற்றுதல் - விரும்புதல். பைந்தொடியார் - பசுமை வளையல்களை அணிந்தவர். முற்றுணர்தல் - யாவும் உணர்ந்த பரம ஞானி. (6)

231. கையின் யாழிற் கனிந்தபண் தேறலு
மைய நுண்ணிடை யாரடி பேர்த்திடுஞ்
செய்ய தாளச் செயனடத் தேறலு
மையி லாமுனி வன்செவி யார்தலும்.

(பொ - ரை) :—(கந்தருவர்) கைகளில் ஏந்திய யாழ்களில் இருந்து கனிந்து பிறந்த இசைத்தேனும், அழகிய நுட்ப இடையுடை யரம்பையர் கால் பெயர்த்து இடும் சிறந்த தாளத்துடன் சேரும் திருநடச் செயலாகிய தேனும், குற்றமில்லாத (செம்மை) முனிவர் செவியில் சேர்தலும், (எ - று).

(குறிப்பு) :—ஐய நுண்ணிடை - (இலதோ உளதோ என) ஐயுறும்படி அவ்வளவு சிறுத்த இடையெனினும் அமையும். தாளச் செயல் - தாள இசை. மை - குற்றம். ஆர்தல் — நிறைதல். தேறல் - தேன். (7)

232. யோகு விட்டு முனிவர னுள்ளத்தின்
மோக மிக்க மனத்தொடு முன்னர்வான்
றேகை யொத்த சுரிகுழ லாரையும்
பாகி சைத்தவர் தம்மையும் பார்த்துளான்.

(பொ – ரை) :—முனிசிரேட்டர் உளத்தில் (நிலைத்த) யோகநிலை நீங்கி, மோகம் மிகுந்த உணர்வுடன் முன் இருந்தவர்களான (வெல்லப் பாகைப்போல்) கானம் எழுப்பிய பாடகர்களையும், சிறந்த மயில்களைப் போன்ற

சுருட்டைக் கூந்தல் பாவையர் யாவரையும் பார்த்தான், (எ - று).

(குறிப்பு) :—யோகம் இருந்த உள்ளம்போய், மோகம் புகுந்த மனத்த னுயினன்; பாடுவார் ஆடுவார்தமை கண் திறந்து பார்க்கின்றுன் என்றபடி. முனிவரன் - முனிவருள் உயர்ந்தோன். வரன் - சிரேட்டன். (8)

233. நீங்க ளியாரு நிகரறு யோகத்தின்
பாங்கர் வந்து பரிபவஞ் செய்ததால்
தீங்கொ டுஞ்சொலிற் சீறிய வெம்மொழி
தாங்கி வேடுவத் தன்மைசென் றெய்துவீர்.

(பொ - ரை) :—நீங்கள் அனைவரும், (யாம்) ஒப்பற்ற யோகம் மேற்கொள் இடத்து வந்து, (எமக்கு வீணை) துன்பம் விளைத்தீர்கள் ஆதலின், தீய கொடும் சொல்லுரு வாய்ச் சினந்த எமது சாபமொழி தாங்கி, (அறிவிலா) வேடர்களாம் தன்மை அடைவீர்களாக, (எ - று).

(குறிப்பு) :—பாங்கர் - அண்மை. பரிபவம் - அவமதிப்பு மாம். தீங்கொடும் சொலின் - தீய கொடிய சொல்லால். எம்மொழி - எமது சாபமொழி எனினுமாம். தாங்கி - சுமந்து. தன்மை - சுபாவம். தேறி உணர்வு தெளிவுற்ற முனிவர், அத்தெளிவைக் கெடுக்க வந்தார்க்குச் சாபம் கொடுக்கின் ருர் என்று இங்கு அறிதல் நலம். (9)

234. உங்கள் பால்வந்த ஒண்தொடி மாதரு
மங்கண் மாநிலத் தற்றமி லாவரைத்
துங்க வேடுவத் தோகைய ராகவு
மிங்கி சைத்தனம் போமின்க ளென்றனன்.

(பொ - ரை):—உங்களுடன் வந்த ஒளிமயமான வளையல் அணிந்த மங்கையர்களும், அழகிய இடமகன்ற பெரிய நிலப் பரப்பில், மறைவிலாத மலை நிலங்களில், மயில்போல் சாயல் வேட மங்கையராகவும் சபித்துளம்; போய்விடுங்கள் என்று கூறினர், (எ - று).

(குறிப்பு):—பால் - இடம். அற்றம் இலா வரை - மறைவுபடாத மலை. துங்கம் - உயர்ந்த. (10)

235. அந்த வெம்மொழி கேட்டலு மன்னவர்
சிந்தை நொந்து தெருமந்து மாழ்கியே
மைந்தர் குற்ற மனங்கொடு வல்விடம்
தந்தை யூட்டிற் றனையர்க்குச் சார்வுண்டோ

(பொ - ரை):—அந்த கொடிய சாபத்தைக் கேட்டதும், அவர்கள் வருந்திச் சுழன்று மயங்கினராகி, மைந்தர்கள் குற்றத்தை மனத்தில் வைத்து, தந்தை உக்கிர நஞ்சை ஊட்ட முயன்றால், (அம்) மக்கட்குப் பாது காப்பு வேறு உளதோ, (எ - று).

(குறிப்பு):—வெம்மொழி - கொடும்சாபம். தெருமந்து - கலங்கி. மாழ்கி - மயங்கி. (11)

236. ஆயி னுங்கொடுஞ் சாபம கன்றுமுன்
மேய தொல்வடி வங்கொடு மேவவு
நீயி ரங்கி நிகழ்த்துதி யென்றலும்
தூய மாதவ னன்றெனச் சொல்லுவான்.

(பொ - ரை):—(சபித்தீர்) ஆயினும், உக்கிரமான சாபம் ஒழிந்து, முன்பு இருந்த பழைய வடிவு கொண்டு, (அடியேம்) வாழவும் நீர் திருவுளம் இரங்கி அருளும்

என்று (வீழ்ந்து வணங்கி) விண்ணப்பித்தலும், தூய்மைத் தவமுடைய சிறந்த முனிவர் நல்லது என்று சொல்வா ராயினர், (எ-று).

(குறிப்பு) :—மேய - பொருந்திய. தொல்வடிவம் - பண்டை உருவம். (12)

237. கால மூன்று முளங்கொடு காண்பவன்
சீல முன்னித் திகைத்தருள் சிந்தியா
மூல மின்றி முளைத்துக் கயிலையிற்
கோலங் கொண்டிருந் தானடி கும்பிட்டு.

(பொ - ரை) :—(தனக்கு ஒரு) ஆதாரம் இல்லாமல் வெளிப்பட்டுத் திருக்கயிலையில் உருவத் திருமேனி கொண்டு இருந்த (வரத) சிவத்தின் திருவடிகளை வணங்கி, (இறப்பு நிகழ்வு எதிர்வு எனும்) மூன்று காலத்தையும் அரிய திருவுளத்தால் அறிபவரான ஏம முனிவர், (அந்நேரத்திற்கு உரிய) ஒழுகலாற்றை உணர்ந்து, (சபித்ததை நினைத்துத்) திகைத்து, திருவருளைச் சிந்தித்து, (எ - று).

(குறிப்பு) :—''பிறவாதே தோன்றினன்'' ஆன பெம்மானை, 'மூலம் இன்றி முளைத்'தவன் என்றார். இறையடி ஏத்துபவர்க்கு முக்காலச் செய்திகளும், நினைவில் வந்து நிழலிடும் என்க. இவர்களை ஏவியவன் இந்திரன்; தலைவன் கட்டளையை இவர்களால் தடுக்க முடியாது. வந்தவர்கள், செய்ய வந்த தம் செயலைச் செய்தனர். அதற்காக நாம் அவர்களைக் கோபிப்பது ஆகுமா? கொடிய சாபம் வேறு கொடுத்து விட்டோமே? ஏன் இப்படி அவசரப்பட்டோம் என்று, சிவத்தை முனிவர் சிந்தித்தார். இறந்த கால வரலாறுகள், நினைவிலெழுந்து நிழலிட லாயின; ஊன்றி அவைகளை உணர்கிறார்; அவைகளைப் பின்வரும் பாடல்களால் அறிக. (13)

258. தாது குத்த கடுக்கையுந் தாதகிப்
போது மொய்த்த புரிசடை யான்றருஞ்
சோதி வேற்கைச் சுருதியம் பண்ணவன்
காதல் கூர்ந்துல கத்தைக் களிப்பினல்.

(பொ - ரை):—மகரந்தங்களைச் சிந்திய கொன்றை மலர்களும், ஆத்தி மலர்களும் அடர்ந்த முறுக்கேறிய சடையுடைய அமலன் அருளிய ஒளிமயமான வேற்படை ஏந்திய அழகிய வேத நாத விசாகன், உவகை மிகுந்து உலகத்தை (வெற்றிக்) களிப்புடன், (எ - று).

(குறிப்பு):—'காக்கவேண்டி,' என அடுத்த பாட்டுடன் தொடரும். தாது உகுத்த - மகரந்தப் பொடிகளைச் சிந்திய. கடுக்கை - கொன்றை. தாதகி - ஆத்தி. புரி - முறுக்கு ஏறுதல். சுருதி - மறைகள்; செவிவழி வந்தவை எனும் பொருளது. பண்ணவன் . நாதப் பொருள் நம்பன். கூர்ந்து - மிகுதிப்பட்டு. (14)

239. காக்க வேண்டிக் கடுந்தொழிற் சூர்கிளை
நீக்கி மாதவ னேத்திரத் துற்றுள
மாக்க யத்திரு வள்ளி மணந்தருள்
றேக்கொ டுஞ்சிறந் தான்செயந் திப்பதி.

(பொ - ரை):—அருள் பாலிக்க ஆவலித்து, கடுமைச் செயல் புரிந்த சூரனையும் (அவன்) இனத்தவரையும் அகற்றி, திருமகள் கேள்வன் திருவிழிகளில் இருந்து திருவவதரித்த தெய்வ யானையாரையும், வள்ளி யம்மையையும் திருமணம் புரிந்து, அருள் நிறைவுடன் செந்தில் பதியில் சிறக்க எழுந்தருளி யிருந்தனன், (எ - று).

(குறிப்பு) :—சூர் - அச்சம்; ஆகுபெயர்; பயங்கரமான அவுணர் தலைவனை அறிவித்த பெயர். கிளை - மரத்தைக் கிளைகள் தழுவியிருப்பது போல், என்றும் ஒன்றி யிருக்கும் உறவினர்க்கு உரிய பெயர் இது. மாக்கயத் திரு - தேவயானை யம்மை. தேக்குதல் - நிரம்பி வழிதல். (15)

240. அருமறைக்கம லாசனத் தந்தணன்
மருமலர்த்துள வத்திரு மால்மகக்
குரிசின் மற்றுள தேவருங் கும்பிடத்
திருவின் வைகிச் சிறந்தருள் காலையில்.

(பொ - ரை) :—(அழகிய) தாமரையில் அமர்ந்து, அருமை மறைகளை ஓதும் அந்தணனாகிய பிரமனும், மணங்கமழும் துளசி மலரை யணிந்த திருமாலும், (எண்ணத் தக்க) வேள்வி (களால் பதவிபெற்ற) இந்திரனும், வானவர் பிறரும் வணங்க, (அருட்) செல்வத்துடன் அமர்ந்து (அன்னார்க்கு) அருள் பாலிக்கும் சிறந்த அவ்வமயத்தில், (எ - று).

(குறிப்பு) :—மரு - கொழுந்திலேயே மணம் கொழிக்கும் தளிர். குரிசில் - ஆண்பாற் சிறப்புப் பெயர். (16)

241. யாவ ருந்தொழு தேத்த விருந்துள
மூவி ரண்டு முகத்தவன் மால்விழித்
தேவி மாருடன் சேர்ந்து கருணையின்
மேவி யன்பின் விளங்குமவ் வேலையின்.

(பொ - ரை) :—எவரும் தொழுது துதிக்க வீற்றிருந்த அறுமுக அத்தன், திருமால் விழிவழி வந்த தெய்விகத் துணைவியருடன் (கம்பீர அத்துவிதம் வெளிப்படக்) கலந்து, அருளொடு விரும்பி அன்புடன் விளக்கம் தோன்ற இருந்த அந்நேரத்தில், (எ - று).

(குறிப்பு) :—மேவி - விரும்பி ; "நம்பும் மேவும் நசை" என்பது விதி. 'சேர்ந்து......விளங்கும்' என்றது, நிறையருள் கோலம் என்று நினைவூட்டும் நிலை. (17)

242. முருக வேளுக்கு முந்திய தாரமாய்
மருவு வல்லி மதர்ப்பினின் வாய்ந்தபே
ருருவ மெய்து முவப்பினில் வேள்புணர்
பெருமி தத்தி லகந்தை பிடித்துளாள்.

(பொ - ரை):-முருகப் பரமற்கு முதன்மைத் தேவியாய் அமைந்த வள்ளியம்மை, களிப்பாலும், பேரழகுத் திருமேனி பெற்ற உவகையாலும், குமரவேள் கூடும் பெருமிதத்தாலும், முனைப்பை உடையவராயினர், (எ - று).

(குறிப்பு) :— மதர்ப்பு - போதை விளையும் களிப்பு. பேருருவம் - பெருமைத் திருமேனி. முந்திய தாரம் - முதன்மையான இச்சா சத்தி. (18)

243. இந்தி ரன்மக ளென்னிகர்க் காளெனச்
சிந்தை மேற்கொடச் சேயிழை யைத்தின
நிந்தை செய்தன ளாகவு நீதிதே
ரந்த மாது பொறுத்தன ளன்பினே.

(பொ - ரை) :—இந்திர குமாரியான தேவயானை எனக்குச் சமம் ஆகமாட்டாள் என்று திருவுளத்தில் எண்ணி, செம்மை அணிகள் அணிந்த அச்செல்வியை, நாள்தோறும் அவமதித்தல் செய்து வரவும், நீதியை ஆய்ந்து கொண்ட அத் தேவயானையார், புனித அன்பொடு பொறுத்து வந்தனர், (எ - று).

(கு - ரை) :—

" இந்தி ரன்மகள் தன்னை யிழிவொடு
நிந்தனைச் செய்கை யால்உள் நினைந்துவேல்
கந்த னுக்குள காமவி டாய்தணித்
தந்த மில்பகல் ஆற்றினள் போகமே" என்றும் பாட
முண்டு. இப்பாடம் பிழை. கருத்தாழமும் இல்லை. (19)

244. அரிகண் வந்திடு மவ்விரு வர்க்குமே
கருணை யொத்தவை வேற்கரக் கந்தவே
டிருவு ளஞ்செறி திவ்வியக் கண்ணினவ்
விருவ ருள்ளுறு மெண்ணமுந் தேர்ந்துளான்.

(பொ - ரை) :—திருமால் திருக்கண்களினின்றும் திரு வவதரித்த அவ்விரு தேவியரிடத்தும் பரம அருளைப் பாலித்த கூரிய ஞான சக்தியைக் கொண்ட கந்த முதல்வன், (தன்) திருவுளத்தின் நிறைந்த ஞான நோக்கால், அந்த இருவர் திருவுளங்களிலும் இருந்த சிந்தனைகளையும் அறிந்தனன், (எ - று).

(குறிப்பு) :—திவ்வியக் கண் - ஞான நாட்டம். "அரி வலக்கண் அவதரித்தாள் தன்மேல் கருணை வைத்த" எனவும், "திருவு ளத்திற் சிறிது ணர்ந் தன்னவர் இருவர் உள்ளத்தின்" எனவும் பாடமுண்டு. (20)

245. விண்டு வின்வலக் கண்ணிடை மேவிய
தொண்டை யந்துவர் வாய்மடத் தோகையைக்
கண்டு மெல்லக் கலங்கா முகமனு
லுண்டு காரிய மொன்றென வோதுவான்.

(பொ - ரை) :—திருமாலின் வலக்கண்ணில் திருவவ தரித்த கொவ்வைக் கனிபோல் அழகிற் சிவந்த அதரங்களும், மடப்பம் உள்ள மயில்போல் சாயலும் உடைய

வள்ளியை நோக்கி, (அவர்திருவுளம்) கலங்காதபடி, உபசார மொழிகளை உரைத்து, ஒரு செய்கை ஓத உளது என்று, (மெதுவாக) ஓதலாயினன், (எ - று).

(குறிப்பு) :—தொண்டை - கொவ்வைக் கனி. துவர்வாய் - பவளம் போல் சிவந்த உதடுகள். மடம் - "கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை". தோகை - மயில்; ஆகு பெயரால் வள்ளியாரை உணர்த்தியது. முகமன் - உபசார வார்த்தைகள். "உண்டு காரியம் ஒன்றிவண் கேட்டி நீ" என்றும் பாடம். (21)

246. மாறு மீக்கொடு வாரணப் பாவையைச்
சீறி நிந்தனை செய்தனை யன்னதாற்
கூறு கின்ற கொடுமொழிச் சாபத்தி
ஞறு சென்றவ ணுற்றிட வேண்டுநீ.

(பொ - ரை) :—பகைமையை மிகுதியாகப் பற்றி சித்திரப்பாவையைப்போன்றதேவயானையைச் சினந்து நிந்தித்தல் செய்தாய்; அதனால், (யாம்) வாய்மலரும் கொடிய சாபமொழி வழிசென்று, (யாம் கூறும்) அந்த இடத்தில் (அதை) நீ அனுபவிக்க வேண்டும், (எ - று).

(குறிப்பு) :—மாறு - பகை. மீ - மிகுதி. வாரணப் பாவை- தேவயானை. ஆறு - வழி. ஆற்றுதல் - அகற்றுதல் என்பதன் திரிபு எனினுமாம். (22)

247. தார மாயிரு வீருந் தழுவினீர்
வார முன்வயின் வைத்தன மாகவா
வீர மின்றி யிழிவுரைத் தாயதன்
கார ணத்தைக் கருத்து ளடக்கினள்.

(பொ - ரை) :—(தகுதியுள) துணைவியராக (நீங்கள்) இருவரும் (எம்மைத்) தழுவி யிருந்தீர்கள் ; (வாழும்) உன்னிடம் அன்பை வைத்தேம் ; ஆதலின், இரக்கம் சிறிதும் இல்லாமல், (அத்தேவயானையை) நிந்தித்தனை; அதன் காரணத்தை (அவள் தன்) உள்ளத்தில் (எண்ணி) அடங்கி இருந்தாள், (எ - று).

(குறிப்பு) :—தரத்தில் உயர்ந்தவரை, தாரம் என்பது வழக்காறு. வாரம் - அன்பு. வால் ஈரம் – தூய தண்ணளி. காரணம் - மான்மகள்மேல் முருகன் அன்புடைமை. (23)

248. அன்ன பான்மை யுணர்ந்தன மாதலா
லுன்னி டத்தி லுறுபவம் யாவையும்
பன்னெ டும்பக லாற்றுதல் பண்பெனக்
கொன்னி லைச்சுடர் வேலவன் கூறுவான்.

(பொ - ரை) :—அத்தன்மையை (யாம்) அறிந்துளம்; ஆதலின், உன் இடத்தில் உளதான பாவம் அனைத்தை யும் பலகாலம் அனுபவித்துக் கழித்தலே தகுதி என்று, பெருமை யுடைய ஒளிமயமான வேல் இறைவன் (மேலும்) ஓதுவான் ஆயினன், (எ - று).

(குறிப்பு) :—பான்மை - தன்மை. பவம் - தீமை. பரம குமரன் அருளாடல் பல; அவைகளை ரூபகாலங்காரமாகப் பல கோணத்தில் பாடி மகிழ்தல், அனுபூதிமான்களின் இயல்பு. அகப்பொருள் உயிர்ப்பை, தியான அனுட்டானத் தில் தேர்ந்தவர்கள் அறிவர் ; அவர்கள் அறிந்தவைகளுள் இது ஒரு செய்தி. சங்கநூலுள் ஒன்றான பரிபாடல், திருவருள் விலாசத் தெய்வ நாடகத்தை விசித்திரக் கதைபோல் விளக்கு தலைப் பின்வருமாறு காண்க. (24)

கானவர் மகளான வள்ளியை, எம்மான் மணந்தான். அதுகண்டு வானவர் மகளான தேவயானை, வான்பொழி மழைபோல் கண்ணீர் வடித்தாள்.

கற்பியல் முறையில் கடிமணம் புரிந்தேன். வள்ளி களவியல் முறையில் வந்தவள். அவள்பால் அன்பை, இவர் அதிகம் கொண்டுளர் என்று, உணர்ந்த தேவி ஊடல் கொண்டனர். அதையறிந்த குமரன், ஊடல் நீங்கும் வழியை நாடி, மேலிடத்தில் உதித்த மேன்மையளே! மங்கல குணம் உடையவளே! என்னை மன்னித்திடு என்று, தனிப் பெரும் தேவியின் தாள்மலர் வணங்கினன். உள்ளம் உருகிய தேவசேனை, எம்மான் கந்தனை எடுத்துத் தழுவினள்.

அதைக்கண்ட வள்ளியார் அழன்றார். அவனைத் தொடாதே என்று, ஆத்திரங் கொண்டு அலறி அணுகினள். கந்தன் கைகளை, பூ மாலையால் கட்டினள். அடுத்து வேறு மாலையை எடுத்தாள். அடி அடி என்று முருகனை அடித்தாள்.

அவட்குரிய மயில்கள், தேவ சேனையின் மயில்களொடு பொருதன. இருவர் கிளிகளும், வதவத என்று வசைமாரி பொழிந்தன. இருபுறத் தோழியர், அழகிய மாலைகளால் தம்முள் அடித்துக் கொண்டனர்.

இறுதியில், வள்ளியார் பக்கத்தார், வாகை சூடினர். இங்ஙனம் எல்லாம் அறுமுகர் திருமுன், உலகியல் ஆடல் பலவும் நிகழ்ந்தன.

“நயத்தகு மரபின் வியத்தகு குமர!
வாழ்த்தினேம் பரவுதும் தாழ்த்துத்தலை நினையா,
நயத்தலின் சிறந்த எம் அடியுறை
பயத்தலிற் சிறக்க நாடொறும் பொலிந்தே” என

முடித்த குன்றம் பூதனார் பரிபாடலிற் பாடும் பாடல், ஓதுவார் எவர்க்கும் உவகையை அளிக்கும். (24)

249. அலகி லாப்பொறை யாற்றிய மாதரா
ருலகெ லாந்தொழு தேத்தலு மும்பருந்
தலைவ ணங்குந் தலைமையு மெய்துவார்
நிலைமை யென்று மறையு நிகழ்த்துமால்.

(பொ - ரை) :—அளவு இலாத பொறுமை கொண்ட தேவ யானை, (தொன்மை) உலகம் முழுதும் தொழுது துதிக்கவும், இமையவரும் தலை வணங்கத் தக்க தலைமைப் பேறும் தாங்குவள் ; (இதுதான் என்றும் உள்ள) நிலை என்று, (குறிப்பாக) வேதங்கள் கூறும், (எ - று).

250. நிந்த னைக்குரித் தாகிய நீயும்வ
சுந்த ரைக்கட் சுலாவுவி லங்கின்பால்
முந்து தித்து முனைச்சிலை வேடர்பால்
வந்து ளச்சிறப் போடும் வளர்தியால்.

(பொ - ரை) :—நிந்திப்பிற்கு உரியவள் ஆன நீயும், உலகில் உழலும் விலங்கின் இடத்தில் முற்பட்டு பிறந்து, நுனி யமைந்த வில்வேடுவர் இடத்தில் வாய்த்துள சிறப்புடன் வளர்ந்து இரு, (எ - று).

(குறிப்பு) :—வசுந்தரை - நிலவுலகம். சுலாவும் - உழன்று உலவும். (26)

251, இழிவின் முன்ன ரியற்றுங் கொடும்பவ
மொழியும் பாவ மொழியுமக் காலைநா
மழன்முன் னுக வமரரொ டேகியே
விழுமி தாக மகிழ்ந்துனை வேட்குதும்.

(பொ - ரை):-(தேவயானையை) இழிவு படுத்தியதன் மூலம் தோன்றும் கொடிய பிறப்பு, (அதனுடன்)

அழியும் ; பாவம் ஒழியும் அக்காலத்தில், யாம் விண்ண வர்களுடன் வந்து, (வேள்வித்) தீயின் முன், மாபெரும் சிறப்புத் தோன்ற மகிழ்ந்து உன்னை மணந்து கொள் வம், (எ - று).

(குறிப்பு) :—' முன்னர் இழிவின் இயற்றும் ' எனக் கூட்டுக. இச்சா சக்தியாய், திருமால் வலக்கண்ணில் உதித்த நீ, உடன் உதித்தாளைச் சொல்லாலும் நினைவாலும் இழிவு படுத்தியது ' கொடும் பவம் ' என்று குறிப்பிட்டார். அழல் - அக்கினி காரியம். விழுமம் - மிக்க மாட்சி. (27)

252. என்னு மாற்ற மிளையன் விளம்பலுங்
கன்னி யுள்ளங் கவலுழந் தோமெனச்
சென்னி தாழ்ந்துளஞ் சிந்தித்து வைகினாள்
மன்னு மானின் வரன்முறை செப்புவாம்.

(பொ - ரை) :—எனவரும் மொழிகளை முருகன் இயம் பலும், கன்னிப்பருவ வள்ளி யம்மை உள்ளம் வருந்தி, (உண்மைதான் என்று) உடன்பட்டு, தலை வணங்கி, (இனி அப்படிப் பிறத்தற்குரிய வழியைத்) திருவுளத்தில் சிந்தித்துக் கொண்டு இருந்தாள்; மானின் நிலைபேறான வரலாற்றை (இனி) முறைப்படிக் கூறுவம், (எ - று).

(குறிப்பு) :—மாற்றம் - மாறுபட்டுரைத்த மொழிகள். இளையன் - சேயான முருகன். கவல் - கவலை. உழத்தல் - குழப்புதல் ; ஓம் என - உள்ளதே என்று ; செய்த தவறுகட்கு உரிய தண்டந்தான் என்று. ' ஓவென ' என்று பாடம் கொண்டு, ஐயோ என்று உரை செய்வது மரபு வழு. குற்றம் புரிந்த மேலோர், உணர்த்துவார் உணர்த்த உணர்ந்து வருந்தி, இதன் பயனை அனுபவிக்க வேண்டியதுதான் என்று முடிவு கொள்ளல் முறை. ' மானின் மன்னும் வரன்முறை ' என்று இயைக்க. (28)

## வேறு

253. காஞ்சனை யென்னுந் தெய்வக்
கன்னிகை கவுரிக் குள்ள
வாஞ்சையின் சேடி யாகி
மன்னுதல் வேட்டு விந்தைப்
பூஞ்சிலம் பிடத்து மானிற்
பொலிவுறுங் குழவி யாகித்
தேஞ்சுரும் பரற்றுங் கூந்தல்
தெரிவைவந் துதிக்கு மப்பால்.

(பொ - ரை):—காஞ்சனை எனப்பெறும் தேவமகள், உமாதேவிபால் உளதாம் அன்பால் என்றும் தோழியாகி இருத்தலை விரும்பி, பொலிவுடைய விந்திய மலையில், மான் உருவில் (புனிதத் தவ) நிலை பொருந்தியிருக்கின்றாள்; இனிய வண்டுகள் ஒலிக்கும் கூந்தலையுடைய வள்ளியம்மை, (அந்த மானின் இடத்தில், தூய) குழந்தையாகித் தோன்றுவார்; அதன்பின், (எ - று).

(குறிப்பு):—வாஞ்சை - இச்சை. சேடி - தோழி. தெரிவை - வள்ளி; பருவம் குறியாமல் வள்ளியார் எனும் பொருளில் நின்றது. (29)

254. வளனுற வெடுத்து நீங்கள்
வளர்ப்புறு மெல்லை நோக்கி
யளவறு முவப்பாற் செவ்வே
ளன்னவ டன்னை வேட்டு
கிளையுட னளிக்கு நீராற்
கிடைத்தநுஞ் சாப நீங்க
வுளமகிழ் பூத்துத் தொன்மை
போலவுற் றிருத்தி ரென்று.

(பொ - ரை) :—(பலவகையாக) நீங்கள் பயனடைய, எடுத்து வளர்க்கும் காலத்தில், அம்மகளைப் பெருமான் அளவற்ற உவகையுடன் ஆவலித்து, உறவினர் சூழ (தாரை வார்த்துத்) தருகின்ற தகுதியால் பெற்ற சாபம் பெயர்ந்து அழிய, மனத்தில் மகிழ்ச்சி மலர்ந்து, (இன்பமான) பழைய நிலையை எய்தி இருப்பீர்கள் என்று, (எ - று).

(குறிப்பு) :—நீரால் - தன்மையால். கிடைத்த-பெற்ற. (30)

255. முனிவர னுரைத்து முன்போல்
மோனத்தா றிருப்ப வன்னோ
ரனைவரு முணர்ச்சி நீங்கி
யரிவையர் மருங்கிற் செல்ல
வினையுழந் தவல மெய்தி
விந்தையஞ் சாரற் பாங்கர்க்
கனைகுரல் வேட ராகிக்
கதுமெனச் சென்று ரன்றே.

(பொ - ரை) :—முனிவர் பெருமான் (இங்ஙனம்) மொழிந்து, முன்போல் மௌன வழியில் அமர்ந்துவிட, அந்தக் கந்தருவர் அனைவரும் உணர்வு அகன்று, (தம் போல் ஆன) தோகையர் இருபுறமும் தொடர்ந்து வர, ஊழ்வினையால் குழம்பித் துன்புற்று, விந்திய மலைச் சாரலின் பக்கத்தில் வெடிக்கும் குரலுடைய வேடர்களாகி விரைந்து சேர்ந்தனர், (எ - று).

(குறிப்பு) :—முனிவரன் என்பதில், வரன் - மேம்பட்டோன் எனும் பொருட்டு. மோனத்து ஆறு - மௌனத் தவநெறி. உழந்து - உழன்று; வருந்தி. அவலம் - பலவீனம் எனினுமாம்; அகரம் - இன்மைப் பொருட்டு. கதும் - விரைவுப் பொருட்டு. (31)

256. கந்தன தருளாற் றெய்வக்
காஞ்சனை வனப்பு வாய்ந்த
சுந்தரச் சிறுமா னாகித்
தூநிலாத் தவழுங் கோட்டு
விந்தையஞ் சார லுற்ற
வேலைமால் விழியிற் றோன்று
மந்தமா னருண மானி
னணிவயி றுற்ற தன்றே.

(பொ - ரை) :—கந்தப் பரமன் கருணையினால், காஞ்சனை யெனும் தெய்வ மகள், வனப்புப் பொருந்திய சௌந்தர்ய சிறியமான் உருவம் கொண்டு, அழகான மதி தவழும் சிகரங்களை யுடைய விந்திய மலைச்சாரலை அடைந்தபொழுது, திருமால் (வலக்)கண்ணில் இருந்து வெளிப்பட்ட மான்போல் மருளும் வள்ளிமான், செந்நிறமான (காஞ்சனையாம்) அம்மானின் அழகிய வயிற்றினை அடைந்தது, (எ - று).

(குறிப்பு) :—வனப்பு - நிறையழகு. தூநிலா - தூய திங்கள். (32)

257. கருப்பத்தின் முதிர்ச்சி காட்டிக்
காறளர்ந் துடலம் வீங்கிப்
பொருப்பகத் துறைந்து பாரம்
பொறுக்கலா துழன்று வாடி
மருப்புயர் பசுங்காச் சுற்றி
மலைச்சிறு குறவ ரியாரு
மிருப்புறுஞ் சீறூர்ப் பாங்க
ரீற்றுளைந் திட்ட மாதோ.

(பொ - ரை) :—(வரவர) கருப்ப வளர்ச்சியைக் காண்பித்து, கால்கள் சோர்ந்து (நடந்து), உடல் பருத்து, (விந்திய) மலையில் தங்கி, பாரம் தாங்க முடியா மல் மெலிந்து வருந்தி, கிளைகள் உயர்ந்த பசும் சோலை கள் இடத்தில் திரிந்து, (அம்) மலையில் வாழும் சிற்றி னமான குறவர்கள் அனைவரும் தங்கி யிருக்கும் சிற்றூரின் அண்மையில், (இனிய) பிள்ளைப் பேற்றிற்கு (வயிறு) நொந்து இருந்தது.

(குறிப்பு) ;—வீங்க - பருக்க. பொருப்பு அகம் - மலையின் இடம். மருப்பு - கிளைகள். இருப்புறும் - தங்கியிருக்கும். சீறூர் - சிற்றூர். பாங்கர் - பக்கம். ஈற்று உளைந்திட்டது - பிரசவிக்க வயிறு நொந்து இருந்தது. (33)

258. சென்றமான் சுழன்று பார்க்குஞ்
செய்கையுங் கருப்பந் தாங்கி
யொன்றிய வயர்வு நோக்கி
யுயர்ந்தவான் சிலைவி டாத
குன்றுறை வேடர் யாருங்
கொம்மென வெழுந்து மானுக்
கின்றுணை யாகப் போது
மென்றன ரதனைச் சூழ்ந்தார்.

(பொ - ரை) :—(அவ்வண்ணம்) சென்ற மான், நொடித்து நோக்கும் செயலையும் (அழகிய) கருவைச் சுமந்து உண்டான அயர்ச்சியையும், எடுப்பாய்ச் சிறந்த வில்களை ஏந்திய மலைவாழ் மறவர் யாவரும் நோக்கி, விரைந்து எழுந்து, (இம்)மானுக்கு இனிய துணையாகச் செல்வம் என்று, அம்மானைச் சூழ்ந்து கொண்ட னர், (எ - று).

(குறிப்பு):—வான்-பெரிய. கொம்மென-விரைவுக் குறிப்பு.(34)

259. எழுமெழுந் தரற்றுங் காலொன்
றெடுத்தடி பெயர்க்கு மீள
விழுமிருந் திசையைப் பார்க்கும்
வெருண்டுதன் மேனி நாக்கொண்
டுழுநெடு மூச்சு வீங்கு
முலப்புரு தரற்றுஞ் சோலைப்
பழுமர மூட்டிற் சாயும்
பரிவுறும் படுக்கு மாதோ.

(பொ - ரை):—(இருந்த இடத்தை விட்டு) எழும்; எழுந்து (ஆ என்று) வாய் திறந்து அலறும்; நடக்க எண்ணி ஒரு அடி எடுத்து வைக்கும்; மீண்டும் வேதனை தாங்காமல் விழும்; பல திசைகளைப் பார்க்கும்; அச்சம் மிகுந்து நாவால் தன்னுடலை நக்கும்; பெரு மூச்சுவிடும்; (இடையிடை) ஓயாது அலறும்; சோலையில் உள்ள ஆலமர வேரில் சாயும்; துன்புற்றுப் படுக்கும், (எ-று).

(குறிப்பு):—அரற்றும் - கதறும். இரும் - பெரிய. உழும்- நக்கும். வீங்கும் - மிகும். உலப்புருது - ஓயாமல். பழுமரம் - ஆலமரம். மூட்டில்—செறிவில் எனினுமாம். (35)

260. அருணமான் இவ்வா றுள்ளத்
தயர்வுகொண் டிரங்கி ஞானத்
தருணவில் வீச வீங்குஞ்
சராசர மனைத்து மீன்று
பொருணவில் வேதம் பூத்துப்
பொருவருங் கற்பு வாய்ந்த
குருமணி யதனை வல்லிக்
கொம்பென வீன்ற தம்மா.

(பொ - ரை) :—செந்நிறமான (அந்த)மான் இங்ஙனம் மனத்தில் தளர்ச்சி யடைந்து வருந்தி, (உயர்) ஞான ஒளி வீச, பலவான பெரும் சர அசரம் (ஆகிய உலகக் கிளைகள்) அனைத்தையும் தந்து, பொருள் எனப் பெறும் வேதங்களாகிய மலர்கள் மலர்ந்து, ஒப்பற்ற கற்பு (க் கனிகளைத்) தோற்றுவிக்கும் (மரகத) ஒளி மணி யான வள்ளி யம்மையை, பூங்கொம்புபோல ஈன்றது, (எ - று).

(குறிப்பு) :—தருணம் - இளமை. பொருள் நவில் வேதம் எனப் பிரித்துப் பொருளறிக. கற்பு - கற்பு ஆகிய கனி. குருமணி - ஒளியுடைய மரகதம். வல்லிக் கொம்பு—கொம்பில் இருந்து உயிர்த்த கொடி. (36)

261. மானிடைப் பிறந்த தெய்வ
மணியினைக் கண்டு விந்தைக்
கானவர் குழாங்கொண் டுள்ளக்
களிப்பெனும் புணரி மூழ்க
வானவப் போழ்து மானு
மரிவைகாஞ் சனையம் மானைத்
தானளித் திருந்து ஞானத்
தண்ணளி பெற்ற வாற்றல்.

(பொ - ரை) :—மான் வயிற்றில் உதித்த கடவுள் மாணிக்கத்தை, விந்தை மலையில் வாழும் மறவர் கூட்டம் கண்டு எடுத்து, மனத்தில் எழுந்த களிப்பு எனும் கடலில் ஆழ நேர்ந்த அச்சமயத்தில், மானுன காஞ்சனை எனும் மங்கை, தான் வள்ளியாகிய அம்மானைப் பெற்று வைத்து, (அதன் பயனாக) தட்ப அருள் ஞானம் பெற்ற தன்மையினால், (எ - று).

(குறிப்பு) :—உப்புக்கடல், நன்னீர்க்கடல் என்பது போல், களிப்புக் கடல் எனப் பெற்றது; அளவிறந்த களிப்பு என்பது குறிப்பு. மாஞன காஞ்சனை மானை யளித்தாள் என்பது, இனம் பற்றிய நுட்பம். தட்பமும் அருளுமான ஞானம், தண்ணளி ஞானம் எனப்பெற்றது. ஞானம் உளதேல், தண்மையும் அருளும் தானே வரும் என்று உணர்க. இது குளகம். (37)

262. எண்ணிய வெண்ணி யாங்கே
யாவர்க்கு முதவும் வேதப்
புண்ணியக் கவுரி வைகும்
பொற்புறு புவனந் தன்னி
னண்ணினள் கவுரிக் குள்ள
நாடருஞ் சேடி யாகி
விண்ணவர் முனிவர் வாழ்த்த
விருந்தன டவத்தின் மிக்காள்.

(பொ - ரை) :—நினைத்தது நினைத்தபடியே எத்தகையர்க்கும் அருளும் வேதப்பொருளான விமலை எழுந்தருளிய சிறந்த உலகில் சேர்ந்தவளாய், (அத்) தேவிக்குத் திருவுளம் மகிழும் அரிய தோழி ஆகி, வானவரும் முனிவரும் வாழ்த்தத் தவத்தில் மேம்பட்டுத் தங்கினள், (எ - று).

(குறிப்பு) :—புண்ணியமே வேதப்பயன்; அதன் சொருபமே அம்பிகை என்று அறிவித்தபடி. புவனம் - தேவி உலகம். தவத்தின் மிக்காள் ஆதலின், நாடரும் சேடி ஆகி இருந்தாள் என்றார். நண்ணினள் - முற்றெச்சம். (38)

263. அடுக்கலிற் கிராதர் கூட்டத்
தனைவரு மன்பு மீதூர்ந்
தெடுத்துடன் கொடுபோய் விந்தைக்
கிறைவனைத் தொழுது வேண்டிக்
கொடுத்தன ரன்னோன் வாங்கிக்
கொண்டனன் சுற்றத் தோடுந்
தொடுத்தபே ரன்பின் மூழ்கிச்
சொல்லரு முவகை பூத்தான்.

(பொ - ரை) :—மலைவாழ் கூட்டமான மறவர் யாவரும், அன்பு மென்மேலும் அதிகரித்து, (சேயை) எடுத்து உடன் கொண்டு சென்று, விந்தை மலைக்குத் தலைவனை வணங்கி விரும்பித் தந்தனர்; அவன் (அச்சேயை ஆர்வமாக) வாங்கி, உறவினருடன் அளவளாவிப் பேரன்பில் அழுந்தி, (சொல்லால்) சொல்லிக் காட்ட இயலா அளவு மகிழ்ச்சி எய்தினன், (எ - று).

(குறிப்பு) :—அடுக்கல் - மலை; கற்களை அடுக்கி வைத்தது போன்ற தோற்றமுடைமையின் விளைந்த காரணப்பெயர். (39)

264. மனமகிழ் சிறந்து வேடர்க்
கிறைமருங் கிருந்த மான
முனைநெடுஞ் சிலைக்கை வேடர்
முகமலர்ந் தன்பு கூரத்
தனைநிக ரின்றித் தோன்றுந்
தார்க்கருங் கூந்தற் செவ்வாய்க்
கனிமொழி வனப்பின் செவ்வி
கண்டுமற் றிதனைச் சொல்வான்.

(பொ - ரை) :—வேடர் தலைவன் மனம் மிக மகிழ்ந்து, அண்மையில் இருந்த கம்பீர நுனியமைந்த பெரிய வில்லைக் கையில் கொண்ட வேடர்கள் முகம் மலர்ந்து அன்பு மிக, தனக்குச் சமம் இல்லாமல் தோன்றிய மாலை சூடிய கரிய கூந்தலும் சிவந்த வாயும் கனிந்த மொழியும் உடைய (சேயின்) அழகின் பெருக்கம் நோக்கி, பின் வரும் செய்தியைக் கூற லாயினன், (எ - று).

(குறிப்பு) :—மருங்கு - பக்கம். மானமாவது - தம் நிலையில் தாழாமை, தாழ்வு வந்துழி உயிர் வாழாமை எனினுமாம். தார் - மாலை. வனப்பின் செவ்வி - அழகின் அழகு. (40)

265. உருவத்தின் வனப்பு வாய்ந்த
வொண்டொடி சுணங்கு பூத்த
விருவெற்பின் களபக் கொங்கை
யின்னலம் பருகத் தக்கான்
றருமத்தின் தலைமை யாய்மூ
தண்டத்தி னுயிர்கட் கெல்லாங்
கருமத்தின் செயலாய் நின்று
காக்குமோர் கடவு ளாமால்.

(பொ - ரை) :—அழகு அமைந்த திருமேனியள் ஆன இம்மகளின் தேமல் படர்ந்த இருமலைகள் போலும் களப (ச்சாந்து பூசிய) குயங்களின் இனிய நலத்தை அனுபவிக்கத் தக்கவன், அறத்தின் தலைவனாகி, அண்டங்களில் வாழும் ஆன்மாக்கள் அனைத்திற்கும், (அவைகள் இயற்றும்) செயற்கு ஏற்ப இருந்து (பரம) அருளைப் பாலிக்கும் ஒப்பற்ற இறைவனே யாவன், (எ - று).

(குறிப்பு) :—ஒண்டொடி - அன்மொழித்தொகை. சுணங்கு - தேமல். வெற்பன் எனுமிடத்து, இன் - போல

எனும் உவமவுருபு. 'தலைமையாய், கன்மவழி வெளிப்பட்டுக் காக்கும் கடவுள், ஒண்தொடி இன்னலம் பருகத் தக்கான்' என்பதால், மான்வழி வந்த இம்மகள், மானிடர்க்கு உரியவள் ஆகாள் என்று மறுத்தபடி. (41)

266. இவ்வண முரைத்து வேடர்க்
கிறையவ னிரங்குந் தெண்ணீர்ப்
பவ்வநீ ருடுத்த பாரின்
பரப்பும்வா னகமும் போற்றுங்
கொவ்வைவா யமுதத் தீஞ்சொற்
கோற்றொடிக் கினிய நாமஞ்
செவ்விநன் கமைந்த வள்ளி
யென்றனன் சிறப்பின் மிக்கான்.

(பொ - ரை) :—வேடர் தலைவன் இங்ஙனம் விளம்பி, சிறப்புச் செய்தலில் உயர்ந்தவனாய், ஒலிக்கும் தெளிந்த நீருடைய கடல் புடை சூழ்ந்த மண்ணவரும் விண்ணவரும் வணங்கும் கொவ்வைக் கனிபோலும் இதழையும், அமுதம் போலும் இனிய மொழியையும், அழகிய வளையலையும் உடைய இம் மகட்கு, நற்சிறப்பு அமைந்த வள்ளியம்மை என்று இன்பம் சிறந்த பெயரிட்டான், (எ - று).

(குறிப்பு) :—இரங்கும் - ஒலிக்கும். பவ்வம் - கடல். பார் - நிலம் ; பார்க்கப்படுவது அல்லது பருமை யுடையது எனும் பொருட்டு. பரப்பு - விரிவு; பாரின் பரப்பும், வானகமும் என்பது, இடவாகுபெயர். கோல்தொடிக்கு - மகட்கு ; அன்மொழித் தொகை. (42)

267. செய்யதோர் நாமஞ் சூட்டித்
தெரிவையைத் தனது வேடத்
தையறன் கரத்தி லுய்ப்பத்
தண்ணளி சிறப்ப வாங்கிக்
கொய்ம்மயிர்க் கவரி மேய்ந்த
குடிலிடைக் கொடுபோய்ச் சூழ்ந்த
வையக மளிக்குந் தாயை
மகளென வளர்க்கின் றுளால்.

(பொ - ரை) :—மங்களமான ஒப்பற்ற (அப்) பெயரை வைத்து, தன் (துணைவியான) வேடமாதின் கையில் வள்ளி யம்மையை அளிக்க, (அவள்) குளிர்ந்த அருள் பெருக வாங்கி, (கவரிமானின்) கொய்த மயிர்க் கூறை வேய்ந்த சிறு மாளிகையுள் எடுத்துச் சென்று, (கடல்) (சூழ் உலகை (க் காக்கும்) அன்னையான வள்ளியாரை, (தன்) மகள் எனக் கொண்டு வளர்த்து வரலாயினள், (எ - று).

(குறிப்பு) :—செய்யது - செம்மையது ; பண்புப் பெயர். தெரிவை-பருவம் குறியாது மகளெனும் பொருட்டாக நின்றது. தையல்-தன்னை அழகு செய்யத் தானே அறிந்தவள் எனும் பொருட்டு. உயப்ப – சேர்க்க. தண்ணளி-குளிர்ந்த அருள். கொய்ம் மயிர்-கத்தரித்த மயிர். கவரி - கவரிமான். மேய்ந்த-போர்த்த. குடில் - சிறுமாளிகை; இது சிற்றில் எனப்பெறும். தாயை மகளென வளர்க்கின்றுள் எனும் பகுதி, அருமையான செய்தி. (43)

268. கடவுளர்க் கமுத மன்ன
கனிமொழிப் பவளச் செவ்வாய்
மடவரல் வசந்த கால
மென்னுமோர் மடந்தை தூண்டாச்
சுடர்மணி விளக்கம் போலத்
தோமறு வடிவம் வாய்த்து
முடிவிலா மறைகட் கெட்டா
முதல்வியாங் கிருந்தாண் மன்னோ.

(பொ . ரை):—ஏதம் இல்லா வேதங்கட்கு எட்டாத தலைவி, அமரர்கட்கு உரிய அமுதம் ஒத்த கனிந்த சொற்களையும், பவளம் ஒத்த சிவந்த வாயையும் உடைய சிறு மகளாய், வசந்த காலம் எனும் வனிதை தூண்டப் பெறாத ஒளியினை யுடைய (தெய்வ) மாணிக்க விளக்குப் போல், குற்றம் அற்ற திருமேனி கொண்டு அங்குத் தங்கி இருந்தனள், (எ - று).

(குறிப்பு):—அன்ன - போல எனும் உவம உருபு. 'மடவரல்' 'மடந்தை' 'விளக்கம் போலத் தோமறு வடிவம்' என்பவை, பருவப் பொலிவை நினைப்பித்தன. வேதங்கள் அபரஞானம் அளிப்பன; முதல்வி - பரஞான சொரூபம்; ஆதலின், 'முடிவு இலாத மறைகட்கு எட்டா முதல்வி' என்றார். 'தூண்டா சுடர்மணி விளக்கம்' என்றது, தூங்கா விளக்கு எனும் குறிப்பு. (44)

269. கொல்லையங் குறிஞ்சிக் கோட்டுக்
குறவர்தங் குடிலி னுப்பண்
மல்லலஞ் சிறப்பின் மேலாம்
வள்ளியுஞ் சரற்கா லத்துச்
சொல்லுமுற் பக்கத் துற்ற
சுடர்மதி போன்று ளன்னு
ளில்லிடை மலரின் மாரி
யிரவுநண் பகலுந் தூற்றும்.

(பொ — ரை) :—முல்லை நிலத்தை அடுத்த குறிஞ்சி நிலத்து மறவர்களுடைய சிற்றிலின் நடுவில், வளமுறும் அழகிய சிறப்பின் மேம்பட்ட வள்ளி யம்மையும், கூதிர் காலத்துக் கூறப்பெறும் வளர்பிறையில் நேர்ந்த ஒளி யுடைய மதியை ஒத்தனள் ; அவளுடைய திருமாளிகை யில், இரவும் பகலும் மலர்மழை பெய்யும், (எ - று).

(குறிப்பு) :—கொல்லை - காடு சார்ந்த முல்லை நிலப் பெயர். குறிஞ்சி - மலைநிலப் பெயர். கோட்டு மறவர் - மலைவாழ் வேடர்கள். கோடு — மலை. நாப்பண் - நடுவில். மல்லல் - வளம். சரற்காலம் - ஐப்பசி கார்த்திகை மாதங்கள். முன் பக்கம் - வளர்பிறைப் பருவம். சுடர்மதி - ஒளிர்கின்ற பிறை. இல் - வீடு. மாரி - மழை. தூற்றல் - பெய்தல். (45)

270. அண்டர்தம் முரசி னார்ப்பு
மருவிநீர் சொரியு மார்ப்புந்
தொண்டக முழவி னார்ப்புஞ்
சூழ்தரும் வரைப்பா லுற்ற
கெண்டையந் தடங்கட் செவ்வாய்க்
கிள்ளையைப் பிள்ளை யென்று
ளெண்டரு நிதியம் வாய்த்த
விருநில விளக்கம் போன்றாள்.

(பொ - ரை) :—(அமரர்களுடைய) பறையின் ஆர வாரமும், அருவிகளிலிருந்து (ஓயாது) நீர் வீழ் ஓசையும், குறிஞ்சி நிலப் பறைகளின் ஓசையும், சூழ்ந்த (அம்) மலை யின் இடத்தில் சேல்மீன் போன்ற பெரிய கண்களையும் சிவந்த வாயையும் உடைய கிளியான வள்ளியம்மையை (த் தன்) மகள் என வளர்த்த வேட அரசி, எண்ணத் தக்க செல்வத்தை (த் தன்னுள்) கொண்ட பெரு நிலம்போல் பிரகாசித்தாள், (எ -று).

(குறிப்பு) :—**அண்டர்தம் முரசு – தேவ துந்துபி. தொண்டகம் - மலைநிலத்தர் முழக்கும் ஒருவகைப் பறை. வரை - மலை. கிள்ளை – வள்ளியம்மை; ஆகுபெயர். கிளிபோல் கொஞ்சிப் பேசுபவள் என்பது குறிப்பு. எண் – மதிப்பு. விளக்கம் - ஒளி; விளக்கு எனும் பொருட்டு. வள்ளி யம்மை பெருஞ் செல்வம்; வேட அரசி, நிலம். பூமியுள் இருக்கும் புதையல்போல், மறவர் தலைவியிடம் வள்ளியார் மறைந்து வளர்ந்தார் என்பது குறிப்பு.** (46)

271. பெண்ணலங் கனியப் பேதை
பெதும்பையுங் கடந்து வேற்கைப்
பண்ணவர்க் கினிய மங்கைப்
பருவம தடையுங் காறும்
வண்ணவிற் கிராதர் வேந்தன்
மைந்தரில் லாத சோகத்
தெண்ணமுள் ளொழித்து மாதை
யினிதுடன் மகிழ்ந்து காத்தான்.

(பொ - ரை) :—(நாணம், மடம், அச்சம், நடுக்கம் எனும்) காரிகைப் பண்புகள் கனியவரும் பேதைப் பருவம், பெதும்பைப் பருவம் (இரண்டையும்) தாண்டி, வேல் ஏந்திய திருக்கரத்தை யுடைய முருகனுக்கு இன்பம் தோற்றுவிக்கும் மங்கைப் பருவம் வரும்வரை, அழகிய வில்லுடைய வேடர் தலைவன், மக்கள் இல்லாத (தன்) துன்பத்தை மனத்தில் இருந்து மாற்றி, வள்ளியம்மையை இனிய நலத்தொடு மகிழ்ந்து வளர்த்தான், (எ - று).

(குறிப்பு) :—நலம் – குணம். பேதை வயது ஏழு; பெதும்பை வயது பதினொன்று; மங்கை வயது பன்னிரண்டு. பண்ணவன் - தூயவன்; நாதரூபன் எனினுமாம். வண்ணம் - நிறம்; அழகுமாம். கிராதர் - இரக்கம் அற்ற வேடர்கள். (47)

272. அனைத்துல களிக்குந் தாயை
யன்புடன் வளர்க்கு மேல்வைத்
தினைப்புனங் காக்கு மற்றச்
சேடிய ரிவளை வாவென்
றினக்கிளி கடியப் போது
மென்றன ரிவளு மேனற்
புனத்திளங் கிளிக ளோச்சப்
போந்தனள் பொருவி லாதாள்.

(பொ - ரை) :—அகில உலகையும் காக்கும் அன்னையை (ப் புனித) அன்புடன் வளர்க்கும் பொழுது, தினைப் புனங்களில் இருந்து காவல் செய்யும் பிற தாதிகள், இவ் வள்ளி யம்மையை, (குரலில் நம்) இனமான கிளிகளை விரட்டச் செல்வம் வருக என்றனர். ஒப்பிலாத இம் முதல்வியும், தினைப்புனத்தில் உள்ள இளங்கிளிகளை விரட்டப் புறப்பட்டாள், (எ - று).

(குறிப்பு) :—கிளி - கிள், கிள் என்று ஒலித்தலில் போந்த பெயர். கடிதல் - விரட்டுதல். ஏனல் - தினை. புனம் - காடு. ஓச்ச - விரட்ட. பொருவு - ஒப்பு. (48)

273. மாதரு மிவளு மேனல்
வனத்திடை யிருத்தல் கண்டு
காதலி னரம்பு பாடுங்
கந்தரு வத்த ரிம்மான்
பாதபங் கயத்தி னாலே
பருப்பத முன்செய் துள்ள
தீதகன் றளவி லாத
சிறப்பினைப் பெற்ற தென்றார்.

(பொ - ரை) :—தாதியரும், இந்த அம்மையும் தினைப் புனத்தில் இருப்பதை அன்பொடு யாழ் இசைக்கும் கந் தருவ இனத்தவர் அறிந்து, இத்தேவியின் திருவடிக் கமல (ப் பரிச)த்தால், (இம்) மலையானது முன் செய் தீவினை நீங்கி, அளவு இலாத சிறப்பை அடைந்தது என்றனர், (எ - று).

(குறிப்பு) :—காதல் - முதிர்ந்த அன்பு. நரம்பு - யாழ்; ஆகு பெயர். பாதபங்கயம் - உருவகம். (49)

274. அண்டகோ டிகட்குந் தாயா
மணங்கினை மகளாக் கொண்ட
வண்டிருங் குழற்கி ராத
மடந்தைமா தவத்தை யெம்மால்
விண்டிட லெளிமை யன்றால்
வேடருக் கரசன் வாழ்க்கை
கொண்டபே ரன்பி னுள்ள
குலமெலா முயர்ந்த வம்மா.

(பொ - ரை) :—அளவிலாத அண்டங்களை யீன்ற அன்னையான (இத்) தேவியை, வண்டுகள் மொய்த்த கூந்தலை யுடைய வேடுவ அரசி மகளாக வளர்த்த (முன் னைய) தவத்தின் முதன்மையை, எம்மால் எடுத்துக் கூறல் எளிது அல்லவே. (இத்தேவிபால்) கொண்ட அன்பால், வேடர் மன்னனது (மாபெரும்) குலம் முழு தும் மதிப்படைந்தது, (எ – று).

(குறிப்பு) :—அணங்கு - தெய்வ மகள். இரும் - நெருங்கி மொய்த்த. குழல் - கூந்தல். விண்டிடற்கு - கூறுதற்கு. அம்மா - வியப்பிடைச் சொல். ‘ தவத்தை யாம்வாய் ’ எனவும், ‘ அரசன் வாழ்வோ ’ எனவும் பாடம். (50)

275. கொன்னிலை நெடுவேற் செங்கைக்
கொற்றவ னரிது நோன்புப்
பன்னெடுங் கால மாற்றப்
பண்புறு தவத்தின் பான்மை
மின்னெனும் வடிவந் தாங்கி
வேடர்தம் மரபி லுற்றா
லன்னவன் தவத்தை யம்மா
வறையலாந் தகமைத் தன்றே.

(பொ - ரை) :—நெடுஞ் சிறப்புடைய இலை வடிவான நீள்வேல் ஏந்திச் சிவந்த கையுடைய வேட மன்னன், சிறந்த தவத்தைப் பலகாலம் செய்ய, தகுதியுடைய (அத்) தவத்தின் சொரூபம், மின்னற் கொடிபோலும் பெண்ணுருப் பெற்று, மறவர் குலத்தில் உதித்த தாயின், அவன் தவத்தை அறுதியிட்டு உரைக்க வல்லவர் எவர், (எ – று).

(குறிப்பு) :—கொன் - பெருமை ; தொல்காப்பியம். கொற்றம் - வெற்றி ; அதை யுடையவன் கொற்றவன். நோன்பு - விரதசீலம். பண்பு - குணம். பான்மை – பரிசு. தகமைத்து–தகுதி யுடையது. “அம்ம கேட்பிக்கும்” என்பது தொல்காப்பியம். ‘யாரோ அறைந்திட வல்ல ரம்மா’ எனவும் பாடம். (51)

276. என்றுளம் வியப்பு மீதூர்ந்
தெடுத்தெடுத் துரைத்து வான்றோய்
குன்றிடத் திருந்த ஞானக்
குருமணி விளக்கைக் காம
வன்றளை யறுத்து மூத்த
முனிவரர் வழுத்தி நாளுஞ்
சென்றவ னிருப்ப மாதுஞ்
சிறப்பின்வீற் றிருந்தா ளன்றே.

(பொ - ரை):—என்று மனத்தில் வியப்பு மிகுந்து, (இவைகளையே பல தரம்) எடுத்துக் கூறி, இச்சையாகிய கொடிய விலங்கை முறித்து முதிர்ந்த முனிபுங்கவர்கள், வானளாவிய மலையில் (இன்பங் கொண்டு) எழுந்தருளி யிருந்த ஞான ரூபமான நிறமமைந்த இரத்தின தீபத்தை, (ஒவ்வொரு) நாளும் சென்று (தூய உளத் துடன்) துதித்து இருப்ப, வள்ளியம்மையும், வேறு ஒரு வர்க்கும் இல்லாத சிறப்புடன் (இனிது அங்கு) இருந் தனள், (எ - று).

(குறிப்பு):—மீதூர்தல் - மென்மேலும் மிகுதல். வான் தோய் - மேகங்கள் படிந்த எனலுமாம்; வான் - ஆகு பெயர். குரு - நிறம்; உயர்வுமாம். வன்தளை - வலிய பாசம். வழுத்தி- வழிபட்டுத் துதித்து. (52)

வள்ளியம்மை திருவவதார அத்தியாயம் முற்றிற்று.

---

## 7. வள்ளியம்மையிடம் சென்ற அத்தியாயம்

277. முதிருந் தினைமொய்த் துயர்கொல் லையெலாங்
கதிர்கண் டுகவண் கொடுகன் னியர்தா
மிதணின் றுபுள்யா வையுமின் குரலா
லதிரும் படியோச் சினரவ் வரையின்.

(பொ - ரை) :—அம்மலையில் (உள்ள) வேட அரிவையர், முதிர்ந்த தினைப்பயிர் அடர்ந்து உயர்ந்த வனம் முழுதும், (வளர்ந்த) கதிர்களைக் கண்டு, பரணில் (ஏறி) இருந்து, கவணைக் கரத்தில் கொண்டு, (கதிர் கவர வரும்) பறவைகள் அனைத்தையும், (தமது) இனிய குரலால் அதிரும்படி ஓட்டினர், (எ - று).

(குறிப்பு) :—கொல்லை - (தினைப்) புனம். இதண் - பரண்; இது சில இடங்களில் அட்டாலை எனப் பெறும். புள் - பறவை. ஓச்சுதல் - ஓட்டுதல். (1)

278. தினைகாத் துளசே டியரோ டெளியேன்
வினைநீக் கியவேள் புணர்மின் னனையாள்
மனைநீத் துமடந் தையரோ டுசெலா
நனிவேட் கையினு டினளே னலையே.

(பொ - ரை) :—எளிய என் கன்மத்தைக் கழித்த கந்தப் பரனைக் கலக்கும் மின்னலிடை யன்னை, (தம்) வீட்டை விட்டுத் தாதியருடன் வெளிப்பட்டு, மிக்க விருப்புடன், தினைக்காவல் செய்யும் தோழியருடன் ஏனல் புனத்தை எய்தினர், (எ – று).

279. புள்ளன் பொடுமோச் சியபொற் றொடியார்
நள்ளன் பொடுபோ யிதணு டிமனத்
துள்ளன் பொடுகூ டியுறைந் துசெவ்வாய்
விள்ளுஞ் செயலா லவண்மே வினளால்.

(பொ - ரை):—பறவைகளை (வருத்தும் கருத்தின்றி) அன்பொடு விரட்டும் மாதர்கள் நடுவில், இந்த அன்னை யும் பற்றொடு சென்று பரணில் ஏறி, உள்ளத்து அன் பொடு உறவு பூண்டு இருந்து, சிவந்த வாய் திறந்து (ஆலோலம் என்று) கூறும் செயலுடன், அந்த இடத்தை விரும்பி இருந்தார், (எ - று).

(குறிப்பு):—பொற்றொடியார் – அழகிய வளையல் அணிந்த அரிவையர்கள். விள்ளும் - வாய் திறந்துரைக்கும். (3)

280. அக்கா லையிலந் தரவா னெறியான்
மைக்கார் முகிலா மயில்வா கனவேள்
புக்கா னதுபோழ் துபுனத் திடையே
இக்கா மொழியெய் துதனைக் கினனால்.

(பொ - ரை):—அச்சமயத்தில் ஆகாயம் ஆகிய அரிய வழியில், கருமேகம் போன்ற மயில் மேலமர்ந்த கோலத் தில் குமரவேள் வந்து, அப்போது தினைப்புன நடுவில் கரும்பென இனிக்கும் மொழிகளை யுடைய வள்ளியம்மை இருத்தலை கண்டான், (எ - று).

(குறிப்பு):—அந்தர வான் நெறி - தூய விண்வழி. மைக் கார் முகிலாம் என்பது, மயிலுக்கு உவமை. இக்கு - கரும்பு. (4)

281. பிறையா நுதலா கியபே ரழகும்
மறைவா ணியைநேர் சொலும்வா சகமு
நறையார் மலரோ தியுநாண் மலருங்
கறையா ரயில்வே லிறைகண் டனனே.

(பொ - ரை) :—பிறைபோல் நெற்றிப் பேரழகையும், (தெய்வ) மறை வாக்குப்போல் உரையாடும் திருமொழிகளையும், மணம்நிறை புதிய மலரணிந்த கூந்தலையும், நிறமார்ந்த கூர்வேல் குமரன் நோக்கினன், (எ - று).

(குறிப்பு) :—வாணி – வாக்கு. நேர் - ஒப்பு. நறை - மணம்; தேனுமாம். ஓதி – கூந்தல். நாள் மலர் - புத்தம் புது மலர். கறை – உதிரக்கறை; இது மறக்கருணையின் நிறம் என்பது மரபு. அயில் - கூர்மை.

282. கருணைக் கடலா கியகண் ணிரையு
மருணத் திருமே னியுமா றுமுகத்
தருணத் தலர்தா மரைநாண் மலரின்
வருணத் தையுநோக் கினண்மான் விழியாள்.

(பொ - ரை) :—கருணை வெள்ளமாகிய பன்னிரு கண்களையும், செந்நிறத் திருமேனியையும், ஆறுமுகங்களின் பருவத்தில் மலரும் பங்கயப் புதுமலர் போன்ற நிறத்தையும், மான்போல் மருளும் கண்களை யுடைய வள்ளியம்மை கண்டனள், (எ - று).

(குறிப்பு):–'மான் விழியாள், கண்ணிரையையும், திருமேனியையும், வருணத்தையும் நோக்கினள்' எனக் கூட்டுக. (6)

283. பிடிபோல் நடைபெற் றுளபெண் ணமுதை
வடிவே லிறைகண் டுமகிழ்ச் சியினுற்
படைவேள் கணைபாய் தொறுமா விரகக்
கடன்மூழ் கிமிகும் துயர்கை யுறவே.

(பொ - ரை)!—பெண் யானைபோல் நடை கொண்ட பெண்களுள் அமுது ஒத்த பெருஞ் செல்வியை, வடிவேல் முருகன் மகிழ்ந்து நோக்கி, படைகளையுடைய காம வேள் கணைகள் பாயும் தோறும் பெரிய ஆர்வப் பெருங் கடலில் ஆழ்ந்து, (உள்ளத்தில்) மிகுதுயர் உள தாக, (எ - று).

(குறிப்பு) :—இது குளகம்; 'நிகழ்த்திடுவான்' எனும் பதி ஞோராம் பாட்டுடன் முடியும். கையுறல் - (உளத்தில்) உண்டாதல். (7)

284. அல்லோ குழலோ வறியேன் மதவேள்
வில்லோ நுதலோ விரகந் தருவாள்
சொல்லோ கிளியோ துவரோ விதழோ
பல்லோ தளவோ வுவமிப் பதுவே.

(பொ - ரை) :—காமக் கலக்கம் தரும் இவளிடம் இருப்பது இருளா கூந்தலா? அறிய இயல வில்லையே; காமவேள் (கை) வில்லா நெற்றியா? காமம் விளைவிப்பாள் (ஆன இவளின்) மொழியா (அல்லது) கிளியின் குரலா? பவழமா உதடுகளா? பற்களா முல்லை அரும்புகளா? (எப்படி) உவமிப்பது? (தெரியவில்லையே), (எ - று).

(குறிப்பு) :—அல் - இருள். குழல் – கூந்தல். மதவேள் - செருக்குடன், இச்சை சேரச் செய்பவன் எனும் பொருட்டு. நுதல் - நெற்றி. விரகம் - காமகலகம். தளவு - முல்லை. (8)

285. மானோ கடுவோ வடுவோ கமலந்
தானோ மதனன் சரமோ கருமைத்
தேனோ குவளைத் திருநாண் மலரோ
மீனோ விவள்வாள் விழியே லிணையே.

(பொ - ரை) :—இவளது ஒளியுடைய வேல்போலும் இரு கண்களும் மானோ, நஞ்சோ, (மாம்) பிஞ்சோ, கமலமோ, காமன் கணையோ, கருவண்டோ, குவளை யின் அழகிய புதிய பூவோ, (கயல்) மீனோ? (தெரியவில்லையே), (எ-று).

(குறிப்பு) :—கடு - விடம். வடு - மாவடு. தானோ என்பதில், தான் - அசை. மருட்சியிலும், உயிர் கவரும் நிலையிலும், வடிவிலும், செவ்வரியிலும், உளத்தில் பதியும் உருவிலும், நிறத்திலும் கண்கட்கு உவமைப் பொருள்களைக் காட்டியபடி. (9)

286. புருவத் திணையோ பொருவேள் சிலையோ
விருவெற் பவையோ விணைவார் முலையோ
வுருவத் தியலோ மயிலோ வுலைவேன்
விரகத் துறமூட் டியமெல் லியலே.

(பொ - ரை) :—இச்சை எழுமாறு (தீ) மூள வைத்த மிருதுத் தன்மை யுள்ள இவளிடம் (இணைந்தவை) இரு புருவங்களோ, (வீறு) போர்க் (காம) வேளின் விற்களோ, இரு மலைகளோ, கச்சிறுக்கிய முலைகளோ, உருவ சாயலோ, மயிலேதானோ? (அறிய இயலாமல்) வருந்துபவன் ஆயினேன், (எ - று).

(குறிப்பு) :—இணை - இரண்டு. பொருவேள் - கலகமிடும் காமன். வார்-கச்சு. இயல்-சாயல். உலைதல்-வருந்தல். (10)

287. என்று றுமுகே சனிரும் பனியார்
குன்று னதிழிந் துகுளிர்ந் தநரு
மென்று துகுசோ லையின்மெல் லியன்முன்
னின்று னவளோ டுநிகழ்த் திடுவான்.

(பொ - ரை) :—என்று எண்ணிய ஆறுமுக எம்மான், மாபெரும் பனிநிறைந்த விந்திய மலையினிடத்து இறங்கி, குளிர்ந்த தேனையும், மென்மை மகரந்தங்களையும் சிந்து கின்ற சோலையில் இருக்கும் மென்மைச் சாயலுடைய தேவியின்முன் நின்று, அந்த அம்மையுடன் வார்த்தை யாடல் ஆயினன், (எ - று).

(குறிப்பு) :—இரும் - வலிமை ; மிகுதியுமாம். **(11)**

288. வேயார் வரைமீ துபுனத் தினுள
நீயா ரிடமே துநினைப் பெறுமோர்
தாயா ருடந் தையரார் பவள
வாயா ரமுதே வறியேற் குரையாய்.

(பொ – ரை) :—பவளம்போல் வாயுள (புனித) அமுது போல்பவளே ! மூங்கில்கள் நிறைந்த மலைமேல் உள்ள (இத்) தினப்புனத்து இருக்கும் நீ யார் ? (உன்) ஊர் யாது ? உனைப்பெற்ற ஒப்பற்ற அன்னை யாவள் ? பெற்ற தந்தை பெயர் யாது ? அகதியான எனக்கு அறிவிக்க மாட்டாயா ? (எ - று).

(குறிப்பு) :—**வறியன்**–செல்வியை சேர்ந்தவன் செல்வன் ; இப்போது இல்லாதவன் ஆதலின் பெருமான், தன்னை 'வறி யேன்' என்கிறான். மற்று, வறுமை - சிறுமை எனப் பொருள் கொண்டு, பெண்மை வலமுறின் பெருமை ; இந்நேரத்தில் **அது** இல்லை யாதலின், வறியேன் என்றான் எனினுமாம். (12)

289. கொன்னே குறமா தர்குழூஉ வராு
னென்னே யுனைவேட் டுளன்யாண் டுளனோ
நன்னே யமொடென் முனவிற் றுதியாற்
பொன்னே விலகாய் பொருவேள் கணையே.

(பொ - ரை) :—வீணே குறமகளிர் கூட்டத்துள் வந்தது ஏன்? உன்னை விரும்பி மணக்க இருப்பவன் எங்குளன்? நலம் சிறந்த அன்புடன் என்முன் உரைத்தருள்; திருமகள் போல்பவளே! போரிடும் வேளின் கணைகளை விலக்கி யருள், (எ-று).

(குறிப்பு) :—கொன்னே - வீணாக. குழூஉ - கூட்டம்; இசை கருதி அளபெடுத்தது. வேட்டுளன் - (மணக்க) விரும்பினோன். யாண்டு - எவ்விடம். நேயம் - அன்பு. நவிற்றுதி - கூறுக; ஆல் - அசை. விலக்காய் - என்பது, ஓசை நயம் கருதி விலகாய் என நின்றது. (13)

290. வாளா வொருகன் னிகைமா தரெனிற்
கேளா யிவணீ கிரணந் தருபொற்
றோளா ரிருசுந் தரமால் வரைமே
ளுளார் தொடைசூட் டுவனன் குறவே.

(பொ - ரை) :—(கடி மணமின்றிச்) சும்மா இருக்கும் ஒரு கன்னிப் பெண் எனில், இங்கு நீ கேண்மை என் மொழி) கேட்டருள், ஒளி வீசும் பொன்னிறமான பன்னிரு தோள்களாகிய அழகிய பெரிய மலைகளின் மேல் (உள்ள) நிறை மண மாலையை, (ஒரு) மங்கள நாளில், (உனக்கு) நலமுறச் சூட்டுவன், (எ-று).

(குறிப்பு) :—வாளா - வறிது. கன்னிகை - மணம் ஆகாத மங்கை. கிரணம் - ஒளி. மால் - பெரிய. நாள் - சுபயோக சுபதினம். தொடை - மாலை. நன்றே - மங்கலமாக.

291. மன்றற் றொடைசூட் டுதிமான் மகணீ
யென்றற் புதமோ டுசெவ்வே ளிசையக்
குன்றக் குறமான் குமரன் புயமே
லொன்றக் கணிரண் டுமுறக் கவிழா.

(பொ - ரை):—மான் தந்த மகளே! நீ (எனக்கு) மணமாலை சூட்டுக என்று, அற்புதமாகக் குமரன் அறிவித்தருள, மலைவாழ் மறவர் மகளான அம்மை, குமரன் தோள்மேல், (தன்) சிறந்த கண்கள் இரண்டும் செல்ல, (நாணத்தால் தலை) குனிந்து, (எ-று).

(குறிப்பு):—மன்றல் தொடை - மணமாலை. இசைய - உரைக்க. கவிழா - சிரந்தாழ. இது, குளகம். (15)

292. உள்ளத் தினில்வே ளொருநாற் படையு
மெள்ளச் செலவிட் டதின்மெய் வியராத்
தள்ளற் கருநா ணொடுதா னகையா
வள்ளத் துணைவார் முலைவாய் திறவா.

(பொ - ரை):—காமன் ஒப்பற்ற நாற்படையையும், (சிறிது) சிறிதாக மனத்தில் செலுத்தினன்; (அதனால்) திருமேனி வியர்த்து, கிண்ணம் போலும் கச்சுள் அடங்கிய கனதன அம்மை, தள்ளமுடியாத நாணத்துடன், தனக்குள் நகைத்துத் திருவாய் திறந்து, (எ-று).

(குறிப்பு):—குளகம்; இது 'தொடி வாய்ந்த கை சொற்றலும்' என்ற 18 ஆம் பாட்டொடு முடியும். காமனது தேர், யானை, குதிரை, காலாள்களை நாற்படை என்றார். வியரா - வியர்த்து. நாண் - நாணம். வள்ளம் - கிண்ணம். துணை - இரண்டு. வார் - கச்சு. வார்முலை - அன்மொழித் தொகை. நகையா, வாய் திறவா எனக் கூட்டுக. (16)

293. விந்தைக் கிரிவேந் தனளித் தருள்வோ
னந்தக் கிரியா யிழையா ளருடாய்
சிந்தைக் குரியீர் சிறியேன் பதியோ
சந்தப் பொழில்சூழ் தருதாழ் வரையே.

(பொ - ரை):—(மனத்தால்) மனனம் செய்தற்கு உரியவரே! விந்திய மலை மன்னன் (எனைத்) தந்த தந்தை; அம் மலைக்குறத் தலைவி, (எனை) அளித்த தாய்; சிறியவளான எனது இருப்பிடமோ, சந்தனத் தருக்கள் சூழ்ந்த (அம்) மலையின் அடிவாரம், (எ-று).

(குறிப்பு):—கிரி-மலை. ஆயிழை - ஆய்ந்து எடுத்த அணிகலனுடைய தலைவி; அன்மொழித் தொகை. சந்தம் - சந்தனம். பொழில் - சோலை. தாழ்வரை - மலை யடிவாரம். (17)

294. அடியேன் சிறுகன் னிகையா குமெனத்
தொடிவாய்ந் தகைசொற் றலுமன் னவள்பாற்
கடிவாய்ந் தகடம் பன்மிகுந் துயரா
லுடன்வாஞ் சையினோக் கினனொண் ணுதலை.

(பொ - ரை):—அடியவளாகிய நான், (இன்னும்) மணமாகாத இளங் கன்னியாகும் என்று, வளையணி திருக்கர வள்ளியார் கூறலும், அத்தேவி யிடத்தில், மணம் அமைந்த கடப்ப மாலையணி இறைவன், மிக்க துன்பம் கொண்டு, ஒளிநுதல் வள்ளியாரைப் பரிவு மிகுந்து ஒருசேரப் பார்த்தருளினன், (எ-று).

(குறிப்பு):—சிறுகன்னி – இளங்கன்னி. தொடி வாய்ந்த கை–அன்மொழித் தொகையாய் அம்மையை உணர்த்தியது. கடி - மணம். கடம்பன் - கடம்பமாலை யணிந்த கந்தப் பிரான். இத்துணைச் சிறந்தவள் இவ்வளவு எளிய இடத்தில் இருப்பதோ என்று துயரமும், ஒளிநுதல் அவர்பால் வாஞ்சையும் உற்றனன் என்றபடி. (18)

295. அன்பா லறுமா முகவே ளரிணை
மின்பால் விழிவைத் ததைமீட் பரிதா
யுன்பா லருள்வைத் தனமொண் ணுதனீ
யென்பால் வதுவைக் கிசைவா யினியே.

(பொ - ரை) :—அறுமுக அத்தன், மான் மகளிடத்து அன்பால் வைத்த கண்களை மீட்க இயலாமல், ஒளி நுதல் அணங்கே! உன்னிடத்து (வளரும்) அருளை வைத்தேம்! இனிமேல், என்பால் மணத்திற்கு நீ இசைவுகொள், (எ – று).

(குறிப்பு) :—அரிண மின் - மான் பெற்ற மகள். அரிணம் - மான். பால் - இடம், ஏழனுருபு. வதுவை - திருமணம். (19)

296. எனவா றுமுகே சனியம் புதலுங்
கனிவாய் மொழியன் பொடுகா தலியாத்
தனிநா யகரே தருமந் தவறு
முனியா தருள்வீ ரெனவே மொழிவாள்.

(பொ - ரை) :—என்று ஆறுமுகப் பரன் அருளுதலும், கனிவாகப் பேசும் அம்மை, அன்பொடு (அமலனை) ஆவலித்து, ஒப்பற்ற நாயகரே! அறம் பழுது அடையாதபடி, மறுக்காமல் (அடியேனை) மணந்தருளும் என்று (மேலும்) மொழிவார் ஆயினர், (எ - று).

(குறிப்பு) :—ஆறுமுக ஈசன் என்பது, ஆறுமுகேசன் என்று ஆயது; அமுன் ஈரின் ஏ ஆகும் என்பது விதி. ஈசன் - பெருஞ் செல்வப் பிரபு. கனிவாய் மொழி - அன்மொழித் தொகை. முனியாது - வெறுக்காமல். (20)

397. குரவோர் களளித் திடுகொள் கையினல்
வரைவா ருடன்வாழ் வதுவே மரபாம்
கரவா லொருகா ளையர்கை யுறலாற்
றரைமீ துயர்கன் னிமையுந் தவறும்.

(பொ - ரை) :—தந்தை தாயர் தரும் இயல்பால், மணப்பாருடன் வாழ்வதுவே முறையாகும். திருட்டுத் தனத்தால் ஒரு தலைவர் கைப்பற்றுதலால், தரணியில் உயர்ந்த கன்னித் தன்மையும் தவறுபடும், (எ - று).

(குறிப்பு) :—குரவோர் - பெற்ருேர். வரைவார் - மணப்பார். கரவு - கள்ளத்தனம். கையுறல் - கைப்பற்றல். கன்னிமை - பெண் தன்மை. (21)

## வேறு

எனையரு டந்தை தாய ரின்னருள் பெற்ருேர் தம்பால்
வினவுதி ருமது தோற்றம் வியப்புற நோக்குங் காலை
யனையவ ருதகத் தோடு மளியனை யழல்சான் ருகக்
கனைமுர சோதை யார்ப்பக் கடிமணம் புரிவிப் பாரால்.

(பொ - ரை) :—எனைப் பெற்ற தாய் தந்தையரது இனிய அன்பிற்குப் பாத்திரமான (மற்றவர்) மூலம், (என்னை மணம் செய்து தருமாறு) கேளும்; உமது (பரம) திருவுருவை வியந்து பார்க்கும் பொழுதே, (தடைபடாது) அவர்கள் தாரை வார்த்து, அடியேனை (வேள்வித்) தீ சாட்சியாக, அதிரும் (மணப்) பறை ஆரா வாரிக்க, (சிறக்கத்) திருமணம் செய்விப்பர், (எ - று).

(குறிப்பு) :—உதகம் - தானநீர். சான்று - சாட்சி. கனை - ஒலிப்பு. ஓதை - பேரொலி. கடிமணம் - திருமணம். என் பெற்ருேர்க்கு வேண்டியவர்பால் கேளும். அவர்கள் மறுக்க மாட்டார்கள். தாள மேளத்துடன் மணம் செய்து தருவர் என்று அறிவித்தபடி. (22)

அற்புட னினைய வாற்ரு லருமணம் புரிதி ராயிற்
கற்பினின் முதன்மை யாய கன்னியும் யானே தந்தோர்
பொற்புறு குலங்க ளெல்லாம் புனிதமா மெனுஞ்சொற் கேட்டுச்
சிற்பர குமர மூர்த்தி திருவுள மகிழ்ச்சி பூத்தான்.

(பொ - ரை) :—(சிறந்த) அன்புடன் இவ்வழியில் திருமணத்தைச் செய்து கொள்வையேல், கற்பில் முதன்மையான கன்னிகையும் யானுவேன் ; (எனை) அளித்த பெற்ருேர்தம் பொலிவுறு குலமுழுதும் புனிதம் அடையும் எனும் (அம்) மொழிகளைக் கேட்டு, ஞான மேலோன்

ஆன குமர நாயகன், (மாபெரும்) திருவுளத்து மகிழ்ச்சி யடைந்தனன், (எ - று).

(குறிப்பு) :—அற்பு - அன்பு. ஆற்றல் - தன்மையால். அருள் – திரு. பொற்பு - பொலிவு. குலம் - தாய் கால்வழி ; தந்தை கால்வழிகள். சித் - ஞானம். பரம் - மேலிடம் ; அச் சொரூபம் குமர தெய்வமாக வந்தது ஆதலின், 'சிற்பர குமர மூர்த்தி' என்றார். (23)

கண்ணியுங் கயிறுந் தும்புங் கவண்வலை முதல யாவும்
வண்ணவிற் றழும்புங் காட்டும் புயமலை வாணர் வேந்தன்
றிண்ணிய குறவர்க் கெல்லாஞ் செய்வினை காட்டுங் காலை
யெண்ணினுக் கடங்கா வேற்கை யெம்பிரான் சென்று கண்டான்.

(பொ - ரை) :—(பறவைகளைப் பற்றும்) கண்ணிகள், கயிறுகள், தும்புகள், கவண்கள், வலைகள் முதலிய அனைத்தையும், கவின்மிகு வில்லின் தழும்பையும் காட்டு கின்ற தோள்களையுடைய மலைசர் மன்னன், வன்மையுள மறவர்கள் யாவர்க்கும் (கம்பீரமான) குலத் தொழிலாக் கற்பிக்கும் நேரத்தில், நினைவிற்கு எட்டாத வேல் ஏந் திய திருக்கர விமலன், (கனிவொடு) சென்று கண் டனன், (எ - று).

(குறிப்பு) :— கண்ணி - சிறுகண்வலை. தும்பு - சிறு சுருளை யான கயிறு. வலை - பெருங்கண் உடையது. வண்ணம் - (பல சாயம் பூசிய) அழகு. தழும்பு - (வில் சுமந்த) வடு. புயமலை - உருவகம். வாணர் - வாழ்பவர். திண்மை - கலங் காத நெஞ்சுரம். செய்வினை - (வேட்டை) யாடும் தொழில். (24)

வள்ளியம்மையிடம் சென்ற அத்தியாயம் முற்றிற்று.

---

## 8. வள்ளியம்மை திருமண அத்தியாயம்

301. பவக்குறும் பெறியும் வியாசனை நோக்கிப்
பலகலைச் சுருதியா ராய்ந்த
தவக்கட லனைய சுகமுனி யுள்ளந்
தண்ணளி சுரப்பவீற் றிருந்து
சுவைத்தமிழ் முனிவற் குரைத்தவச் சுடர்வேற்
சோதிவா னவன்கதை யனைத்துஞ்
செவிக்கினி தமிர்தா மெந்தைகே ளடியேன்
செப்புவ துண்டுசாற் றுவனால்.

(பொ - ரை):—(அரிய) பல கலைகளையும் மறைகளையும் ஆய்ந்த தவக்கடல் போன்ற சுகமுனிவர், பிறவிப் பகையை வேரறுக்கும் வியாசரை (விநயமொடு) நோக்கி, சித்தத்தில் அருள் பெருக அமர்ந்து, (அருமைச்) சுவையுடைய தமிழை, (அகத்திய) முனிவர்க்கு உபதேசித்த ஒளிமய வேலுள பேரொளிப் பிழம்பாம் அந்த அமலன் அருள் வரலாறுகள் அனைத்தும், (இரு) செவிகட்கும் இனிய அமுதமாம்; அடியேன் உரைப்பது (ஒன்று) உண்டு; எந்தையே கேட்டருளும்; கூறுகிறேன்.

(குறிப்பு):—பவம் - பிறவி. குறும்பு – சேட்டை. எறிதல்– அழித்தல், தண்அளி - குளிர்ந்த கிருபை. முனிவற்கு - அகத்தியர்க்கு. வானவன் - முருகன். (1)

302. தந்தைநின் வதனத் தாமரை மலரத்
ததும்புபே ரானந்த வெள்ளஞ்
சிந்தனைச் சனன மரணவே ரறுத்துச்
செங்கண்மால் பங்கயன் காணு
மந்திரப் பொருளாஞ் சிவனிரு சரண
வாரிச மென்னுமோர் வீட்டின்
முந்துரச் செலுத்து மென்றபான் மையினான்
முத்தலை யிருதலை வேலோன்.

(பொ - ரை) :—எந்தையே! உமது திருமுகத் தாமரை மலர, (அதனி லிருந்து) ததும்பி வழியும் (வரலாற்றுப்) பேரின்ப (த்தேன்) வெள்ளம் (எம்) புந்தியிற் பொருந்தும் தன்மையால், மூத்தலை யுள்ள சூலத்தையும், இருதலை யுடைய வேலையும் கொண்ட குமரன், பிறப்பு இறப்புக்களின் மூலவேர் களைந்து, பிரமன் திருமால் அறியாத பிரணவப் பொருளான சிவத்தின் இரு திருவடித் தாமரைகள் எனும் ஒப்பற்ற வீடு பேற்றில் முற்படச் சேர்ப்பன், (எ - று).

(குறிப்பு) :—முத்தலை இருதலை வேலான் என்பதால், சிவனும் முருகனும் வேறல்லர் என்பது பெறப்பட்டது. (2)

303. வேடருக் கரசன் முன்கும ரேசன்
மேவிய தன்மையுங் கிராத
ருடுதற் கரிதாங் குமரவேள் முன்ன
நவின்றது நகைமுகத் துவர்வாய்
மாடகத் திவவி யாழ்மொழிக் களப
வனமுலை மகளையீந் ததுவுஞ்
சூடகத் தளிர்க்கை மாலைசூட் டியது
மெந்தைநீ சொல்லுக வென்றான்.

(பொ - ரை) :—மறவர்கட்கு மன்னன்முன் குமரக் கடவுள் வந்த செய்தியையும், (அவ்) வேடன் அறிதற்கு அரிதாம் குமரப் பெருமான் திருமுன் (சுருக்கமாக) வார்த்தைகள் சொன்னதையும், நகை முகமும், பவள வாயும், முறுக்காணியின் வருடுதலை யுடைய வீணையின் இசைபோலும் மொழியும், களபச் சாந்தணிந்த குயங்களும் கொண்ட மகளை (மணத்தில்) அளித்த வரலாற்றையும், (அம்மகள்,) வளை யணிந்த (மாந்) தளிர் போலும் திருக்கரங்களால் மாலை சூட்டியதையும், எந்தையே! நீர் விவரித்துக் கூறுக என்று வேண்டினன், (எ - று).

(குறிப்பு) :—நாடுதற்கு அரிதாம் - (ஆன்ம அறிவால்) அறிதற்கு இயலாத. மாடகம் - முறுக்காணி. திவவு — வருடுதல். சூடகம் - வளை. (3)

304\. என்றலும் வியாசன் சுகன்முக நோக்கி
யிம்பரு மும்பரும் வணங்கக்
குன்றகம் பிளந்த நெட்டிலைச் சுடர்வேல்
கொண்டவன் காதையி னன்பு
சென்றுள துனக்கிங் காதலாற் குமரன்
சீர்த்தியைப் புகன்றவர் யார்க்கு
நன்றுணர் தருமம் பொருளின்ப மோக்க
நண்ணுமா லினிதுகே ணவில்வாம்.

(பொ - ரை) :—என்று (சுகர் விநயம் காட்டி) விண்ணப்பித்தலும், வியாசர் சுகரைப் பார்த்து, இம்மண்ணவரும் விண்ணவரும் வழிபட கிரவுஞ்ச மலையைப் பிளந்த நீண்ட இலைவடிவான வேல் ஏந்திய விமலனுடைய மகாத்மியத்தில், (உயர்ந்த) அன்பு உனக்கு இங்கு உளதாயது. குமரன் புகழைக் கூறினர் எவர்க்கும், நல்லறிவுடன் அறம் பொருள் இன்பம் வீடு (நான்கும்) உளதாகும்; ஆதலால் கூறுகின்ருேம். இனிது கேள், (எ - று).

(குறிப்பு) :—மோக்கம் — முத்தி ; மோட்சம் என்பதன் திரிபு. (4)

305\. முகில்வயி றுடையக் கூனுடற் கருங்கான்
முசுக்கலை யுலவுமால் வரையிற்
றகைநெடுஞ் சிலைக்கை வேடர்கோ மகன்பாற்
சதுர்மறை முறையிடு மிருதாட்
குகன்முக மாறும் புயங்களீ ராறின்
கோலமுங் கரந்துமா னுடன்போ
லகமகிழ் சிறப்பச் சென்றுநின் றெயினர்க்
கரசகே ளொன்றுனக் கறைவாம்.

(பொ - ரை) :—கூன் உடம்பும், கரிய கால்களுமான முசுக் குரங்குகள், மேகங்களின் நடுவிடம் கிழியும்படி உலவும் பெரிய மலையில், தகுதி யுடைய பெரிய வில்லைக் கைக்கொண்ட வேட மன்னன் இடத்தில், (தூய) நான்மறைகள் துதிக்கும் இரு திருவடிகளை யுடைய குகப்பரமன், ஆறு திருமுகங்களும், பன்னிரு திருத்தோள்களுமான (மாபெரும் தம்) திருவுருவை மறைத்து, (சாதாரண) மனிதன்போல் திருவுளம் மகிழ்ச்சி மிகச் சென்று நின்று, வேட மன்னு! உனக்கு ஒரு செய்தியை உரைப்பம் கேட்டருள், (எ - று).

(குறிப்பு) :—முசு - குரங்குகளில் ஒருவகை. (5)

306. உன்னிடத் துதித்த மகள்வயி னார்வ
முற்றன மளிக்குதி யென்ன
வன்னவிற் கரத்துப் புளினர்கோ னழன்று
மகிழ்சிறந் தெம்மலை காக்குங்
கொன்னிலைச் சுடர்வேல் முருகனுக் கிவளைக்
கொடுப்பதை யன்றிமுத் தேவ
ரென்னிடத் திரந்து கேட்கினுங் கொடுப்ப
தில்லைநீ போவென விசைத்தான்.

(பொ - ரை) :—உன்னிடத்தில் பிறந்த (அருமை) மகளிடத்தில் ஆர்வம் கொண்டுளம்; (அவளை எமக்கு) அளித்தருள் என்று கேட்டலும், அழகிய வில்லைக் கரத்தில் ஏந்திய வேடர் தலைவன், அளவிறந்த சினங் கொண்டு, எங்கள் (புனித) குறிஞ்சி நிலத்தை மகிழ்ந்து புரக்கும் பெருமித ஒளிமய இலைவடிவ வேல் முருகனுக்கு இவளைத் தருவதன்றி, (பிரமன் திருமால் உருத்திரர் முதலிய) மூன்று முதலிகள் என்னிடத்தில் யாசித்துக்

கேட்டாலும் தருவது இல்லை ; நீ (மரியாதையாகப்) போய்விடு என்று கூறினன், (எ - று).

(குறிப்பு) :—வன்னம் - நிறமுமாம். புளினர் – வேடுவர். அழன்று - நெருப்புப் பொறி பரக்கக் கோபித்து. (6)

307. அந்தவா சகந்தே றிரு செவிக்கு
மமுதமூற் றுவதென வகத்துட்
கந்தவேள் மகிழ்ந்து மானிடைப் பிறந்த
கன்னிகை யேனலம் புனத்துட்
சிந்தையின் விரைந்து சென்றிவ ளார்வந்
தெரிக்குது மெனவுளந் தேறி
யிந்திர சாலம் போலொரு தருவா
யிராறுதோ ளெம்பிரா னின்றான்.

(பொ - ரை) :—(வேடர்கோன் உரைத்த) தேன் போல் இனிக்கும் அத் திருமொழிகள், பன்னிரு திருச் செவிகளிலும் (உயர்ந்த) அமுதம் ஊற்றுவதுபோல் இருப்ப, கந்தப்பரமன் திருவுளம் களித்து, மான் வயிற்றில் பிறந்த மகள் (இருக்கும்) அழகிய தினைப் புனத்துள் மனத்திலும் விரைந்து சென்று, இவள் (நம் பால் கொண்டுள) அன்பை (அகிலவுலகும்) அறியச் செய்வம் என்று திருவுளம் கொண்டு, பன்னிரு தோள் எம்பரன், இந்திர சால வித்தைபோல், ஒரு (வேங்கை) மரமாகி நின்றான், (எ - று).

(குறிப்பு) :— இந்திரசாலம் - மெய்போல் பொய்யை மிளிர்விக்கும் வித்தை. (7)

308. தாருவின் றேற்றங் கண்டுமான் பயந்த
தண்ணரு வொழுகுபூங் கூந்த
ஞரியும் பிரியாச் சேடியர் தாமு
நாடரு முளத்திலற் புதமாய்க்
காரிருட் படலங் கவித்தகற் பகத்திற்
கவின்செறி நிழலிடை யினிது
வேரியந் தென்ற றைவர வுள்ளம்
வியப்புறத் துயிலுமேல் வையினில்.

(பொ - ரை):—(கம்பீரமான அம்) மரத்தின் தோற் றத்தைக் கண்டு, மான் பெற்ற குளிர்ந்த மணம் வீசும் அழகிய கூந்தல் அம்மையும், (அவரை விட்டு) அகலாத் தாதியரும், அகத்தில் எண்ணற்கு அரிய அற்புதம் எய்தி, கருத்த இருள் கூட்டம் போர்த்த கற்பக தரு வைப்போல் (உள்ள அதன்) நிறையழகு நிழலின்கண், இன்ப மணம் கமழும் (பயனுன) தென்றல் காற்று (திரு மேனிமேல்) பட, (தூய) உள்ளம் வியந்து, (அந்நிழ லில்) படுத்துத் துயிலும் பொழுது, (எ - று).

(குறிப்பு):— நாரம் - அன்பு; அதை யுடையவள் நாரி. தைவர – வருட. ஏல்வை – சமயத்தில். (8)

309. குறைவருங் குறவர்க் கிறைவனு மின்னற்
கொள்கைய ஞகிமா னளித்த
விறைவிநங் குறிச்சி விட்டகன் றேன
லிளம்புனத் தினிதுவீற் றிருந்தா
ளுறையிடந் தேடி நாடுது மென்ன
வுற்றன னற்றமின் றுயர்ந்த
நறைமலர் பொதுளுந் தாருவின் றேற்ற
நாடிநின் றெயினர்கோ னவில்வான்.

(பொ - ரை) :—குறைவு (ஒன்றும்) இல்லாத மற வர்க்கு மன்னனும், (தூய மகள் பிரிவால்) துன்புற்ற வனுய், மான் தந்த மகளான அம்மை, நமது சிற்றூரை நீங்கி, இளம் பயிரான தினைப்புனத்தில் இன்பமாக அமர்ந்து இருக்கின்ருள் ; (அவள்) இருக்கும் இடம் சென்று பார்த்து வருவம் என்று வந்தான் ; தளர்வு இலாது உயர்ந்த தேனுடைய மலர்கள் நிறைந்த மரத் தின் தோற்றத்தை, வேட மன்னன் பார்த்துத் (தடைப் பட்டு) நின்று, (பின்வருமாறு) பேச லாயினன், (எ-று).

(குறிப்பு) :—குறிச்சி - சிற்றூர். **அற்றம் இன்று உயர்தல் - குறைவிலாது, சாயாது, நெட்டாக வளர்ந்திருத்தல்.** (9)

310\. கதிரவன் றடந்தேர்க் கலினமா விலகக்
கற்பகத் தாருவிண் ணுயர்ந்து
முதுவரை யிடத்து வந்தகா ரணநா
முன்னுறின் மாயமா மென்றே
யதிர்குரல் வேடர் தங்களை நோக்கி
யருந்தருக் குறையுமி னென்று
சதிருட னுரைப்ப வம்மொழி கேட்டுச்
சண்முகன் தருவுருக் கரந்தான்.

(பொ - ரை) :—பழைய இம்மலையில், கற்பகம் போன்ற இம்மரம், சூரியன் பெரிய தேரிற் பூட்டிய (ஏழ்) பரிகளும் விலகிப் போம்படி, விண்ணில் உயர்ந்து வந்த காரணத்தை ஊன்றி நாம் உணர்வமேல், (இது ஒரு) மாயந்தான் என்று, கர்ச்சிக்கும் குரலுடைய வேடர்களைப் பார்த்து, அரிய இம்மரத்தை வெட்டி விடுங்கள் என்று ஆணையிட்டு அறிவிக்க, அச்சொற்களைக் கேட்டு, அறுமுகப் பெருமான் (மாபெரும் தன்) மரவடிவை மறைத்தான், (எ - று).

(குறிப்பு) :—கலினம் - கடிவாளம். மா - குதிரை. தரு என்பது, ஓசையின்பம் கருதித் தாரு என நீண்டது. சதிர்-மேம்பாடு. கரத்தல் - ஒளித்தல். " வேடர்க்கு அரசன் நின்று அறையா, அருந்தருக் குறைப்பன் நான் என்று சதிருறு புரசு கைக்கொள ஆங்கே சண்முகம்" என்றும் பாடம். (10)

311. மாமுத றடிந்து வான்தரு வளர
வாங்கிய வடிநெடு வேலோன்
ருமமென் குழற்கா மைத்துனற் பதைத்துத்
தானுமோர் மரனுரு வெடுத்துக்
காமுற வளர்ந்து கானவற் கொளிப்பக்
கானவர்க் கரசன்றன் மகளைத்
தோமறு குறிஞ்சிப் புற்குடி லகத்துச்
சுறுக்கொடு கொண்டுசென் றிருந்தான்.

(பொ - ரை) :—மாமரம் ஆன சூரபன்மனை மாய்த்து, விண்ணுட்டு (ஐந் தருக்கள்) வளரும்படி ஏந்திய கூரிய நீண்ட வேலுடைய குமரன், மாலை யணிந்த மெல்லிய கூந்தலை யுடைய வள்ளியம்மை பொருட்டு (மதனனெனும்) மைத்துனனுல் வருந்தி, தானும் ஒரு மரவுருவம் தாங்கி, (மற்றவர்) விரும்புமாறு வளர்ந்து மறவர் கண் கட்கு மறைய, வேட மன்னன், தன் மகளைக் குற்றம் அற்ற குறிஞ்சி நிலத்து (ச் சிற்றூரில் இருக்கும்) புற்கள் வேய்ந்த மாளிகைக்கு, அதிவிரைந்து அழைத்துச் சென்று தங்கினன், (எ - று).

(குறிப்பு) :—வாங்கிய - எடுத்த. மைத்துனன் - மன்மதன். மரன் - மரம் ; எழுத்துப் போலி. தோம் - குற்றம். புற்குடில் - புல்வேய்ந்த சிறு வீடு. சுறுக்கு - விரைவுப் பொருட்டு. (11)

312\. இருந்தபின் ஞெருநா ளேனலம் புனத்தி
னீர்ங்கனித் துவரிதழ் மடந்தை
கருந்தட நெடுங்கட் சேடிய ரோடுங்
கானிடைச் சென்றுநாங் கண்ட
பெருந்தண்மா மரம்போன் முதுவரை யகத்துட்
கண்டில மென்றுபே துற்று
வருந்தினர் போலத் திரிந்துதண் புனத்து
வைகினள் வைகுமேல் வையினில்.

(பொ - ரை) :—(இங்ஙனம்) இருந்த பிறகு, ஒருதினம் குளிர்ந்த கொவ்வைக் கனிபோன்ற வாயும், பவள இதழ்களும் உடைய கோதை, கரிய பெரிய கண்களை யுடைய தாதியருடன் தினைப்புனத்தைச் சார்ந்த காட்டிற் சென்று, நாம் (அன்று) கண்ட (மிகப்) பெரிய குளிர்ந்த வேங்கை மரம்போல், (இப்) பெரிய மலையில் (இதுவரை) அறிந்திலம் என்று, மயங்கி வருந்தினர் போலத் திரிந்து, குளிர்ந்த தினைப் புனத்தில் தங்கினள்; (அம்மை அங்ஙனம்) இருந்த அவ்வமயம், (எ - று).

(குறிப்பு) :—ஈர் - குளிர்ச்சி. பேதுறல் - மயங்கல். (12)

313\. மரனுருக் கரந்த குருபரன் புனத்து
மான்மக டனக்குள மயங்கிச்
சரமெடுத் தெறியு மதனனுக் குடைந்து
சஞ்சலித் தெண்ணம்வே ருகி
பொருவருங் கரடக் குஞ்சர முகத்துப்
புங்கவற் றொழுதுநின் றிரந்து
பருவரற் கிடனு மேழையேற் குனது
பார்வையி னருட வேண்டும்.

(பொ - ரை) :—(முன்பு கொண்ட) மரவுருவை மறைத்த முருகன், தினைப்புனத்து மான் மகளான வள்ளியம்மை சார்பில் திருவுளம் மயங்கி, கணை எடுத்து விடும் காமனுக்குத் தோற்று வருந்தி, நினைவு வேறுபட்டு, ஒப்பற்ற மதமுடைய யானைமுக கணபதியை நின்று வேண்டி, துன்பத்திற்கு இடமாகிய எளியேனுக்கு, உமது பரம அருள் நோக்கம் பாலித்தருளும், (எ - று).

(குறிப்பு) :—பொருவு அரும் - ஒப்புரைத்தற்கு அரிய. கரடம் - மதம். குஞ்சரம் - யானை. பருவரல் - துன்பம். (13)

314. என்றலுங் கடவுட் குஞ்சர வதனத்
தெம்பிரான் றுணைமுக நோக்கி
யுன்றன துள்ளத் தெண்ணமியா தென்றே
யுரைத்தலுங் குமரவே ளிசைப்பான்
குன்றவர் தலைவன் புதல்விமே லன்பு
கொண்டதாற் றெண்டிரைக் கடலுந்
தென்றலங் கன்றுங் காமவேள் கணையுந்
தெண்ணிலா வும்பகைத் தனவால்.

(பொ - ரை) :—என்று பிரார்த்தித்தலும், தெய்வீக யானைமுக எம்பெருமான், (தம்) தம்பியான முருகன் திருமுகத்தைப் பார்த்து, உன் மனக் கருத்து யாது என்று வினவுதலும், குமரன் கூறுவன் ; மறவர் மன்னன் மகள்மேல் அன்பு வைத்ததனால், தெளிந்த அலைகளை யுடைய கடலும், இளந்தென்றல் காற்றும், காமன் கணைகளும், தெளிந்த மதியும் (எம்மிடம்) பகை கொண்டன, (எ - று).

(குறிப்பு) :—கன்று - இளமை. ஆல் - அசை, (14

315. யாவர்தம் மிடத்து முறுகுறை யனைத்து
மெம்பிரா னகற்றுவை யிளைய
சேவக னிளமான் கன்றினுக் குடைத
றீர்ப்பதற் கெண்ணினை யாகி
மாவடுப் புரையுங் கண்ணியுள் வெருவ
மத்தமால் யானையின் வடிவாய்
மூவகைக் கடங்கான் றன்னவண் முன்னர்
முழக்கொடு வருதல்வேண் டினனால்.

(பொ - ரை):—எத்தகையோர் இடத்திலும் உற்ற குறை முழுதையும் ஒழிக்கும் எம்பெருமானே! (உமக்கு) இளையவனை அடியேன், இளம் மான் கன்றன வள்ளியின் பொருட்டு வருந்துதலை அகற்றத் திருவுளம் கொண்டு, மாம்பிஞ்சு போன்ற கண்களை யுடையாள் மனம் அஞ்ச, உன்மத்தங் கொண்ட பெரிய யானை உருவாகி, மும்மதம் பொழிந்து அவள் முன் பிளிறிட்டுக் கொண்டு வருமாறு வேண்டுகிறேன், (எ - று).

(குறிப்பு):—சேவகன் – பணியாளன்; அல்லது வீரன் எனினுமாம். மூவகைக் கடம் - கன்னமதம், கபோல மதம், பீஜமதம்; இருமத கணபதி, மும்மத யானையாகி முன்வர வேண்டும் என்பது குறிப்பு. (15)

316. அன்னமென் னடைமுன் வந்தனை யாயி
னவ்விடை யளியனு மடைந்து
துன்னுவ னுனது தோற்றத்தில் வெருவித்
தோகையு மவ்வயிற் பொருந்தும்
வன்னமென் முலையு மார்பகத் தழுந்தும்
வாயமிர் தத்துளி யருந்திக்
கன்னிபொன் னுடலம் புணர்ந்துவிற் கழைப்போர்க்
காமனு டகமுமா டுவனால்.

(பொ - ரை) :—அன்ன நடை (யுடைய) மெல்லியலாள் முன் வருதியேல், அந்த இடத்தில் அடியேனும் வந்து சேர்வன்; உமது தோற்றம் கண்டு அஞ்சி, மயிலாம் அவளும், அவ்விடம் சேர்வள். அழகிய மென்மைக் குயங்களும் (அடியேன்) மார்பில் அழுந்தும்; இதழமுதத் துளியை (இனிது) பருகி, கன்னியின் புனித மேனியைக் கலந்து, கரும்பு வில் கொண்டு போர் நடத்தும் காமனது (அரிய) நாடகத்தையும் ஆடுவன், (எ-று).

(குறிப்பு) :—அளியன் - எளிமையேன். வயின் - இடம். வாயமிர்தத் துளி - அதரானுபவம். (16)

317. காமநூற் பயிற்சி நடந்தபின் வேதக்
காரிகை யைத்தழல் சான்றுத்
தாமரைத் தலைமீ திருந்தநான் முகனுந்
தண்துழாய்ப் படலைசூழ் மோலி
மாமனு மகிலத் தேவருங் காண
வதுவையான் முடிக்குவ னென்று
பூமல ரருச்சித் தைங்கரற் றொழுது
போந்தருள் புரிகென விரந்தான்.

(பொ - ரை) :—மதன நூற் பயிற்சி நிறைவேறிய பின், அழகுமய அணங்கை, (சால்புடைய) வைதிக வேள்வி சாட்சியாக, தாமரை ஆசனத்தில் தங்கிய பிரமனும், குளிர்ந்த துளசி மாலை புனைந்த மகுடத்தை யுடைய மாமனை திருமாலும், அமரர் அனைவரும் அறியுமாறு, அடியேன் திருமணத்தை நிறைவு செய்து கொள்வன் என்று, அழகிய மலர்களால், ஐந்துகர கணபதியை அருச்சித்து வணங்கி, சென்று அருள் செய்க என்று குறையிரந்து கூறினன், (எ - று).

(குறிப்பு) :—காமநூல் என்பது, வெறுங் காமசாஸ்திர மன்று ; அத்துவித ரகசிய அனுபவ நூல் என்றறிக. வள்ளி யாரை வேதக் காரிகை என்றது, வேத உயிர்ப்பான விமலை எனும் குறிப்பு. கணபதி வழிபாட்டிற் கடிமணம் எனும் நுட்பம், ஓங்கார தரிசனத்தின் மூலம் சிவ ஜீவ மணம் எனும் அநுபவம். சொற்களில் புறப்பொருள் ; அனுபவத்தில் அகப் பொருள். மாபெரும் இந்த அருமையை மறப்பது, மரபாக மாட்டாது. (17)

318. கற்றையஞ் சுடர்வேற் றுணைவனுள் ளடங்காக்
காதல்கண் டைங்கரக் கடவு
ளற்றமின் றுளத்தி லார்வமீ தூர
வடுக்கலிற் குறச்சிறு மடந்தை
சுற்றுறு மடவா ருடன்விளை யாடுஞ்
சூழலிற் கருவரை கடுப்பக்
கொற்றவெங் கரடக் கிம்புரிக் கோட்டுக்
குஞ்சர வடிவொடுஞ் சென்றான்.

(பொ - ரை) :—அடர்ந்த ஒளிமய வேல் இளைய வனுக்கு உண்டான அளவுள் படாத காதலைக் கண்ட ஐந்து திருக்கரக் கணபதி, அயர்வு இல்லாமல் உள்ளத் தில் அன்பு மிக்கெழ, மலையில் குறவர் இளங் குமரியான வள்ளியம்மை (தம்மைச்) சூழ்ந்த தாதியருடன் விளை யாடும் இடத்தில், நீலகிரிபோல் தோற்றமும், கொடிய மும்மதம் ஒழுகும் சுவடும், (தங்கப்) பூண் அணிந்த தந்தமும் (ஆகி, முழு) யானை உருவுடன் சென்றார், (எ - று).

(குறிப்பு) :—கற்றை–திரட்சி. அற்றம் - தளர்ச்சி. கிம்புரி- தந்தத்தில் அணியும் பூண். ஆர்வ மீதூர்தல் - (முன்னைய மரநிழல்) அனுபவ ஆர்வம் முதிர்தல். (18)

319. குஞ்சர முழங்கி வருதலுங் குறமான்
கொம்புவெம் புள்ளத்த ளாகித்
தஞ்சமின் றெனக்கா ரென்றுநின் றேங்கிச்
சஞ்சலித் திருகணீர் சோரப்
பஞ்சடிக் கமலஞ் சேப்பமென் மருங்குல்
பயோதரச் சும்மையாற் ருது
வஞ்சியிற் றுவண்டு துவண்டுதள் ளாட
மறுக்கமுற் றுழ்லுமப் போழ்தின்.

(பொ - ரை) :—யானை பிளிறிட்டு வருதலும், குறவர் குல மான் போன்ற (பூங்) கொடியான வள்ளியம்மை, வெதும்பும் திருவுளத்தளாகி, இன்று எனக்கு அடைக் கலம் அளிப்பவர் யாவர் என்று நின்று, ஏக்கம் மிக்கு, கவலை கொண்டு இருந்து, இருகண் மழைசிந்த, (சிறந்த) பஞ்சு போலும் திருவடிகள் சிவக்க, மெல்லிய நுண்ணிடை குயங்களின் பாரம் தாங்காது வஞ்சிக் கொடி போல் துவண்டு தள்ளாட, அயர்ந்து உழன்ற அவ்வமயத்தில், (எ - று).

(குறிப்பு) :—கொம்பு - வள்ளியம்மை; ஆகுபெயர். பயோதரம்—குயம். சும்மை—சுமை. மறுக்கம்—வருத்தம். (19)

## வேறு

320. அந்த வேளை யருவஞ்செய் தான்றருங்
கந்த வேளைக்கண் டாள்கண்ட கன்னியு
மிந்த வேளை யெனக்கரு ளென்றுமுன்
வந்த வேள்மணி மார்புறக் கட்டினாள்.

(பொ - ரை) :—அம் மன்மதனை அருவம் ஆக்கிய சிவனார் அருளிய கந்தப் பரமனை (க் கண்முன்) கண்டாள்; (அங்ஙனம்) கண்ட அம்மையும், இவ்வமயம்

எனக்கு அருளுக என்று எதிர் வந்து, அப்பரன் அழகிய தனிப்பெரும் மார்பைத் தழுவினள், (எ - று).

(குறிப்பு) :—அந்த வேள் - அழகிய காமன். அருவம் செய்தல் - அநங்கன் ஆக்குதல். அந்த வேளை, அருவம் ஆக்கிய சிவன் தரு கந்தவேள் எனும் அருமை இங்கு எண்ணத் தகும். அந்த வேள் - கருநிறக் காமன்; கந்த வேள் - செம்மேனித் தெய்வம். அவன் அந்தம் ஆக்குவன்; இவன் அருள் மணம் எனும் கந்தம் காட்டுவன். அவன் பந்தம் ஆக்குவன்; கந்தன் பந்தம் போக்குவன். அவன் பிறப்பை ஆக்குவன்; இவன் இறப்பு பிறப்பு இரண்டும் போக்குவன் என்றெல்லாம் இங்கு எண்ணத்தகும். இதனால், இதுவரை கூறிய யாவும், பக்குவப்பட்ட ஆன்மாவும் பரனும் இணையும் பரம அருள் நாடகம் என்று அறிவித்தபடி. (20)

321. போத கந்தொழு தான்புன மாமலை
மோத கங்கை முகந்தனங் கன்பொரும்
பாத கந்தொலைத் தோங்கும் பணைமுலை
வேத கம்பட விம்மித மெய்தினான்.

(பொ - ரை) :—(இடைவந்து உதவிய) யானையை இறைஞ்சி, தினைப்புனத்தை யுடைய விந்திய மலையில், களிப்புடன் (காரிகையாரது) கைகளைப் பற்றி, (படபடத்து) மதனன் மோதிய பாதகத்தைப் போக்கி, பருத்த குயங்கள் படுதலால் வியந்து மகிழ்ந்தனன், (எ - று).

(குறிப்பு) :—போதகம் - பத்து வயது யானைக் கன்று. மோதகம் - களிப்பு. முகந்து - எடுத்துத் தழுவி. (21)

322. சுருண்ட பூங்குழற் றேகையைப் புல்லிநீ
வெருண்ட வேழம் விலக்கினன் யானுமோ
திரண்டு வீங்கிச்செம் மாந்திறு மாந்தெழும்
இரண்டு வேழத் திளமுலைக் கஞ்சினேன்.

(பொ - ரை) :—சுருளான மலரணிந்த கூந்தலும், மயில் சாயலுமான அம்மையைத் தழுவி, நீ அஞ்சற்குக் காரணமான யானையை அகற்றிய யானே, திரட்சியாய்ப் பருத்துச் சிறந்து இறுமாந்து விம்மிய இளந்தனங்களாகிய யானையின் இரு தந்தங்கட்கு அஞ்சினேன்.

(குறிப்பு) :—சுருட்டை மயிர் சோறு போடும் என்பது பழமொழி. ஒரு யானையை விலக்கினேன்; இருயானைகட்கு அஞ்சினன் என்பது, இதனில் உள்ள நயம். (22)

323. வாகைப் போதின் வயங்குபொன் மேனியு
மோகத் தேன்றரு முத்தச்செவ் வாம்பலு
மேகக் கூந்தல் விரைச்சிறு காற்றுமென்
ஞகத் தேபுணர்ந் தேனென் றயிலிஞன்.

(பொ - ரை) :—வாகை மலர்போல் விளங்கும் அழகிய திருமேனியும், மோகம் ஆகிய தேனை உதவும் முத்துப் போல் பற்களும், செவ்வாம்பல் மலர்போன்ற இதழ்களும், கரு மேகம் போன்ற கூந்தலில் இருந்து விளையும் மணம் கமழ் காற்றும், எனது திருமேனியில் இணையப் பெற்றேன் என்று வேல் இறைவன், (எ - று).

(குறிப்பு) :—வாகை - வெற்றியை நினைவூட்டும் ஒருவகை மலர். விரை - மணம். சிறுகாற்று - இளந்தென்றல். இது குளகம்; அடுத்த பாட்டுடன் முடியும். (23)

324. ஆறி ரண்டுகை யாரத் தழுவியே
யாறி ரண்டு நயனங்க ளாலுமே
மாறி ரண்ட மலர்க்குழ லாடனை
மாறி ரண்ட மனத்தொடு நோக்கிஞன்.

(பொ - ரை) :—பன்னிரு திருக்கரங்களும் பயனுறத் தழுவி, மேகம் போலும் கருத்துத் திரண்ட மலரணி

கூந்தல் வள்ளியம்மையை, பன்னிரு திருக்கண்களாலும், மயக்கம் பொருந்திய மனத்தொடு பார்த்தனன், (எ-று).

(குறிப்பு) :—ஆர - அழுந்த எனினுமாம். மால் திரண்ட - என்பது, கூந்தலுக்கு அடை. மலர் - சாதியடை. (24)

325. அன்னம் போல்வரு மாய்மயி லாட்கெதிர்
சென்னி யாறுடைச் சேவகன் செப்புவான்
கன்னி யானுனைக் காதலித் தேனுயிர்ப்
பன்னி யாய்ப்புணர்ந் தாயிது பண்பரோ.

(பொ - ரை) :—அன்னம்போல் நடந்து வரும் தேர்ந்த மயில் போலும் சாயல் உடைய வள்ளியம்மைக்கு முன் இருந்த ஆறுமுக வீரன் கூறுவான் ; கன்னிகையே ! நான் உன்னை ஆவலித்தேன் ; பிராண நாயகியாகி என்னில் இணங்கினை; இதுதான் (பதியும் உயிரும் இணையும்) பண்பு, (எ - று).

(குறிப்பு) :—பின்னி யிருந்த பன்னி முன் பெருமான் கூறிய பெருமித உரையிது. பன்னி - தேவி. பண்பு - ஓர் ஆவிற்கு இருகொம்பு ஏக காலத்தில் முளைத்தது போல் விளைந்த இருதலைக் காதல். (25)

326. என்று கூறு மிளையனு மானருள்
கன்று மேவிக் கலப்பது காண்டலு
மொன்று மன்புட னுள்ளக் களிப்பினு
னின்ற தேவர் நிகழ்த்துதன் மேயினர்.

(பொ - ரை) :—என்று உரைக்கும் குமரனும், மான் தந்த மகளான வள்ளியும் ஒன்று பட்டுக் கூடுதலை (வானில்) இருந்த வானவர்கள் கண்டு, ஒருமித்த அன்பொடு, உள்ளக் களிப்பால் பேசுவார் ஆயினர். (26)

327. மூக்கி னோடு விழிமுகிழ்த் தன்பின்வே
ளோக்கு நோன்மையர்க் குந்நுவ லாநிற்கும்
வாக்கி னூடு மனத்தும் பெருக்கொடு
தேக்கு மானந்த ஞானச்செந் தேறலாம்.

(பொ - ரை):—நாசி நுனியில் செல்லுமாறு விழிகளைச் சிறிது மூடி, (சிறந்த) அன்பொடு செவ்வேளைத் தியானிக்கும் நோன்பின ரிடத்தும், வழுத்துவார் வாக்கின் உள்ளும், (நினைவார்தம்) நெஞ்சினுள்ளும், பெருக்கமாகித் ததும்பும் இன்பமும் அறிவுமான (உயர்ந்த) தேன் உளதாகும், (எ - று).

(குறிப்பு):—"நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி, உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடும் மந்திரம், பற்றுக்குப் பற்றாய்ப் பரமன் இருந்திடம், சிற்றம்பலம் என்று தேர்ந்து கொண்டேனே" என்று திருமந்திரமும், "தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவது எந்நாளோ" என்று தாயுமானுரும் கூறுவது இங்குக் குறிக்கத் தகும். நோக்கில் அன்பு, வாக்கில் தேன், நெஞ்சில் இன்பம் எனப் பொருள் கோடலுமாம். இது, குளகம்; முருகன் என்ற அடுத்த பாடலொடு முடியும். (27)

328. முருக னென்று மொழிந்து மொழிந்துளத்
துருகு மன்பினர்க் கும்முரு காநிற்போ
ரருகு சென்றிடு மன்பர்க்குங் காமமாம்
பெருகு மாறுஞ் செலாதுளம் பேதுறும்.

(பொ - ரை):—முருகன் என்று ஓதி ஓதி, உள்ளம் உருகுகின்ற அன்பர்கள் இடத்தினும், உருகுவார்தம் அருகில் செல்லும் அன்பர்கள் இடத்திலும், காமமாகிய பெருகிய வெள்ளம், செல்ல இயலாமல் மனம் சிதையும், (எ - று).

(குறிப்பு) :—பேதுறும்-மருளும். முருக நாமமே பேரின்பத் தேன். அதனை அனுபவிப்போர் காமச் சேற்றில் காலாழார் என்றபடி. வள்ளி யம்மை திருமண உள்ளுறையை உணராமல், தகாதன பேசுவது தவறு என்பது, இதனாலும் தெரிகிறது அல்லவா ! (28)

329. தாயின் ஆகிச் சராசர நல்குவாண்
மேய காஞ்சனை மின்னிடைத் தோன்றுகை
யாய பூதங்க ளைந்தினுக் கேதுவாம்
பாயு மூலப் பகுதியின் ேறுற்றமே.

(பொ - ரை) :—தாயாகி, இயங்குதிணை நிலைத்திணை கள் அனைத்தையும் படைக்கும் அம்மை, பொருந்திய காஞ்சனை யெனும் மின்போல் ஒளிர்வாள் இடத்தில் (மகளாய்த்) தோன்றியது, உதித்த ஐம்பூதங்கள், (தமக் குக்) காரணமான பரவிய மூலப் பிரகிருதி (மாயையின்) இடத்திலிருந்து தோன்றின போலுளது, (எ - று).

(குறிப்பு) :—பகுதி - பிரக்ருதி என்பதன் திரிபு. மாயையி லிருந்து ஐம்பூதங்கள் மலர்ந்ததுபோல், காஞ்சனையி லிருந்து உத்தம அம்மை உதித்தனள் என்றபடி. பாய்தல் - பரவுதல். (29)

330. உலக வாழ்க்கையை யோம்புதற் கெண்ணியே
யலகி லாவிளை யாட்டயர்ந் தையனுந்
திலக வாணுதன் மானிளஞ் செல்வியுங்
கலவி வேட்டதென் றுள்ளங் கருதினர்.

(பொ - ரை) :—ஐயனும், திலக மணிந்த ஒளி பொருந் திய நெற்றியுள மானிளம் கன்றுன வள்ளி யம்மையும் போகத்தை விரும்பியது, அளவிலாத (புனிதத்) திருவிளை யாடல்களைப் புரிந்து, உலகில் இல்லற நல்லறத்தைப்

பேணுதற்குத் திருவுளம் கொண்டதேயாம் என்று (தம் தம்) மனத்தில் எண்ணினர், (எ - று).

“போகியா யிருந்துயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்
யோகியா யிருந்துயிர்க்கு யோகத்தைப் புரிதல் ஓரார்
வேகியா றற்போல் செய்த வினையினை வீட்டல் ஓரார்
ஊகியா மூட ரெல்லாம் உம்பரில் ஒருவன் என்பார்”

என்ற சித்தியார், இங்கு சிந்திக்கத் தகும். (30)

331. மடந்தை வேலவன் மார்புறச் சேர்ந்துட
னடந்த செய்கையைச் சேடியர் நாடியே
கடந்து வானக் கதிர்கட வாமலை
யடைந்து வேடர்க் கரசன்முன் கூறுவார்.

(பொ - ரை):—அம்மை வேலிறைவன் திருமார்பை மெய்யுறக் கலந்து ஒழுகிய செயலை, (அன்னைத்) தாதியர் அறிந்து, (சூரிய சந்திர) ஒளிகளும் கடந்து செல்ல இயலா (ச் சோலைகள் சூழ்ந்த) மலையைக் கடந்து, வேடர் மன்னன் முன்வந்து விளம்பலாயினர், (எ - று).

332. ஓங்கல் வாய்மதத் தோங்கல்வந் துற்றதுந்
தேங்க ருட்பன் னிருவிழித் தெய்வதம்
பூங்கு ழற்றிருப் புல்லிய பான்மையும்
பாங்கு றப்பணிந் தேத்திப் பகரவே.

(பொ - ரை):—மலையின் இடத்தில் மதயானை வந்ததும், நிறையருளுடைய பன்னிரு கண் பரன், மலரணி கூந்தல் தையலைத் தழுவிய தன்மையையும், உரிமை பொருந்த வணங்கித் துதித்து உரைத்தலும், (எ - று).

(குறிப்பு) —ஓங்கல் - மலை. வாய் – இடம்; ஏழனுருபு. மதத்து ஓங்கல் - மலைபோல் உயர்ந்த மாபெரும் யானை. (32)

333. ஆல மென்ன வழன்றழி வுற்றிடுங்
கால மொய்த்த கடலெனுங் கேளொடு
சூல வேற்படை யான்மகன் றேய்ந்தவான்
கோல மும்மகள் கோலமும் பார்த்தனன்.

(பொ - ரை) :—(மன்னன் அது கேட்டுக் குரூர)விடம் போலக் கொதித்து, (பிரளய) காலத்தில் பெருகிய கடல் போல் பொங்கிய உறவினருடன் (புறப்பட்டு,) திரிசூலம் ஏந்திய சிவ குமரனின் (குதூகலம்) தோய்ந்த கோலத்தையும், மகளது கோலமும் கண்டனன், (எ - று).

(குறிப்பு) :—தோய்ந்த–புணர்ந்த. வான்–உயர்ந்த. (33)

334. தாதை கேளுடன் சார்ந்தவத் தன்மைபூங்
கோதை கண்டுளங் கூசிக் கடப்பந்தா
ராதி யைத்தணந் தந்தமி ருதைபாற்
காத லோடுசென் றுள்கவிழ்ந் தாணின்றுள்.

(பொ - ரை) :—தந்தை உறவினருடன் வந்த அச் செயலை, மலரணி கூந்தல் மங்கை கண்டு, உள்ளம் நாணினளாய், கடப்ப மாலை அணிந்த முதல்வனை முருகனை நீங்கி, அழிவிலாத் தந்தையின் அண்மையில் அன்பொடு சென்று, (நேரில் தலை) கவிழ்ந்து நின்றனள்.

(குறிப்பு) :—ஆதி - எவர்க்கும் எதற்கும் முதல்வன். அந்தம் இல் தந்தை – (தன்னை வளர்த்ததால்) அழிவு படா வேட அரசன். (34)

335. நின்ற மாமக ணெஞ்சங் குறிப்பினுல்
வென்றி வேட்டுவர் வேந்த னுணர்ந்துதான்
கன்று மாறொழிந் துள்ளக் கவலொரீஇ
யொன்று மன்பி னுளத்துடன் சொல்லுவான்.

(பொ - ரை) :—வெற்றியை யுடைய வேடர் மன்னன், நின்ற தன்மகளின் நினைவைக் குறிப்பால் உணர்ந்து, தான் (வீணுகக்) கோபிக்கும் தன்மையை விட்டுக் கவலை தீர்ந்து, பொருந்திய அன்பால் (தன்) உள்ளத் தொடு (தானே) உரைக்க லாயினன், (எ - று). (35)

336. நமது தொல்குல நாயக னுமையிற்
குமர வேளென வுள்ளக் குறிப்பிரு
லமைய நோக்குமுன் னுறணிந் தான்புண
ருமைகு மார னுருவங்கண் டானரோ.

(பொ - ரை) :—நமது பழங்குலத் தெய்வமான வேல் படைக் குமரவேளே (இவன்) என்று கொண்ட மனக் குறிப்பால் பொருந்த ஆய்வதன் முன், கங்காதரர் கலந்த உமை மைந்தர், தமது திருவுருவத்தை(த் தாம் காட்டத்) தரிசித்தான், (எ - று).

(குறிப்பு) :—தொல் குலம் – தொன்று தொட்ட மறவர் குலம். அமைய நோக்குதல் - உள்ளாழ்ந்து உணர்தல். (36)

337. கார்வரை யிடத்துக் கதிர்வரை யுதயம்
காட்டுதல் போற்களி மயின்மேற்
ருர்வரை யனைய பன்னிரு புயமுஞ்
சந்தன வரைத்தட மார்புஞ்
சூர்வரை யறுத்த சுடர்வடி வேலுந்
துகிர்வரை மேனியு மாய்ச்சீ
றூர்வரை யரசன் விழிக்கெதிர் நின்று
னுயர்வரைச் சரவணத் துதித்தோன்.

(பொ - ரை) :—உயர்ந்த (இமய) மலைச்சாரலில் உள்ள சரவணப் பொய்கையில் அவதரித்த அத்தன், கருமலை மேல் சூரியன் (சிறக்க) உதயமாவதுபோல், மகிழ்ச்சி யுடைய மயிலின் மேல் மாலை யணிந்த மலை போலும் (தூய) பன்னிரு திருத்தோளும், சந்தனம் பூசிய மலைபோலும் பெரிய திருமார்பும், சூரபதுமனையும் (அவனை மறைத்துக் காத்த) மலையையும் அழித்த ஒளி மயமான ஞான வேலும், பவளமலை போன்ற திருமேனி யும் உடையவனாய், மலைச்சாரலில் உள்ள சிற்றூரின் மன்னனது கண்கட்கு எதிரே காட்சியாயினன், (எ-று).

(குறிப்பு) :—**கார்வரை - பனிபடர் இமய பர்வதம். கதிர்வரை – உதயகிரி. ஊர்வரை–மலைநிலச் சிற்றூர்.** (37)

338. சந்தநான் மறையு முறையிடு மிருதாட்
சரவணோற் பவன்றிரு வடிவம்
விந்தைமால் வரையிற் கானவர்க் கரசன்
விழியினாற் பருகுவான் போலச்
சிந்தையாற் களித்து நோக்கினன் யான்முன்
செய்தவப் பேறென நினைந்து
கந்தவார் குழலா டன்னைமார் பணைத்துக்
கட்டின னுச்சிமோந் தனனால்.

(பொ - ரை) :—நாதத்தி லிருந்து தோன்றிய நான்கு வேதங்களும் (காணாது) ஓலிடுகின்ற இரு திருவடிகளை யுடைய சரவணபவனது திருவுருவை, பெரிய விந்திய மலை வேடர் மன்னன் கண்களால் விழுங்குவான் போல், உளத்தால் மகிழ்ந்து நோக்கினன்; அடியேன் முன்னாளில் செய்த தவத்தின் பயன் (இதுவே) என்று கருதி, மணம் நிறை கூந்தலுடைய வள்ளியம்மையை, மார்பிறுகத் தழுவி உச்சியை மோந்தனன், (எ - று).

**(குறிப்பு) :—சந்தம் – உதாத்தம், அனுதாத்தம், சொரிதம் எனும் எடுத்தல் படுத்தல் இடைப்படுதல் ஆதிய நாத பேதங்கள். வள்ளி என்மகள்; சரவணேற்பவனே என் மருகன் என்று எண்ணி மகிழ்கிருன்; இத் தொடர்பு, யான்முன் செய்தவப் பேறு என்கிருன்.** (38)

339. மட்டறு முவகை பூத்தவே டுவர்கோன்
மயூரவா கனத்துயர் செவ்வேள்
கட்டழ கனைத்து நோக்கின னிதயங்
களித்தனன் றுதிக்குநாக் குழறித்
தொட்டமெய்ம் மயிர்க்கூச் செறிதர விழியிற்
றூயவா னந்தநீர் சொரியச்
சிட்டரு ளடங்கி நான்மறைக் கடங்காச்
சேயினை வழுத்துவ தானன்.

(பொ - ரை) :—அளவற்ற மகிழ்ச்சியில் மலர்ந்த வேட மன்னன், மயிலூரும் பெருமிதச் செவ்வேள் பெருமானது (அடிமுதல் முடிவரை உள்ள) அழகு முழுதும் பார்த்து, உளம் மகிழ்ந்து, புகழ்ந்து உரை தடுமாறி, உடம்பின் அமைந்த உரோமங்கள் சிலிர்ப்ப, (ஒளி மிகு) கண்களிலிருந்து புனித இன்ப அருவி நீர் பொழிய, ஆன்றோரது உள்ளம் போல் அமைந்து, (ஆன்ற) நான்கு மறைகளின் அளவில் அமையாத (தொன்மை) முருகனைத் துதிக்கத் தொடங்கினன், (எ – று).

**(குறிப்பு) :—தொட்ட மெய் என்பதை, மெய்தொட்ட என்று மாறுக. மயிர்க்கூச்சு - புளகாங்கிதம். சிட்டர் உள் - ஞானிகள் உளம்போல்.** (39)

## வேறு

340. உலகத்தின் முதலாய் நின்ற
வொருதனிப் பொருளே போற்றி
கலைகட்கு முணர வொண்ணக்
கருணைவா ரிதியே போற்றி
மலைவிற்கைப் பெருமான் கண்ணின்
வந்தமா மணியே போற்றி
புலமைக்குத் தலைமை யான
புண்ணியா போற்றி போற்றி.

(பொ – ரை) :—உலகத் தோற்றத்திற்கு நிமித்த காரணமாக இருந்த ஒப்பற்ற மெய்ப் பொருளே! (உமக்கே) அடைக்கலம்! நூல்களாலும் உணர்ந்து கொள இயலாத அருட் கடலே! உமக்கே அடைக்கலம்! (மேரு) மலையாகிய வில் பிடித்த திருக்கரத்துச் சிவபிரான் விழிகளி லிருந்து வெளிப்பட்ட மகத்தான மாணிக்கமே! உமக்கே அடைக்கலம்! அறிவிற்கு முதன்மையான அறத்தின் சொருபனே! அடைக்கலம்! (உமக்கே) அடைக்கலம், (எ - று).

(குறிப்பு) — முதல் - ஆதாரம். "தன்னம் தனி நின்றது தானறிய, இன்னம் ஒருவர்க்கு இசைவிப்பதுவோ?" என்பது கந்தரனுபூதி; அதை ஒட்டி, 'ஒரு தனிப் பொருளே' என்றார். அபர ஞானத்தைக் கலைகள் அளிக்கும்; பரஞான முதல்வனை உணர்ந்து கலைகள் ஓத இயலா ஆதலின், 'கலை கட்கும் உணர ஒண்ணு' என்றார். கண்ணுள் இருப்பது மணி; அம்மணியா விளங்குபவனே எனும் நயம் உணர்ந்து சுவைத்தற்கு உரியது. "புலவர் ஏறே" என்பது திரு முருகாற்றுப் படை; அதை 'புலமைக்குத் தலைமையான புண்ணியா" என்பதில் பெற வைத்தார். (40)

341. பேரழகு குடைய தெய்வப்
பிடிபுணர் களிறே போற்றி
கோரவெஞ் சிலைக்கை வேடர்
குலமுய்ய வந்தாய் போற்றி
ஆரமு தனைய வம்மா
னருளுமான் கணவா போற்றி
சூருடற் குருதி மாருச்
சோதிவேற் கடம்பா போற்றி.

(பொ - ரை):—பேரழகமைந்த தெய்வ யானையை (அத்துவிதமாகக்) கலக்கும் ஆண் யானையே! உமக்கே அடைக்கலம்; அச்சம் விளைவிக்கும் உக்கிர விற்படை கையில் பற்றிய மறவர் குலம் உய்தி பெற வந்தவனே! (உமக்கே) அடைக்கலம்; நிறை அமுதம் போன்ற (காஞ்சனை எனும்) அந்த மான் பெற்ற மானுன வள்ளி யம்மை நாயகா! (உமக்கு) வணக்கம்; சூரபதுமனது உடல் இரத்தம் நீங்காத ஒளிவேல் ஏந்திய கடப்ப மாலை யாய்! வணக்கம், (எ - று).

(குறிப்பு): பிடி - பெண்யானை. களிறு - ஆண்யானை; கோரம் - அதிபயங்கரம். ஆர் - அருமை எனினுமாம். மருளும் நோக்குடைய மான்போன்ற வள்ளியாரை, மான் அருளும் மான் என்பது அருமை நடை. (41)

342. என்றடி வணங்கி வேடர்க்
கிறையவன் பகர்வா னெங்கள்
குன்றகந் தன்னிற் போந்து
குழுஉக்கொடு விபுதர் வாழ்த்த
வென்றிவேற் கண்ணி ஞனை
வேதத்தின் முறையே நீயும்
மன்றலந் தொடையல் சூட்ட
வருதியா லைய வென்று.

(பொ - ரை):—என்று திருவடிகளை வணங்கி, வேடர்க்கு மன்னன் (மேலும்) கூறுவான்; எங்கள் குறிஞ்சி நிலத்திற்கு வந்து, வானவர் கூட்டம் வாழ்த்துதல் செய்ய, வெற்றி பொருந்திய வேல் போலும் கண்ணுடைய (எங்கள்) மகளை, வைதிக விதிப்படி, முறையாக நீரும் மணமாலை சூட்ட, ஐயனே! வந்தருளும் என்று, (எ - று).

(குறிப்பு):—விபுதர் - விசேட அறிவுடைய இமையவர். வேதமுறை - வைதிக நெறி. மன்றல்-மணம். அம் தொடை - அழகிய மாலை. (42)

343. தந்திவெண் கோட்டுக் காலிற்
சந்தனச் சட்டஞ் சேர்த்திச்
சுந்தரப் புயல்சூழ் வேங்கைத்
துணர்ப்பசுங் கொம்பர் சாய்த்து
விந்தையிற் றோகைப் பீலி
மேய்ந்துவெண் கவரி நாற்றிப்
பந்தரச் சுதனீன் றுள்ள
பங்கயன் சபைபோற் செய்தான்.

(பொ - ரை):—விந்திய மலையில் வெண்ணிற யானைத் தந்தத்தால் (நலக்கக்) கால்களை நட்டு, (அவைகளில் புனித) சந்தனச் சட்டங்களை பூட்டி, அழகிய மேகங்கள் அளவளாவும் வேங்கையின் பூங் கொத்துகளை யுடைய பசும் கொம்புகளை வளைத்து, மயில் பீலிக் கூறை வேய்ந்து, வெண் சாமரைகளைத் தொங்கவிட்டு, (மணப்) பந்தரை, திருமால் பெற்ற பிரமன் (பெருமித) சபை போல் பிறங்க அமைத்தான், (எ - று).

(குறிப்பு):—தந்தி - யானை; தந்தத்தை யுடையது எனும் காரணக்குறி. கோடு - கொம்பு. புயல் - முகில்கள். துணர் -

தனிர் எனினுமாம். கொம்பு - கிளை; அர் - ஈற்றுப்போலி. மேய்தல் – பரப்புதல். கவரி - சாமரம்; இது கவரிமான் மயிரால் செய்தது. நாற்றல் - தொங்கவிடல். அச்சுதன் - திருமால்; இது அச்யுதன் என்பதன் திரிபு; கைவிடாதவன் என்பது பொருள். பந்தர் - பந்தல்; ஈற்றுப்போலி. (43)

344. தேவரு முனிவர் தாமுஞ்
சித்தரு முத்த ராய
யாவரு மிறைஞ்சி யேத்த
வெம்பிரான் பந்தர்ப் போந்தா
ஞவினு மனத்து மெட்டா
நாரண னயனத் துற்ற
காவியங் கண்ணி னூளைக்
கடிமணக் கோல மாக்க.

(பொ - ரை) :—தேவர்களும், முனிவர்களும், சித்தர்களும், (சீவன்) முத்தர்களான யாவரும் வணங்கித் துதிக்க, பரம குமரன் (திருமணப்) பந்தலை யடைந்தான்; வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாத திருமாலின் கண்ணில் உதித்த குவளைவிழிக் கோதைக்கு, (மன்னன் கட்டளைப்படி, மறமகளிர்) சிறந்த மணக்கோலத்தைச் செய்யும் பொருட்டு, (எ - று).

(குறிப்பு) :—முத்தர் - பந்தம் அகன்ற மேலோர். காவி – குவளை. கடி-சிறப்பு; உரிச்சொல். ஆக்க—ஆக்கும் பொருட்டு. குளகம் - இது அடுத்த பாட்டொடு முடியும். (44)

345. கேசமே யாதி யாகக்
கேழ்கிளர் சரணங் காறுங்
காசுலாம் பணிக ளாகக்
கவினுறத் திருத்திக் காதிற்

பூசலார் விழிக்குச் சந்தப்
பூந்தழை யுடுத்தி வேடர்க்
கீசனும் வேடன் றன்முன்
விடுத்தன ரிதயத் தன்பால்.

(பொ - ரை) :—காதொடு மோதும் கண்களை யுடைய அம்மைக்கு, திருமுடி முதல் நிறம்விளங்கும் திருவடிவரை (அழகிய) பொன்னால் விளங்கும் அணிமயமாக விளங்க அமைத்து, சந்தனத்தின் அழகிய தழையை ஆடை யாக உடுத்தி, உள்ளத்து அன்புடன், வேட மன்னன் முன் கொணர்ந்து விட்டனர், (எ - று).

(குறிப்பு) :—கேழ் - நிறம். காசு - பொன். பூசல் - போர். சந்தம் - சந்தனம். ஈசன் - தலைவன். இதயத்து அன்பால் விடுத்தனர் என இயைக்க. (45)

346. வண்ணவிற் குனிக்கும் வேடர்
மன்னவன் வனப்பு வாய்ந்த
பெண்ணினுக் கரசி செங்கை
பிடித்துவேல் பிடிக்குஞ் செங்கை
யண்ணறன் முகம்பார்த் தெங்க
ளருங்குல முறைமை யீதாற்
றண்ணளி சுரப்ப யானுந்
தருகுவ னென்று தானே.

(பொ - ரை) :—அழகிய வில்லை (அமையத்தில்) வளைக்கும் வேட மன்னன், வனப்பு மிக்க மாதர் திலக மான வள்ளியம்மையின் திருக்கரம்பற்றி, வேலைப்பற்றிய திருக்கர விமலன் திருமுகம் நோக்கி, எங்கள் அருமைக் குலத்தின் வழக்கம் இது ; அடியேனும் (உமது) அருள் பெருகற் பொருட்டு (இவளை) அளிக்கின்றேன் என்று உரைத்து, (எ - று).

(குறிப்பு) :—வண்ணம் - நிறமுமாம். குனிக்கும்-வளைக்கும். வில்பிடித்தவேடன், வேல்பிடித்த அண்ணலுக்குப் பெண்ணரசியைத் தருவன் எனும் அருமை, உணர்வார் உள்ளம் நெகிழ்தலுறும். அரிய தெய்வத்திற்கு அளிக்கும் பொழுதும், தன் குல ஒழுக்கம் காத்தமை கோடி பெறும். (46)

347. பொன்னொடு புனலுஞ் செங்கைப்
போதினி லேந்தி மானின்
கன்னியைக் குமர மூர்த்தி
கையினிற் கொடுத்த காலைத்
துன்னிய மலரின் மாரி
தூர்த்தனர் தோமி லாத
வன்னவான் முரசம் யாவும்
வான்முழக் கென்ன வார்த்த.

(பொ - ரை) :—பொன்னுடன் நீரையும் சிவந்த மலர்க் கரத்தில் கொண்டு, மான்மகளான வள்ளியம்மையைக் குமரப் பெருமான் திருக்கரத்தில் தாரை வார்த்துத் தரும் பொழுது, பொருந்திய மலர் மழையை (எவரும்) பொழிந்தனர்; குற்றம் இல்லாத அழகிய பெரிய முரசப் பறைகள் அனைத்தும், மேக முழக்கம் போல் ஒலித்தன, (எ - று).

(குறிப்பு):—மாரி-மழை. தூர்த்தல்-பூமி மறையப் பொழிதல். தோம் - குற்றம். வான் - சிறந்த. (47)

348. அப்பொழு தகில மீன்ற
வன்னையு மலரின் மாதுஞ்
செப்பருங் கலையின் மாதுஞ்
சேடியர் தாமும் போந்து
துப்பிதழ்க் குறப்பெண் பூண்ட
தோமுறு மணிகள் நீக்கிச்
செப்புதற் கினிய வாகு
மணியினாற் சிறப்பித் தாரால்.

(பொ - ரை):—அவ்வமயம், பேருலகம் அனைத்தையும் பெற்ற தாயான உமா தேவியும், மலர்மகளும், சொலற்கரிய (சிறப்புடைய) கலைமகளும், அவர்தம் தாதியரும் அணுகி, பவளம் போலும் இதழுடைய குறமகளான வள்ளியார் அணிந்த குற்றமுற்ற அணிகளை அகற்றி, கூறற்கு இனியவாகிய (தெய்வ) அணிகளால் கோலம் செய்தனர், (எ - று).

(குறிப்பு):—தோம் உறும் அணிகள் - குற்றம் பொருந்திய ஆபரணங்கள்; இவைகள் நில உலகிற்கு உரியவை. அணியினால் - திவ்ய ஆபரணங்களால்; இவை தேவர்கட்கு உரியவை. (48)

349. கங்குலின் வனப்பு வாய்ந்த
கூந்தலைக் கவினக் கோதித்
தொங்கலி னிறுக வாரிச்
சொருகிவான் பட்டஞ் சேர்த்த
மங்கல முறைமை வான
முகிலினை வளைந்து வானிற்
றங்குமிந் திரவில் லென்னச்
சாற்றலாந் தகைமைத் தம்மா.

(பொ - ரை):—(அடர்ந்த) இருள்போல் பொலிவு அமைந்த தலைமயிரை வனப்புத் தோன்ற வகிர்ந்து, மாலையொடு இறுக வாரிச் சொருகி, மகத்தான நெற்றிப் பட்டம் கட்டிய மங்கல முறைமை, மழைபொழி முகிலைச் சூழ்ந்து, விண்ணில் தங்கிய வானவில் போல்வது என்று சொல்லலாம் தகைமையை உடையது, (எ - று).

(குறிப்பு):—வளைந்து - முற்றுகை யிட்டு. (49)

350. நானநெய் தடவுங் கூந்த
      னுப்பணி னழகு வாய்ப்ப
வானவிற் சுட்டி யோடு
      வயங்குசங் கிலியுஞ் சேர்த்தல்
சோனைவிண் முகிலின் பாங்கர்ச்
      சுடரிமைத் தழியா மின்னுண்
டானதுண் டாகி லம்மா
      வதற்கிணை யாக்க லாமால்.

(பொ - ரை) :—கஸ்தூரியும் நெய்யும் தடவிய கூந்தலின் நடுவில், இந்திர வில் போன்ற (நெற்றிச்) சுட்டியுடன் ஒளிர்கின்ற சங்கிலியும் சேர்த்து நியதி பெற அணிந்திருக்கும் நிலை, (விடாது பெய்யும்) விண்ணிலுள்ள சோனை மேகத்தின் இடத்தில், ஒளி விளங்கி அழியாத மின்னல் இருந்தது உளதாயின், அம்மின்னலுக்கு உவமை ஆகக் கூறலாம், (எ - று).

(குறிப்பு) :—நானம் - கஸ்தூரி. நாப்பண்-நடு. வானவில்- இந்திர தனுசு. சுட்டி - (நெற்றிச்) சுட்டி எனும் ஆபரணம். இமைத்து - ஒளிவீசி. (50)

351. அலகிலா மறைகள் சாற்று
      மரிணமா னுதலி னூடு
திலகநின் றிமைத்தன் மானத்
      திங்களை யடைந்து நீயெங்
குலமகண் முகத்தில் வட்டங்
      கொள்ளுதி திலக மாயா
னிலவுவ னென்று தொன்று
      ணிகழ்த்தியுற் றிடுதல் போலும்.

(பொ - ரை) :—(தூய) மறைகள் அளவிலாது துதிக்கும் மான் மகளான வள்ளியம்மை முகத்தின் நடுவில் பொட்டு நின்று விளங்குதல், (சந்திரனில் காணப்படும்) மானனது, (தன் இடமான) அச்சந்திரன் இருக்குமிடம் சார்ந்து, நீ எமது இனம் (ஆகிய மானின்) மகளது (இனிய) முகத்தில் வட்டம் கொண்டு இரு ; (அங்கு) யான் பொட்டாக விளங்குவன் என்று முன்னுளிற் கூறியபடி, (இன்று வந்து) இருத்தலைப் போலும், (எ-று).

(குறிப்பு) :—அலகு இலா - அளவில்லாத. மான - போல. தொல் நாள் - பண்டை நாளில். (50)

352. அருமறைக் குதலைச் செவ்வா
யமுதமென் முலையி னுடன்
றிருமுகத் தழகுஞ் சோதிச்
செவ்விமூக் குத்தி முத்து
முருவகப் படுத்தின் வானத்
துரோணியை மதிய மேந்தி
மருவிமுத் தாடு மாருய்
வழுத்தலாஞ் சிறிது மாதோ.

(பொ - ரை) :—அரிய மறைகளான மழலை பேசும் சிவந்த வாயையும், அமுதிற்கு இடமான மென்மைக் குயங்களையும் உடைய வள்ளியாரது திருமுகத்தின் அழகையும், (அதில் அணிந்த) ஒளி நலத்தை யுடைய மூக்குத்தியின் முத்தையும் உருவகம் செய்யப் புகுந்தால், வானத்தில் சந்திரன் உரோகணியைத் தாங்கித் தழுவி, முத்தம் கொடுக்கும் முறை என்று ஒரு சிறிது பாராட்டலாம், (எ - று).

(குறிப்பு) :—குதலை - மழலை. செவ்வி - அழகு. உரோணி - உரோகணி. மாது, ஓ இரண்டும் அசைகள். (51)

**353. சொல்லுதற் கரிய வாய**
**சுருதியுங் கருதா மானின்**
**வல்லியின் கண்க ளூடு**
**மைவரைந் தெழுதல் ஞானத்**
**தெல்லையில் கடற்குக் கூல**
**மிட்டதோ கண்ணே றுறப்**
**புல்லிய கறுப்புக் காட்டி**
**வைத்ததோ புகலி னம்மா.**

(பொ - ரை) :—(சிறப்பித்து) உரைத்தற்கு இயலாத, (நான்) மறைகளும் சிந்திக்க முடியாத மான் மகளது திருக்கண்களில் அஞ்சனம் எழுதி இருப்பது, அளவிலாத ஞானக் கடலிற்குக் கரை அமைத்ததோ? கண்ணெச் சில் கழியக் கறுப்பைப் பொருத்திக் காண வைத்ததோ என்று ஓதலாம் போல உளது, (எ - று).

(குறிப்பு) :—ஊடு - இடத்தில். மை - அஞ்சனம். வரைதல் - கோலம் பெற வைத்தல்; கூலம் - கரை. கண்ணேறு - கண் திருஷ்டி. (52)

**354. வண்டென மிழற்றுந் தீஞ்சொன்**
**மானிளஞ் செல்வி யாய**
**வொண்டொடி கபோலச் செவ்வி**
**யோதிமக் கொல்லன் வாழ்த்தி**
**யண்டர்தம் பெருமான் செய்ய**
**வாறுமா முகத்தின் சோதி**
**கண்டுகண் களிக்க வைத்த**
**காஞ்சனம் போலு மாதோ.**

(பொ - ரை) :—வண்டின் இசை போன்ற இனிய மொழிகளை யுடைய மான் மகளான வளையலணி வள்ளியாரின் கன்னத்து அழகானது, தேவர்கள் தலைவனை

இறைவன், தன் சிறந்த ஆறுமுகங்களின் பிரதிபிம்பத்தைக் கண்டு கண்களி கூரும் பொருட்டு, அன்ன ஊர்திய னை (பிரமக் கம்மியன்,) புகழ்ந்து வாழ்த்தி வைத்த (புனிதமிகு) கண்ணாடி போலும், (எ - று).

(குறிப்பு) :—மிழற்றும் - இசைக்கும். கபோலம் - கன்னம். ஓதிமம் - அன்னம். காஞ்சனம் - கண்ணாடி. காஞ்சனை தந்த மகளின் இரு கன்னங்கள், கண்ணாடி போல் உள; அதனில் முருகன் திருவுருவ நிழல் தெரியும் எனும் அருமை, எவரும் மறக்க இயல்வது இல்லையே. (53)

355. கருமுகில் விளர்ப்ப வுள்ளங்
கறுத்தபூங் காம ரோதி
யிருகுழைக் கிணங்கச் சாத்து
மிணைமணித் தோட்டின் செவ்வி
பெருமையி னன்பர் ஞானம்
பிறங்கநோக் குதற்கு வைத்த
திருவினிற் பொலியுஞ் சோதிச்
சிறியகண் ணாடி யாமால்.

(பொ - ரை) :—நீல மேகமும் (தன்முன்) வெளுத்துப் போக அகம் கறுத்த அழகிய மலரணி கூந்தல் அம்மையின், (புனித) இரு செவிகட்குப் பொருந்த அணிந்த ஒப்பான மணிகள் பதித்த தோட்டின் ஒளியானது, பெருமையினை யுடைய அன்பர்கள் ஞானத்தை விளங்கக் காண வைத்த அருளுடன் சிறக்கும் ஒளியுள சிறு கண்ணாடி போல் ஆகும், (எ - று).

(குறிப்பு) :—விளர்ப்ப - (நாணி) வெளுக்க; அஃதாவது நிறத்திற்குத் தோற்க என்றபடி. காமர் - காமிக்கத் தக்க. ஓதி - கூந்தல். குழை - செவி. இணை - இரண்டு; சமம் எனினுமாம்; தோடு - செவியணி. பிறங்க - நலமுற விளங்க. திரு - (சிறப்புச்) செல்வம். (54)

356. பூவைபோ னிறத்து மாயன்
புதல்விசெவ் விதழி னூடு
யாவக மெழுதுங் காம
ரெம்மனோர்க் கிசைக்கற் பாற்றோ
மாவகம் பிளந்த வேற்கை
வரன்கிளிக் கமுத மூறுங்
கோவையங் கனிநே ரென்னக்
கூறலாஞ் சிறிது மாதோ.

(பொ - ரை) :—காயாம் பூ நிறத்துத் திருமால் மகளான வள்ளியம்மையின் சிவந்த இதழில் செம்பஞ்சு தீட்டிய அழகு, எம்போன்றவரால் சொல்ல இயல்வதோ? (சூரனாகிய) மாமரத்தைப் பிளந்த வேல் ஏந்திய திருக்கரத்தை யுடைய குமரனாகிய கிளிக்கு, அமுது சுரக்கும் கோவைப் பழம்போல் உளது என்று (வேண்டுமேல்) ஓரளவு உரைக்கலாம், (எ - று).

(குறிப்பு) :—பூவை - காயாம்பூ. இதழ் - உதடு. ஊடு - நடுவிடம். காமர் - அழகு. மா அகம் – (சூரனாகிய) மாமர நடுவிடம். வரன்கிளி - நாயனாகிய கிளிக்கு. (55)

357. சுந்தரங் கவினு மானின்
றேகையார்க் கோதை காட்டுங்
கந்தர வனப்புப் பூசுங்
காழகிற் கவினி னம்மா
முந்துசே தகத்தி னூடு
முழங்குவெண் சங்கம் போலு
மிந்தவா றுரைப்ப தல்லால்
யாதெனப் பகர்வன் மாதோ.

(பொ - ரை) :—அழகு விளங்கும் அம்மையின் ஒலி தோற்றுவிக்கும் (புனித) கழுத்தின் பொலிவு, (அக் கண்டத்தில்) பூசுகின்ற அகில் குழம்பின் (அதி) வனப் பால், முற்பட்ட சேற்றுள்பட்டு ஒலியெழுப்பும் வெண்ணி றச் சங்கு போலும்; இங்ஙனம் கூறுவது அல்லாமல், (வேறு) என்னென்று உரைப்பன், (எ - று).

(குறிப்பு) :—தோகையார்க்கு - மயில் போலும் சாயல் வள்ளியார்க்கு. ஓதை - ஓசை; இது கலவிக் காலத்து எழுவது. கந்தரம் - கண்டம். காழ் அகில் - வயிரமான அகில் குழம்பு. சேதகம் - சேறு. "கடற்படு பணிலமும் கன்னிப் பூகமும் மிடற்றினுக் குவமை" என்பர் கம்பர். அதற்கு ஏற்ப, 'கந்தர வனப்பு வெண்சங்கம் போலும்' என்றார். சங்கு போன்ற கழுத்து; அதன் மேல் சந்தனக் குழம்புள அருமையை நயம்பெற இனிது நவின்றபடி. (56)

358. நாரணன் புதல்வி மார்பி
 னளினநாண் முகையின் வாய்ந்த
வாரண மருப்பின் கொங்கை
 மதர்ப்பும்பூண் வனப்பும் பார்க்கிற்
காரண மில்லா வேலோன்
 காமப்பேய் தணிப்பான் சாந்திப்
பூரண கும்பம் வைத்தல்
 போலுமென் றுரைக்க லாமால்.

(பொ - ரை) :—திருமால் மகளான வள்ளியம்மை திருமார்பில் குளிர்ந்த புதுத்தாமரையின் அரும்புபோலும், மதயானைத் தந்தம் போலும் (மகத்தான) குயங்களின் மதர்த்த தன்மையையும், அணிகலன்களின் அழகையும் பார்க்கும்போது, (தனக்கொரு) தோற்றுவாய் இல்லாத வேலிறைவனின் ஆசைப் பேயை அகற்றுதற் பொருட்டு,

சாந்தி கிரியைக்கு உரிய நிறை குடங்களை வைத்தது போலுள என்று சொல்லலாம்படித் தோன்றும், (எ - று).

(குறிப்பு) :—மதர்ப்பு - செருக்கு. காரணம் இல்லா - எக்காரணத்திற்கும் அப்பாற்பட்ட; காரணம்-நிமித்தம், முதல், துணை என மூவகைப்படும்; அவைகட் கெல்லாம் அப்பால் ஆனவன் ஆதலின் 'காரணம் இல்லா வேலோன்' என்றார். சாந்தி - அமைதி. பூரணம் - நிறைவு. 'கொங்கை பூரண கும்பம்' என இயைக்க. கும்பம் - கலசம். (57)

359. ஆரமு தனைய மானுக்
கம்பொனி னுடை சாத்தல்
சூரிய கிரணம் வாரிச்
சுடர்ப்பக லாய சேடி
மேருவுக் காடை யாக
வுடுத்துமெய் யழகு நோக்குஞ்
சீரிய சிறப்பு மானச்
செப்பலாம் புலவர்க் கம்மா.

(பொ - ரை) :—(உயர்) நிறை அமுதம் ஒத்த (அழகிய) வள்ளி அம்மைக்கு அரிய பொன் ஆடை அணிந்தமை, பகற்காலம் ஆகிய ஒளியுடைய பாங்கி, ஆதித்தன் கிரணங்களை அள்ளி, (உயர்ந்த) மேரு மலைக்கு ஆடையாக உடுத்தி, (அதன்) மெய்யான அழகை நோக்கும் மிக்க சிறப்பிற்கு ஒப்பாகப் புலவர்களால் (என்றும்) புகலப் பெறலாம், (எ - று).

(குறிப்பு) :—பகற் பொழுதைத் தாதியாகக் கூறிய உருவகம் இது. மான -போல; உவம உருபு. (58)

360. மயிலிளஞ் சாயல் காட்டு
மானிளஞ் செல்வி யார்க்கு

**வெயில்விரி மணியிற் செய்த**
**மேகலை வயங்கச் சேர்த்த**
**னயனுறு முலைதாங் காது**
**நையுநூ லிடைக்குச் செம்பொன்**
**பயில்வுறு பூண்சேர்த் தன்பின்**
**பாதுகாத் திடுதல் போலாம்.**

(பொ - ரை) :—மயிலின் இளம் சாயலையுடைய மான் இளந் திருவான மங்கைக்கு, ஒளிபரப்பும் இரத்தினங் களால் அமைத்த மேகலா பரணத்தை விளங்க அணிந் தமை, மென்மை பொருந்திய குயபாரம் தாங்காமல் வருந்தும் நூல் போலும் (நுண்) இடைக்கு, அரிய பொன்னாலான அணிகலனை அணிந்து அன்பொடு காப் பதுபோல் ஆகும், (எ - று).

(குறிப்பு) :—வெயில் - **பிரகாசம்.** மேகலை - இடையில் **அணியும் ஒருவகை** யணி. வயங்க - மிளிர. நயன் - மென்மை ; (59)

361. **கவினுறு கையில் வெள்ளிக்**
**கடகமுந் துகிரு மேய**
**வவிர்கரு வளையு மானி**
**னணங்கினுக் கிணங்கச் சேர்த்த**
**லுவமையி றேவர் மூவர்க்**
**குளகுண மூன்று நல்க**
**விவள்கரம் பிடித்த தாமென்**
**றிசைக்கலாந் தகைமைத் தம்மா.**

(பொ - ரை) :—மான் மகளான தெய்வ மங்கைக்கு, அழகுறு திருக்கரத்தில் வெள்ளியால் ஆன கடகமும், பவள வளையும், பொருந்திய ஒளியுள கருவளையும்

(ஒருங்கு) அமைய அணிந்த செய்தி, உவமை சொல்ல இயலாத தேவர்களான (பிரமன் திருமால் உருத்திரன்) மூவர்களுக்கு உள்ள (இராஜச, தாமச, சாத்விகமான) முக்குணங்களையும் உதவ, அவைகளை இத்தேவி திருக் கரத்தால் பற்றியது போலுள என்று கூறலாம் இயல்பினை யுடையது, (எ - று).

(குறிப்பு) :—வெள்ளி - வெண்ணிறமானது ; இகரம்விகுதி. பிரமனின் வெண்ணிறம், உருத்திரனின் செந்நிறம், திருமாலின் கருநிறம், அவரவர் குணங்களின் அறிகுறி. மும்மூர்த்திகட்கும் உரிய அக்குணங்களை உதவ, முந்நிற வளை யணிந்தாள் முதல்வி என்றபடி. முக்குணங்கள், மூவித வளைபோல் முதல்வியிடம் உள என்பது குறிப்பு. (60)

362. மாயவன் வலக்கண் பாங்கர்
வந்தவ தரித்த மானின்
மேயகை விரல்க டோறும்
விளங்குமோ திரங்கள் சேர்த்தல்
பாயமென் வசந்த காலப்
பாவைகற் பகப்பூங் கொம்பிற்
றூயநாண் மலர்கள் பூப்பத்
துலங்குதல் போலு மாதோ.

(பொ - ரை) :—திருமாலின் வலக்கண்ணி லிருந்து உதித்த தேவியின் திருக்கரங்களில் உள்ள விரல்கள் தோறும் விளங்கும்படி மோதிரங்கள் சேர்த்தமை, பரவிய மெல்லிய வசந்த காலம் ஆகிய வநிதையின் (கை விரல் களாகிய) கற்பகத் தருவின் பூங்கொம்பர்களில், தூய்மை யான புதுமலர்கள் பூக்கத் தோன்றுவதுபோலும், (எ-று).

(குறிப்பு) :—பாய - பரவிய. வசந்த காலத்தை ஒரு வனிதையாக உருவகித்தபடி. துலங்குதல் – ஒளிர்தல். (61)

363. கொண்டலைப் பழித்த கூந்தற்
குறக்கொடி கமலத் தாளிற்
றண்டையுஞ் சிலம்பும் வெள்ளிச்
சதங்கையுந் தயங்கச் சேர்த்தல்
முண்டகத் தளிமத் தன்ன
முட்டையிட் டதனைக் காத்து
விண்டரற் றுதலா மென்ன
விளம்பலா முளங்கொண் டம்மா.

(பொ - ரை):—மேகத்தை வென்ற கூந்தலை யுடைய குறவர் குலக் கொடியான வள்ளி யம்மையின் தாமரை போன்ற திருவடிகளில் தண்டையும், சிலம்பும், வெள் ளிச் சதங்கையும் (ஒலி) விளங்கத் தரித்திருக்கும் தன்மை, பங்கய மலராகிய படுக்கையில் அன்னங்கள் முட்டையிட்டு, அவற்றைக் காத்து வாய் திறந்து கூவுதல் போலாம் என்று மனம்கொண்டு சொல்லத்தகும், (எ-று).

(குறிப்பு) :— முட்டையிட்டு அவயங் காக்கும் பொழுது, உடலில் விளையும் மெய்ப்பாட்டால் அன்னம் வாய்திறந்து அரற்றும்; அதுபோல் உளது, தண்டை, சிலம்பு, சதங்கை மூன்றும் மாறுபட்டு ஒலிப்பது என்று அறிவித்தபடி. (63)

364. செய்யமா னளிக்க வந்த
செவ்விசெங் கமலத் தாளுங்
கையும்வான் செம்பஞ் சூட்டுங்
கதிர்வனப் பொளிய வைவே
லையனு றிருக ணீல
மழுத்தக்கே வணத்துச் செய்த
துய்யசெம் மெழுகுக் கொப்பச்
சொல்லலாம் புலவர்க் கம்மா.

(பொ - ரை):—செம்மைமான் தந்த செல்வியின் செந்தாமரை போலும் திருவடிகளிலும், திருக்கரங்களிலும் தடவிய சிறந்த குங்குமக் குழம்பு, அழகிய ஒளியுடைய கூரிய வேல் இறைவனது பன்னிரு திருக்கண்களாகிய நீலமணிகளைப் பதிக்குமாறு, குழி வட்டத்திற்கு அமைத்த தூய சிவந்த மெழுகுக்கு ஒப்ப (உளதென்று) புலவர்கட்குச் சொல்லத்தகும், (எ - று).

(குறிப்பு):—கேவணம் - மணிகள் பதிக்கும் குழி. (64)

565. இவ்வண்ண முவமை யாரு
மிசைப்பவீர்ங் கமல மாதுங்
கொவ்வைவாய்க் கலையின் மாதுங்
குறக்கொடி தனக்குக் கோலச்
செவ்வியின் வாய்ப்பச் செய்த
செய்கையை நெடுவே லண்ண
லெவ்வமில் கருணைக் கண்க
ளிராறினு லுள்ளம் வைத்தான்.

(பொ - ரை):—இவ்வாறு எவரும் உவமை கூற, குளிர்ந்த மலர்மகளும், கொவ்வை போலும் வாயுடைய கலைமகளும், குறவர் குலக் கொடியான வள்ளியார்க்கு (இயற்கை யழகு போல்) செயற்கை யழகும் நேரச் செய்த செயலை, நீண்ட வேல் இறைவன், துன்பத்தை யழிக்கும் அருளினையுடைய பன்னிரு திருக்கண்களாலும் உள்ளங் கொண்டு பார்த்தான், (எ - று).

366. வீரவேற் றடக்கை யண்ணல்
மெல்லியல் வனப்ப தான
வாரியிற் படிந்து காம
வயாவொழித் தளவி லாத

**பேரருள் சிறந்த காலைப்**
**பெயர்த்திரி சுதந்தி ரத்தர்**
**காரிகைச் சடங்கு காட்டக்**
**களித்தவ ணடைந்தார் மன்னே.**

(பொ - ரை) :—வீரவேல் (ஏந்திய) பெருந்திருக் கரத்தை யுடைய பெருமான், மெல்லியல் வள்ளியின் அழகாம் கடலில் ஆழ்ந்து, காமத்தால் ஆன துன்பம் கடந்து, அளவு படாத பெருங்கருணை சிறந்திருந்த பொழுது, பிரசித்தியுள்ள திரிசுந்தரர்கள், திருமணச் சடங்கை நடத்தி வைக்க, மகிழ்ந்து அங்கு வந்தனர்.()

367. **திரிசுதந் திரத்தர் யாருஞ்**
**சிறந்துயர் கிருகி யப்பேர்ச்**
**சுருதியி னியதிக் குள்ள**
**தோமறு முறைகள் செய்ய**
**பொருவரு மணியிற் பொன்னிற்**
**புரியுமண் டபத்திற் போந்தே**
**வரியணைப் பீடத் தெங்க**
**ளையன்வீற் றிருத்தல் செய்தான்.**

(பொ - ரை) :—திரிசுந்தரர் அனைவரும், சிறந்து உயர்ந்த இல்லற நல்லறம் இயம்பும் பேரருள் நூல் விதிக்கு உரிய குற்றமற்ற சிறந்த சடங்குகளைச் செய்ய, ஒப்பற்ற மணிகளாலும் பொன்னாலும் வாய்த்த மண்டபத்திற்கு வந்து, சிங்காதனத்தில் எங்கள் பெருமான் விளக்கம் தோன்ற அமர்ந்து இருந்தான், (எ - று).

(குறிப்பு) :—கிருகியம் - கிருக கிருத்தியம்; கிருஹஸ்த தரும விதி. நியதி - கிரமம். பேர்சுருதி - பெரியதரும நூல். (67)

**368.** காதலி குறக்கோ மாட்டி
கரகநீர் வார்ப்பச் செவ்வேள்
பாதமெய்த் துணையை வேடர்
பார்த்திபன் விளக்கிப் பின்னர்க்
கோதிலா சமன நீருங்
கொடுத்தருக் கியமு நல்கி
மாதவன் முருகன் கையின்
மதுபருக் கமுமீந் தானல்.

(பொ - ரை):—குறவர் குல வேட அரசி, (அன்பொடு) கமண்டல நீர் வார்க்க, மாபெரும் தவத்தன் ஆன வேடர் மன்னன், குமரனின் மெய்ம்மைத் திருவடிகள் இரண்டினையும் அபிடேகித்து, பிறகு குற்றம் இல்லாத ஆசமன நீரையும் அருக்கியத்தையும் அளித்து, முருகப் பரமன் திருக்கரத்தில் மது பருக்கத்தையும் தந்தான். ( )

(குறிப்பு):—பாத்தியம் - கால் கழுவும் நீர்; ஆசமனம் - பருகும் நீர். மதுபருக்கம் - பால்பழம் தேன் சருக்கரை கலந்து பிசைந்த உணவு. 'மாதவன்....பார்த்திபன்' என இயைக்க.

**369.** அந்தணர் கிருகி யத்தி னுகம மரபின் மிக்க
செந்தழ லதனை மூட்டிச் செய்வினைச் சமிதை யெல்லா
முந்திய முறையா லோம முடித்ததற் பின்பு ஞானக்
கந்தன்மு னரிண மீன்ற கன்னியைக் கொடுவந் துய்த்தார்.

(பொ - ரை):—வேதியர்கள் இல்லற நூல் விதிப்படியும், சிவாகம முறைப்படியும் மிகுதியாக வேள்வித் தீயை எழுப்பி, செய்தொழிற்கு வேண்டும் சமித்துக்கள் அனைத்தினலும், முன்னைய விதிப்படி ஓமம் இயற்றி முடித்தபின், ஞான சொரூபனை கந்தப் பெருமான் திரு முன், மான் தந்த மகளாரை (விண்மகளிர்) கொணர்ந்து விட்டனர், (எ - று).

370. வலதுசெங் கையிஞற் பொன்னின்
மங்கல நாணை வாங்கிக்
கலைமகள் கையி னீந்து
வள்ளிகந் தரத்துச் செவ்வே
ணலனுறப் புனைவித் தைய
நன்பொரி தூவி வேதச்
சுலனனை வலம தாக
மும்முறை சூழ்ந்த பின்னர்.

(பொ - ரை):—செக்கர்வேள் பெருமான் பொன்னுல் ஆன மாங்கல்ய நாணை வலத் திருக்கரத்தால் எடுத்து, நாமகள் கரத்தில் நல்கி, வள்ளி யம்மையின் திருக்கழுத்தில் மங்கலம் பொருந்த அணிவித்து, சிறந்த பொரிகளைச் சிந்தி, வைதிக வேள்வியை மும்முறை வலம் வந்தபின்பு, (எ—று).

(குறிப்பு):—சுலனன் - அக்கினி. (70)

371. மான்மகள் வலக்கால் பற்றி
வஞ்சனேன் மனமா மம்மி
நூன்முறை மிதிப்பித் துள்ள
நோன்மைபெற் றுயர்வான் சாலீ
மீன்விழி பார்த்துப் பின்னு
மிக்குயர் கரும முற்றிக்
கான்வரை 'குறவ னீன்ற
கன்னியை மணஞ்செய் தானுல்.

(பொ - ரை):—திருமால் மகளான வள்ளியம்மையின் வலது திருவடியைப் பிடித்து, அதி வஞ்சனை உடைய அடியேன் மனம்போன்ற அம்மிமேல் (மேதகு நூல்) முறைப்படி மிதிக்கச் செய்து, மனவன்மை கொண்டு,

வானில் உயர்ந்த அருந்ததியை, கயல் மீன் போலும் கண்களால் (துணைவியார்) காணச் செய்து, மேலும் நீடித்த சடங்குகளை நிறைவேற்றி, காடுசூழ் மலைநில மறவர் மன்னன் பெற்ற மகளாரைப் (புனிதத்) திருமணம் புரிந்து கொண்டனன், (எ - று). (71)

372. மணவினை காண்பான் வேதன் மாலரன் றேவர் கோமா
னிணையறு முனிவர் கான மிசைந்தகந் தருவர் சூழ்ந்தார்
பணைமுர சோதை யார்த்த பைந்தரு மலரின் மாரி
கணமழை போலத் தூர்த்த கந்தனு மகிழ்ச்சிபூத்தான்.

(பொ - ரை) :—திருமணச் சடங்கைக் காண்பதன் பொருட்டு பிரமன், திருமால், உருத்திரர், தேவர் தலைவனை இந்திரன், ஒப்பற்ற முனிவர்கள், இசைபாடும் கந்தருவர்கள் (முதலினோர்) மொய்த்தனர்; குழலின் ஒலிகளும், முரசு ஒலிகளும் (கொம்மென்று) ஒலித்தன. தண்மைக் கற்பகத் தருக்கள், (புனித) மேகங்களைப் போற் பூமழை பொழிந்தன; (மாபெரும்) கந்தப் பெருமானும் மகிழ்ச்சி யடைந்தனன், (எ - று).

(குறிப்பு) :—மால் - திருமால்; அகடித கடனு சாமர்த்தியர் எனும் பொருட் பெயர்; மாயையில் வல்லவர் எனினுமாம். ஹரித்தல் செய்பவன் ஹரன்; ஹரித்தல் - இளைப்பாற்றல். கோமான் - மான் முறைப்பெயர் விகுதி; கோ - தலைமை. இணை-ஒப்பு. கானம்-இசை. பணை-குழல். மாரி-மழை கணம்-கூட்டம். தூர்த்த - (மாபெரும் நிலத்தை) மறைத்தன. (72)

373. மன்றலந் தொடையல் சூட்டும்
வதுவைநோக் குற்ற வானோர்
நின்றவர் யாருந் தத்த
நீள்பதி யடைந்தார் விந்தைக்

குன்றவர் சாப நீங்கிக்
குமரவே ளுலகம் புக்கார்
மின்றிகழ் மருங்கின் மாதும்
விசாகனு மகிழ்ச்சி பூத்தார்.

(பொ - ரை) :—அழகிய மணமாலை புனையும் திருமணத்தைத் தரிசித்த தேவர்களும், (மற்று) வந்திருந்த அனைவரும், தம்தம் நெடும்பதி சென்று சேர்ந்தனர் ; விந்திய மலை(யில் இருந்த) வேடுவர்கள் அனைவரும் (தம்தம்) சாபம் தவிர்ந்து, (இன்பக்) கௌமார புவனம் எய்தினர் ; மின்போல் மிளிரும் இடையினை யுடைய வள்ளி யம்மையும், விசாகப் பெருமானும் (மாபெரும்) இன்பம் எய்தினர், (எ - று). (73)

374. சூருயிர் குடித்த வொள்வேற்
றேகையெம் பெருமான் வேட
ராரமிர் தனையா ளோடு
மணிமணிச் சிறப்பு வாய்ந்த
தேரின்மேற் கொண்டு ஞானச்
செயந்தியம் பதியில் வானக்
காருலா வியதண் சாரற்
கந்தமா தனத்திற் புக்கான்.

(பொ - ரை) :—சூரன் உயிரைப் பருகிய ஒளிமயமான வேலுள (பெரு) மயிலேறும் எம் பெருமான், மறவர் குல நிறையமுது போன்ற மங்கையுடன், அழகிய நவமணி பதித்த எழில் மிகு தேர்மேல் ஏறி அமர்ந்து, பரம ஞானமான செந்திற் பதியில், வானத்தில் கருமுகில்கள் உலவுகின்ற குளிர்ந்த சாரலை யுடைய (புனித) கந்த மாதனத்தில் புகுந்தனன், (எ - று).

(குறிப்பு) :—குடித்தல்-ஒழித்தல்; "உண்டற்குரிய அல்லாப் பொருளை உண்டன போலக் கூறலும் மரபே" என்பது தொல்காப்பியம். தோகை - மயில்; சினையாகு பெயர். கார் - கருநிற மேகங்கள். கந்தமாதனம் - செந்திலில் உள்ள சந்தனசலம். (74)

375. கரடிகை பேரி தாளங் காகளம் பதலை பம்பை
முருடுதுந் துபித டாரி முரசுசல் லிகைநி சாளம்
வரிவிர லேறு கோடு மத்தளம் படகந் தக்கை
பரவையி னார்ப்பத் தேவர் பனிமலர் மாரி தூர்த்தார்.

(பொ - ரை) :—கரடிகை, பேரிகை, தாளம், காகளம், பதலை, பம்பை, முருடு, துந்துபி, தடாரி, முரசு, சல்லிகை, நிசாளம், தண்ணுமை, கீற்றுக்களை யுடைய விரல் ஏறு, கொம்பு, மத்தளம், படகம், தக்கை (எனும் பறைகள்) கடல்போல் ஒலிக்க, வானவர் குளிர்ந்த மலர்மழை தூவினர், (எ - று).

(குறிப்பு) :—பதலை - ஒருகண் பகுவாய்ப் பறை. நிசாளம் - தம்பட்டம். தக்கை - இடக்கை. படகம் - இரணபேரி எனும் ஒருவகை வாத்தியம். பேரிகை - ஒருவகைத் தோல்கருவி. மத்து - ஓசைப் பெயர் ; இசையிடனாகிய கருவிகட்கெல்லாம் தளம் ஆதலின், ஒரு கருவி, மத்தளம் எனப்பெற்றது. (75)

376. விந்தைமால் வரையிற் கந்தன்
வேள்வியின் பொருட்டால் சென்ற
வந்தநாட் டொட்டுத் தெய்வ
வாரணத் தணங்கு நோற்றுக்
கந்தமா தனத்தி னுற்றுள்
கண்ணுதற் பரனன் னுள்மு
னிந்திரா திபரும் போற்ற
விலிங்கத்தின் வடிவங் கொண்டான்.

(பொ - ரை) :—கந்தப் பெருமான் திருமணத்தின் பொருட்டு விந்திய மலையில் சென்ற அந்நாள் முதல், தெய்வ யானை எனும் அணங்கு, கந்த மாதனத்தில் தவம் செய்து கொண்டு இருந்தார் ; நெற்றிக்கண் நிமலர் அத்தேவியின் திருமுன், இந்திரனுக்கு அதிபரான திருமாலாதியரும் துதிக்க, சிவலிங்க வடிவம் கொண்டனர், (எ – று). (76)

377. கான்றமாக் கலுழி நால்வாய்க்
களிறுலாங் குன்றந் தன்னிற்
றோன்றிலிங் கத்தின் முன்னர்
சுந்தரி யடியே னெஞ்சி
லான்றபே ரெண்ணந் தானு
மன்பினங் கேள்வ னெஞ்சத்
தேன்றவெண் ணமுமே நன்று
யிறைமுடித் தருள்வா யென்றும்.

(பொ – ரை) :—மதவெள்ளம் பொழிந்து, தொங்கும் வாயுடைய ஆண் யானைகள் உலவும் (கந்தமாதன) மலையில் வெளிப்பட்ட சிவலிங்கத்தின் முன், அழகிய தெய்வ யானையார், அடியேன் மனத்தின் நிறைதரு நினைவையும், அன்புடைய என்பதியின் திருவுளத்தில் பொருந்திய எண்ணத்தையும், இறைவா ! நிறைவேற்றி யருள் என்றும், (எ - று). (77)

378. எம்மிறை வேட்ட மாதும்
யானுமோ ருள்ள மாகுஞ்
செம்மையை யருள்வா யென்றுஞ்
சிந்தனை செய்ய வந்தக்

கொம்மைவெம் முலையாண் முன்னர்க்
கோதிலா விலிங்கந் தன்னின்
மைம்மலி மிடற்றுப் புத்தேள்
வந்தனன் மறைக ளார்ப்ப.

(பொ - ரை) :—எமது இறைவனை மணந்த வள்ளியாரும் அடியேனும், ஒரு மனமாகி யிருக்கும் செம்மையை அருள்க என்றும் பெரிது நினைத்துப் பிரார்த்திக்க, குவிந்த் குயங்களை யுடைய அத் தேவயானையார் திருமுன், தூய இலிங்கத்தி லிருந்து, திருநீலகண்டப் பெருமான் வேதங்கள் போற்ற வெளிப்பட்டனர். (எ-று).

(குறிப்பு) :—அமுதவல்லியும் சுந்தரியாரும், திருமால் விழிகளி லிருந்து அவதரித்தனர். பிறகு இந்திரன்பாலும், வேடர் தலைவன் வேல்நம்பிபாலும் வளர்ந்தனர். அதன்பின் மயிலூர் பரனை மணந்தனர். தக்கவர் செய்யும் தவறுகட்குத் தண்டனை எனும் தேவ நீதியை உயிர்கட்கு உணர்த்த, திருவருள் சங்கற்பித்தது. அதனால் மாசற்ற வள்ளியார் மனம், தேவயானையாரை அவமதித்தது. அதற்குரிய சாபத்தை எம்மான் அளிக்க ஏற்று, மீட்டும் காஞ்சனையான மான் வயிற்றில் உதித்து, விந்திய மலையின் வேடர்பால் வளர்ந்து, பூர்வாசிரமப்படி வள்ளியெனும் பெயர் கொண்டு, கவினும் தினைப்புனக் காவல் செய்து, மாபெரும் கந்தனை மணந்த செய்தியை, தெய்வ இப்புராணம் தெரிவிக்கின்றது. வள்ளியார் அவதாரமும் மணமும் வேறு வேறு வரலாறுகளாக, இருகற்பங்களில் நிகழ்ந்தன என்று அறிவது நலம். இத்தகைய பிரிவு இனியும் நேராதபடி நீ அருள் என்று வேண்டுகிறார், தேவயானையார் எனும் செய்தியை, இப்பாடல் கொண்டு அறிக. (78)

379. கயிலையெம் பெருமான் கந்த
மாதனத் திலிங்கத் தூடு
வெயில்விரித் துலவுங் கோலம்
வெள்ளை வா ரணன்கு மாரி

புயலினைக் கண்ட தோகை
போலுளங் களித்தா ளந்தக்
குயின்மொழிக் குள்ளத் துற்ற
குறிப்பெலாம் பரனு மீந்தான்.

(பொ - ரை):—கயிலையிலுள எம்பெருமான், கந்தமாதனத்து இலிங்க நடுவில் ஒளி பரப்பி எழுந்தருளிய திருவுருவை, வெள்ளை யானையை ஊர்தியாக உடைய இந்திர குமாரியான தேவயானையார் தரிசித்து, (மாபெரும்) மேகத்தைக் கண்ட மயில்போல் மகிழ்ந்தார்; குயில்போலும் குரலுடைய அந்த அம்மைக்கு, (அவர்) திருவுளத்தில் நினைத்த குறிப்பனைத்தையும் அமலன் (நிறைவேற) அருளினன், (எ - று). (79)

380. ஈந்தவப் பொழுது தெய்வ
யானையு மகிழ்ந்து வேற்கைச்
சேந்தனுக் கத்த னென்றுஞ்
செகத்துளோர் நாத னென்றுங்
காந்தளங் கரத்துச் சூலி
காதல னென்று நீங்கா
வாய்ந்தபே ரன்பி னாலே
வணங்கினள் வழுத்தி நின்றாள்.

(பொ - ரை):—அருளிய அவ்வமயம், தெய்வ யானையாரும் உள்ளம் உவந்து, வேல் திருக்கரச் சேந்தனுக்குத் தந்தை என்றும், நானில உயிர்கட்கெல்லாம் நாயகன் என்றும், காந்தள் மலர்த் திருக்கரத்திற் சூலம் ஏந்திய (மாபெரும்) உமையாட்கு மணாளன் என்றும், வாய்த்த இடையறாப் பேரன்பால் வணங்கித் துதித்து இருந்தார், (எ - று). (80)

381. வழுத்திய தெய்வ யானை
மாமனுங் கடவுள் பாத
முழுத்ததண் ணளியிற் போற்றி
முப்புர மெரித்த மூர்த்தி
தொழத்தகு மிலிங்கத் தண்டச்
சூழலுள் ளளவு நீயே
தழைத்தசிந் தையினுன் ஞானத்
தண்ணளி சுரத்தல் வேண்டும்.

(பொ - ரை) :—மாமனுர் ஆகிய சிவனுர் திருவடிகளைத் துதித்த தெய்வ யானையார், முப்புரம் எரித்த மூர்த்தியே! வணங்கப் பெறும் (இந்த) இலிங்கத்தில் நீர் (வியாபித்து இருந்து,) அண்டங்களில் உள்ள உயிர்கள் அனைத்தையும் (கனிந்த) நிறைபேரருளால் காப்பாற்றி, தழைத்த திருவுளத்துடன், (யாவர்க்கும்) சிவஞானம் ஆகிய குளிர்ந்த (பயனுன) திருவருளைப் பாலித்தல் வேண்டும், (எ — று). (81)

382. ஐயநீ யுனது சேய்க்குஞ்
சேய்க்கருந் தாரமாகுந்
தையலா ரிருவ ருக்குந்
தயவுடன் பரவி யேத்தும்
வையகத் தெவர்க்கு மன்பு
மழையெனச் சுரந்து காத்தல்
செய்யநின் னருளே வேண்டு
மென்றன டெய்வ யானை.

(பொ - ரை) :—ஐயனே! நீர் உமது குமாரர்க்கும், மைந்தற்கு அருமை மனைவியரான (இனிய) மங்கையர் எம் இருவர்க்கும், அன்புடன் வழிபட்டுத்துதிக்கும் உலகர்

எவர்கட்கும், (புனித) அன்பை மழைபோல் பொழிந்து காக்குமாறு, செம்மையான உமது அருளே வேண்டும் என்று தெய்வ யானையார் விண்ணப்பித்தனர். (எ - று).

383. கண்ணுத லதனைக் கேளாக்
கடவுளர்க் கரச னீன்ற
பெண்ணமு தனையா யுள்ளம்
பேதுற றவிர்தி நீயு
மெண்ணிய வெண்ணி யாங்கே
யாமருள் புரிவோ மீது
திண்ணநம் மாணை யென்று
செப்பின னொப்பி லாதான்.

(பொ - ரை):—நெற்றிக் கண்ணரான ஒப்பிலாப் பெருமான் அவ் விண்ணப்பத்தைத் திருச்செவி யேற்று, தேவேந்திரன் தந்த (அருமைப்) பெண்மையின் அமுது போல்பவளே! (வீணாக) மனம் வருந்துதலை விட்டிடு; நீ நினைத்தவைகளை நினைத்தபடியே யாம் நிறைவேற்றி வைப்பம்; இஃது நம்முடைய நிச்சயமான ஆக்ஞை என்று அருளினர், (எ - று). (83)

384. கொன்றைதேன் றுளிப்ப நின்று
குஞ்சித சரணம் பேர்த்து
மன்றினி னடிக்கும் பொற்றுள்
வானவன் சந்த நீடு
குன்றகந் தன்னில் யாருங்
கும்பிடப் பரிதி வேத
னின்றுள கற்ப மெல்லா
நிறைந்திவ ணிருப்போ மென்று.

(பொ - ரை) :—பொன்னம்பலத்தில், கொன்றைத்தேன் துளிக்க, எடுத்த திருவடி கொண்டு திருநிருத்தம் செய்யும் அழகிய பாத ஆடலரசர், சந்தன மரங்கள் மிகுந்த கந்த மாதன மலையில் எவரும் வழிபடும் பொருட்டு, சூரியனும் பிரமனும் இருக்கும் கற்ப முழுதும் நீக்கமின்றி இங்கு நிறைந்து நிற்பம் என்று அருளி, (எ - று).

(குறிப்பு) :—கற்பம்-சதுர்யுகம் கொண்ட கால அளவு. (84)

385. பேரரு ளிலிங்கத் தூடு
பிரானுடன் மறைந்தான் றெய்வ
வாரண மடந்தை மீண்டும்
வணங்கின ணிற்குங் காலைத்
தேரிடை யரிண மீன்ற
செல்வியுங் குமர வேளு
மேருவி னுயர்ந்த கந்த
மாதன வெற்பிற் போந்தார்.

(பொ - ரை) :—(அதன்பின்,) பெருங்கருணை இலிங்கத்துள் பெருமான் திருவுருக் கரந்தார்; தெய்வ யானையம்மை, மறுபடி வணங்கி நிற்கும் பொழுது, தேர்மேல் ஏறிய மான்தந்த மகளான வள்ளி யம்மையும், குமார சுவாமியும், மேருமலைபோல் உயர்ந்த (அக்) கந்தமாதன மலையில் வந்து சேர்ந்தனர், (எ - று). (85)

386. உமைதருங் கொடியுஞ் செவ்வே
லொருவனும் பொற்றேர் மீது
விழைவுடன் வருத னோக்கி
வேழமான் மகிழ்ச்சி கூர்ந்து
குழைவொடும் போந்து செங்கை
குவித்தன ளருட்க ணீரா
மழைகொடு முலையாஞ் செம்பொன்
வார்க்குடம் விளக்கி னாளால்.

(பொ - ரை) :—(புனித) மான் தந்த பூங்கொடியான வள்ளியம்மையும், செவ்விய வேல் ஏந்திய ஒப்பற்ற குமரனும் பொன் தேரில் விருப்புடன் வருதலை நோக்கி, தேவயானையார் களிப்பு மிகுந்து, பணிவுடன் எதிர்கொண்டு, செவ்விய கை குவித்து, அருளால் பொழியும் கண்மழையால், கச்சிறுக்கிய குயங்களாகிய (தன்) பொற் குடங்களைக் கழுவினள், (எ - று). (86)

387. கடவுதேர் நிறுத்தி வள்ளி
கரங்களால் வலக்கை தூக்க
விடதுகை தூக்கிக் கந்த
னெடுத்தனன் யானை மாதுந்
தடநெடுந் தேரினேறிச் சண்முக
னிடப்பா கத்தி
னுடனிருந் தருளுங் கோல
முவமையா னுரைக்கற் பாற்றே.

(பொ - ரை) :—செலுத்தி வந்த தேரை நிறுத்தி, வள்ளியம்மை (தம்) திருக்கைகளால் வலக்கரத்தை(ப் பிடித்துத்) தூக்க, கந்தப்பரமன் இடக்கரத்தைப் பற்றி எடுத்தனன்; (எழுந்த) தேவயானையாரும், பெரிய தேரில் ஏறி, அறுமுகப் பெருமான் இடப்பாகத்தில் ஒரு சேர இருந்த திருக்கோலத்தை, யான் ஒப்புக் கூற இயல்வதோ. (எ - று).

(குறிப்பு) :—வலத்தில் வள்ளியார்; இடத்தில் தேவயானை; இடையில் ஞான மண நம்பன்; இங்ஙனம் ஆறுமுக விலாசமாகத் தேரில் அமர்ந்த அற்புத கோலம் ஆதலின், 'உவமை யான் உரைக்கற் பாற்றே' என்றார். (87)

388. மாதர்க ளிரண்டு பேரும்
வானர சளித்த வேற்கைச்
சோதியுந் துலங்கு தோற்றஞ்
சுடர்வயப் பரிதி யேந்துஞ்
சீதரன் றிருவும் பூமி
தேவியுஞ் செம்பொற் றேரிற்
போதுமா றெப்ப தென்றே
புகலலாம் புலவர்க் கம்மா.

(பொ - ரை):—இரு தேவியரும், உம்பர் உலகை (இந்திரற்கு) உதவிய வேல் திருக்கரத்துப் பேரொளிப் பிழம்பான பெருமானும் (கம்பீரமான தேரில்) விளங்கும் காட்சியானது, வெற்றி ஒளியுடைய ஆழியை ஏந்திய திருமால், திருமகள் நிலமகளுடன், மாற்றுயர்ந்த பொன் தேரில் ஏறி வருவது நிகர்க்கும் என்று, புலவர்கள் இனிது பாடிச் சுவைக்க இயலும், (எ — று). (88)

தூயபொற் றேரி னீங்கிச் சோதிவே லுடைய காளை
யாயிழை மார்க ளோடு மாலய மதனிற் போந்து
மேயபே ரழகு வாய்ப்ப வேழத்தின் பகைய தாய
சீயவான் பீடத் தெங்கோன் சிறந்துவீற் றிருந்தான் மன்னோ.

(பொ - ரை):—பேரொளி மயமான வேலுடைய பெருமான், பொன் தேரில் இருந்து இறங்கி, தேவிமார் களுடன் கோயிலுள் சென்று, யானையின் பகையான சிங்கங்கள் சுமந்த அழகிய பெரிய ஆதனத்தில் பொருந்தி, பேரழகுப் பொலிவுடன், எம்பெருந் தெய்வ மாகி எழுந்தருளி யிருந்தான், (எ - று). (89)

390. ஞானசத் தியினால் வைகு
நவையறு சிவன்பா கத்தி
னானபே ரிச்சா சத்தி
யரிதுசெய் கிரியா சத்தி

யூனமின் மூன்று மொன்று
யுயர்வுட னிருத்தல் போல
மானவேற் படையான் சிந்து
மா நகர் வதிந்தான் மாதோ.

(பொ - ரை) :—(இயல்பான) ஞான சக்தியுடன் இருக்கும் மலரகிதரான சிவபிரான், (இரு) புறத்தும் (அச் சக்தியின்) பிரிவினால் ஆன இச்சா சத்தியும், (இச்சையை) அருமையாகச் செயல்படுத்தும் கிரியா சத்தியும் ஆன பழுதிலா (அம்) மூன்றும் ஒன்றாகி உயர்வுடன் இருத்தல்போல், பெருமை பொருந்திய வேல்படை முருகன், செந்திலம் பதியில் (அம் மூன்று சத்திகளுடன்) எழுந்தருளி இருந்தனன், (எ - று). *(90)*

391. இந்திரன் மாதுக்காக விலிங்கமாங்
கெழுந்த செய்கை
கந்தவே ளுணர்ந்து வேட்ட
காதலிக் காக வந்த
தந்தையா மென்றென் றுள்ளந்
தண்ணளி சிறந்து ஞானச்
சிந்தையாற் றுதை பூசை
செய்தருள் புரிந்தான் சேயோன்.

(பொ - ரை) :—இந்திர குமாரியான தெய்வ யானையின் பிரார்த்தனைக்காக, சிவலிங்கம் அங்கு எழுந் தருளிய செயலை அருள்மண அத்தன் உணர்ந்து, விரும்பி மணந்த தம் தெய்வ யானைக்காக எழுந்தருளிய பரம பிதாவாம் என்று பல்கால் எண்ணி, உள்ளத்தில் அன்பு மிகுந்து, ஞானமான உளத்தால், தந்தையைச் சேயோன் வழிபாடு செய்தனன், (எ - று). *(91)*

392. தாரமா மிரண்டு பேருந்
தா்ரகத் துருவ மான
வீரவேற் றடக்கை யண்ணல்
மேருவிற் குழைத்தான் பொற்று
ளாரரு ளோடு பூசை
யாற்றினா் சனக ஞதி
சீரிய முனிவர் தாமுந்
திரிசுதந் திரரும் போற்ற.

(பொ - ரை) :—சனகர் முதலிய சிறந்த முனிவர்களும், திரிசுதந்தரர்களும் துதிக்க, தேவியரான இருவரும், பிரணவ வடிவான வீரவேல் கொண்ட திருக்கரக் குமரனும், மேரு மலையை வில்லாக வளைத்த சிவனரது திருவடிகளை, வளரருள் விழைவுடன் வழிபட்டிருந்தனர், (எ - று). (92)

393. சனகனே யாதி யான
தாபதர் தமக்கு மோன
வினியயோ கத்தி னுண்மை
யிசையமா நிலத்து ளோர்க்கு
நனியருள் புரிந்து வேத
நாயக னுகுஞ் செவ்வேள்
சினகரத் திருந்தான் ஞானச்
செயந்தியம் பதியி லென்றுன்.

(பொ - ரை) :—வேத முதல்வனை செவ்வேள் பரன், ஞானம் தரும் செந்திற்பதித் திருக்கோயிலில், சனகர் முதலிய முனிவர்களுக்கும், பெரிய நிலஉலகில் உள்ள எவர்க்கும் இனிய மௌனயோக உள்பொருள் நுட்பத்தை உபதேசித்து இருந்தனன் என்று, (குறிப்பாக) வியாசர் கூறினர், (எ - று). (93)

வள்ளியம்மை திருமண அத்தியாயம் நிறைவு பெற்றது.

---

## 9. பிரமாவுக்கு வரங்கொடுத்த அத்தியாயம்

394. வேதமொரு நான்கென விதித்துள வியாதன்
பாதமலர் மெய்த்துணை பணிந்துசுக னின்று
காதலொடு நீடுகம லாசனன் வணங்க
வாதிதரு சேயுதவு மாறறைதி யென்றான்.

(பொ - ரை) :—(விளக்கமான) மறைகள் நான்கு எனுமாறு விதிமுறை செய்த வியாசரின் (பயனும்) மெய்த்திருவடி மலர்களைச் சுகர் பணிந்து நின்று, அன்பு மிக்க உயர்ந்த நான்முகன் வணங்கி வழிபட, சிவகுமாரர் (அவனுக்கு) அருள் பாலித்த வரலாற்றை அறிவித்தருளும் என்று வேண்டினர், (எ - று). (1)

395. குருபரன்வி மானமுயர் கோயிலினி ருந்தே
வருதிரிசு தந்திரமெய்ம் மாமறையி னோர்கா
ளொருவசன முண்டது வழாதிவ ணுரைப்பாஞ்
சுருதியொடு நம்மடி துதித்தரு கிருப்பீர்.

(பொ - ரை) :—குருபரனை குமரன் விமானத் திருக் கோயிலில் வீற்றிருந்து, மெய்ம்மை பொருந்திய திரிசுந் தர அந்தணர்களே! (உங்கட்கு) கூறற்கு உரியது ஒன்று உளது; அதை வழுவுதல் இன்றி இங்கு இயம்பு கின்றோம்; நமது அடிகளை வைதிக முறைப்படி வழி பட்டு அண்மையிலேயே அமர்மின்கள், (எ - று).

(குறிப்பு) :—மந்திரத் தியானத்தொடு அண்மையில் இருந் தால், உரைக்கும் நுட்பத்தை உள்புலம் உணரும் என்பது, இறுதியடியில் உள்ள செய்தி; செய்யுள் குளகம்; இது, அடுத்த பாட்டுடன் தொடரும், (2)

396. என்றுமுல கேழுதொழு மெம்பதி யிருந்தே
நன்றியுட னம்மடியி ணுண்மல ரெடுத்தே
மன்றவணி வீர்கதி வழங்குவது தென்கா
னின்றுலவு சிந்துபுர மேயென நினைப்பீர்.

(பொ - ரை) :—எந்நாளும் ஏழுலகங்களும் இறைஞ்சும் எமது தலத்தில் தங்கி, அன்புடன் நம் திருவடிகளில் புது மலர்களை எடுத்து நிரம்பப் புனைவீர்களாக ; தென்றல் காற்று நிலைபெற வீசும் செந்தில்பதியே, உறுதியான வீடு பேற்றை உதவுவது என்று உணர்மின்கள். (3)

397. நம்மையுந னம்பொருளு மாதரையு நாடுஞ்
செம்மைதரு கோயிலுள சீரியன யாவுஞ்
சும்மைகொடு காப்பது தொழிற்குரிய தென்று
னிம்மையுட னம்மையு மெனக்குதவு செவ்வேள்.

(பொ - ரை):-நம்மையும், சிறந்த நம் பொருள்களையும், (நம்) பெரிய நிலங்களையும், விரும்பும் செம்மையை விளைவிக்கின்ற (நம்) ஆலயத்தின் உள்ள அரிய (பிற) பொருள்கள் அனைத்தையும், கடமையாக் கொண்டு காப்பது (உங்கள்) தொழிலா யிருக்க உரியது என்று, இப்பிறவிக்கு உரிய இன்பத்தையும், மறுமைக்குரிய மூத்தியையும் வழங்கும் முதல்வன் கூறினன், (எ-று). ()

398. ஆயிரமி ரட்டியுள வந்தணர்க ணீவிர்
மேயவதி னுமொருவ ரென்றுரை விளம்பி
தாயினுமி ரங்கியெளி யேன்றனை யளிக்குஞ்
சேயுள மகிழ்ந்துதிரு வாய்மலர்வ தானுன்.

(பொ - ரை) :—நீங்கள் இரண்டாயிரம் தொகையான அந்தணர்கள் ; பொருந்திய அத்தொகையுள் நாமும் ஒருவர் என்று உரைத்து, அன்னையினும் பேரிரக்கம்

கொண்டு எளிய என்னைக் காக்கும் எம்மான், திருவுளம் மகிழ்ந்து (மேலும்) கூறலாயினன், (எ - று). (5)

399. வந்துதெரி சித்துநமை வாழ்த்துநர் பெறுஞ்சீர்
சந்ததமு நுங்களை யடைந்தவர்கள் சார்வா
ரிந்தமட மாதரிரு வோருடனி யாமிச்
சிந்துபுரம் வந்துதெரி சித்தினிதி ருந்தாம்.

(பொ - ரை):—எந்நாளும் அடைக்கலம் என்று உங்களை யடைந்தவர்கள், வந்து நம்மைத் தரிசித்து வழிபடுவோர் அடையும் பெருஞ்சிறப்பைப் பெறுவர்; நாம் இத் திருச்செந்திற் பதியில் வந்து, இத்தேவியர் இருவருடன் இன்பம் கொண்டு இருந்தோம், (எ - று).

(குறிப்பு):—தரிசித்தல் – அருள் நோக்கம் பாலித்தல். (6)

400. ஞானமில ராய்விடினு நம்மையுண விற்று
தீனமுறு பாதக மிழைத்துளர்க ளேனு
மானமொடு சிந்துபுரம் வந்தடைப வர்க்கே
மேனிலைய ளித்தருள்வம் வேண்டிய விருப்பால்.

(பொ - ரை):—அறிவு இல்லாதவர் ஆயினும்; (திகழும்) நம்மை உள்ளத்தில் தியானியாமல், சீர்கெட்ட பாவங்களைச் செய்தவர்களாயினும்; அன்பொடு திருச்செந்திலை அடைந்து (நம்மிடம்) அடைக்கலம் ஆகின்றவர்கட்கு, வேண்டிய (அவர்கள்) விருப்பத்தின்படி, மேலான நிலையை மேவச் செய்வம், (எ - று).

(குறிப்பு):—உள் நவிற்றல் - உள்ளத்தால் பேசுதல்; அஃதாவது தியானித்தல். (7)

401. என்னவுரை செய்தகும ரேசனிரு போதாம்
பொன்னடி வணக்கமுறு பூசுரர்கள் யாரு
மன்னபரி சேயுன தடிக்கமலம் வீடே
மன்னுதொழி லாயினும் வழுத்துவதொன் றுண்டால்.

(பொ - ரை):—என்று திருவாய் மலர்ந்த குமாரப் பெருமானுடைய (தெய்வ) மலர் போன்ற இரு திருவடி களை ஆராதிக்கும் அந்தணர்கள் அனைவரும், அவ்வாறே உமது திருவடி மலர்களையும், நிலைபேருன (வழிபடும்) தொழிலையும் விட்டுவிட மாட்டேம்; (அது எம்) நிலை யான ஈடுபாடு; ஆயினும் விண்ணப்பம் செய்வது ஒன்று உளது, (எ - று).

(குறிப்பு):—போது ஆம் பொன்னடி – பொழுது கண்டு மலரும் மலர்கள் போல், பருவம் கண்டு அருளும் திருவடிகள். வழிபாடு ஒன்றே திருவடி சம்பந்தம் செய்து வைக்கும் என்பது குறிப்பு. (8)

402. நித்தமுமி றைஞ்சியிவ ணேயமொடு மூழ்கச்
சித்திவிழை மானுடர்க டேவர்பிறர் மூழ்கப்
புத்திரப வுத்திரர்கள் புண்ணிய மருத்த
முத்திதரு மத்தகைய மூலமும தாகி.

(பொ - ரை):—இவ்விடத்தில் (யாம்) எந்நாளும் வணங்கி (முதன்மை) அன்போடு மூழ்கவும்; பயனை விரும்பும் மண்ணவரும், விண்ணவரும் மற்றையரும் நீராடவும்; பிள்ளைகள், பேரர்கள், அறம் பொருள் இன்பம் முத்தி ஆதியன, அவர்கட்கு அளிக்கும் அத் தகுதியுடைய காரணமும் தானே யாகி, (எ - று).

(குறிப்பு):—நிட்காமியராக, யாம் அன்புடன் நீராடுவம்; பிறர் நினைத்தது சித்திக்க நீராடுவர் என்பது குறிப்பு. (9)

403. நல்குரவு வெம்பிணி யொழித்தினிய நாவின்
மெல்லமுத மொத்தசுவை மேன்மையுள தாகிக்
கல்விபெரு ஞானமொடு காட்டியெமை யாளச்
செல்வமுள தீர்த்தவர நீயருள்செய் வாயால்.

(பொ - ரை):—வறுமையையும், கொடிய நோயையும் தீர்த்து, நாவிற்கு இனிய மென்மை அமுதம்போல் உயர்ந்த சுவை யுடையதாகி, கல்வியைப் பெருகிய அறிவொடு காட்டி விளக்கி, எம்மை ஆட்கொள்ள, ஆக்கமாயுள்ள அரிய ஒரு தீர்த்தம் வெளிப்பட, நீர் அருள் பாலியும், (எ - று). (10)

**404. வேலையிடை மூழ்குதின மேலவர் விதித்தார்**
**சீலமுட னேழையர் தினந்தினமு மூழ்க**
**வாலியவிண் மாநதியின் வாய்ந்ததொரு தீர்த்த**
**மூலமிடை யீறின்முதல் வாவருள்க வென்றார்.**

(பொ - ரை):—முதலும் நடுவும் இறுதியும் இல்லாத முதல்வா! கடலில் மூழ்குவதற்கு (உரிய) நாட்களை, முன்னோர் கற்பித்துளர்; ஒழுக்கத்துடன் ஏழைகள் நாள்தோறும் நீராட, பெரிய ஆகாய கங்கைபோல் தகவுடைய ஒரு தீர்த்தத்தை, (நீர்) தந்தருளும் என்று விண்ணப்பித்தனர், (எ - று). (11)

**405. கலைபயிலும் வேதியர்சொல் கட்டுரை வினவி**
**மலைமகள ளித்தருளு மைந்தனு மகிழ்ந்தே**
**சிலையினிரு நூறளவு தென்றிசையின் வென்றி**
**யிலைகொணெடு வேலினை யெடுத்தினிது விட்டான்.**

(பொ - ரை):—உமையாள் அளித்த குமரனும், கலைகளில் பயின்றுள அந்தணர்கள் உரைத்த உறுதி மொழியைக் கேட்டு உவகை யடைந்து, வெற்றியுடைய இலைவடிவாய் நீண்ட வேல் படையை எடுத்து, தெற்கே இருநூறு விற்கிடை அளவு செல்லுமாறு இனிது ஏவினன், (எ - று). (12)

406. விட்டவயில் சேடன்முடி மீதினும ளாவித்
தொட்டவழி கங்கைவரு மாறுசெய்து தூவேல்
மட்டலர் கடம்பமணி மாலைபுனை செவ்வேள்
கட்டழகு பெற்றகரம் வந்தது களித்தே.

(பொ - ரை) :—விடுத்த கூரிய தூய வேல்படை, (நிலத்தை ஊடுவி,) உரகர் தலைவன் தலையில் உராய்ந்து, அகழ்ந்து போன வழியே (பாதல) கங்கை (மேல்) பாய்ந்துவரும் வழிசெய்து, மணம் கமழ் கடப்ப மாலையையும் இரத்தின மாலையையும் அணிந்த செவ்வேள் பெருமானின் கவின்மிக்க திருக்கரத்தில் களித்து வந்து சேர்ந்தது, (எ - று).

(குறிப்பு) :—சேடன் - சேஷன் என்பதன் திரிபு; சிறந்த பணியாளன் என்பது பொருள். தொடுதல்-தோண்டுதல். (13)

## வேறு

407. வேலொடு வேலையங் கரையின் மீமிசை
வாலிய கங்கைநீர் வரவு கண்டுள
மூலமின் றுயர்ந்தவேன் முருகன் முந்துறச்
சீலநான் மறையினுற் சென்று மூழ்கினன்.

(பொ - ரை) :—கடற்கரையில் தூயகங்கை நீர், வேலுடன் தோன்றக் கண்ட மூலமின்றி (ச் சுயம்புவாக) முளைத்த வேல் முருகன், முதன்முதல் (அத்தீர்த்தத்துள்) முதன்மை வைதிகப்படி (தானே) முழுகினன், (எ - று).

408. முந்துறக் குமரவேண் மூழ்குந் தன்மையா
லந்தமுற் றுளிரும்வே லளித்த பான்மையா
லிந்திரப் பெருவள வின்பத் துய்த்தலாற்
கந்தபுட் கரிணியாய்க் கவின்சி றந்ததே.

(பொ - ரை):—(அத் தீர்த்தம்,) முதல் முதல் குமரேசன் மூழ்கிய தன்மையாலும், அழகு மிக்குப் பளபளக்கும் (ஞான சத்தியான) வேல் உண்டாக்கிய சிறப்பாலும், (தன்னில் மூழ்குபவரை) இந்திரப் பெருஞ் செல்வ இன்பம் அனுபவிக்கச் செய்தலாலும்; கந்தபுட் கரிணி எனும் பெயரும் பொலிவும் கவினியது, (எ-று). ()

409. வருதிரி சுதந்திர மறைவல் லோர்களு
மருமறை முறையினு லதனின் மூழ்கினுர்
திரிபுவ னங்களுந் தினமு மூழ்கிடப்
பெரிதிது நன்றென மகிழ்ந்து பேசினுர்.

(பொ - ரை):—(குமரனை அடுத்து, வந்து) வந்து வேதம்வல்ல திரிசுதந்தர அந்தணர்களும், அரிய மந்திர நியதிப்படி அப்பொய்கையில் நீராடினர்; (விண் மண் பாதலம் எனும்) மூவுலகினரும், நாள்தோறும் மூழ்கலுற, மகத்தான இத்தீர்த்தம் மங்களமானது என்று (யாவரும்) மகிழ்ந்து போற்றினர், (எ - று).

(குறிப்பு):—அருமறை - அரிய மந்திர நுட்பம். (16)

410. தாவறு கந்தபுட் கரிணித் தண்புனன்
மூவிரு முகத்தினு னருளி முன்பத
சேவையின் மிக்குயர் திரிசு தந்திரர்க்
கேவரும் புகழிதி காசங் கூறுவான்.

(பொ - ரை):—ஆறுமுக அத்தன், குற்றமற்ற கந்த புட்கரிணி எனும் குளிர்ந்த பொய்கையை அருளி, முதன்மைச் சந்நிதியிற் செய்யும் திருவுரு வழிபாட்டில் மேம்பட்ட திரி சுதந்திரர்கட்கு, எவரும் புகழும் முன் வரலாற்றை இயம்பத் தொடங்கினன், (எ - று). (17)

**411.** **திரைவத ஞரம்பத் தீர்த்தத் துண்மையால்**
**வருதினந் தினந்தோறும் வழாது நான்மறைச்**
**சுருதியின் மூழ்குநர் தொல்லை வான்கதி**
**விரைவொடு மடைந்துளார் மேன்மை கேண்மினே.**

(பொ - ரை) :—அலைகளை யுடைய வதஞரம்ப தீர்த்தத்தில், உள்ளொழுக்கத்தால், அடுத்து அடுத்து வரும் ஒவ்வொரு தினமும் தவருமல், நான்மறை விதிப்படி நீராடினோர், முன்னாளில் அதி விரைந்து நற்கதி யடைந்தனர்; (அவர்களது) மேம்பாட்டை (அறிவிக்கிறேன்;) கேளுங்கள், (எ - று). (18)

**412.** நணைமுறுக் கவிழ்தரு நளின வீட்டுளான்
முனமுள கற்பத்தின் முராரி யென்பவன்
பனகநாப் பண்துயில் பரிந்து நீத்துவான்
றனுவொடு மிராமவ தாரத் துற்றனன்.

(பொ - ரை) :—(தேனுல்) நனைந்து, அரும்பு முதிர்ந்து மலரும் கமலபீட பிரமனின் (பழைய) பிரம கற்பத்தில், திருமால் என்பவர், (அநந்தனுகிய) பாம்புப் பாயலில் அன்புற்று அறிதுயில் கொள்வதை நீங்கி, எடுப்பான கோதண்டத்துடன் இராமாவதாரம் எடுத்தனர். (19)

**413** செற்றமொ டிலங்கையிற் சேரி ராவணன்
கொற்றம தகற்றுவான் குறித்தி ராகவ
னற்றமி னம்முன மாதி சேதுவைக்
குற்றமின் றுயர்தரக் கோலி னனரோ.

(பொ - ரை) :—இலங்கையில் பகையுணர்வுடன் இருந்த இராவணனது (அநியாய) வெற்றியை அழித்தற் பொருட்டு, சிந்தித்த (ரகுகுல திலகன் ஆன) இராமன், அழிவுபடாத நம் சந்நிதி எதிரில், ஆதி சேதுவைக் குற்றம் இல்லாமல் அதி உயரம் ஆம்படி அமைத்தான்.( )

414. காதலிற் சீதையைக் காக்க வேண்டியே
மாதவன் மூன்றவ தார மாயிவ
ணாதியிற் சேதுவை யமைத்த பான்மையான்
பூதலத் தமராய்ப் புனித முற்றுளீர்.

(பொ – ரை) :—பூ தே வ ர் க ளா ய்ப் புனிதமுற்ற திரிசுதந்தரச் செல்வர்களே! திருமகள் பதியான தி ரு மா ல், மூ ன் று (கற்பாந்தங்களில் இராம) அவதாரங்களை யுடையவனாய், (மூன்றும் அவதாரத்தில்) கனிவுடன் சனகியைக் காக்க விரும்பி, இத்திருச் செந்திலில் ஆதிசேதுவை அமைத்த தன்மையன் ஆயினன், (எ – று).

(குறிப்பு) :—கிரேதயுகத்தில் (பரசு) ராமன். திரேதயுகத் தில் (கோதண்ட) ராமன்; துவாபர யுகத்தில் பலராமன்; இங்ஙனம் மூன்று இராமாவதாரம் என்க. சீதையைக் காத்தது, கோதண்டஇராமாவதாரத்தில். சேது - அணைக்கட்டு.

415. நந்தொடு தவழ்திரை நமது சந்நிதிச்
சிந்துவிற் றினந்தினந் திளைத்து மூழ்கலா
மிந்தவான் கதையலால் யாமு றைந்தசீர்க்
கந்தமா தனம்வருங் காதை சாற்றுவாம்.

(பொ - ரை) :—சங்குகளுடன் தவழும் அலைகளை யுடைய நம் திருமுன் உள்ள கடலில், நாள்தோறும் படிந்து நீராடலாம்; மகிமை யுடைய இவ்வரலாறே யன்றி, யாம் எழுந்தருளி யிருக்கும் சிறப்புடைய கந்த மாதனம் வந்த கதையையும் கூறுவம், (எ - று). (22)

416. கருமுகில் படிந்துகண் துயிலுஞ் சந்தனப்
பெருவரை மேருவாம் பிறங்க லோடுவெஞ்
செருமுயன் றுள்ளமுந் தேம்பி யாடகத்
தருவரை தானென வாக வேண்டியே.

(பொ - ரை):—கார் மேகங்கள் தங்கி இளைப்பாறு கின்ற (கந்தமாதனம் எனும்) பெரிய சந்தன சயிலம், மேருவாகிய மலையுடன் மோதுபோர் புரிய முயன்று, (உடலுடன்) மனமும் சோர்ந்து, தான் (அப்) பொன் மலை என்று ஆக விரும்பி, (எ - று).

(குறிப்பு):-இது, குளகம்; 28ஆம் பாட்டுடன் முடியும். (23)

417. மாற்றருந் தவத்தினால் வருந்தி நம்வயி
னேற்றலு நோக்கிநா னோன்மை யானுயர்
காற்றினின் முத்தலைக் கவினி ழந்துள
வாற்றல்சால் பொன்வரை யாக வேண்டிநீ.

(பொ - ரை):—(எவரும்) தடைப்படுத்த இயலா உறுதியாக, (நம்மை எண்ணி) வருந்தித் தவத்தை வளர்த்தலும், நாம் அதை நோக்கி, நீ வலிமையால் உயர்ந்த வாயு தேவனால், முச்சிகர ஒளியை இழந்திருக் கின்ற ஆற்றல் மிக்க மேருமலைபோல் ஆகவிரும்பி. ( )

(குறிப்பு) :—நோன்மை - மிகுவலிமை. (24)

418. பண்ணிய மாதவப் பண்பு நோக்கினந்
தண்ணளி சிறந்தபூஞ் சந்தச் சாரனீ
புண்ணியச் செயந்தியம் பதியிற் பொற்றையாய்
நண்ணுதி நவிற்றுதி நம்மை நாவினால்.

(பொ - ரை):—இயற்றிய சிறந்த தவ இயல்பை அறிந்தோம்; அருள் மிக்க சிறந்த சந்தன சலமே! நீ புனிதமான செந்தில் பதியில், மலைவடிவாகவே தங்கி, வாயால் நம்மை வழுத்திக் கொண்டு இரு, (எ-று). (25)

419. நடந்துள பிரமகற் பத்தி னுள்ளெலாங்
கடந்துபின் வருமயன் கற்பத் தெல்லையின்
மிடைந்தபொன் மேருவாய் விளங்கு வாயெனத்
தொடர்ந்தபே ரன்பினாற் றுணிவு செப்பினேம்.

(பொ - ரை) :—திகழ்கின்ற பிரமகற்ப நாள் முழுதும் தீர்ந்து, பின்வரும் பிரம கற்ப எல்லையில், நெருங்கிய பொன்மய மேருபோல் பிரகாசிப்பை என்று, இயைந்த பேரன்பால் உறுதி இயம்பினேம், (எ - று). (26)

420. ஆதலா னமதுசந் நிதிய டைந்தலை
மோதுதெண் கடலிடைத் தினமு மூழ்கிநம்
பாதவா ரிசங்களும் பணிந்து நம்மையுங்
கோதிலாத் தன்னகம் கொண்டி ருந்ததால்.

(பொ - ரை) :—ஆதலின் (அம்மலை, சிறந்த) நம் திருமுன் சேர்ந்து, அலைமோதும் தெளிந்த கடலின் நாள் தோறும் முழுகி, நம் திருவடி மலர்களையும் வணங்கி, நம்மையும் குறையிலாத் தன்மேல் கொண்டுளது. (27)

421. தருக்கினுற் கந்தமா தனத்தண் சாரலு
மிருக்கினுற் றினந்தின மினிது மூழ்கலாற்
பெருக்குமா நிலத்துளோ ரெவரும் பெட்புறக்
குருக்குநா டொறுந்தொறுங் குளிக்க லாகுமால்.

(பொ - ரை) :—மகிழ்வால் கந்தமாதன மலையின் சாரலும், இருக்கு வேத நியதியுடன், நாள்தோறும் இன்பங் கொண்டு நீராடலால், அளவிலா நிலவுலகர் அனைவரும், விருப்பம் விளைய (முதன்மைக்) கடலில் நாள்தோறும் முழுகலாகும், (எ - று).

(குறிப்பு) :—குருகு - கடல்; ஆகுபெயர்; ஓசையின்பம் கருதி தன்னெற்று இரட்டியது. (28)

422. இன்னுமோர் காதையுண் டெடுத்துக் காட்டுதுந்
துன்னுநான் மறைத்திரி சுதந்தி ரத்தர்கா
ளன்னவா கனத்தய னகந்தை யால்மணிப்
பன்னகா பரணனைப் பழித்து வைகினன்.

(பொ - ரை):—மேலும் ஓர் வரலாறு உளது; (அதனையும்) எடுத்துக் கூறுவம்; (தெய்வ) நான்மறைகளை யுணர்ந்த திரிசுந்தரர்களே! அன்ன ஊர்தியன் ஆன நான்முகன், மாணிக்கங்களை யுடைய பாம்புகளை அணிகலனாக வுடைய பரனை, நெடும் செருக்கால் (ஓர் சமயம்) நிந்தித்து இருந்தான், (எ - று). (29)

423. என்றலை யீசனு மெண்ணிக் காரிநீ
கன்றலை நூற்றிதழ்க் கமலக் கோயிலான்
றன்றலை யைந்திலோர் தலையைச் சோரிநீர்
நின்றலை யெறிதர வுகிரி னீக்குவாய்.

(பொ - ரை):—(பழிக்கின்றான்) என்று பலர்கூறும செய்தியைச் சிவபிரானும் திருவுளம் கொண்டு, (வயிரவரை நோக்கி) பைரவா! நீ உக்கிர கோபம் உடையவனாய், நூறு இதழ்த் தாமரையை ஆதனமா வுடைய பிரமனது ஐந்து தலைகளில் ஒரு சிரத்தைக் குருதி பொருமிக் கொப்புளிக்க, நகத்தால் கிள்ளி எறிவாயாக, (எ - று). (30)

424. என்றலுங் கபாலங்கை யேந்து காரியு
நன்றென வணங்கிப்பூ நளினத் தான்வயிற்
சென்றனன் செயிர்த்தனன் சிரங்க ளைந்தினி
லொன்றற விடக்கையி னுகிரி னீக்கினான்.

(பொ - ரை):—என்று கூறுதலும், கபாலத்தைக் கரத்தில் ஏந்திய வயிரவக் கடவுளும், நல்லது என்று வணங்கி, கமலமலர் அயன் இருக்குமிடம் சென்று, சினந்து பெருமூச் செறிந்து, (அவன்) தலைகள் ஐந்தில் ஒன்று இல்லையாக, இடக்கர நகத்தால் (கிள்ளி) எறிந்தனன், (எ - று). (31)

425. ஈர்ந்தபின் கமலத்தோ னிரங்கி வைகுண்டஞ்
சார்ந்துதன் தந்தைபொற் சரணந் தாழ்ந்துளஞ்
சோர்ந்தனன் சோர்ந்துள சுதனைத் தேற்றவுந்
தேர்ந்தனன் றனஞ்சயன் றேரின் பாகனே.

(பொ - ரை) :—அறுத்தபின், அயன் வருந்தி, வைகுந்தம் சென்று, தன் தாதையான திருமாலின் திருவடிகளை வணங்கி உள்ளம் சோர்ந்து இருப்ப, பார்த்தனுக்குச் சாரதியான பரந்தாமன், தளர்ந்த மகனைத் தெளிவு செய்ய, (பிறகு ஒருவாறு மனம்) தேறினன், (எ - று).

(குறிப்பு):—தாழ்தல்—எட்டுறுப்பும் நிலம்தோய வணங்கல்.

426. பெண்மையி லீசனைப் பேதுறச் செய்தோர்
மண்மையின் மயங்கிய மாலும் வான்முகிற்
றண்மையிற் சரவணோற் பவன்ற னறெழுத்
துண்மையை யென்மகற் கோதுவேனென.

(பொ - ரை) :—(மோகினி எனும்) பெண் உருவாய் (மாபெரும்) சிவனை மயங்கச் செய்து, (தாம்) ஒரு பூதேவியாம் மாதில் மயங்கிய திருமாலும், விண்ணிலுள்ள (கரு) மேகம்போல் ஊரும் மயிலை யுடையவனாய், சரவணப் பொய்கையில் அவதரித்த அறுமுகனது ஆறு எழுத்து உண்மையை என் மைந்தனுக்கு உபதேசிப்பன் என்று, (எ - று).

(குறிப்பு) :—மண்மயில் - மயில் போல் சாயல் நிலமகள். சிவனை மயக்கிய திருமால், மாபெரும் நிலமகளைக் கண்டு மயங்கினர் எனும் நயமுணர்க. இது 'சொற்றல் மேயினான்' என்ற அடுத்த பாட்டுடன் முடியும். (33)

**427.** **ஆர்வமீ தூர்ந்திட வம்பு யக்கணே**
**சார்வுறு தனயனைத் தழுவித் தாங்கிநீ**
**யோர்வுற வாறெழுத் துண்மை யோதுவாஞ்**
**சோர்வறக் கேளெனச் சொற்றன் மேயினான்.**

(பொ - ரை) :—தாமரை அணையில் தங்கிய பிரமனை அன்பு மேற்கொளத் தழுவி அணைத்து, நீ உணர்ந்து கொளும்படி ஆறு எழுத்தின் உள்பொருள் நுட்பத்தை உபதேசிப்பம்; சோர்வு இலாதபடிக் கேள் என்று சொல்லத் தொடங்கினார், (எ - று). (34)

428. ஒருதலை போயுள துனது சென்னிமேல்
வருதலை வேண்டினை யாயின் மாமுதற்
பொருதலை வாரியிற் புலவு காட்டிய
விருதலை யொருசெவ்வே லிறைவன் மந்திரம்.

(பொ - ரை) :—உன் சிரமேல் (இருந்த) ஒருதலை ஒழிந்துளது; (அது மீட்டும்) வருதலை விரும்பினை யாயின், (சூரபதுமனாகிய) மாமரத்தை எதிர்த்து அலைகளை யுடைய கடலில் புலால் நாற்றம் எழச் செய்த வலிமை முனையை யுடைய ஒப்பற்ற செவ்விய வேல் இறைவனது மந்திரத்தை, (எ - று).

(குறிப்பு) :—இது அடுத்த பாட்டின் முதலடியொடு முடியும். புலவு – மாம்ச நாற்றம். ‘இருதலை ஒரு செவ்வேல்’ என்பது முருகக்கடவுள் வேலுக்குச் சிறப்புப் பெயர். “இருதலை படைத்த எஃகம்” எனவரும் கந்தபுராண சூரபதுமன் வதைப்படலம் காண்க. (35)

429. குருமுறை யாகயாங் கூறு வாமது
மருவுமா றுக்கரின் மரபிற் கேட்டுநீ
யுருவகத் தேற்றென வுளங்கொண் டோதினான்.
கருமுகிற் படிவமார் கமலக் கண்ணனே.

(பொ - ரை):—(உயர்ந்த) குருவின் உபதேசக் கிரமமாக ஓதுவம்; நீ அதை சீட பாவனையில் சிரவணித்து, உள்ளத்தால் (தியானித்து) உருவேற்று என்று, கார்மேக வண்ணமான திருமேனியும், கமலம் போன்று மலர்ந்த கண்ணுமுள திருமால், (அதை பிரமன்) உள்ளம் உணர்ந்து கொள்ளும்படி உபதேசித்தார், (எ-று). (36)

430. அந்தவா றெழுத்தையு மம்பு யாசனன்
சிந்தையார் வத்துடன் தியானித் தான்றவ
முந்துநாங் கண்டுநான் முகத்த நீயுள
நொந்துமா தவஞ்செய்து நோற்ப தேதென.

(பொ - ரை):—(திருமால் உபதேசித்த) அந்த ஆறு எழுத்தையும், கமலாசன நான்முகன், உளத்தில் நிறைந்த உவகையுடன், (பலகாலம்) மானசிகமாக உருவேற்றினன்; (அவன்) தவம் கண்டு முன்னின்ற யாம், நான்முகனே! நீ உளம் வருந்திச் சகித்துச் சிறந்த தவம் செய்வது எதன் பொருட்டு என வினவ, (எ - று). (37)

431. உரைத்தவா சகந்தனை யுணர்ந்து வேதனும்
சிரத்திலைந் தொன்றியான் சேதிப் பாகலின்
வருத்தமுற் றேயுனை நோற்ற வாறெனக்
கருத்தழிந் தனனெனக் கழறிப் பின்னரும்.

(பொ - ரை):—பிரமனும், (யாம்) உரைத்த மொழிகளை உணர்ந்து, (என்) ஐந்து தலைகளுள் ஒன்று அறுபட்டதனால், வருந்தி உம்மை நோக்கித் தவம் செய்தேன் என, உள்ளம் நொந்து உரைத்தனன் என்று கூறிப், பிறகும், (எ - று).

(குறிப்பு):—இது அடுத்த பாட்டொடு முடியும். (38)

432. விழுந்தபடி வணங்கினன் விழியி னீர்மழை
பொழிந்தன னகந்தையாம் பொருமல் போக்கிநெஞ்
சழிந்தன னளவிலா வன்பி னுற்றெழு
தெழுந்தனன் றுதியினு லின்ன சாற்றுவான்.

(பொ - ரை):—விழுந்து திருவடிகளை வணங்கி, கண்ணீர் மழை பொழிந்து (முன்பிருந்த) செருக்கினுல் விளைந்த துயர் தவிர்ந்து, மன நிலை யழிந்து, அளவிலா அன்பால் (மீட்டும்) வணங்கி எழுந்து, (பின்வரும்) இத்துதிகள் கூறத் தொடங்கினன், (எ - று). (39)

## வேறு

கயிலையி லீசன் போற்றுங் கடவுளே கடவுள் தெய்வ
மயிலுடன் குறமான் தோயுமாமறைக் கடலே மேருப்
புயம்விழி யீரா றுன புங்கவா மதமா றுக்கு
நயனுறு முகமா றுன நாதனே போற்றி போற்றி.

(பொ - ரை):—(திருவார்) கயிலைச் சிவனுர் வணங்கும் தெய்வமே! திவ்யமான (மாபெரும்) தெய்வயானையாம் மயிலுடன், (வள்ளியெனும்) குறவர் குல மானையும் கலக்கும் சந்தமிக்க வேத சாகரமே! மேருமலை போன்ற தோள்களும், கண்களும் பன்னிரண்டாகக் கொண்ட பரனே! ஆறு சமயங்கட்கும் நலஞ்செய்யும் ஆறுமுக நாதா! அடைக்கலம், (உமக்கே) அடைக்கலம், (எ-று).

(குறிப்பு):—சீட பாவனையில் சிவபிரான் வணங்கும் வேதக் கடலாம் விசாகன், வான்மகளை மான்மகளை மருவுகின்றுனெனில், ஆறிரு தோளும் ஆறிரு கண்ணும் உளனெனில், ஆறு சமய அதிபதி யெனலை அறிவிக்கும் அறுமுக மானேன் எனில், தத்துவ வித்தகத் தற்பர நாதன் அவனே; அந்த எம்மானுக்கே அடைக்கலம் என்று அறிவுறுத்தியபடி. (40)

**434.** **கனகமா முடியிற் றுங்குங் கவின்பெறு மணியா லன்பர்**
**மனவிரு ளகற்றும் பானு வடிவமே கவுரி யீச**
**னினியபேர் வாஞ்சை யாகு மினமணி யிருக்கச் சேர்த்த**
**வினையிரு ளகம தாக விளங்குபெட் டகமே போற்றி.**

(பொ - ரை):—மகிமையுடைய பொன் மகுடத்தில் பதிந்த நலஞ் சிறந்த ஒளியுள (நவ) மணிகளால், அடியவர்களது அகஇருள் விலக்கும் ஆதித்த சொருபமே! கவுரியை (இடங்கொண்ட) சிவபிரான் இனிய பெரு விருப்பம் எனும் உயர்குல ரத்தினம் இருக்க அமைத்த, இருவினைகளையும் ஒழித்தற்கு மூலமான பிரணவ உருவப் பெட்டியே! (உமக்கே) அடைக்கலம், (எ-று). (41)

**435.** **திருவரு ளணுவாற் றேவர் மூவரிற் சிறப்பு வாய்ப்ப**
**வருளுதல் காத்தல் மீட்டு மழித்திடல் புரிவாய் போற்றி**
**மருளும்வேள் கணைகள் நீக்கு மாதவ ரிதயப் போதிற்**
**பரிதிபோல் விளங்கு ஞானப் பன்னிரு புயத்தாய் போற்றி.**

(பொ - ரை):—பெருங்கருணையில் உள்ள சிறு அளவில் (என்னை முதலாக வுடைய) முத்தேவரில் இருந்து, அருளல், காத்தல், மறுபடியும் அழித்தல் முதலியவற்றை மிகச் சிறப்பாகச் செய்பவனே! வணக்கம்; மயக்கும் காமன் கணைகளை விலக்கும் மாபெரும் தவமுடையார் உளக் கமலத்தில், பரிதிபோல் ஒளிரும் (பரம) அறிவு சொருபப் பன்னிரு தோளனே! (உமக்கே) அடைக்கலம், (எ-று)..

(குறிப்பு):—அணு - **இது** பூத விழிகட்குப் புலனாகாத மிகச் சிறு அளவு. **(42)**

**436.** **தரைபுனல் செந்தீ காற்றுத் தாாறு வெளிய தான**
**வுரைதரு பூத மைந்தோ டுயர்மகத் துவமாங் காரம்**
**விரவுதத் துவப்பூந் தோட்டாள் மேயதோ ரண்ட மொன்று**
**பரவுதான் படைக்கு மண்டம் பான்மையா மீது போலாம்.**

(பொ - ரை) :—மண் நீர் தீ காற்று, அழிவற்ற விண் என்று உரைக்கப் பெற்ற ஐம்பூதங்களுடன், உயர்ந்த மான், அகங்காரம் எனப் பொருந்திய தத்துவ இதழ்களை யுடைய மலராக அமைந்தது ஒரு அண்டம். வழிபடும் அடியேன் படைக்கும் அண்டத்தின் தன்மை இவ்வளவு தான், (எ - று).

**437.** அளவிலா வண்ட மெல்லா மையனீ பீட மாக
வளனுற விருக்கு நின்சீர் மறைகளும் முடிவு தேரு
வெளியனேற் குரைக்கற் பாற்றோ யாவர்க்குங் குருவா னோர்க்குங்
களிமகிழ் சிறப்ப வோதுங் கருணையாங் குருவே போற்றி.

(பொ - ரை) :—அளவிறந்த அண்டங்கள் அனைத்தும் சிவபிரான் தந்த (மலர்ப்) பீடங்களாக, (அவைகளில்) வளமாக அமர்ந்துள நின்புகழை, (தேரும்) வேதங்களும் இறுதிவரை தெளிந்தது இல்லை (எனில்,) எளியேனால் கூற இயல்வதோ ? எவர்க்கும் குருவாக இருப்பவர்க்கும், அதிமகிழ்ச்சி உண்டாக உபதேசிக்கும் அருள்வடிவாம் (பரம) ஆசாரியனே! (உமக்கே) அடைக்கலம். (44)

**438.** சொல்லுமுன் றியான மாகுஞ் சூரண வசியத் தாற்பூ
மெல்லியல் வாணி நான்கு வேதவா கமங்கள் வல்லா
ளெல்லையின் ஞான முன்ரு ளிறைஞ்சுவோர்க் கெய்துங் கல்லாப்
புல்லறி வுடையே னெங்கள் றேர்குவன் பொறுத்தாள் போற்றி.

(பொ - ரை) :—(வகையாகக்) கூறப்பெறும் உம்மைத் தியானித்த லாகிய வசிய மருந்தால், (வெள்ளைக்) கமலத்தில் வீற்றிருக்கும் மெல்லிய லாகிய கலைமகள், நான்கு மறைகளிலும் (இருபத்தெட்டு) ஆகமங்களிலும் வல்லவள் ஆயினள் ; உன் திருவடிகளை வணங்கு பவர்க்கு, அளவிறந்த ஞானம் உளதாகும் ; (கலை நெறி) கல்லாத அற்ப அறிவினை யுடைய அடியேன், எங்ஙன்ம்

தெளிவு பெறுவேன்? (என் பிழைகளைப்) பொறுத் தருள்! (அடியேன் உமது) அடைக்கலம், (எ - று).

(குறிப்பு):—சூரணம் - மருந்துப் பொடி. (45)

**439.** தலைமைசே ருலக மூன்றுந் தருதற்கோர் கமலை போலாங்
கலையெலா முதவ வெள்ளைக் கமலையாங் களிக்கு ஞான
நிலைமைசார் வதற்கு வாய்மை நிறைதரு குருவாந் த்யான
மலைவற வருளு நின்றன் வாரிசம் போற்றி போற்றி.

(பொ - ரை):—உமது திருவடித் தாமரைகள், தலையாய மூவுலகச் செல்வங்களையும் தருதற்கு, ஒப்பற்ற செங்கமலத் திருமகள் போல்வது; கலைகள் அனைத்தையும் கற்பிப்பதற்கு, வெண்தாமரையாள் போல்வது; வித்தகச் சிவஞான விளைவிற்கு, வாய்மை நிறைந்த குருவாகும்; மலைப்புத்தீர, தியானப் பேற்றை வழங்கும் உமது (வண்மைத்) திருவடிகட்கே வணக்கம். (46)

**440.** தத்துவத் தரங்க மோதித் தணப்பிலா மோக மாய
வித்தெனு மிடங்க ரோடு வேண்மதி யாசை கண்டு
கத்துமிச் சனன வேலை கடப்பத்தா ளுவாய் நல்கு
முத்தனே கருணை மாரு மூவிரு முகத்தாய் போற்றி.

(பொ - ரை):—(அளவில்லாத்) தத்துவங்களாகிய அலைகள் மோதி, இடைவிட்டு அகலாத ஆணவம், மாயை, (இவைகட்கு) வித்து எனும் கன்மம் முதலிய முதலைகளுடன் (போராடி,) காம வேளாகிய மதியைக் காமித்துக் கண்டு ஒலிக்கின்ற பிறவிக் கடலைத் தாண்ட, கடப்பமலர் புனைந்த திருவடிகளாகிய தோணியை உதவும் கட்டகன்ற கடவுளே! அருள் மாருத ஆறுமா முக! (உமக்கே) அடைக்கலம், (எ-று).

(குறிப்பு):—மண்முதல் நாத மீருகவுள்ள தொண்ணூற்ருறு தத்துவங்கள் அடுக்கடுக்காக மோதுகின்ற அலைகள் ஆதலின்,

அவைகளைத் 'தரங்கம்' என்றார். தணப்பு-நீக்கம். மோகம் - ஆணவம். மாயம் - மாயை. வித்து - கன்மம். (47)

441. வீரவா சனத்துச் சீய மெல்லணை பொருந்தி வாமச்
சீருறுங் கரத்தை வாமத் திருமுழந் தாளிற் சேர்த்திச்
சாருறும் வலக்கை ஞான முத்திரை தரித்து வானி
லூருவா மதிய மேய்ப்ப வொளிதிகழ் வடிவ மாகி.

(பொ - ரை):—அரியணையின் மேல் வீராசனமிட்டு அமர்ந்து, இடத்திருக் கரத்தை இட முழங்காலில் வைத்து, சார்ந்திருக்கும் வலத்திருக் கரத்தில் சின்முத்திரை தாங்கி, வானத்தில் தவழ்கின்ற முழுமதி போல ஒளிவிளங்கும் திருமேனியாகி, (எ - று).

(குறிப்பு):—குளகம்; இது அடுத்த பாட்டொடு முடியும். ஞான முத்திரை - மூன்று விரலைநீட்டி, கட்டை விரலைச் சுட்டு விரலுடன் சேர்த்தி யிருத்தல். ஊர் உவா - பௌர்ணமி. (48)

442. மாலய னுணரா ஞான வானவற் குபதே சிக்குங்
கோலமு நினைந்து நெஞ்சிற் குறித்தமே லவரை யெல்லாஞ்
சீலநான் மறையுந் தேடுஞ் சிவகுரு வாக்கு ஞான
மூலமே யெங்க ளாறு முகத்தனே போற்றி போற்றி.

(பொ - ரை):—திருமாலும் பிரமனும் உணர இயலாத சித்சொரூபமான சிவபிராற்கு உபதேசித்த திருக் கோலத்தைத் தியானித்து, மனத்தில் பதித்த மேதகு மாதவர் யாவரையும், வைதிக நான் மறைகளும் தேடும் சிவாசாரியராகச் செய்யும் ஞான காரணா! எங்கள் ஆறுமுகவனே! (உமக்கே) அடைக்கலம். ()

(குறிப்பு):—குறித்த மேலவர் - லட்சிய மேலோர். மூலம் — காரணப் பிரசித்த வஸ்து. (49)

443. உன்னரு ளமுத வாரி குளித்துளோர் பிரம லோகந்
தன்னுள சீரு மாவி போஞ்சரீ ரத்தி னூடு
துன்னலங் காரம் போல நோக்கவுந் துணிவு தேற்று
முன்னவா கருணை யாறு முகத்தனே போற்றி போற்றி.

(பொ - ரை):—உன் அருளாகிய அமுதக் கடலில் மூழ்கினோர், (என்) சத்திய உலகத்து (வாழும்) சால்பையும், உயிர் போன உடல்மேல் மூடிய அலங் காரம் போல் (அருவறுத்துப்) பார்க்கும் அளவு, நிச்சய புத்தி நிலைபெறச் செய்யும் முன்னவனே! அருளுடைய ஆறு முகவனே! (உமக்கே) அடைக்கலம், (எ - று).

(குறிப்பு):—'போகுறு சரீரத் தூடு' என்றும் பாடம். (50)

**444.** தேறலாங் கனிமு னீத்து விடமுண்பார் செய்கை போல
வேறுமோ ரியவு ளெண்ணி மெலிவுரு தடியர்க் கெல்லா
மாறுமா முகத்தி யானத் தமிர்திறற் குளிர்ச்சி காட்டு
மீறிலா முதலே வேற்கை யிறைவனே போற்றி போற்றி.

(பொ - ரை):—தேன்போல் இனிக்கும் பழத்தை விடுத்து நஞ்சுண்பார்தம் (நாச) செய்கைபோல், பிறிதொரு தெய்வத்தை நினைந்து (பிறவியில்) அயர் வடையாத அடியவர் அனைவர்க்கும், ஆறு திருமுகத் தியான அமுதத்தால் குளிர்ச்சி காண்பிக்கின்ற முடிவிலா முதல்வா! அடைக்கலம்; வேல் ஏந்திய திருக்கரத்து விமலா! (உமக்கே) அடைக்கலம், (எ - று).

(குறிப்பு):—இயவுள்-கடவுள்; உள்ளிருந்து இயக்குபவன்.

**445.** வள்ளியங் கொடிக்கு வாய்த்த வான்தருக் கொம்பே போற்றி
தள்ளருங் கருணை காட்டுஞ் சண்முகத் தெந்தாய் போற்றி
வெள்ளியங் கிரியின் ஞான மேருவின் மணியே போற்றி
யுள்ளநெக் குருகு மென்பா லுதவுவாய் போற்றி யென்றுன்.

(பொ - ரை):—வள்ளிக்கொடி படர்தற்கு வாய்ப்பான பொன்னுலகுக் கற்பகத்தின் பூங் கொம்பே! (உமக்கே) அடைக்கலம்; விலக்க முடியாத அருளை விளைவிக்கும் ஆறுமுக எந்தையே! (உமக்கே) அடைக்கலம்; வெள்ளி மலையில் வீற்றிருக்கும் அறிவான மேருமலை

ஒத்த மாணிக்கமே! (உமக்கே) அடைக்கலம்; உள்ளம் நெகிழ்ந்து உருகும் என்னிடத்து (ப்பரம) அருளைப் பாலிப்பவனே! (உமக்கே) அடைக்கலம் என்றான். (52)

**446.** **தோட்டலர் கமல வீட்டுச் சுருதியா னுரைத்த வேதப்**
**பாட்டுரைத் திடுவோ ருக்கும் பகர்ந்துளர் பக்க மாகக்**
**கேட்டுளார் தமக்கு மேலாங் கேடிலா வாழ்க்கை நல்கித்**
**தாட்டுணைக் கமல வீடு கொடுப்பது சரத மன்றே.**

(பொ - ரை) :—இதழ்களை யுடைய கமலக் கோயிலில் இருக்கும் பிரமன் ஓதிய வேதப் பொருளுடைய (இத்) துதிகளை ஓதுவோர்க்கும், பாடுவார் பக்கத்தி லிருந்து சிரவணிப்பவர்க்கும், மேதகு அழியா வாழ்வை (இம்மையில்) அருளி, (நம்) திருவடிக் கமலங்களின் (தங்கும்) முத்திப் பேற்றை (யாம்) வழங்குவது நிச்சயம், (எ - று). (53)

**447.** **பிரமனை நோக்கி நெஞ்சம் பேதுறேல் கருத்தில் வேட்ட**
**வரமுனர்ப் பகர்தி யாமும் வழங்குது மென்ன முன்னம்**
**புரமெரித் தானை யெள்ளல் புரிந்தன னதனு லைந்தாஞ்**
**சிரசிலொன் றிழந்தேன் மீளத் திருவரு ளிரங்க வென்றான்.**

(பொ - ரை) :—நான்முகனை நோக்கி, மனம் கவலாதே! மனத்தால் விரும்பிய வரத்தைக் கேள்! யாம் அருள்வம் என்னலும், முன்னாளில் முப்புரம் எரித்த முதல்வனை இகழ்தல் செய்தேன்; அதனால் ஐந்து தலைகளுள் ஒன்றை இழந்தேன்; (அத்தலை) மறுபடி முளைக்கத் திருவுளம் இரங்கி அருளும் என்றனன். (54)

**448.** **முனிவர்கா ணுமப் போது முராரிகா தலன்முன் னேற்ற**
**னனிமகிழ்ந் தெய்து கால நாடியோங் காரந் தன்னாற்**
**கனியுமைந் தெழுத்தி னுண்மை கழறியோ ரறிவுங் காமர்ப்**
**பனிமலர்க் கமலத் தான்முன் பகர்ந்தவா பகர்வன் கேண்மின்.**

(பொ - ரை) :—முனிவர்களே ! நாம் அச்சமயம், திருமால் மைந்தனுன பிரமன் முன் செய்த தவத்திற்குப் பெரிதும் மகிழ்ந்து, (ஐந்தாம் சிரம்) நேரும் காலத்தை நினைந்து, பிரணவத்தொடு பழுக்கும் ஐந்தெழுத்தின் உள்பொருள் நுட்பத்தை ஒப்பற்ற (புனித) ஞானத்துடன் போதித்து, விரும்பத் தக்க குளிர்ந்த கமலத்தனை பிரமன்முன், (அப்போது) கூறிய செய்தியை (இப்போதும்) கூறுகின்றோம்; கேளுங்கள், (எ-று).(55)

**449.** வாமமார் களிற்றின் மாது வயாவுற நோற்றற் காகக்
காமர்சூ ழிலிங்கத் தன்மை காட்டிய வகில நாதன்
நாமமா யிரமு நாவில் நவிற்றியைந் தெழுத்தின் மூல
மோமென வழுத்திக் கங்கு லும்பகற் காலும் ஏத்தி.

(பொ - ரை) :—(நம்) இடப்புறத்தில் எழுந்தருளிய தேவயானை, ஆர்வத்துடன் தவம் செய்ததற்காக, அழகு மொய்த்த இலிங்க உருவத்தைக் காண்பித்தருளிய உலக நாதனுடைய (நலம்மிக்க) ஆயிரம் மந்திர நாமங்களையும் நாவால் உருவேற்றி, ஐந்தெழுத்தான மூலமந்திரத்தைப் பிரணவம் முதலாக (நெஞ்சில்) பதித்து, இரவும் பகலும் (ஓயாது) துதித்து, (எ - று).

**450.** இடைவிடா தொழுகு நீரா லினியவைந் தெழுத்திற் பூசை
யடைவினை லியற்று வாயென் றறைந்தன மவனுஞ் சூலப்
படையினுன் பாத நாலா யிரயுகம் பணிந்தான் முன்னந்
தடைபடா திலிங்கத் தூடு தோன்றினன் தழற்கண் பெம்மான்.

(பொ - ரை) :—இடையருத நியம இயல்பால், இனிய ஐந்தெழுத்தின் உருவேற்றுதலையும், வழிபாட்டையும் முறைப்படி இயற்றுக என்று அருளினம் ; அந் நான் முகனும், சூலப்படை யுடைய சிவபிரான் திருவடிகளை, (வளரும்) நாலாயிர யுகம்வரை வழிபாடு செய்தான் ; (பெருகிய ஞானம்) கனலும் நெற்றிக்கண் பெருமான்,

(அதன் மேலும்) தடைப்பட்டிராமல், (அவன்) முன் இலிங்கத்தி லிருந்து வெளியாயினன், (எ - று). (57)

**451. தோன்றிய முக்கட் சோதி தொழுங்கம லத்தோ யாதுக்**
**கான்றமா தவத்தான் மேனிக் கயர்வுகொண் டிருந்த தெம்மு**
**னேன்றுரை பகர்தி யாமுந் தருகுவ மென்ன வேதன்**
**கான்றநீர் கண்கள் சோர வுரைப்பது கருத்துட் கொண்டான்.**

(பொ - ரை) :—வெளிப்பட்ட முக்கண் ஒளிமய முதல்வன், வழிபட்ட கமலாலயனே ! ஆக்கை தளரும் அளவு அமைந்த பெருந்தவம் செய்வது எதன் பொருட்டு ? எம் திருமுன் (உன் உள்ளக்) கருத்தை உரை ; (உடனே) யாமும் உதவுவம் என்றருள, வேதமோதும் நான்முகன், (அன்பு) ஊற்றெடுத்த (இன்பக்) கண்ணீர் ஒழுக, உரைப்பதற்கு உள்ளம் கொண்டான், (எ - று). (58)

**452. கருத்தினின் மகிழ்ச்சி கூர்ந்து கரதல முச்சி கூப்பி**
**யருத்தியிற் கண்ணீ ராகு மானந்த வாரி மூழ்கித்**
**திருத்துநாக் குழற நின்று தெண்ணிலா வேணி யானைப்**
**பொருத்துபே ரன்பின் வேதன் தொழுதனன் புகழ்வ தானன்.**

(பொ - ரை) :—உளத்தினில் நான்முகன் உவகை மிகுந்து, கைகளைத் தலைமேல் குவித்து, அன்பால் பெருகும் கண்ணீரான இன்பக்கடலில் அழுந்தி, (வேதம் ஓதித்) திருந்திய நாக்குக் குழற நின்று, தெளிந்த நிலவணிசடைமுடி இறைவனை, பொருத்தமான பேரன்புடன் தொழுது புகழ்ந்து துதிப்பதாயினன். (59)

## வேறு

453. உவமை யின்றெழு முமையின் பாகமா
யவிரு ஞானவா னந்த வாரியாய்ச்
சிவனும் வாஞ்சையிற் சிறப்ப நல்கிடு
நவையி லாச்சகந் நாத போற்றியே.

(பொ - ரை):—ஒப்பு இலாது எழும் உமை பங்காள ராய், கவினும் அறிவின்பக் கடலாகி, நினைத்த விருப்பத்தைச் சிறப்பாக நிறைவேற்றி வைக்கும் குறை விலாத உலக நாதா! (உமக்கே) வணக்கம், (எ - று).

(குறிப்பு):—நவையிலாமை - மலரகிதத் தன்மை. (60)

454. துதிவெண் பூதியும் புலியின் தோலுமாய்க்
கதிரின் மேனியிற் கவினப் போர்த்துளாய்
மதியும் பாம்பொடு வான்ச டைக்கணே
நதியுஞ் சூழ்சகந் நாத போற்றியே.

(பொ - ரை):—துதிக்கப் பெறும் வெண்ணீற்றையும், புலித்தோலையும், ஒளிமயமான புனித மேனியில் அழகு தோன்றப் போர்த்தவனே! தூயசடை முடியில் பகை (தவிர்ந்து), பாம்பும் திங்களும் கங்கையுடன் உறவாகும் உலகநாதா! (உமக்கே) அடைக்கலம். (61)

455. ஆல காலத்தா லரிய கண்டத்தோர்
கோல மாக்கிய கொள்கை யாய்புரத்
தேல வேநகைத் தெரிவைத் தாய்மறை
நாலுஞ் சொற்சகந் நாத போற்றியே.

(பொ - ரை):-நஞ்சினால், அருமையான கண்டத்தை, ஓர்தலுக்குரிய (நீலக்)கோலம் செய்த நிமலா! பொருந்துமாறு சிரித்துப் புரத்தை எரித்தவனே! நான்மறைகளும் துதிக்கும் உலகநாதா! (உமக்கே) அடைக்கலம், (எ - று).

(குறிப்பு):—நீலண்டர், திரிபுரதகனர், வேதம் ஓதினர், நலம் சிறந்த உலகநாதர் எனும் நான்கு மந்திர நாம நலங்களை அரிய இப்பாடல் அறிவித்தது. (62)

456. காமன் மேனியைக் கனற்றும் பார்வையாய்!
தூம வார்குழல் தோகை பாதியாஞ்
சாம கானனே தகைய வாயிர
நாம னேசகந் நாத போற்றியே.

(பொ - ரை):—காமன் உடலை எரித்த (நெற்றிக்) கண்ணனே! (அகில்) புகையுண்ட நெடுங் கூந்தலும், மயில்போல் சாயலுமுள தேவியைப் பாகம் கொண்ட சாமவேத கீதா! தகுதியுடைய ஆயிரம் பெயர்களை யுடையானே! உலக நாதா! (உமக்கே) அடைக்கலம்.

(குறிப்பு):—காமதகனன், பார்வதிபதி, சாமகானன், சகஸ்ரநாமன் எனும் மந்திரங்களை இப்பாடலில் காண்க. (63)

457. எண்ணுந் தாருவு மினிய தேனுவும்
பண்ண மைந்தமா மணியும் பண்பினு
லுண்ணி னேந்துளார்க் குதவி ஞானத்தி
னண்ணு வாய்சகந் நாத போற்றியே.

(பொ - ரை):—கருதத்தகும் கற்பகத் தருவையும், இனிய (காம) தேனுவையும், சிறப்பமைந்த சிந்தா மணியையும், (சத்துவ) குணத்துடன் மனத்தால் எண்ணினர்க்கு அருளி, (உயர்) ஞான விண்ணில் இருக்கும் உலகநாதா! (உமக்கே) அடைக்கலம். (64)

458. உன்னை யெள்ளியே வுரைத்த தன்மையாற்
சென்னி யொன்றுபோய்த் தேம்பி னேனது
மன்னி யுய்ந்திடற் காக வந்தனை
பண்ணி னேனெனப் பகர்தல் மேயினன்.

(பொ-ரை):-உம்மை இகழ்ந்து உரைத்த பாவத்தால், தலை ஒன்று (அறுபட்டுப்) போய்த் தடுமாறினேன்;

அத்தலை மீட்டும் உளதாகி உய்தி பெறுதற்காக, (உம்மை) வழிபட்டேன் என்று விண்ணப்பித்தல் செய்தான், (எ - று).

(குறிப்பு) :—பண்ணினேன் என்பது இனவெதுகை. (65)

459. வேதன் சொல்லினை வினவிச் சூலவேல்
நாதன் கூறுவா னாகி எங்களி
யோதி மத்தநிற் குணர்த்து வாமுளத்
தாத ரத்தினு லகத்துட் கோடிநீ.

(பொ - ரை) :—(சிறந்த) சூலப்படைச் சிவபிரான், நான்முகன் துதி மொழி கேட்டு உரைப்பாராயினர்; மிக்க இளமையுடன் மகிழ்ச்சி மயமான அன்ன ஊர்தியனே! (ஆவதனை) உனக்கு அறிவிப்பம்; உள்ளத்தில் அன்புடன் நீ உணர்ந்து கொள், (எ - று).

## வேறு

460. போற்றிய சிந்து புரந்தனி லன்பு புகுந்தாராய்ச்
சாற்றுதி யான மருச்சனை மிக்க தவத்தாலே
யேற்றமு றும்பெரி யோர்பெரி யோர்க ளியாதேனு
மாற்றமி லாது நினைக்குமுன் முன்னர் வருந்தானே.

(பொ - ரை) :—(குமரனைப்) போற்றுதல் பொருட்டுச் செந்திற் பதியில் அன்புடன் சென்றவராய், (துதி) மொழி, தியானம், அர்ச்சனை (ஆகிய) சிறந்த விரத சீலங்களால் உயர்வடைந்த பெரியரிற் பெரியரான அவர்கட்கு, யாதெனினும், மறுதலை யிலாது எண்ணு முனர் கைக்கு எளிது வரும், (எ - று).

(குறிப்பு) :—சாற்று - தோத்திரம்; செபம், தியானம் மூன்றுமே செய்தக்க தவம்; இவைகளால் ஆன்மா மென் மேலும் ஏற்றம் எய்தும் என்பது, சிந்தனைக்குரிய செய்தி. கல்வி, செல்வம், பதவியுடையார் பெரியோர்; அப் பெரியரிற் பெரியர் இம்மூன்றுமான தவத்தர் என்பது குறிப்பு, (67)

**461.** என்னமு றுறு முகக்கும ரேச னிசைத்தாறு
லன்னவன் மேவிய வாலய வாயி லணித்தான
சன்னிதி வாரி தினந்தின மூழ்கு தணப்பின்றிப்
பொன்னின்வி மான வுருக்கொடு போற்றுதி பொற்பாமால்.

(பொ - ரை):—என்று முன் ஒரு சமயம் ஆறுமுகக் குமரன் அருளியுளன்; அக்குமரன் எழுந்தருளி யுள்ள ஆலய வாயிலின் அண்மையில் உள்ள சந்நிதானத்து (வதனாரம்ப தீர்த்தம்) எனும் கடலில், நாள் தோறும் நீராடு; இடையருது பொன் விமான வடிவம் கொண்டு (குமரனைப்) போற்றி யிரு; (இதுதான்) சிறந்த புனித செயல், (எ - று). (68)

**462.** விமானம தாகி விளங்குதி வேத வியப்பானங்
குமார சுவாமி விமானம தான குறிப்பாலே
யமானத வாவியு ளாய்தலை யைந்து மளிப்பாமே
னமாணை யுனக்குள கற்ப மகன்றிடு நன்னாளே.

(பொ- ரை):—அழகிய மானச பொய்கையை யுடையவனே! வேதனே! விமானமாகி (நீ) விளங்கியிரு! நம் குமரனுக்கு வியப்பிற்குரிய விமானமா யிருக்கும் இலட்சியத் திருப்பணியால், நம் ஆணையின்படி, உனக்குரிய (பிரம) கற்பம் நீங்கும் நலம் சிறந்த நாளில், (உன்) தலை ஐந்தும் தருவம், (எ - று).

(குறிப்பு):—அமானத வாவி - அழகிய மான சரோவரம்; இது இமயத்தில் இருக்கும் ஒரு தெய்வ தீர்த்தம்; பிரமன் வழிபாடு செய்யும் இடம். (69)

**463.** தண்ணளி யாலிது நந்தன நம்முள சாரூபம்
கண்ணளி னலய மேவுதி கந்த வரைக்கண்ணர்
புண்ணிய சிந்து வினிற்றின மூழ்கு பொருக்கென்றே
எண்ணிய வெண்ணிய வெய்துமி துண்மை யிசைத்தேமால்.

(பொ - ரை) :—தேன் அமைந்த தாமரைக் கோயிலில் தங்கியவனே! நமது சாரூப கதியை (அந் நாளில்) அடைவை; அருளால் இவ்வரத்தை அளித்தேம்; கந்த மாதன மலையில் உள்ள அரிய புண்ணியமான கடலில் நாள் தோறும் நீராடு; (நீ) நினைத்தவைகள் யாவும் விரைவில் நிறைவேறும்; இந்த உண்மை நுட்பத்தை (உனக்கு) ஓதினம், (எ - று).

(குறிப்பு) :—கள் நளின ஆலய எனப் பிரித்துப் பொருளறிக. (70)

464. நலமை புரிந்திட நாமருள் செய்துள சாரூப
நிலைமைய டைந்திடி லைந்தலை யுன்றலை நேராமான்
மலிசுடர் வேலவன் வாயிலின் முத்து வழங்குஞ்சீ
ரலைமணி யாழியி னித்தமு மூழ்குத லாமன்றே.

(பொ - ரை) :—(அம்) முதன்மையை மேற் கொண்ட பின், நாம் முன்னுரைத்த சாரூப நிலையை அடைந்திடில், உன்னிடத்தில் ஐந்து சிரங்களும் நேராக வந்து அமையும்; நிறைந்த ஒளி மயமான வேலிறைவனின் (ஆலய) வாயிலில், முத்துகளையும், மணிகளையும் குவிக்கும் சிறந்த அலைகளை யுடைய (வதனாரம்ப தீர்த்த மெனும்) கடலில், (நீ) நாடோறும் நீராடல் தக்கதாம், (எ - று). (71)

465. நீதலை யெய்துமந் நாளள வுங்குக னேராகும்
வாயிலின் வாரி தினந்தின மூழ்க வழக்காகு
மாயனி ராமவ தாரமொர் மூன்றில் வருஞ்சேதுட்
சேய்முன ராதிச் சேதுவி தாகவுஞ் செய்தானுல்.

(பொ - ரை) :—நீ தலையைப் பெறும் அந்நாள் வரையும், குகபிரான் (ஆலய) வாயிலின் (நேர்முகமான) கடலில் நாள் தோறும் மூழ்குதல் முறையாகும்; திருமால் (கொண்ட பரசுராம தசரதராம பலராமன் எனும்) இராமாவதாரங்கள் மூன்றிலும் தோற்றுவித்த

சேதுக்களுள், குமரன் திருமுன் உள்ள இந்தச் சேதுவைத்தான், ஆதி சேதுவாக அமைத்தார், (எ-று).

(குறிப்பு) :—ஆதி சேது, மத்திய சேது, இறுதி சேது என மூன்றுளதென்று அறிக. (72)

## வேறு

466. மிடைந்த தெண்டிரைச் சேதுவுங் கண்டுநம் வியப்புறு மிருதாளை
யடைந்து பூசனை விதிமுறை புரிந்தன னுதலி னயன்கேண்மோ
படிந்து நீயிவண் வைகுதி யுன்றலைப் பான்மையின் றவத்தாலே
தொடர்ந்த பேர்வத னுரம்ப மாமெனச் சொல்லுதன் மரபாமால்.

(பொ - ரை) :—நெருங்கிய தெளிந்த அலைகளையுடைய கடலில் சேதுவையும் அமைத்து, வியத்தற்குரிய நம் இருதிருவடிகளை அடைக்கலம் அடைந்து, விதிமுறைப்படி அர்ச்சித்து (அத்திருமால்) வழிபாடு செய்தார்; நான்முக! (மேலும்) கேள்; நீ இவ்விடத்தில் நீராடியிரு; தலைசிறந்த உன் தவத்தால், (இந்த சந்நிதான) சமுத்திரத்திற்கு, இயைந்த நாமம் வதனுரம்பம் என்று கூறுதல் முறைமை, (எ - று). (73)

467. தொட்ட வாரிதி யுடுத்தமா நிலத்துள தூயநன் னதியாய
மட்டி லாதவான் தீர்த்தமுற் றுடிய மாதவக் கதியெல்லாங்
கட்டு நான்மறைக் கடவுணீ முகாரம்பக் கடலொடு தினமூழ்கக்
கிட்டு மென்றுபி னிலிங்கத்தி லடைந்தனன் கெழுமுமுத் தலைவேலோன்.

(பொ - ரை) :—(சகரர்கள்) தோண்டிய கடல்புடை சூழ்ந்த பெரிய நிலவுலகில் உள்ள நலம்சிறந்த மங்கள நதிகளாகிய அளவிறந்த புண்ணிய தீர்த்தங்கள் அனைத்திலும் மூழ்கிய பெருந்தவப்பயன் முழுவதும், உறுதியான நான்மறை யுணர்ந்த தேவனான நீ, வதனுரம்ப தீர்த்தத்தில் தினமும் மூழ்க (உனக்கு) உளதாகும் என்று அருளியபின், மிக்கு விளங்கும் முத்தலைச் சூல முதல்வர், இலிங்கத்தில் ஐக்கியம் ஆயினர், (எ-று). (74)

**468. ஆய பான்மையால் நமதுசந் நிதிவத னூரம்பக் கடலூடு**
**தூய வான்திரி சுதந்திர முனிவிர்கா டோன்றிய தினந்தோறும்**
**மேய வன்பினுன் மூழ்குதன் மரபென விதித்தன மிதுநிற்க**
**நேய மாகநாங் காதையொன் றுணர்த்துவ நெறியினின் றுணர்வீரால்.**

(பொ - ரை):—அந்த இயல்பினுல், தூய்மைப் பெருமித திரிசுதந்தர முனிவர்களே! நம் திருமுன்னுள்ள வதனுரம்பத் தீர்த்தத்தில் நாள் தோறும் முதன்மை அன்பால் மூழ்குதல் முறை என்று விதி செய்துளம்; இது ஒருபுறம் இருப்ப, நாம் (வேறு) ஒரு வரலாற்றை உணர்த்துகிறேம்; அன்பாக இருந்து அதையும் (நீங்கள்) அறிந்து கொள்ளுங்கள், (எ - று). (75)

**பொலனி லத்தருக் குளகென நெடும்பணோப் புழைக்கைவான் புடைநீட்டிக்**
**கலுழி மாமுகி லெனப்பொழி களிறுசூழ் கலிங்கநாட் டரசீன்ற**
**திலக வாணுதற் கனகசுந் தரிப்பெயர்த் திருமருக் கருங்கூந்தல்**
**கலவ மாமயில் போற்குறு முனிவரன் கவினுறுந் தமிழ்ச்சாரல்.**

(பொ - ரை):—பொன்னுட்டுக் கற்பகத் தருவை உணவென்று (கருதி,) நீண்டு பருத்த துளையுடைய துதிக்கையை விண்ணில் உயர்த்தி, (மதமாம்) கலங்கல் நீரைப் பெரிய மேகங்கள் எனும்படிப் பொழியும் யானைகள் சூழ்கின்ற, கலிங்க நாட்டுக் காவலன் பெற்ற திலக ஒளியுள நெற்றியையும், நறுமணக் கருங்கூந்தலையு முடைய கனகசுந்தரி எனும் பெயர் கொண்ட திருமகள் போல்பவள், தோகையை யுடைய பெரிய மயில்போல், அகத்திய முனிவர் வாழும் தமிழ் வளர்தற்கு இடமான பொதிகை மலைச்சாரலில், (எ - று).

(குறிப்பு):—இது, 'ஆடுவான் போந்தனன்' எனும் அடுத்த பாட்டுடன் முடியும். குளகு - உணவு. கலுழி - கலங்கல் வெள்ளம். (76)

470. பொருநை யந்துறை மூலத்தி னுடுவான் போந்தனள் போங்காலை
யரிய மாதவ னருவரைக் கானிடை யயக்கிரீ வனைப்பாராத்
தெரிவை யாயிடை நின்றவ மதிப்பினுல் சிரித்தன ளதுகாலை
விரைவி னீவருஞ் சனனத்தின் முகம்பரி யாகென விதித்தானுல்.

(பொ - ரை):—தாமிரபரணிக் கரையில் நீராடற் பொருட்டுச் சென்றுள்; (அங்ஙனம்) செல்லும் பொழுது, கம்பீரமான மலைக்காட்டில் அருந்தவ அயக்கீரீவ முனிவரை கனகசுந்தரி கண்டு, அந்த இடத்தில் நின்று, (குதிரைமுகமென்று) அவமதிப்புச் செய்து நகைத்தாள்; அவ்வமயம் (அவர்,) நீ அடுத்த பிறப்பில் குதிரை முகம் கொள்வை என்று விரைந்து சபித்தார், (எ - று).

(குறிப்பு) :-குதிரை போலும் கழுத்துடையவர், அயக்ரீவர்; ஹய - குதிரை; க்ரீவம் - கழுத்து. (77)

471. விதித்த சாபத்தைக் கனககசுந் தரியெனு மெல்லிய றுயரோடுந்
துதித்து நீபகர் கொடுமொழி தவிர்பகற் சொல்லுதி யெனலோடு
மதித்தி ருந்தயக் கிரீவனு மவண்முகம் பார்த்துமா தவனுபி
யுதித்து ளான்முனர்ப் போந்தலை வருதலை யுன்னிநோற் றுளனன்றே.

(பொ - ரை):—விதித்த சாபத்தைப் பெற்ற கனக சுந்தரி எனும் காரிகை, துன்பத்தொடு (முனிவரைத்) துதித்து, தேவரீர் கூறிய கொடுஞ் சாபம் தீரும் காலம் கூறுக என வேண்டலும், (எதிர்கால நிகழ்வை) அறிவால் ஆய்ந்துணர்ந்த அயக்கிரீவரும், அவளை ஏறிட்டு நோக்கி, திருமாலின் திருவுந்தியில் உதித்த பிரமன், முன்பொரு சமயம், போன தலை (மீள) வருதலை எண்ணித் தவம் செய்திருந்தனன், (எ – று).

(குறிப்பு):-இது குளகம்; அடுத்த பாட்டுடன் முடியும். (78)

472. கந்த மாதன வரையுள தவ்வரைக் கண்ணிடைக் கவின்பூத்த
மந்தி ரத்தினின் மந்திரப் பொருளதாம் மயூரவா கனத்தெந்தை
முந்து சந்நிதிச் சிந்துவின் மூழ்கினன் மொய்குழ லவணீபோ
யிந்த மாமுகம் போயந்த மாமுக மெய்துநீ யேகென்றுன்.

(பொ - ரை) :—கந்த மாதனம் என்று ஒரு மலையுளது; அம்மலையின் சாரலில் உள்ள அழகு மலர்ந்த ஆலயத்தில், மந்திரப் பொருளான மயிலூர் எந்தையின் முற்பட்ட சந்நிதானத்துச் சமுத்திரத்தில் (பிரமன்) நீராடினன். மொய்த்த கூந்தலை யுடையவளே! (அடுத்த பிறப்பில்) நீ அங்குச் சென்று, (சாபத்தால் வந்த) இக் குதிரை முகம் நீங்க, அழகுடைய மனித முகம் எய்துவை! இங்கிருந்து (இப்போது) போய்விடு என்றருளினர், (எ - று). (79)

**473.** புக்க வச்சன னச்சுமை போயபின் புவிபொது வறக்காக்கு
முக்கி ரப்பெரு வழுதிபா லுதித்தன ளொளிவனப் புறுமேனி
மிக்க வங்கசுந் தரியெனும் பெயரொடும் விளங்கினள் பரிபோன்று
தக்க மாமுக மாயினள் வழுதியுஞ் சஞ்சலித் துளஞ்சோர்ந்தான்.

(பொ - ரை):—(கலிங்கன் மகள் கனக சுந்தரி எனும்) அப் பிறவிப் பாரம் அகன்றபின், காசினியைப் பொதுக் கடிந்து (தன்னதாக்கிச்) செங்கோல் செலுத்தும் உக்கிர பாண்டியன் எனும் மாபெரும் காவலன் மகளாய்ப் பிறந்தாள்; ஒளியும் அழகுமுள (காரணத்தால்,) அங்க சுந்தரி எனும் பெயர்கொண்டு பிரகாசித்தாள்; (ஆயினும்,) முகம் மட்டும் குதிரைபோல் ஆயினள்; (அது கண்ட) பாண்டியனும், வருந்தி மனம் தளர்ந்தனன், (எ - று). (80)

**474.** சோர்ந்த காலையி லந்தர வாணியொன் றரசநின் சுதைக்கிம்மாக்
கூர்ந்த வானன நன்முக னுகநற் றுரைகடல் நதிவாவி
யார்ந்த தீர்த்தத்தி னுடுக வென்றவ ணறைந்ததா லதுகேளாத்
தேர்ந்த மந்திரி மாரொடுங் களித்தனன் செழியர்கோ னினிதுற்றுன்.

(பொ - ரை) :—(தரணிபன் மனம்) தளர்ந்த அச்சமயம், மன்னு! உன் அமுத மகட்கு, இக் குதிரை போல் ஆன முகம், நன்முகம் ஆதற் பொருட்டு, ஒலிக்கும் கடல், ஆறு, பொய்கை என நிறைவுடைய

தீர்த்தங்களில் நீராடச்செய் என்று அசரீரி வாக்கு ஒன்று, அங்கு எழுந்தது; அதைக்கேட்டு, தெளிவுமிக்க அமைச்சர்களுடன், பாண்டியர் பெருமான் இனிது மகிழ்ந்து இருந்தான், (எ - று). (81)

## வேறு

**475.** செழியர்பிரா னமைச்சரொடுஞ் சேனையொடுந் தன்மகளை
வழிமரபின் மூத்தார்க ளொடுங்கூட்டி வானதியாம்
சுழியெறியுங் கங்கைதனுக் கோடிமுதற் றூயபுனல்
விழுமியதண் ணதிமூழ்க மகிழ்வினொடும் விடுத்தனனால்.

(பொ - ரை):—பாண்டிய மன்னன் மந்திரிகளுடனும், படைகளுடனும், தன் மகள் அங்க சுந்தரியை, பழைய மரபின் வழிவந்த பெரியோர்களுடன் கூட்டி, சுரநதியாகிச் சுழித்து வீசும் கங்கையிலும், தனுக்கோடி முதல் புண்ணிய நீர் நிலைகளிலும் முழுகும்படி, அன்புடன் அனுப்பி வைத்தான், (எ – று). (82)

**476.** நன்பொருளாந் தாரகத்தை நண்ணுவிக்குங் கங்கைமுத
லின்பமுறுந் தீர்த்தமெல்லா மினிதாடித் தண்பொதியத்
தென்பொருநை யிருகரையுந் தீர்த்தமுழு வதுந்திளைத்து
மின்பொலியுஞ் சங்கமமார் வேலையினும் படிந்தனளால்.

(பொ - ரை):—மெய்ப்பொருளான ஓங்காரத்தை ஒலிக்கும் கங்கை முதலிய இன்பம் விளைவிக்கும் தீர்த்தங்கள் யாவற்றினும் இனிது மூழ்கி, குளிர்ந்த பொதிகை மலையிலிருந்து வரும் இனிய தாமிரபரணியின் இருகரைகளிலும் இருக்கும் தீர்த்தங்கள் அனைத்தினும் நீராடி, ஒளி விளங்குகின்ற (எந்நதியும் வந்து) இணங்கும் நிறைவுடைய (முதன்மைக்) கடலின் பல இடங்களிலும் (அங்க சுந்தரி) மூழ்கினள், (எ - று).

(குறிப்பு):—சங்கம வேலை - கடலும் நதிகளும் கலக்குமிடம்.

477. ஆடியபின் னீடுவத ஞரம்பத் துறைமூழ்கக்
கோடகத்தின் முகமொளித்துக் குறுமுயலின் மறுவொழித்த
நீடுமுவா மதிபோல நிறைவுபெறு முகநோக்கிச்
சூடகச்செந் தளிர்க்கையுளந் துளங்கினண்மா மகிழ்பூத்தாள்.

(பொ - ரை):—(அவைகளில்) நீராடிய பின், உயர்ந்த வதஞரம்ப தீர்த்தத் துறையில் படிதலும், (தன்) குதிரை முகம் மறைந்து, குறிய முயல் களங்கத்தை அகற்றிய உயர்ந்த நிறை மதிபோல் நிறைதலை யுடைய (தனது) முகம் நோக்கி, தொடியணிந்த செந்தளிர் போலும் கரங்களை யுடைய அங்க சுந்தரி, இன்பம் மிகுந்து மகிழ்வால் மனம் மலராயினள், (எ - று).

(குறிப்பு):—கோடகம் - குதிரை. சூடகம் - கை வளை. உளம் துளங்கல். உள்ளம் துள்ளல். (84)

478. விதிமுறையிற் பலபொருளும் வேதியருக் கினிதளித்து
மதிமுகத்தின் செவ்விபெறு மடவரலன் பினின்மூழ்கிக்
கதிர்மதியக் குலத்தாதைக் கொற்றர்தமைக் கடிதுய்த்தா
ளதிர்குரற்ரு னைகளோடுஞ் சென்றடைந்தான் பஞ்சவர்கோன்.

(பொ - ரை):—நிறைமதி ஒளியென முகப் பொலிவு பெற்ற அங்க சுந்தரி, (முதிரும்) அன்புடன் (பிறகும்) மூழ்கி, (முதன்மை நூற்கள்) விதித்த முறைப்படி, பல பொருள்களையும் வைதிகர்கட்கு இனிதாக வாரி வழங்கி, மதி மரபில் உதித்த (தன்) தந்தைக்கு, (நிகழ்ந்ததைக் கூறுமாறு) ஒற்றர்களை விரைந்து அனுப்பினள்; (உக்கிர) பாண்டியர் பேரொலி யுடைய படைகளுடன் புறப்பட்டு, (அங்கசுந்தரி யிருக்கும் இடத்தை) அடைந்தனர், (எ - று). (85)

479. கவுரியர்கோன் செயந்திபுரந் தனிலடைந்து கன்னிகையி
னவிரொளிவாண் முகநோக்கி யற்புதத்தின் கடன்மூழ்கி
யுவரியினீ ருடன்படிந்து மகளோடு முவமையிலா
நவமணிக்கோ யிலிற்புகுந்து நம்மையும்பூ சனைபுரிந்தான்.

(பொ - ரை):—பாண்டி மன்னன் திருச்செந்தூர்க்கு வந்து, மகளின் படர்ந்த ஒளி முகத்தைப் பார்த்து, அதிசயக் கடலில் ஆழ்ந்து, உடனே (தானும் அக்) கடலில் நீராடி, மகளொடும் ஒப்புமை சொல்ல இயலாத நவரத்தின மயமான (புனித) ஆலயத்துள் புகுந்து, (வாழ்விக்கும்) நம்மையும் வழிபட்டனன், (எ-று). (86)

**480.** **ஆதலினம் மாலயத்துச் சந்நிதியி லருந்தீர்த்த**
**மோதிடுநற் றிருப்பெயரு முறுமுகா ரம்பமதா**
**மாதரவின் வாஞ்சாதீர்த் தப்பெயரா மல்லாமற்**
**போதமுறுஞ் சத்தியதீர்த் தமுமாகும் பூசுரர்காள்.**

(பொ - ரை):—ஆகையினால், வேதியர்களே! நம் திருக்கோயிலின் முகப்பில் இருக்கும் (அந்த) அரிய தீர்த்தத்திற்கு, கூறும் சிறந்த திருப்பெயரும், பொருந்திய முகாரம்பம் எனப் பெறும்; அன்பைக் கற்பிக்கும் வாஞ்சைத் தீர்த்தம் எனும் பெயருமாம்; அதுவன்றி, போத தீர்த்தம், பொருந்திய சத்திய தீர்த்தம் என்பனவுமாம், (எ - று). (87)

**481.** **என்றுரைத்த குமரேச னின்னமுதச் செந்தேற**
**னின்றமுனி வரர்செவியா லெடுத்தருந்தி நிகரின்மறை**
**யின்றளவு முணர்வரிய குகன்பாதத் திணைநிழற்கீழ்த்**
**துன்றுதிரி சுதந்திரரு நீங்காது தொழுதிருந்தார்.**

(பொ - ரை):—என்று குமரப் பெருமான் திருவாய் மலர்ந்தருளிய இன்மொழியாகிய சிறந்த தேனை, (திருமுன்பு) இருந்த முனிவர்களான திரிசுந்தரர்கள் செவிகளா(ய கரங்களா)ல் எடுத்துப் பருகி, ஒப்பற்ற மறைகள் இன்றுவரை உணர்வால் உணர இயலாத குகப்பரமன் திருவடி நிழலின்கண், பிரியாது வழிபாடு செய்து இருந்தனர், (எ - று). (88)

**பிரமாவுக்கு வரங்கொடுத்த அத்தியாயம் நிறைவுபெற்றது.**

## 10. திரிசுதந்திரர் வரலாறு உரைத்த அத்தியாயம்

482. முற்றுணர் வியாசமா முனிவன் றுண்மலர்
பற்றுடன் சுகமுனி பணிந்து தந்தைநீ
சொற்றிரி சுதந்திரர் வரவுந் தோற்றமு
மற்றதுஞ் சொல்கென வழங்கன் மேயினன்.

(பொ - ரை):-முற்று முணர்ந்த வியாச முனிவருடைய திருவடிக் கமலங்களை, அன்புடன் சுகமுனிவர் தொழுது, எந்தையே! நீர் (மேலே) கூறிய திரிசுதந்தரர்களது வரலாற்றையும், (அவர்களது) உற்பவத்தையும், பிறவற்றையும் (விளக்கி) உரைக்கென விண்ணப்பிக்க, (வியாசர் மேலும்) விளம்பல் ஆயினர், (எ - று). (1)

483. சுகமுனி வருந்திரி சுதந்தி ரத்தருங்
குகனுமொன் றுகவே யிருந்த கொள்கையார்
முகமனன் றுரைப்பது மோனத் துண்மைபோ
லகமகிழ்ந் தினிதுகே ளறைகு வாமரோ.

(பொ - ரை):—சுகமுனிவனே! உதயமான திரிசுதந்தரர்களும் குகப்பெருமானும் ஒன்றுபட்டு இருந்த இயல்பினரே! (யாம்) கூறும் இது உபசாரம் அன்று; மௌனத்தில் விளையும் (சிவ) மெய்பொருள் உளம் (குறித்த சிரவணம்) போல், உள்ளம் உவந்து கேண்மையுடன் கேள், உரைக்கின்றேன், (எ - று). (2)

484. முதுக்குறை யுறுதவ முனிவர் தங்குழு
விதித்திட வரியவாம் வேத நான்கையு
மதிக்கொளும் வலியினர் மகியிற் கங்கைமா
நதிக்கரை யினிதுமா தவத்தி னண்ணினர்.

(பொ - ரை):—(பிறர்) தோற்றுவிக்க இயலாத (தொன்மை) நான்மறைகளையும் மதியில் கொண்ட வன்மையராய், பேரறிவு பெற்ற பெருந்தவ சீலரான சிறந்த முனிவர்கள் சிலர், நிலவுலகில் உள்ள கங்கை யெனும் நலம் சிறந்த நதிக்கரையில், சிறந்த தவம் செய்துகொண்டு இருந்தனர், (எ - று).

(குறிப்பு):—முதுக் குறைவு – பேரறிவு. (3)

485. களிசிறந் தாறெனுங் கரும மாற்றுவார்
தெளிதரு முனிவரர் தேவர் தென்புலத்
துளரிவர் மும்மையார்க் குரிய வன்பிறு
லளவறு சுருதிநூ லகங்கொண் டாய்ந்திடா.

486. பிரமவான் சரியத்தான் முனிவர் பெட்புறக்
கருமநின் றுற்றுவார் கடவு ளோர்க்கெலா
மரியவேள் விகள்புரிந் தார்வ மூட்டுவார்
வருசுத ரைக்கொட வாசிக் கண்ணுளார்.

487. தங்களுக் கன்புறத் தருமமாற்றுவார்
பொங்குவெங் காமமுன் புகலு மாறெனத்
தங்குமக் குறும்பறுத் துயருந் தன்மையார்
செங்கம லத்தனை நோற்குஞ் செய்கையார்.

(பொ - ரை):—களிப்பு மிகுந்த (ஓதம், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் ஆதிய) ஆறு என்னும் சிறந்த தொழில்களைச் செய்தல் உடையவர்; தெளிவு பெற்ற முனிவர்கள், தேவர்கள், பிதிரர்கள் எனும் இம்மூவரிடத்தும், உரிமையுள அன்பினால், அளவற்ற அருள் நூல்களை உளம் கொண்டு ஆய்ந்து, (எ-று). (4)

(பொ - ரை):—(வித்தக) முனிவர்கள் விரும்புமாறு, பிரமசரிய நிலையால், (மேதகு) செயல்கள் நிலைபெறுமாறு மேற்கொள்வர்; அருமை வேள்விகளை (அழகுற) நடத்தி,

அமரர் அனைவர்க்கும் (அவிசளித்து, தம்பால் முதிரும்) ஆர்வம் மூளச் செய்வர்; பெற்ற பிள்ளைகளைக் கொண்டு,

(பொ - ரை):—தென்புலப் பிதிரர்கட்கு அன்பு உதிக்க, (சிராத்தம் முதலிய) தருமம் செய்வர்; மேற்பட்டுவரும் வெம்மைக் காமம் முதலாகச் சொல்லப் பெறும் ஆறு எனத் தங்கும் அப் பகையை, வேரறுத்து உயரும் இயல்புடையவர்கள்; நற்கமல பீடத்து நான்முகனை, (எண்ணித்) தவம் செய்தலை யுடையவர், ().

(குறிப்பு):—ஆறு எனும் கருமம் – ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல். அவாசி - தென்திசை; அத்திசையில் இருப்பவர் பிதிரர். ஆறெனும் பகை - காம, குரோத, லோப, மோக, மத, மாற்சர்யங்கள். (4, 5, 6)

488. இருந்தனர் தம்முனர் வேத னெய்திநீர்
புரிந்தமா தவத்துள புகழ்ச்சி யெய்தினு
மருந்தவத் தீருளத் தார்வமீ தெனத்
திருந்துறப் புகலுமென் றிறைவன் செப்பலும்.

(பொ - ரை):—(அங்ஙனம்) இருந்த அம் முனிவர்கள் முன் பிரமன் வந்து, செய்த சிறந்த தவவழிபாட்டை ஏற்றனம்; அரிய தவம் செய்த அந்தண்மையீர்! (உங்கள்) உள்ளத்தின் விருப்பம் இது என்று, தெளிவாகத் தெரிவியுங்கள் என்று கூறுதலும், (எ-று). (7)

489. அஞ்சலி செலுத்திநின் றந்த ணாளர்வெண்
கஞ்சநாண் மலர்வளர் கலைம கட்குறத்
தஞ்சநா வளித்தசெந் தாம ரைக்குளாம்
விஞ்சையா யகத்துள விருப்பஞ் செப்புகேம்.

(பொ - ரை):—அந்தணர்கள் கைகூப்பி நின்று, அன்று அலர்ந்த வெண் தாமரையில் வீற்றிருக்கும்

நாமகட்கு இடமாக நாவை அருளி, செந்தாமரையை இடங்கொண்டு இருக்கும் வித்தியா விநோதரே! (எம்) மன விருப்பத்தைக் கூறுவம், (எ-று).

(குறிப்பு) :—கலைமகட்குக் கோயில் வெண் தாமரை; பிரமனுக்கு இடம் செந்தாமரை என்பது இங்கு அறிவிக்கப் பெற்றது. (8)

*490.* புடவியுஞ் சுவர்க்கமும் பொன்னந் தாமரைக்
கடவுணின் னுலகமுங் காமுற் றேமவ
ணிடைதொறுஞ் சுதந்திரத் திருத்தற் கெந்தைநீ
தடைபடா தருளெனச் சாற்றும் வண்ணமே.

*491.* அம்புயத் தண்ணலு மளித்துப் போயினன்
வெம்புமக் கினியவர் வேட்ட மூவர
நம்புற வளித்தன னகைநி லாக்கொழுந்
தும்பூனந் தருள்புரி சூல பாணியும்.

*492.* வேட்டமூ வரங்களும் வேதி யர்க்குளங்
கூட்டுற மாயனுங் கொடுத்துப் போயினு
னூட்டுமுத் தேவுமுப் புவன நல்கலாற்
சூட்டுபேர் திரிசுதந் திரரென் றுயதே.

(பொ - ரை) :—பொற்றாமரை ஆசனத்து வீற்றிருக்கும் (புனித) தேவரே! நிலவுலகையும், விண்ணுலகையும், உமது (சத்திய) உலகையும் விரும்பினேன்; அந்த இடங்கள் தோறும் (யாங்கள்) சுதந்தரமாக வாழ்தற்கு, எந்தையே! நீர் தடையிலாதபடி அருளும் என்று, விண்ணப்பித்த விதமே, (எ—று).

(பொ - ரை):—கமலாசன நான்முகனும், (அவர்கள்) விண்ணப்பித்த படியே அருளிச் சென்றான். புன்னகையுடன் இளம்பிறையையும் அணிந்து அருள்பாலிக்கும் (முத்தலைச்) சூல முதல்வரான சிவபிரானும், (எ - று).

(பொ - ரை) :—(தம்மை நோக்கிச் செய்த தவம் கருதி வெளிப்பட்டு,) வெப்பமான வேள்வியைச் செய்யும் அவர் விரும்பிய (அம்) மூன்று வரங்களையும் அருளினர். அப்படியே திருமாலும், விரும்பிய (அம்) மூன்று வரங்களையும் (அம்) முனிவர்கட்கு அருளுளத்துடன் அளித்துச் சென்றுர். (நான்முகனும், திருமாலும், சிவபிரானுமான) முதன்மை மூவரும் மூன்று உலகங்களையும் அருளனிமையால், (அவர்கட்குத்) திரிசுதந்தரர் எனும் பெயர் உளதாயது, (எ-று).

(குறிப்பு) :—அக்கினி - ஆகவநீயம், தட்சிணுக்கினி, காருகபத்தியம் எனும் மூவகை வேள்விகளைக் குறித்தது. (11)

493. அன்னதன் பான்மையா லந்த ணுளர்தா
மன்னுமுப் புவனமு மகிழ்ந்து வைகினுர்
பின்னரும் பொருநையங் கரையிற் பேர்மகந்
தன்ெறுடு மில்லறந் தழைத்து வைகினுர்.

(பொ - ரை) :—அத்தன்மையால் (அம்) முனிவர்கள், நிலைபெற்ற மூவுலகங்களிலும் (சுதந்தரத்துடன்) மகிழ்ந்து இருந்தனர் ; பிறகும், தாமிரபரணி நதிக்கரையில் சிறந்த வேள்விகளைச் செய்துகொண்டு, இல்லறத்தில் இனிது இருந்தனர், (எ - று).

(குறிப்பு) :—இதனுல் திரிசுந்தரர், முக்காணியர் எனும் பெயரும் எய்தினர் என்றபடி. (12)

494. இந்தமாக் கதைதனை யெடுத்துக் காட்டிய
தந்தையாம் வியாதனைத் தாழ்ந்து போற்றியே
யந்தண ரிலக்கமெவ் வளவென் றுன்சுகன்
சிந்தையிற் கழிமகிழ் சிறப்பச் சொல்லுவான்.

(பொ - ரை) :—இப்பெரு வரலாற்றை விரிவாக எடுத்து விளக்கிய தந்தையான வியாசரை, சுகமுனிவர் வணங்கித் துதித்து, (எந்தையே!) அந்தணர் தொகை எவ்வளவு என்றார்; (உடனே வியாசர்) குதூகலம் பெருகக் கூறலாயினர், (எ-று). (13)

495. திருமுது குன்றினிற் சிவன்றன் பூசனை
சுருதியி னின்புறப் புரிந்து சூழ்வினைக்
கருமல மகற்றிமுக் கண்ணன் றண்மல
ரிருமையும் பெற்றனரா யிரவர் வைகினர்.

(பொ - ரை) :—(அத் திரி சுதந்தரருள்) ஓர் ஆயிரவர், பழமலையில் முக்கண் சிவனார் திருவடி மலர்களை அருள்நூல் விதிப்படி ஆராதித்து, முற்றுகையிட்ட (சஞ்சித) வினைகளை, இருணிற மாயையை, (ஆணவ) மலத்தை அகற்றி, (இம்மை மறுமையெனும்) இருபெரும் பேற்றையும் பெற்று இருந்தனர், (எ - று).

(குறிப்பு) :—திருமுதுகுன்றம் - விருத்தாசலம். (14)

496. பெறலருந் திருவுடன் சிறந்து பெய்மதத்
தறுகண்மால் யானையாற் றாரம் புல்லிய
வறுமுகன் பாலிரண் டாயி ரத்தரு
முறுபொரு ளடைந்துவா னவர்க்கொப் பாகவே.

(பொ - ரை) :—(பிறர்) பெறுதற்கு அரிய (மேதகு) செல்வம் மிகுந்து, மதம் சொரியும் அஞ்சாமை யுடைய பெரிய யானைகளின் உதவியால், (தகுதியுள இரு) மனைவியரைத் தழுவிய ஆறுமுகப் பெருமானிடம், இரண்டாயிரம் திரிசுதந்தரர்களும், தேவர்கட்கு ஒப்பாகவே எச் செல்வமும் எய்தினராகி, (எ - று).

(குறிப்பு) :—திரு - அருட் புதையல். ஐராவத யானை வளர்த்த தேவயானையாரையும், கணபதி யானையால் வள்ளியாரையும் மணந்தமை கருதி, 'தறுகண்மால் யானையால் தாரம் புல்லிய அறுமுகன்' என்றார். (15)

497. நித்தமுங் குகன்பத நீக்க மின்றியே
பத்திமைச் செயந்தியம் பதியின் வைகினர்
வித்தகர் சரித்திரம் விளம்பு மேலையோர்
முத்தராய்க் குகனடி முளரி சார்வரால்.

(பொ - ரை) :—நாள் தோறும் பெருமான் திருவடிகளைப் பிரிதல் இன்றி, அன்பொடு செந்திலில் அமர்ந்து இருந்தனர். திறமுடைய (அவர்களது) வரலாற்றைக் கூறும் அறிவுடையோர், சீவன் முத்தராய்க் குகப்பரமனது திருவடி மலர்களை அடைவர், (எ - று).

498. புண்டரீ கத்தொடு பாம்பு போற்றிய
புண்டரீ கப்புரப் பொதுவிற் பொற்புறப்
புண்டரீ கத்துரி போர்த்த புங்கவன்
புண்டரீ கப்பதப் போது பூசியா.

(பொ - ரை) :—புலிக்கால் முனிவருடன் பாம்பு முனிவரும் வழிபட்ட புலியூர் எனும் சிதம்பர அம்பலத்தில், பொலிவு பொருந்தும் புலித்தோல் போர்த்த சிற்சபேசர் திருவடிக் கமலங்களைப் பூசித்து, (எ-று).

(குறிப்பு) :—புண்டரீகம் என்பது, புலி, தாமரை எனப் பொருள் தரும் வடசொல். முதல் புண்டரீகம் – வியாக்கிர பாதரையும், அடுத்த புண்டரீகம் அவர் வழிபட்ட புலியூரையும், மூன்றாவது புண்டரீகத்து உரி – புலித் தோலையும், அடுத்த புண்டரீகம் – கமலத்தையும் உணர்த்தியது. (17)

499. மும்மையி னுயிர முனிவர் வேள்வியிற்
செம்மைபெற் றருணடத் தியானத் துற்றுளார்
தம்மையர்ச் சனைபுரி தன்மை யோர்கடா
மிம்மையு மறுமையு மின்பத் தெய்துவார்.

(பொ - ரை) :—மூவாயிரம் திரிசுதந்தர முனிவர்கள், (செய்தபல) வேள்விகளால் சிறப்பெய்தி, திருவருளால் (சிற்சபேசர்) திருக்கூத்தைச் சதா தியானித்தவர்களாக இருந்தனர்; அத்திரிசிதந்தரர்களை (என்றும்) வழிபடும் இயல்புடையவர்கள், இம்மையிலும் மறுமையிலும் அளவிலா இன்பம் அடைவர், (எ - று). (18)

500. அளக்குநா லாயிர மந்த ணாளர்தாந்
தளக்கம லாசன புரத்துச் சார்ந்துளார்
வளத்துட னிருந்துமா தவனைப் பூசனை
யுளக்களி சிறப்பநோற் றுயர்ச்சி மேவினார்.

(பொ - ரை) :—நாலாயிரர் என்று தொகை கூறப் பெறும் நலம் சிறந்த அந்தணர்கள், இதழ்களை யுடைய தாமரை ஆசனப் பிரமபுரம் (எனும் திருமாலுக்குரிய ஒரு) தலத்தில் தங்கினர். செல்வ நலத்துடன், (அங்குப் பலகாலம்) திருமகள் கேள்வன் திருவுளம் மகிழுமாறு, சிறக்கத் தவம் செய்து, (பெருகிய) உயர்வு பெற்றனர், (எ - று). (19)

501. அல்லுறழ் கண்டன்வா ழருணை வெற்பினிற்
சொல்லுமை யாயிரந் தோமில் பூசுர
ரெல்லையி லன்பின னீசன் றண்மலர்
மல்லலம் பூசைசெய் தினிது வைகினர்.

(பொ - ரை) :—நீலகண்டர் எழுந்தருளி யுள்ள திருவண்ணாமலையில், குறையற்ற ஐயாயிரவர் (என்று)

சொல்லப்பெறும் அந்தணர்கள், அளவற்ற அன்பால், சிவனார் திருவடி மலர்களை, வளஞ் சிறந்த வழிபாடு செய்து இன்பச் செல்வத்தொடு இருந்தனர், (எ—று). (20)

502. அருஞ்சகந் நாதத்தா றுயி ரப்பெயர்ப்
பெரும்புவிக் கடவுளர் பிரசத் தும்பிசூழ்
கருந்துள வத்தனைக் கருதிப் பூசனை
புரிந்துவான் சிறப்பொடுபொருந்தி வைகினார்.

(பொ - ரை):—அருமையான் சகந்நாத(ம் எனும்) தலத்தில், ஆறுயிரம் பூசுரர்கள், தேனை விரும்பி வண்டுகள் மொய்த்த கரிய துளசி மாலை சூடிய திருமாலை உளங்கொண்டு வழிபட்டு, மிக்க சிறப்பொடு விளங்கி இருந்தனர், (எ - று).

(குறிப்பு):—புவிக் கடவுளர் – பூசுரர். பிரசம் – தேன். (21)

503. வாழிய மாதொரு பாகன் வாழ்திரு
வீழியின் மிழலையின் வேதத் தன்மையாற்
சூழுமே ழாயிரஞ் சுருதி யந்தண
ரேழையோர் பாகனை யிறைஞ்சி வைகினார்.

(பொ - ரை):—(உலகம் முழுதும்) வாழ்தற் பொருட்டு, உமாதேவியை ஒப்பற்ற இடப்பாகம் கொண்ட சிவபிரான் எழுந்தருளிய வளம் நிறைந்த திருவீழி மிழலையில், ஏழாயிரம் வைதிகரான திரிசுதந்தரர்கள், உமாபதியை வழிபட்டு இருந்தனர், (எ-று).

(குறிப்பு):—வாழிய என்பதில், இய - வியங்கோள் விகுதி. திருவீழிமிழலை – திருமாலும் திருமகளும் வழிபட்ட தெய்வத் தலம். தன்மை - இயல்பான விதி. சுருதி யந்தணர் - வேதம் உணர்ந்து அதன்மயமான வேதியர்கள். இமய மன்னன்

மகளெனினும், பெண்மை அறத்தை நினைவூட்ட, எளிமை காட்டி அடக்க ஒடுக்கமாக இருந்த அருமையை உணர்ந்து, உமாதேவியை 'ஏழை' என்றார். (22)

504. கூடலி னிருந்தருள் குழகன் பக்கமாய்
நாடுமெண் ணுயிரர் நான்கு வேதமும்
பீடுற வுணர்ந்துளார் பிறையின் வேணியை
யேடவிழ் மலரினா லருச்சித் தேத்தினார்.

(பொ - ரை):—மதுரையில் வீற்றிருந்தருளும் சுந்தரர் திருமுன் இருக்கும் எண்ணாயிரம் திரிசுதந்தரர்கள், நான்மறைகளையும் உயர்ந்த முறையில் உணர்ந்து, பிறையிருந்த சடைப் பெருமானை, மலரும் பருவ மலர்களால் அர்ச்சித்து வழிபட்டனர், (எ - று). (23)

505. சாற்றிருந் தண்டக வனத்து மாதவ
மாற்றிய வொன்பதி னாயி ரத்தரு
மேற்றமாம் பூசனை யிராமன் றாண்மலர்
போற்றியுட் களித்தவண் பொருந்தி வைகினார்.

(பொ - ரை):—(எந்நூலும்) புகழும் தண்டகாரணியத்தில் பெருந்தவம் புரிந்திருந்த ஒன்பதினாயிரம் அந்தணர்களும், சிறந்த (சிவ) வழிபாடு செய்யும் (தூய) இராமன் திருவடி மலர்களைப்போற்றி உள்ளம் புளகித்து, (புனித) அவ்விடத்தில் பொருந்தி யிருந்தனர், (எ - று).

506. வழுவின்மா தவத்துமா தவன்றன் கோகுலத்
தழிவில்வே தியர்பதி னாயி ரத்தர்தா
முழுவலன் போடுமா லுபய தாண்மலர்
தொழுதுளக் களிப்பொடு சூழ்ந்து வாழ்ந்தனர்.

(பொ - ரை):—பழுதற்ற தவம்மிக்க பரந்தாமனுடைய கோகுலத்தில், அழிவற்ற பதினாயிரம் அந்தணர்கள், அரிய பெரிய அன்புடன், கண்ணனின் திருவடி மலர்களைத் தொழுது, ஒற்றுமையுடன் இன்பங் கொண்டு வாழ்ந்து இருந்தனர், (எ - று). (26)

507. சிறப்புயர் வதரிகாச் சிரமத் தைந்துடன்
குறிக்குமா றாயிரங் கோதி லந்தணர்
நறைத்துழா யலங்கல்சூழ் நார ணன்பதம்
பிறப்பிறப் பொழிதரப் பேணி யுற்றுளார்.

(பொ - ரை) :—சிறப்பால் உயர்ந்த வதரிகாச் சிரமத்தில், குற்றம் இல்லாத பதினோராயிர அந்தணர்கள், தேன் பொருந்திய துளவ மாலையணிந்த திருமாலின் திருவடிகளை, இறப்பும் பிறப்பும் நீங்க வழிபட்டிருந்தனர், எ - று).

508. துதிதரு முகிலருச் சுவாமி மாமலைப்
பதியினின் மிக்குறு பன்னி ராயிரர்
விதிநிகர் வேதியர் வேற்கைச் சேவகன்
முதியதாட் டாமரை மோலி சூட்டுவார்.

(பொ - ரை) :—புகழப்பெறும் மழைநலம் அகலாத வளமுடைய சுவாமிமலைத் தலத்தில், மிகச்சிறந்த பன்னீராயிரர் ஆகிய பிரமதேவரை ஒத்த (வைதிக ஒழுக்க) வேதியர்கள், வேற்படை முருகனது மலர்ந்த திருவடிக் கமலங்களை சிரமேற் கொண்டு சிறந்தனர், (எ - று).

509. அளவெழு பானொடெண் ணாயி ரம்பெறு
வளனுறு திரிசுதந் திரத்தர் வான்றிரைக்
குளிர்பனிக் கருங்கடற் கோசி கம்புனை
தளிரியன் மல்குறத் தவத்தின் வைகுவார்.

(பொ - ரை) :—(இங்ஙனமே) எழுபத்தெண்ணுயிரம் தொகையுடைய வளம் (பல) பொருந்திய திரிசுதந் தரர்கள், பேரலைகளை யுடைய மிகக் குளிர்ந்த நீலக் கடலாகிய ஆடை உடுத்த மாந்தளிர் மேனி நிலமகள், (அங்கங்கே) சிறப்படையத் தவஞ் செய்து அமர்வா ராயினர், (எ - று). (28)

510. ஏவர்க ளாயினு மிவரை நெஞ்சிடைப்
பாவனை செய்யினும் பண்பி னேத்தினும்
பூவடித் தாமரைப் போது போற்றினுந்
தேவரோர் மூவர்க்குஞ் சிறப்புச் செய்துளார்.

(பொ - ரை) :—யாவராயினும் இத் திரிசுதந்தரர்களை (தாம் இருந்த இடத்தில் இருந்தே) உள்ளங் கொண்டு தியானித்தாலும், (சத்வ) குணம் கொண்டு துதித்தாலும், (வாழ்விக்கும் அவர்கள் தம்) மென்மைத் திருவடி மலர்களை வணங்கினுலும், (அவர்கள், பிரமன் திருமால் உருத்திரர் எனும்) மூத் தேவர்க்கும் வழிபாடு செய்தவர் பெறும் பயனைப் பெரிது பெறுவர், (எ - று).

(குறிப்பு) :—பாவகம் - (உருவெண்ணித்) தியானித்தல். பண்பு - வைதிக குணம். பூ - மென்மை ; அழகுமாம். போது - மலர். சிறப்பு – சிறந்த வழிபாடு. (29)

திரிசுதந்தரர் வரலாறு உரைத்த அத்தியாயம் நிறைவுபெற்றது.

---

## 11. மாதபூசை விதியுரைத்த அத்தியாயம்

511. பொறிவழியிற் புலன்செலுத்தா வியாதமுனி
சுகன்முகத்தைப் பொருந்த நோக்கிக்
குறியமுனிக் கறமுரைத்த செங்கனிவாய்க்
குருபரன்றுள் குறித்து மாதந்
தொறுமுறையிற் பூசனையாற் றிடுமாறு
மவனருளிற் றொடர்ந்த ஞானத்
துறுசுருதி யுணர்ந்ததிரி சுதந்திரர்செய்
கையும்விதியி னுரைப்பான் மாதோ.

(பொ - ரை):—(மெய் வாய் கண் மூக்கு செவி எனும்) பொறிகளின் வழியே புலன்களைப் போக விடாத வியாச முனிவர், சுகமுனிவர் திருமுகத்தை (அன்பு) அமையப் பார்த்து, அகத்திய முனிவர்க்கு (ப் புனிதசிவ) தரு மத்தைப் போதித்த கொவ்வைக் கனிபோலும் வாயு டைய குமரகுருபரன் திருவடிகளைத் தியானித்து, திங்கள் தோறும் (ஆகம) விதிப்பதி வழிபடும் நெறியையும், அப்பெருமானது அருளொடு பொருந்திய (அபர) ஞான வைதிக நூல்களை (ஓதி) உணர்ந்த திரி சுதந்தரர்தம் செயல்களையும், முறைப்படி உரைப்பாராயினர், (எ-று).

512. கூறுமிரண் டாயிரரு மிருக்காகு
முதல்வேதக் குழுவோ ருள்ள
மாறுபட வருங்காம முதலாகும்
பகையனைத்து மரபின் வென்றோர்
தேறுபெறு ஞானமெலாந் தாமுணர்ந்து
பிறர்க்குறைக்குஞ் செயலோர் செவ்வே
ளாறெழுத்து மைம்புலத்து ளடக்கியொரு
நால்வேத மங்க மாறும்.

513. முற்றுணரும் பெரியோர்க ளருமகத்தின்
கருமமுற்று முரவோர் வேதத்
துற்றசுபா சுபகரும மனைத்தினையுந்
தவறுதுள் ளோது மேலோர்
பற்றிகலி லாதுறைவோர் முத்தேவர்
தம்பதமும் பழித்து வாய்ந்த
பெற்றமுகைத் தவன்சரண பங்கயமே
பொருளாகப் பேணு நீரார்.

(பொ - ரை) :—(மேல்) சொன்ன (செந்திலில் உள்ள) இரண்டாயிரம் திரிசுதந்தரர்களும், முதன்மை பொருந்திய இருக்கு வேத பாராயணம் செய்பவர்கள்; மனம் மாறுபடச் செய்யும் காமம் முதலான பகைகள் அனைத்தையும் (வீறு கொண்ட) ஒழுக்கத்தில் வென்றவர்கள்; தெளிவை விளைவிக்கும் ஞானம் முழுதையும் (திறம் பெற) உணர்ந்து, பிறர்க்கு ஓதும் செயல்களை யுடையவர்கள்; செவ்வேள் பெருமானது ஆறெழுத்துகளையும் ஐந்தறிவுள் அடக்கி, ஒப்பற்ற நான்கு மறைகளையும் (அதன்) ஆறு அங்கங்களையும், (2)

(பொ - ரை) :—முழுதும் உணர்ந்த பெருமையுடைய முதல்வர்கள்; அரிய வேள்விச் செயல் அனைத்தும் செய்து நிறைவேற்றும் அறிஞர்கள்; வேதத்தில் உரைக்கப் பெற்றுள மங்கள அமங்கள காரியங்கள் அனைத்தையும், தவறுபடாமல் உள்ளங்கொண்டு ஓதுகின்றஉத்தமர்கள்; விருப்பு வெறுப்பு இன்றி விளங்குபவர்கள்; (பிரம விண்டு உருத்திரரெனும்)மூன்று தேவர்களின்(நீடித்த)பதவிகளையும் (நிலையிலாதன என)அருவறுத்து, வாய்ப்பான விடையூரும் வரத சிவத்தின் திருவடி மலர்களையே பொருளாக மதித்து வழிபடும் புனிதர்கள், (எ - று). (3)

514. ஐப்பசிசுக் கிலநவமி கார்த்திகையிற்
சுக்கிலத்தட் டமிவை காசிச்
சுப்பிரபக் கத்தொருமூன் றும்பக்க
மாசியினிற் சுவேத பக்கஞ்
செப்பருஞ்சத் தமியான யுகாதிநால்
மூன்றுகுந் திங்கள் தோறு
மெய்ப்படுபூர் ணிமை மகர
சுக்கிலத்தேழ் பதினொன்று மேயபக்கம்.

515. சொல்லுமனுப் புரட்டாதிப் பிற்பக்கப்
பிரதமையைத் தொட்டு முன்னை
மல்லலஞ்சீர்ச் சுவேதபக்க முன்னுகு
மாளயமா மாதந் தோறும்
புல்லியபிற் பக்கவுவாப் பன்னிரண்டுஞ்
சங்கிரமப் பொழுதீ ராறும்
வெல்லரிய வைதிருதி விதிபாத
நாலாறு மேலு மூன்றும்.

(பொ - ரை) :—ஐப்பசியில் வளர்பிறை நவமி; கார்த்திகையில் வளர்பிறை அட்டமி; வைகாசியில் வளர்பிறைத் திருதியை; மாசியில் வளர்பிறை சப்தமி எனும் (மேல் உரைத்த) நான்கு திதிகளும்; பன்னிரண்டாகும் மாதந் தோறும் வரும் நிறைமதி நாள்; தைத்திங்கள் வளர் பிறை சப்தமி ஏகாதசி என வரும் காலங்கள், (எ - று).

(பொ - ரை) :—புரட்டாசித் தேய்பிறை பிரதமை தொடங்கி, மேல்வரும் வளமாம் அழகிய சிறப்பு அமைந்த வளர்பிறையின் முன்னுகும் மாளய பட்சம்; சிறந்த திங்கள் தோறும் தழுவி வரும் தேய்பிறை அமாவாசை பன்னிரண்டும், சங்கராந்தி நாள் பன்னி

ரண்டும், மேம்பட்ட அருமையான (பதின்மூன்று) வைதிருதிகளுடன், (பதினான்கு) வியதி பாதங்கள் ஆன இருபத்தேழும், (எ - று).

516. தனுமகரங் குடமீனத் தமரபக்கச்
சத்தமிசார் நவமி மேய
வனுவெனுமட் டகையிவையி னூடுவரு
மட்டமிநான் கான பக்க
மினியமகா வட்டகையா மித்தொகைதொண்
ணூற்றாறு மிடுஞ்சி ராத்த
மனுவினெறி வழிமரபிற் றென்புலத்தோர்
தங்களுக்கு வழங்குந் தூயோர்.

(பொ - ரை):—மார்கழி, தை, மாசி, பங்குனி மாத தேய்பிறை சப்தமிகளும், அடுத்துவரும் நவமிகளும் ஆகிய அரு வட்டகைகள் எட்டும், (குறித்த நான்கு மாதங்களிலும் சப்தமி நவமிகளாகிய) இவைகளின் இடையில் வரும் அட்டமி திதிகள் நான்காகிய இனிய மகா வட்டகைகள் நான்கும் ஆகிய இத்தொண்ணூற்றாறு காலங்களிலும் செய்யப்பெறும் சிராத்தங்களை, மனுவிதி வழிமுறையாகப் பிதிரர்கட்குச் செய்யும் தூய மேலோர், (எ - று).

517. மேயசுவா காகாரஞ் சுதாகாரம்
வஷட்கார மிக்க மூன்றி
லாயவிதி மந்திரத்தின் மிக்குயர்ந்தோர்
பகலிரவு மனுட்டா னத்திற்
றூயர்கொடிக் கினிதூட்டி யதிதியரோ
டிருந்துணவு துய்ப்போர் பூதி
காயமணிந் தரன்மணியு மணியாக
வாகமெலாங் கவினப் பூண்போர்.

(பொ - ரை):—பொருந்திய சுவாஹா, சுதா, வௌஷட் (எனும்) சிறந்த மூன்றுடன் விதிமுறையான மந்திரம் (ஓதலில்) மிக உயர்ந்த மேலோர்கள்; பகலிலும் இரவிலும் (நித்திய கர்மங்களைச்) செய்தலால் தூய்மை எய்தினவர்கள்; காகங்கட்கு உணவளித்து, விருந்தினருடன் இருந்து உணவுண்பவர்கள்; (புனித) திருநீற்றை உடல் முழுதும் பூசி, உருத்திராக்கங்களையும் அழகிய மணியாக அணிபவர்கள், (எ - று).

(குறிப்பு):—மனு - பக்கங்கள். புரட்டாதி - புரட்டாசி. பிற்பக்கம் - தேய்பிறை. மல்லல் - வளம். சங்க்ரமம் - சங்கராந்தி. விதிபாதம் - வியதி பாதம் என்பதன் திரிபு. வைதிருதி - நித்திய யோகத்துள் ஒன்று. (5)

(குறிப்பு):—தனு – மார்கழி மாதம். மகரம் – மாசி மாதம். குடம் – மாசித்திங்கள். அமர பக்கம் – தேய் பிறை. ஊடு - நடுவில்.

யுகாதி 4. மனுவாதி 14. மாளைய பட்சம் 15. அமாவாசை 12. சங்கராந்தி 12. வைதிருதி, விதிபாதம் 27. அனு வட்டகை 8; மகாவட்டகை 4; ஆக 96 ஆவதறிக. (6)

(குறிப்பு):—(இறுதியில்) ஸ்வாஹா, ஸ்வதா, வௌஷட் என முடியும் எழுவகை மந்திரங்களில் மூன்றைக் குறிப்பிட்ட இடம் இது. சுவாஹாகாரம் முதலியவைகளில் உள்ள ஆகாரம்-வடிவு என்னும் பொருட்டு. கொடி - காகம். (7)

518. இருக்காலு முக்காலுந் தூயகந்த
புட்கரிணி யினிதின் மூழ்கி
மருக்காலு மலரெடுத்துக் குகனையருச்
சனைபுரிந்து வணங்கி ஞானச்
செருக்காலுங் களிசிறப்போ ரவர்முகச்செந்
தாமரையைத் தியான மாக
வொருக்காலு ணினைப்பவரை யிருக்காலு
மெடுத்துரைப்ப வுலப்பின் றுமால்.

(பொ - ரை):—புனித கந்த புட்கரிணியில் இருக்கு வேத மந்திர ஒலியுடன் முப்பொழுதும் இனிது நீராடி, நறுமணம் கமழும் மலர்களை எடுத்து, குகப்பரனை அர்ச்சித்துக் கும்பிட்டு, சிவஞானச் செம்மாப்பாலும் சிறக்க மகிழ்பவர்கள் திரிசுதந்தரர்கள்; அவர்களுடைய முக கமலங்களைத் தியான நிலையில் மன ஒருமையுடன் நினைப்பவர்தம் பெருமையை, (அந்த) இருக்கு வேதத்தாலும் எடுத்துரைக்கல் ஆவதில்லை, (எ - று). (8)

519. நவையறுகாட் சியராகிக் காலமொரு
மூன்றுமுள நாடித் தூய
தவவடிவா குந்திரிசு தந்திரத்தர்
தங்களிடஞ் சார்ந்து சார்ந்தூண்
கவளமெடுத் தருந்திடினு நீர்சிறங்கை
யருந்திடினுங் கவற்சி பூண்ட
பவமகன்று மேலாய பரபோக
மடைந்தூழின் பகைவெல் வாரால்.

(பொ - ரை):—களங்கம் அற்ற ஞானத்தராய், ஒப்பற்ற முக்கால நிகழ்ச்சிகளை உள்ளம் கொண்டு உணர்ந்து, புனித தவ சொரூபரான திரிசுதந்திரர்களிடம் அடைக்கலம் ஆகி, (அவர்கள் உண்ட மிச்சிலான) ஒரு கவள உணவை எடுத்து உண்டாலும், (ஒரு) சிறங்கை நீரை உட்கொண்டாலும், (பெரும்) கவலைதரும் பிறவிநோய் பெயர்ந்து ஒழிந்து, எண்ணத் தக்க சிவபோகம் எய்தி, விதியாகிய பகையை வெல்வர், (எ - று).

(குறிப்பு) :—கவளம் - ஒருவாய் உணவு. சிறங்கை நீர் - ஒரு உள்ளங்கை அளவு நீர். பரலோகம் - பேரின்பம். (9)

## வேறு

520. இத்திரி சுதந்திர ரென்னும் பூசுரர்
வத்திர சததளம் பார்க்கு மாண்பினோர்
குத்திரப் பாவவேர் குறைத்து மேலதா
முத்திபெற் றரனடி முளரி சார்வரால்.

(பொ - ரை) :—இந்தத் திரிசுதந்தரர் என்னும் அந்தணர்களுடைய திருமுக கமலங்களைத் தரிசிக்கும் உயர்ந்த மேம்பாடு உடையவர்கள், வஞ்சகமாம் பாவத்தின் வேரை யறுத்து, சால்புடைய பேறான சாரூபகதி சார்ந்து, அமலர் திருவடி மலர்களை யடைவர், (எ - று).

(குறிப்பு) :—வத்திரம் – முகம். சததளம் - (நூறிதழ்த்) தெய்வத் தாமரை. குத்திரம் - கபடம். மேலதாம் முத்தி - மேன் மேலும் வளரும் சாலோக சாமீப சாரூபகதிகள். முளரி சேர்தல்—சாயுச்சியப் பேறு. (10)

521. திரிசுதந் திரத்தராம் செல்வ மிக்குள
விருபிறப் பாளருக் கிடுக்கண் செய்துளோர்
வெருவருஞ் சேதக வெவ்வ ழற்பெரு
நரகிடை யளப்பில்பல் கால நண்ணுவார்.

(பொ - ரை) :—(அருட்) செல்வம் அதிகரித்துள இருபிறப்பாளராம் திரிசுதந்தரர்கட்கு (வீணை) துன்பம் விளைவித்தவர்கள், அஞ்சுவிக்கும் சேறும் நெருப்புமான பெரு நரகில், அளவற்ற நெடுங்காலம் ஆழ்வர், (எ - று).

(குறிப்பு) :—இரு பிறப்பு - கருவிலிருந்து பிறந்த பிறப்பும், உபநயனத்தின் பின் வேறுபிறப்பென்னும் அனுபவமும் கொண்டு இரு பிறப்பென்றூர். இடுக்கண் – இடுங்கிய கண்ணும்படியான துன்பம். வெருவரல் – மிக அஞ்சுதல். சேதகம் - சேறு. (11)

522\. கந்தனை வந்தனைக் கடவுள் வேதியர்
சிந்தனை நோவுறச் செப்பு வாரவர்
முந்துறச் சீறுவோர் முகங்கண் டுள்ளக
நிந்தையே புரிதர நினைக்கு நெஞ்சினர்.

523\. அளப்பருங் கொடுநர கழுந்து வார்மதித்
துளத்திடை வணங்குவா ரொளிரும் 'பூஞ்சத
தளக்கம லாசனஞ் சார்ந்த செஞ்சுடர்
விளக்கருள் பெற்றுவே ளருளு மேவுவார்.

(பொ - ரை) :—கந்தப் பரமனை வழிபடும் தெய்விக அந்தணர் உள்ளம் நோக உரையாடுபவரும், அவர்கள் திருமுன் சீறுபவர்களும், திருமுகம் நோக்கி நிந்திக்க எண்ணும் நெஞ்சினரும், (12)

(பொ - ரை) :—அளவிடல் ஆகாத கொடுமைகளை யுடைய நரகில் அழுந்துவார்கள்; உளத்தில் சிந்தித்து (அவர்களை) வணங்குபவர்கள், ஒளிமயமாக விளங்கும் நூறிதழ்க் கமல அணைமேல் இருக்கும் செவ்வொளி விளக்குப் போன்ற பிரமன் அருள் எய்தி, செவ்வேள் பரமன் திருவருளும் சேரப் பெறுவர், (எ - று).

(குறிப்பு) :—பிரமன் அருளால் நற்பிறப்பெய்தி, வேள் அருளால் வீடு பெறுவர் என்பது குறிப்பு. (13)

524\. திரிசுதந் தரருளத் தெய்வத் தாமரை
யரதனச் சிங்கவேற் றணையின் வள்ளியும்
சரவணோற் பவனுமா தவத்துச் செந்தியம்
புரநிறைந் திருத்தல்போல் புகுந்து வாழ்வரால்.

(பொ - ரை) :—வள்ளியம்மையும் சரவணபவரும் பெருந்தவ உருவச் செந்திலம் பதியில் நிறைவுபெற்று இருப்பதுபோல், திரிசுதந்தரர்களுடைய உள்ளங்கள்

எனும் திவ்ய கமலமாகிய மணிமய அரியணையில் புகுந்து வாழ்வு மயமாக வைகுவர், (எ - று). (14)

525. ஆதலாற் பரகதி யடைய வேண்டினோர்
தீதிலாத் திரிசுதந் திரரைச் சேவிப்பா
ரேதுதா னஞ்செய வெண்ணி னுலுமவ்
வேதியர் தங்கள்பாற் செய்ய வேண்டுமால்.

(பொ - ரை) :—ஆகையினால், (வித்தக) முத்தியை விரும்பினோர், தீமை (அணுவளவும்) இல்லாத திரிசுதந் தரர்களை வழிபடுவர்; எந்தத் தானத்தைச் செய்ய எண்ணினாலும், (சிறந்த) அந்த அந்தணர்களிடத் திலேயே செய்ய வேண்டும், (எ - று). (15)

526. உத்தம தானமே முதல வொண்பொரு
ளெத்தனை தானமென் றுலும் வேற்கரத்
தத்தனுக் குரியவந் தணர்க்குச் செய்குநர்
முத்திபெற் றிருப்பர்நான் மொழிவன் கேட்டியால்.

(பொ - ரை) :—வேற்படைத் திருக்கர விமலனுக்கு உரிய (அந்த) வேதியர்கட்கு, ஒண்மைப் பொருள்களில் எத்துணைச் சிறுதொகைத் தானம் எனினும், (அது) முதன்மையாகிய உத்தம தானமே ஆகும்; (அதனைச்) செய்பவர் வீடு பேற்றை (இம்மையிலேயே) பெற்று இருப்பர்; நான் (இன்னும்) கூறுகின்றேன் கேள்,(எ-று).

527. தெளிந்திவர் பெருமையைச் செப்ப வேண்டியே
யுளங்கொடு நினைப்பினு முலப்பின் றுகுமா
லிளங்கும ரேசன்சீ ரிசைத்த பான்மையா
லளந்தனன் புதல்வநீ யறியும் வண்ணமே.

(பொ - ரை):—(பெரும்மக்களால்) தெளிந்து கொளப் பெற்ற இவர்கள் பெருமையை விளம்ப விரும்பி உள்ளம் கொண்டு உணர்ந்தாலும், (அவைகள்) அளவு கடந்து பெருகும்; இளங்கோலக் குமரப் பெருமான் திருவருள் (என்னுள் இருந்து) ஓத உதவிய இயல்பால், மைந்தா! நீ அறியும்படி (ஓரளவு உனக்கு) அளவு படுத்தி உரைத்தேன், (எ - று). (17)

528. ஆயுமீ ராயிர மந்த ணாளரோ
டேயவேற் குமரனுக் கினிய கார்த்திகைத்
தூயகார்த் திகைதனிற் சொன்மு காரம்பப்
பாயுமென் புணரியிற் படிந்துள் ளன்பினால்.

(பொ - ரை):—(அருள் நூற்களின்) ஆய்வுடைய இரண்டாயிரம் திரிசுதந்தர அந்தணர்களுடன் சேர்ந்த வேல்குமரனுக்கு, இன்பமான கார்த்திகைத் திங்களில் (வரும்) தூய கிருத்திகை யன்று, வதனாரம்பம் என்று சொல்லப்பெறும் பரவிய மென்மை அலைகளை யுடைய கடலில் உள்ளத்து (முதன்மை) அன்புடன் மூழ்கி, (எ-று).

529. பரவுவா ரிம்மையிற் பாரின் வேந்தரா
யிருமைபெற் றம்மையி னெய்து பேரின்பத்
திருவொடு புணர்ந்துசெவ் வேள்செந் தாமரை
புரையடி நிழலினிற் புகுந்து வைகுவார்.

(பொ - ரை):—(திரிசுதந்தரர்களையும் திருச்செந்தில் இறைவனையும்) துதிப்பவர்கள், (மாபெரும்) நிலவுலகில் மன்னர்களாகி, (அறமும் இன்பமுமான) இருபயனையும் எய்தி, மறுமையில் செவ்வேள் பெருமானின் சிவந்த தாமரை ஒத்த திருவடிகளின் (புனித) நிழலிற் புகுந்து, பேரின்பத் திருவொடு பிணைந்து இருப்பர், (எ-று). (19)

530. பன்னிரு திங்களும் பரவு கார்த்திகை
யன்ன நாட்சந்நிதி யாழி மூழ்கிவெம்
பன்னகப் பகைமயிற் பகவன் றாளிணை
சென்னிசேர்த் தினர்கதி செப்பற் பாலதோ.

(பொ - ரை) :—பன்னிரண்டு மாதங்களிலும் வழிபடப் பெறும் கிருத்திகைகளாகிய அந்நாட்களில், (நிமலன்) திருமுன் உள்ள கடலில் நீராடி, உக்கிர பாம்பின் பகையாகிய மயிலூர் பரமன் திருவடிகள் இரண்டையும் சிரமேற் கொண்டவரது பெருவாழ்வு, (ஒரு வாயால்) உரைக்க இயல்வதோ, (எ - று). (20)

531. மாகவான் றிங்களின் வருமு காரம்ப
மேகநா ளிரண்டுநா ளினிய மூன்றுநா
ளோகையோ டாடிவே ளுபய தாண்மலர்ப்
போகமுண் டார்சன னத்தைப் போக்குவார்.

(பொ - ரை) :—மாசியாகிய சிறந்த மாதத்தில், வதனாரம்ப தீர்த்தத்தில் ஒரு நாளாயினும், இருநாள்கள் ஆயினும், மூன்று நாள்கள் ஆயினும் மகிழ்வொடு நீராடி, செவ்வேளின் இருதிருவடி மலர்களைச் (சேவிக்கும்) இன்பம் சேர்ந்தவர்கள், (நீங்காப்) பிறவி நீங்கப் பெறுவர், (எ - று).

(குறிப்பு) :—மாக திங்கள் – மாசி மாதம். இனிய எனும் அடை, உத்தமம் மூன்று நாள் என்பதை உணர்த்திற்று. (21)

532. சித்திரை முப்பதுந் திரைமு காரம்பத்
தத்துநீர் படிந்துவேள் சரணஞ் சேவிக்கு
முத்தரே கந்தவேண் முருகன் முத்திசேர்
பத்தரே யன்றிவே றுரைக்கற் பாலரோ.

(பொ - ரை):—சித்திரைத் திங்கள் முப்பது நாட்களிலும், அலைகள் தாவும் வதஞரம்ப தீர்த்தத்தில் மூழ்கி, செவ்வேள் திருவடிகளைச் சேவிக்கும் கட்டற்ற பெருமக்களே, கந்தவேள் ஆகிய முருக வேளின் முத்தியை அடையும் அன்பர்கள் ஆவர்; அல்லாமல் வேறு யாது கூற முடியும்? (எ - று). (22)

533. கந்தபுட் கரிணிநீர் களித்து மாகநாண்
முந்துறப் படிந்துவேன் முருகற் போற்றுவா
ரிந்தமா நிலத்துளா ரெவர்க்கு முன்னரே
வந்துமா முகத்திஞன் மலினந் தீர்ப்பரே.

(பொ - ரை):—மாசித் திங்கள் (முப்பது) நாள்களிலும் முந்திக் கந்த புட்கரிணியில் முழுகி வேல் இறைவனை வழிபடுகின்றவர்கள், இவ்வுலகில் இருப்பவர் எவர்க்கும் முன்னேறிஞேர் ஆவர்; (அவர்கள்,) தம் திருமுக தரிசனத்தால், (பிறரது தீராக்) குறைபாடுகளைத் தீர்ப்பவரும் ஆவர், (எ - று).

(குறிப்பு):—"தன்னை உணர்ந்த தத்துவ ஞானிகள், முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்கள், பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள், சென்னியில் வைத்த சிவன் அருளாலே' என்பது திருமந்திரம். (23)

534. சித்திரை யைப்பசித் திங்கட் காலமு
முத்தர தெக்கிஞ யனமு மோர்வில்வேண்
மைத்துனர்ப் பரவுவார் வாச பேயத்தை
நித்தமுஞ் செய்குநர் நிலைமை யெய்துவார்.

(பொ - ரை):—சித்திரை ஐப்பசி மாத காலங்களிலும், உத்தராயண தட்சிஞயன காலங்களிலும், ஒப்பற்ற (கரும்பு) வில் காமனின் மைத்துனரான முருகனை

வழிபடுபவர்கள், வாஜபேய வேள்வி நாள்தோறும் இயற்றுபவர் அடையும் (புண்ணிய) நிலைமையைப் பொருந்துவர், (எ - று).

(குறிப்பு):—வாஜபேயம் என்பது, உத்தமமான ஒருவகை வேள்வி. உத்தராயணம்-சூரியன் வடக்கிற் சஞ்சரிக்கும் தை, மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி, ஆனி எனும் ஆறு மாத காலம். தட்சிணாயனம் - அச்சூரியன் ஆடி முதல் ஆறு மாதம் வரை தெற்கில் சஞ்சரிக்கும் காலம். மேஷ வீதி உத்தராயணம்; ருஷப வீதி பூரணாயனம்; மிதுன வீதி தட்சிணாயனம். சூரியன் தென் கிழக்குத் திசையிலிருந்து வட கிழக்குச் செல்லும் தேவர்கட்குரிய காலம், உத்தராயணம். சூரியன் வடகிழக்குத் திசையிலிருந்து தென் கிழக்குத் திசைக்குச் செல்லுங் காலம், அசுராதியர்கட்கு உரிய காலம்: இக் கதியால் ருதுக்கள் உண்டாகும் என்பர். (24)

535. சங்கிர மந்தொறுஞ் சமையம் பார்த்துமு
ணங்குள மாவத ஞரம் பத்துநீர்
பொங்கிய கந்தபுட் கரிணிப் பூம்புனன்
மங்கலச் சுருதிநூன் மரபின் மூழ்கியே.

536. சிறுபய றளவிய செந்நெ லோதன
மறுமுகத் தவன்றனக் கமுது செய்வித்தோ
ருறுமக நூறுசெய் துயர்ந்த வான்கதி
பெறுகுவ ரெனமறை பிரித்துப் பேசுமால்.

(பொ - ரை):—சங்கிராந்திகள்தோறும் (வரும் புண்ணிய) காலத்தை நோக்கி, அச்சந்நிதான ஆரம் பத்தில் உள்ள வதனாரம்ப தீர்த்தத்திலும், பொலிவுமிக்க கந்த புஷ்கரிணி தீர்த்தத்திலும், மங்கலமான வைதிக நூல் விதிப்படி நீராடி, (எ - று).

(பொ - ரை) :—ஆறுமுகப் பரனுக்கு சிறுபயறு கலந்த செந்நெல்லரிசி உணவை நிவேதித்தவர், நூறு வேள்விகள் செய்து அடையும் உயர்ந்த பெரும் பேற்றைப் பெறுவர் என்று, வைதிக நூற்கள் (அவர்கள் புண்ணியத்தை) வகைப்படுத்தி அறிவிக்கும். (26)

(குறிப்பு) :—சங்கிராந்திகள் - சூரியன் தனுராசியில் சஞ்சரிக்கும் காலங்கள். இது தேவர்கட்கு விடியற்காலம். மகா சங்கிராமே சக்தி, தட்சிணயன ஆறு மாதத்தில் மக்களை மூதேவி உருவாயும், பசுக்களைப் புலி யுருவாயும் துன்புறுத்த, அதைச் சிவபிரான் அகற்றினர். அது கருதிய மக்கள் தை முதல் நாளன்று, அக்காலத்து விளைந்த புதுப் பொருள்களால் சூரியனை ஆராதித்தனர். பசுக்கள் உய்தி பெற்ற நினைவிற்கு அறிகுறியாகக் கொண்டாடும் நாள், மாட்டுப் பொங்கல் எனப் பெறும். இதனுடன் இந்திர, கிருஷ்ண வழிபாடு என்றெல்லாம் எண்ணற் குரிய வரலாறுகளும் எழுந்தன. (25)

537. ஆடியோர் முப்பது மாவின் வெண்டதி
நீடிய வோதன நிவேதித் தன்பினிற்
கோடலங் கண்ணிசூழ் குமரற் போற்றுவார்
நாடரு மவன்பத நளின மெய்துவார்.

(பொ - ரை) :—ஆடித்திங்கள் முப்பது நாள்களினும், பசுவின் வெண்தயிருடன் உயர்ந்த அன்னத்தை நிவேதித்து, செங்காந்தள் மாலை சூடிய குமரனை அன்புடன் சேவிப்பவர்கள், அடைதற்கு அரிய அப் பெருமான் திருவடிக் கமலங்களை அடைவர், (எ-று).

(குறிப்பு) :—ததி - தயிர். கோடலம் – காந்தள்.

538. ஆவணித் திங்களி னரிய வேதத்தான்
மூவிரு முகத்தனை முழுதும் போற்றுவா
ரோவிலா வெச்சநூ றுஞற்று வார்பெறுந்
தாவிலாப் பரகதி சார்வர் திண்ணமே.

(பொ - ரை):—ஆவணி மாதம் முழுவதிலும் ஆறுமுகப் பரமனைத் தூய வேத மந்திரங்களால் துதிப்பவர்கள், ஓய்வு இல்லாமல் (சிறந்த) நூறு வேள்விகளைச் செய்தவர் அடையும் குற்றம் இல்லாத சிவகதி சேர்வர்; (இது) நிச்சயம், (எ - று). (28)

539. கன்னியின் மாளையச் சிராத்தங் காமுருச்
சென்னியா றுள்ளவன் செயந்தி யம்பதி
தன்னிருந் தாற்றுவார் பிதிர்க்க டங்குலம்
பொன்னலர் கமலத்தோன் புரத்து நண்ணுவார்.

(பொ - ரை):—ஆறுமுகப் பெருமானின் திருச்செந்திலில் தங்கி, புரட்டாசியின் மாளைய சிரார்த்தத்தை விரும்பிச் செய்பவர்தம் வம்சப் பிதுர்க்கள், பொன்னிற இதழ்களுடைய தாமரையோனான நான்முகன் பதத்தை நண்ணுவர், (எ - று).

(குறிப்பு):—மாளயம் - மகாலயம் என்பதின் திரிபு. கன்னி - புரட்டாசி மாதப் பெயர்களுள் ஒன்று. கன்னியா ராசியில் சூரியன் பிரவேசிக்கும் காலம், மகாலய மெனப்பெறும். அமாவாசைக்குப் பின் பதினைந்து நாள் பிதுர் சிராத்தத்திற்கு உரிய நாட்கள். பிரதமை, தன சம்பத்து; துவிதியை, பிரஜா பலன்; திரிதியை, வளர்ச்சி லாபம். சதுர்த்தி, சத்துரு நாசனம்; பஞ்சமி, சம்பத்து; சஷ்டி, புகழ்; சப்தமி, கணாதிபத்தியம்; அட்டமி, சிறந்த அறிவு; நவமி, பெண் சம்பத்து, மேதை, பசு புஷ்டி; ஏகாதசி, வேத சித்தி; துவாதசி, பிரஜா விருத்தி; திரயோதசி, சுதந்தரம்; சதுர்த்தசி, தீர்க்காயுள் என்பர்; மகாலயத்தில் தர்ப்பணம் செயின் வருட முழுதும் செய்த பலன் சித்திக்கும். மகாலய அமாவாசைக் காலத்து, யமபுரத்திருந்து பிதுர்க்கள் பூமியில் வந்து வசிப்பர். அவ்வமயம் யமபுரம் சூன்யமாய்விடும். பரணியில்,

அட்டமியில், திரயோதசியில், சிரார்த்தம் செயின், கயா சிரார்த்தப் பயனுண்டு. அமாவாசை, பரணி, துவாதசி இவைகளில், திதி நட்சத்திர வாரதோஷம் வேண்டா என்பர். (29)

540. துலைநெடுந் திங்களிற் சுரர்கள் போற்றிய
வலைபுனற் கந்தபுட் கரிணி யாடிவேல்
வலவனைப் பணிகுவார் தமக்கு வான்பிறப்
பிலையிலை யென்றுநான் மறையி சைக்குமால்.

(பொ - ரை) :—ஐப்பசி மாதத்தில் விண்ணவர்கள் விரும்புகின்ற அலை நீருடைய (முதன்மைக்) கந்தபுட் கரிணியில் மூழ்கி, வேலே விளங்கும் திருக்கர முருகனை வணங்குபவர்கட்கு, நீண்ட பிறவி (த் துயர்) என்றுமே இல்லை என்று, (முதன்மை) மறைகள் நான்கும் முழங்கும், (எ - று).

(குறிப்பு) :—துலைத்திங்கள் - ஐப்பசி; இது துலா ராசிக் குரியமதி. இல்லை என்பது ஓசை நயம் கருதி இலை என நின்றது. இலை இலை எனும் அடுக்கு, அறவே இரா எனும் பொருட்டு. (30)

541. தீதிலா மார்கழித் திங்க ளிற்றதி
யோதனங் குமரனுக் குவப்பித் தன்னவன்
பாதமெய்த் துணையெனப் பரவு வார்மது
சூதனன் பதந்துணை சூழ்ந்து வைகுவார்.

(பொ - ரை) :—தீமையே யில்லாத மார்கழித் திங்களில், தயிர்ச் சோற்றை (உமையாள்) குமரனுக்கு உகப்புண்டாக நிவேதித்து, அவன் திருவடிகளே மெய்ம்மையால் துணை என்று ஆராதிப்பவர்கள், திருமாலின் வைகுந்தத்தில் துணைவர்கள் சூழ வாழ்பவராவர், (எ - று).

(குறிப்பு) :—மது எனும் அரக்கன் உடலைக் கடைந்தவன் எனும் பொருளது, 'மது சூதனன்' எனும் பெயர். (31)

542. மகரமோர் முப்பது மணிப்பொன் ளுலய
மகருவின் றூபத்தா லமைத்துச் செய்யவேற்
குகனையே யிறைஞ்சுவார் குலங்கு ழூஉக்கொடு
தகையவாஞ் சிவன்பதஞ் சார்வர் திண்ணமே.

(பொ - ரை) :—தைத்திங்கள் முப்பது நாள்களிலும் நவமணிகளாலும், பொன்னாலும், (சந்தனக்) குழம்பாலும், (அகில்) புகையாலும் செவ்வேல் குகனை அணி செய்து ஆராதிப்பவர், தகுதியுடையதாம் சிவலோகத்தில் (தம்) உறவினர் கூட்டத்துடன் (சென்று) தங்குவர்; (இது) நிச்சயம், (எ - று).

(குறிப்பு) :—மகர ராசிக்குரிய மாதம் தை மாதம்; அயம் - சந்தனக் குழம்பு. அகரு - அகில். (32)

543. சேயிருந் திருவிழா நடத்துஞ் செவ்வியோ
ராயிரஞ் சனனம்பே ரரசின் வைகியே
காயம்விட் டாவிபோங் காலை மான்மகள்
நாயகன் சரணதா மரையை நண்ணுவார்.

(பொ - ரை) :—பால முருகனின் சிறந்த திருவிழாவை நடத்துகின்ற பக்குவிகள், பல பிறவிகளில் பெரிய மன்னர்களாப் பிறந்து வாழ்ந்து, உடல்விட்டு உயிர் போம்பொழுது, வள்ளி மணாளன் திருவடிக் கமலங்களை அடைவர், (எ - று).

(குறிப்பு) —'ஒரு விளக்காயினும் பசுவின் நெய்யுடன் தாமரை நூலின் ஒளிர வைத்தால், கருவிளக்கும் பிறப்புமிலை இறப்புமிலை கயிலாசம் காணியாகும்; திருவிளக்கிட்டார் தமையே தெய்வ மறிந்திடும் வினையும் தீருந்தானே" என வரும் தண்டலை சதகம் இங்கு நினைவிற்கு வருகிறது.

544. செப்பருங் கார்த்திகைத் திங்கள் முப்பதும்
ஒப்பிலாக் குமரன்முன் னுள்ளத் தன்பிறால்
மெய்ப்படு மாவினெய் விளக்கு வைத்துளார்
சுப்பிர மணியன்றுட் டுணையிற் சேர்வரால்.

(பொ - ரை):—உரைத்தற்கு அரிய கார்த்திகை மாதம் முப்பது நாளும், ஒப்பாரும் மிக்காரும் இல்லாத குமரன் திருமுன், அகத்தில் பொங்கிய அன்பொடு, மெய்ம்மை யாகிய பசுவின் நெய்யால் விளக்கு ஏற்றிய வர்கள், சுப்ரமண்யப் பெருமான் இரு திருவடிகளை யடைவர், (எ - று).

(குறிப்பு):— 543 ல் நெய்விளக்கு விசேடம் அறிக. கார்த்திகை மகிமை, மந்திர மகிமை அத்யாய 29 ஆம் பாட்டில் உளது. மெய்ப்படும் ஆவின் நெய்-மெய்ம்மையின் சொரூப பசுவின் நெய். (34)

545. கார்த்திகை யாரலிற் கந்தன் செஞ்சுடர்
போர்த்தமு விருமுகப் புண்ட ரீகங்கள்
பார்த்திடா ரட்டையிற் படுகு ழிக்கணே
யார்த்திடு நிரயத்தூ டழுந்து வார்களே.

(பொ - ரை):—கார்த்திகைத் திங்களில் வரும் கிருத்திகையன்று, கந்தப் பரமனின் செவ்வொளி முழுமைய அறுமுக மலர்களைத் தரிசியாதவர்கள், ஆரவாரிக்கும் நரகங்களில், அட்டைகள் நிறைந்த படுகுழிகளில் அழுந்தி வருந்துவர், (எ-று).

(குறிப்பு):—ஆரல் - கிருத்திகை. அட்டை – ஒருவகை விஷ ஜந்து. (35)

546. நிலைதருங் கார்த்திகைத் தினத்து நெல்லியின்
இலைகொடு குகனடிக் கிறைத்து ளோரெலாஞ்
சொலுமிலைக் கொருமகந் தொடர்பி னூற்றிய
பலனடை வாரெனப் பகரு நான்மறை.

(பொ - ரை):—நிலைபேறு செய்யும் கிருத்திகை நாளில், நெல்லிப் பத்திரங் கொண்டு குகப்பரமன் திருவடிகளில் அர்ச்சித்தவர் அனைவரும், சொல்லப் பெறும் (ஒரு) இலைக்கு, ஒரு வேள்வியைத் தொடர்ந்து நிறைவேற்றிய பயனடைவர் என்று, நான்மறை (உணர்வுடன்) நவிலுகின்றது, (எ - று).

546. திரிசுதந் திரர்கடஞ் சிறப்புந் திங்களுக்
குரியபூ சனைவிதி யுரைத்த காதையுங்
கருதினர் கேட்பவர் கந்தன் முன்புறுந்
திரைகடல் மூழ்குநர் பலனைச் சேர்வரால்.

(பொ - ரை):—திரி சுதந்தரர்களுடைய சிறப்பையும், (ஒவ்வொரு) மாதங்கட்கும் உரிய வழிபாட்டு விதிமுறைகளைக் கூறிய வரலாற்றையும் சிந்தித்தவர்கள், கருத்தொடு சிரவணித்தவர்கள், கந்தப்பரமன் திருமுன் இருக்கும் அலைகளை யுடைய வதனாரம்ப தீர்த்தத்தில் நீராடிய வரது (பெரும்) பயனைப் பெறுவர், (எ - று). (37)

மாதபூசை விதியுரைத்த அத்தியாயம் நிறைவு பெற்றது.

# 12. விபூதி அத்தியாயம்

சுருதி யாவையு முற்றெருநுங் குணர்வுறுஞ் சுகனெனுந் தவத்தோய்சொல்
தருதி யானமா முனக்குநாஞ் சொல்வது தகையநான் மறைமுலம்
கருதி யாவர்க்கும் விளம்பவொண் ணுதது கைநெல்லிக் கனிபோலாம்
வருதி யாறுமா முகத்தவன் சரித்திரம் வழுத்துது மெனச்சொல்வான்.

(பொ - ரை) :—மறைகள் அனைத்தையும் ஒருமை மனத்துடன் ஓதி உணர்ந்துள சுகன் எனும் (பெயர் கொள்) தவத்தினனே! ஓதும் உரைகளை யுணர்ந்து தியானத்தில் அழுந்தும் உனக்கு யாம் இனி சொல்லப் புகுவது, தகுதியுடைய வேத ரகசியமாகும்; (அது,) சிந்தனை செய்து எவர்க்கும் (சொற்களால்) சொல்லிக் காட்ட இயலாதது;(எனினும்,அனுபவிகட்கு)உள்ளங்கை நெல்லிக் கனிபோல் அனுபவமாம்; (அந்த) அறுமுகப் பரமன் அருளாடலை அறிவிக்கின்றேன்; அண்மி யிருந்து கேள்! என்று அறிவிக்க லாயினர், (எ - று). (1)

549. கொடிய சூரற அறம்மறை விண்ணகங் குடிபுக இகல்காட்டும்
நெடிய வேலெடுத் தமர்த்தொழின் முடித்துமா னின்னிடை வருந்தேனைக்
கடிம ணம்புரிந் தாறுமா முகத்தவன் கடவுளர் பலர்சூழ
அடிய ராந்திரி சுதந்திரர் தம்மொடு மாலயத் தினிதுற்றுன்.

(பொ - ரை) :—அக்கிரம (சூரபன்மன் ஆட்சி) அழியவும், வேதங்களும் அறங்களும் விண்ணில் குடியேறி விளங்கவும், (புனித) ஆற்றலைப் புலனுக்கும் எடுப்பான வேல்படையை ஏந்தி, மோதிய போர்த் தொழிலை முடித்து, மான் வயிற்றில் உதித்த தேன் மொழியினரான வள்ளியம்மையைத் திருமணம் செய்து, (புனித) அமரர்கள் புடை சூழ்ந்து வர, அணுக்கத் தொண்டர் களான திரிசுதந்திரர்களுடன், ஆறுமுகப்பரன் ஆல யத்தில் இனிது எழுந்தருளி யிருந்தனன், (எ - று). (2)

**550.** பெருமி தத்துட னுள்பல பிற்படப் பேரருட் குமரேசன்
பருமி தப்பரி வாரத்தி னெடுந்திருப் பயிலுமண் டபநாப்பண்
தருமி தத்தொடு மிருந்தன னிருந்தபின் தண்ணளி யுடனேத்திப்
பொரும தத்திறல் வாகுவாங் கெய்தியம் போருக பதம்போற்றி.

(பொ - ரை) :—பெருங்கருணை யுடைய குமரப் பெருமான், செருக்கு மிகுந்த சேனைகளுடன், மங்களம் பயிலும் மண்டப நடுவில், பின்னரும் பலகாலம் பெருமையுடன், (அடியவர்க்கு) உதவும் இன்ப கோலத்தில் எழுந்தருளி யிருந்தனன்; இருந்த (பல) நாட்களுள் (ஒரு நாள், வீரம் விளங்கப்) போரிடும் வீரவாகுதேவர், அங்கு வந்து, (பரமனது) திருவடிக் கமலங்களைப் பணிந்து, (தூய) அன்புடன் துதித்து, (எ - று). (3)

**551.** ஞான வாரிதி யேகுரு வேதிரு நான்மறை யினுங்காணு
மான வேற்படை யாயொரு விண்ணப்பம் மாலயன் றொழுதேத்துங்
கூன வெண்பிறை மிலைச்சிய வேணியான் குரைகழற் றுணைவாழ்த்தி
மோன மோடிருந் தருள்புரி வடிவமா முதல்வநின் றிருக்கோலம்.

**552.** எங்கு மாகயான் கண்டுளேப் பூசனை யியற்றுதற் கென்றேவேள்
பங்க யப்பதம் பரவிய வாகுவைப் பார்த்துனக் கருட்கோலச்
சங்கை சொல்வதற் கெண்ணினை மெண்ணுமுன் சாற்றினை மகிழ்ந்தேமால்
அங்கண் மாநில முதற்பல அண்டமு மானது நாமேயாம்.

(பொ - ரை) :—ஞானக் கடலே! குருபரனே! அழகிய நான்மறைகள் இன்றுவரை கண்டறியாத சிறந்த வேலிறைவா! (கேண்மையேன்) செய் விண்ணப்பம் கேட்டருளும்; திருமாலும் பிரமனும் வணங்கித் துதிக்கும் கோணல் வெண்ணிற இளம்பிறை சூடிய சடையுடை யிறைவரின் நாதக் கழலணிந்த இரு திருவடிகளை வாழ்த்தி, மௌனத்துடன் இருந்து பரம அருளைப் பாலிக்கும் வடிவமான முதல்வா! உமது அருள் சொரூபத்தை, (4)

(பொ - ரை) :—எங்கும் ஆக அடியேன் அறிந்து, உம்மை வழிபடுதற்கு உணர்த்தி யருள்க என்று, செவ் வேளின் திருவடிக் கமலங்களைத் தொழுத வீரவாகுவைப் பார்த்து, உனக்கு (நம்) திருவருட் சொரூப அளவைக் கூற எண்ணினேம்; நினைக்கு முன் (நீயும்) கூறினை; (அதனால்) உவகை யடைந்தேம்; அழகிய இடமகன்ற பெரிய நிலவுலகம் முதல், பல அண்டங்களாக யாமே ஆயினம், (எ - று). (5)

(குறிப்பு) :—'சர்வ ஜகந்நாத பூஜாபர' எனும் முதனூலை, 5 ஆம் பாட்டின் இறுதியடி தழுவியதறிக. 4 ஆம் பாட்டி லிருந்து 29 ஆம் செய்யுள்வரை குளகம். (5)

திருத்து நான்மறைக் கொருபொரு ளாங்குகன் செய்யவா குவைநோக்கிச்
சுருக்க மாகநம் விபூதியி னளவையைச் சொல்லுது மெனவானம்
பொருந்து மண்டபத் தருநிழல் யோகத்துப் பூண்டவா சனமாகி
அருத்தி பெற்றுயர் ஞானமுத் திரையுட னுறுமா முகத்தையன்.

(பொ - ரை) :—திருந்துதலைக் கற்பிக்கும் நால் வேதங் களின் ஒரு பொருளான குகன், வீரவாகுவை (மீண்டும்) நோக்கி, (பெருக்கமான) நம் சொரூப அளவைச் சுருக்க மாகச் சொல்வம் என்று, விண்ணளாவிய (ஒரு) மண்ட பத்தில், அரிய ஒளிமய யோகாசனத்து அமர்ந்த ஆறு முகப் பரன், அன்பு கொண்டு உயர்ந்த சின்முத்திரை யுடன் இருந்து, (எ - று).

(குறிப்பு) :—வி - மேலான ; பூதி - அருள்வடிவம். (6)

554. தார மாகிய வோரிரு சத்திக டாமிரு மருங்காக
வீர வாகுவைப் பார்த்துநெட் டிலைச்சுடர் வேல்வல வயினேந்தி
நேரு மாநந்த வடிவமாய் வடிவிலா நின்மலப் பொருளாகும்
பேரருட்கொடு தாதைக்கு முன்னமே பிரணவஞ் சொலும்வாயால்.

(பொ - ரை) :—இறைவியர் ஆன ஒப்பற்ற இரு சக்தி களும் இருபுறத்து இருப்ப, நீண்ட இலை வடிவமான ஒளிமய வேற்படையை வலப்புறம் தாங்கி, வீரவாகுவை நோக்கி, நேர்ந்த இன்ப சொரூபமாய், (இயல்பில் எவ்) உருவும் இல்லாத மலரகிதப் பொருளான பேரருளுடன், தந்தைக்கு முன்னொருசமயம் ஓம் பொருள் ஓதிய திருவாக்கால், (எ - று). (7)

## வேறு

555. முத்தொழிலின் கருமமுநான் முதற்றொழிலாம் பிரமரொரு
பத்துளரி னான்முகனுன் பரவுலகிற் சுவர்க்கமுநான்
ஒத்தநவ மானகண்டத் துயர்பரத கண்டமுநான்
அத்திரியின் மேருவுநா னமரர்தமி லிந்திரனுன்.

(பொ - ரை) :—(படைப்பு காப்பு அழிப்பெனும்) மூன்று தொழில்களின் செயல்களாக இருப்பது யாம்; படைப்புச் செய்யும் பத்துப் பிரமர்களுள் நான்முகனு யிருப்பது யாம்; போற்றப் பெறும் உலகங்களுள் பொன் னுலகம் யாம்; பொருந்திய ஒன்பது கண்டங்களுள் நலம் சிறந்த பரத கண்டமும் யாம்; மலைகளுள் மேருவும் யாம்; அமரர்களில் இந்திரன் ஆவேம் யாம், (எ - று).

(குறிப்பு) :—பத்துப் பிரமர்கள் - பிரமன், பிருகு, தட்சர், காசிபர், மரீசி, அத்திரி, ஆங்கிரஸர், புலகர், புலஸ்தியர், வசிட்டர் எனப்பெறுவர். வேறு வகையாகவும் கூறுவது உண்டு.

ஒன்பது கண்டங்கள் - பரத, குரு, கிம்புருஷ, இரைவத, ஹரிவருஷ, கேதுமால, யாம்மிய, பத்திராஸ்வ, இரண்யம் எனப் பெறும். (8)

556. மதியுளரிற் பொன்னவனுன் தேர்த்தொழிலின் மாதலிநான்
புதியமணித் தடந்தேரிற் புட்பகச்செம் பொற்றேர்நான்
துதிதருதே வர்க்கினிய தோகையரி லுருப்பசிநான்
விதமுறுகா னத்தொழிலின் மேம்படுகந் தருவருநான்.

(பொ - ரை) :—அறிவுடையோருள் யாம் தேவகுரு; தேர்த்தொழிலில் தேர்ந்தவருள், யாம் (இந்திரனுடைய) மாதலி; பெரிய விமானங்களுள், புதிய அழகிய புட்பகம் எனும் சிறந்த விமானம் யாம்; மதிக்கப்பெறும் வானவர்கட்கு இன்பம் வழங்கும் மாதருள், யாம் ஊர்வசி; பல விதமான இசைத் தொழிலுள் மேம்பட்ட கந்தருவரும் யாம், (எ - று). (9)

557. விளக்கரிய வுலகுகளின் மேயசிவ லோகமுநான்
களக்கறுக்குங் கலையவையிற் கருதரிய வேதமுநான்
வளக்கெழுவே தச்சுரமோர் நான்கவையின் வாழியசீர்
அளக்கறிதற் கொண்ணாத வரும்பிரச வோசையுநான்.

(பொ - ரை) :—(உணர்தற்கு) அரிய உலகங்களுள், (சிறந்த) விளக்குப் போன்ற சிவலோகமும் யாம்; களங்கம் அகற்றும் கலைகளுள், சிந்தனைக்கு எட்டாத வேதமும் யாம்; வளம் பொருந்திய வேத ஓசைகள் நான்குள், அளந்து காண முடியாத அரிய பிரசயம் எனும் ஓசையும் யாம், (எ - று).

(குறிப்பு) :—வேத ஓசைகள் - உதாத்தம், அனுதாத்தம், ஸ்வரிதம், பிரசயம் எனப் பெறும். (10)

558. எழுத்தவையிற் பிரணவநா னிருடிகளி லகத்தியனுன்
அழுத்தமுறு யோகிகளி லரியதெத்தாத் திரயனுநான்
விழுத்தகைய சிவன்பாதம் விருப்புடைய பத்தர்தமின்
முழுத்ததிருப் பாற்கடலின் விழிதுயிலு முகுந்தனுநான்.

(பொ - ரை) :—எழுத்துக் கூட்டங்களுள், ஓம் யாம்; முனிவர்களுள் அகத்தியன் யாம்; அழுத்தமுற்ற யோகிகளுள், அருமைத் தத்தாத்திரேயனும் யாம்; சிறந்த தகுதி யுடைய சிவனார் திருவடிகளில் அன்பு மிக்க அடியவர்களுள், தெய்வப் பாற்கடலில் கண்வளரும் திருமாலும் யாம்; (எ - று). (11)

559. புண்ணியத்தின் வடிவாய புரியவையிற் காசியுநான்
வண்ணமலை யோரேழில் வானளவு பனிவரைநான்
எண்ணரிய சிருட்டிதனி லிரணியகற் பத்தனுநான்
தண்ணளியிற் காப்பதனிற் றக்கமகா விட்டுணுநான்.

(பொ - ரை) :—புண்ணிய உருவமான தலங்களுள், காசிப் பதியும் யாம்; ஏழுகுல மலைகளுள், வானளாவிய இமயம் யாம்; எண்ணிப் பார்க்க முடியாத படைப்புகளில், பிரமனும் யாம்; அருளொடு காப்பவருள், தகுதியுடைய சிறந்த திருமால் யாம், (எ - று).

(குறிப்பு) :—இரணிய கற்பன் - பிரமன். (12)

560. கடியசங்கா ரத்தொழிலிற் காலத்தீக் கடவுளுநான்
மிடலுடைய செய்கையரின் வெலற்கரிய காலனுநான்
வடிவுடைய குருவடிவின் வாய்ந்த தெக்கி ணமூர்த்தத்
துடனிருக்குந் திருக்கோலத் துவமையிலா வடிவமுநான்.

(பொ - ரை) :—கடுமையான சங்காரத் தொழில் செய்பவருள், காலாக்கினி புவன ருத்திரனும் யாம்; மிடுக்குடைய செயலருள், வெல்லற் கரிய காலனும் யாம்; அழகுடைய குருமூர்த்திகளுள், வாய்ப்பான தென்திசை நோக்கிய திருவுருவமுள ஒப்பில்லாத குருவுருவம் யாம்;

561. சொலவரிய தெய்வமடத் தோகையர்க டம்மிலுயர்
மலைமகளு மலர்மகளும் வாணிதிரு வடிவமுநான்
நிலவியமா தங்கடமி னிறைதருசீ ராவணிநான்
அலகிலா துயர்வேத ஆரிடரில் வசிட்டனுநான்.

(பொ - ரை) :—சொல்லற்கு அரிய இளம் மயில் போலும் சாயலையுடைய தேவியர்களுள், உயர்ந்த பார்வதியும், திருமகளும், கலைமகளுமான தேவியரும் யாம்; விளங்குகின்ற மாதங்களுள், நிறைந்த சிறப்புடைய

ஆவணி மாதம் ஆவம் யாம்; உயர்த்த வைதிக் மேலோ ருள்,அளவிலாது (தவத்தால்)உயர்ந்த வசிட்டனும் யாம்,

**562.** கடவுளரா மிருடிகளிற் களிக்குமிசை நாரதனுன்
படவரவத் துடன்புடவி பரிக்குமத மாக்கடமின்
மிடலுறுஞ்சா ருவபௌம வெண்மருப்பு வேழமுநான்
குடநிகர்த்த செருத்தலுடைக் கோவினத்திற் சுரபியுநான்.

(பொ - ரை) :—வானவர் உலக முனிவர்களுள், மகிழ் விக்கும் இசையுடைய நாரதன் யாம்; ஆயிரம் தலைகளை யுடைய ஆதிசேடனுடன், நிலம் தாங்கும் (எண்திசை) மதயானைகளுள், மிடுக்குடைய சாருவ பௌமம் எனும் வெண்ணிறத் தந்த யானையும் யாம்; குடம் போன்ற மடியுடைய பசுக்களுள், காமதேனுவும் யாம்; (எ - று).

**563.** நாடரிய பரியினெழு நாமவாம் புரவியுநான்
கேடில்பல விலங்கவையிற் கெழுதகைய கேசரிநான்
பீடுபெறு பறவைகளிற் பெருந்திறல்சேர் சரபமுநான்
நேடுபன்னொ ருருத்திரரிற் சிறப்புடைய சங்கரனுன்.

(பொ - ரை) :—(சூரியன் தேரின்) விரும்பப் பெறும் அரிய குதிரைகளுள், ஏழ் எனும் பெயருடைய தாவும் குதிரையும் யாம்; வீழ்ச்சி யில்லாத பல விலங்குகளுள், சிறந்த தகுதி யுடைய சிங்கம் யாம்; பெருமை பெற்ற பறவைகளுள், பேராற்றல் கொண்ட சரபமும் யாம்; ஆயப்பெறும் பதினொரு உத்திரர்களுள், சால்புடைய சங்கரன் யாம், (எ - று).

(குறிப்பு) :—அஜன், ஏம பாதன், அகிர்ப்புத்னன், துவஷ்டா, ருத்திரன், ஹரன், திரியம்பகன், அபராஜிதன், ஈசானன், திரிபுவனன், சங்கரன் என்பவர் ஏகாதச ருத்திரர் எனப் பெறுவர். (16)

564. பாதலத்திற் பணிவேந்திற் பஃறலைய சேடனுநான்
மாதர்தரு மோடைகளின் மானதப்பூம் பொய்கையுநான்
போதநிறை மந்திரத்திற் பொலிவுறுகா யத்திரிநான்
பேதநெடுந் தாருவினிற் பிப்பலப்பூந் தாருவுநான்.

(பொ - ரை) :—பாதலத்தில் உள்ள பாம்பரசர் பலருள், பல தலைகளை யுடைய ஆதிசேடன் ஆவேம் யாம்; விருப்பத்தை விளைவிக்கும் வாவிகளுள், மானசப் பொய்கையும் யாம்;மதியில்நிறைவு விளைவிக்கும் மந்திரங்களுள், கவின் மிகுந்த காயத்திரி யாயினேம்; பலவகை மரங்களுள், யாம் அரச மரம் ஆகின்றேம், (எ - று).

(குறிப்பு) :—மாதர் - காதல்; தொல்காப்பியம். மானதம் - இமயச்சாரலில் இருக்குமொரு பொய்கை. பிப்பலம் - அரசமரம். (17)

565. வருமுயிரைக் கொடுபோகும் வலியோரி லியமனுநான்
அரிதுகசி செயுமவரி லாண்டகைய வாயுவுநான்
உரனுடைய வானரத்தி லுணர்வுடைய மாருதிநான்
பொருவரிய சிலைவலியிற் போர்காட்டு மிராமனுநான்.

(பொ - ரை) :—(பிறவியில்) வந்த உயிர்களை, (இறுதியில்) கொண்டு போகும் வன்மை யுடைய கிங்கரருள், இயமனும் யாம்; வித்தகத் தூய்மை விளைவிப்பவருள், ஆண்மையும் தகுதியுமுள காற்றுக் கடவுளாவேம் யாம்; வலிமை யுடைய வானரங்களுள், (ஒளிமய) உணர்வுள அனுமன் யாம்; ஒப்பிலாத வில்லாண்மையருள், யாம் போர்ப் புகழை யுடைய இராமனும் ஆவேம், (எ - று).

566. உற்றமனத் தூரர்களி லுயர்கார்த்த வீரியனுன்
அற்றமிலா அறநெறியி லளப்பரிய சத்தியநான்
பற்றுமக நூற்றின் மிக்காம் பாய்பரியின் வேள்வியுநான்
குற்றமறு கற்பின்மடக் கோதையரிற் பார்ப்பதிநான்.

(பொ - ரை) :—மல்யுத்தத்தில் சிறந்த மாபெரும் வீரர் களுள், யாம் உயர்ந்த கார்த்த வீரியன் ஆவேம்; தளர்ச்சியிலாத தருமவழியில், அளந்து காண அரிய மெய்ம்மையும் யாம்; விரும்பும் வேள்விகள் பலவற் றுள்ளும், சிறந்த அசுவமேதம் ஆவேம் யாம்; குற்றமற்ற கற்பினையுடைய பாவையருள், யாம் பார்வதியார் ஆகின்றேம், (எ-று).

(குறிப்பு):— முதலடியை, 'உற்றமல் நல்' எனப்பிரிக்க.(19)

**567.** வியப்புறுபல் பொருளதனின் மிக்கான தபனியநான்
நயப்பொடுவந் தனைக்குரிய நாரியரி லன்னையுநான்
செயற்கரிய தானத்துச் சீரபய தானமுநான்
இயற்பெயராம் யதுகுலத்துக் கெழில்காட்டுங் கண்ணனுநான்.

(பொ - ரை) :—வியத்தற்குரிய பல பொருள்களுள், மேம்பட்ட பொன் ஆக (இருந்து) பொலிவது யாம்; மென்மையுடன் வழிபடற்குரிய மெல்லியலாருள், (ஈன் றளித்த) அன்னையும் யாம்; செய்தற்கு அரிய தானங் களுள், சிறந்த அபய தானமும் யாம்; இயல்புப் பெய ரான யதுகுலத்தை விருத்தி செய்யும் கண்ணனைக இருப் பதும் யாமே, (எ - று). (20)

**568.** வாக்குடைய முதியோரில் வல்லஅரிச் சந்திரனன்
தேக்குநதி பலவவையிற் றெசகங்கை மாநதிநான்
தாக்குமலை வாரிதியில் தண்டரங்கப் பாற்கடல்நான்
மீக்கிளர்தா ரகைக்குழுவில் வெண்மதியக் கடவுளுநான்.

(பொ - ரை) :—வாக்கைக் காத்த மேலோருள், வல்லாண்மை யுடைய அரிச்சந்திரன் ஆவேம் யாம்; (பயன்) நிறைந்த ஆறுகள் பலவற்றுள், தசகங்கை தீர்த்தமும் யாம்; அலைமோதும் கடல்களுள், குளிர்ந்த அலைகளை யுடைய பாற்கடல் யாம்; விண்ணில் விளங்கும் மீன்களுள், வெண் திங்கள் தெய்வமும் யாம், (எ - று).

**569.** இருதுவெனு மோராறின் இணங்குகுளிர் வசந்தனுநான்
அரிவையரை மோகனஞ்செய் யாடவரின் மன்மதனுன்
பெரியதவத் தினிலுரிய பிராணுயா மத்தியனுன்
பரவையெழு நவமணியிற் பானிறவெண் முத்தமுநான்.

(பொ - ரை):—ஒப்பற்ற ஆறு பருவங்களுள், யாம் தண்மை தழுவிய வசந்த காலம் ஆகின்றேம்; மகளிரை மயக்கும் ஆடவருள், மன்மதன் யாம்; பெரிய தவநெறிகளுள், பிராணுயாம இயல்பு யாம்; கடலில் உதிக்கும் ஒன்பது ரத்தினங்களுள், பால்போலும் நிறமுடைய வெண்மை முத்துகளாக யாம் விளங்குகின்றேம். (22)

**570.** ஏற்றமுறு மாவரணத் தெழில்வனப்பா குங்கலைநான்
ஆற்றலுறும் பிதிர்கடமி லரியமா வென்பவனுன்
மாற்றருஞ்சீர் நால்வருண மானவையின் மறையோர்நான்
சாற்றரிய வாச்சிரம நான்கினிற்சந் யாசமுநான்.

(பொ - ரை):—உயர்வுடைய ஆடைகளுள், யாம் அழகு மிக்க பொன்னுடை யாகின்றேம்; ஆற்றலுடைய பிதிரர் எழுவருள், அரியமா என்பவன் யாம்; நான்கு வருணத்தவருள், மாருச் சிறப்புடைய மறையவர் யாம்; ஆச்சிரமங்கள் நான்குள், யாம் சொல்ல முடியாத சிறப்புடைய சந்யாச ஆச்சிரமம் ஆகின்றேம், (எ - று).

(குறிப்பு):—சவ்விய வாகன், அனலன், சோமன், யாமன், அரியமான், அக்கினிஷ் வர்த்தன், பர்ஹிஷதன் எனும் எழுவரும், பிதுருலகத் தலைவர்கள்; பின்னுள்ள நால்வர் ஒளியே ஆன உடலினர். அவர்களுள் அரியமான், அதிக ஒளி மயமானவர் என அறிக. (23

**571.** தள்ளரிய வனமவையிற் சயித்திரதத் தண்வனநான்
ஒள்ளொளியிற் கதிர்பரப்பு முயர்வானப் பரிதியுநான்
விள்ளரிய வித்தைதனின் மெய்ஞ்ஞான வித்தையுநான்
எள்ளரிய விந்தியங்கட் கேதுவா மிதயமுநான்

(பொ - ரை):—விலக்க இயலாத காடுகளுள், யாம் குளிர்ந்த சயித்ரதக் காடு ஆகின்றேம்; விண்ணில் உள்ள ஒளிகளுள், கிரணங்களைப் பரப்பும் உயர்ந்த சூரியனும் யாம்; வாயாற் கூற முடியாத அனுபவ வித்தைகளுள், மெய்ஞ்ஞான வித்தை யாகின்றேம்; பழிப்பில்லாத பொறிகளுள், (எவையும் இயங்கக்) காரண மான இதயம் ஆகின்றேம் யாம், (எ - று). (24)

**572.** பொற்பமைசத் திரியர்தமில் புருகுச்சப் புரவலனுன்
அற்புறுத்து தனந்தர்தமி லளகைநக ராதிபனுன்
பற்பலவாந் தீர்த்தத்திற் பரம்புமணி கர்ணிகைநான்
எற்பொலியு நிவப்பதனின் எல்லையிலா வரைகளுநான்.

(பொ - ரை):—அழகமைந்த அரசர்களுள், யாம் புருகுச்சன் எனும் அரசன்; அன்பை விளைவிக்கும் செல்வர்களுள், யாம் அளகாபுரிக் குபேரன் ஆகின்றேம்; பலவான தீர்த்தங்களுள், (காசிப் பதியின் மகிமை) பரவிய மணிகன்றிகை யாம்; ஒளி மிகுந்து உயர்ந்தவற்றுள், அளவிலா மலைகள் அத்தனையும் யாமே, (எ - று).

(குறிப்பு):—புருகுச்சன் - மாந்தாதாவின் மகன்; நரும தையை மணந்தவன்; யாழ் வல்லோரை வென்றவன்; மகாபுனிதன் எனப் பெறுபவன். மணிகர்ணிகை-நடுப்பகலில் மூழ்க நலம்தரும் வாவி. எல் - ஒளி. நிவப்பு-உயர்வு. (25)

**573.** தெறுபவநா சனமதனிற் றிரைமோது சேதுவுநான்
உறுதயவின் மாதாநான் உயரிரவி குலத்தோரின்
விறலுடைய இராமனுநான் விதுகுலத்து வேந்தர்தமின்
நிறைபொறையின் அரசாட்சி நிலைமைதனில் தருமனுநான்.

(பொ - ரை):—அலக்கழிக்கும் பாவங்களை அழிப்பன வற்றுள், யாம் அலை வீசும் சேதுவாக அமைந்துளம்; அருளாகப் பொருந்தியவற்றுள், யாம் அன்னையா

யினம் ; சூரிய குல வேந்தருள், உயர்ந்த ஆற்றலுடைய இராமனுயினம் யாம் ; சந்திரகுல மன்னருள், நிறைந்த பொறுமையுடன் அரசாண்ட தருமபுத்திரன் ஆனதும் யாம், (எ - று). (26)

**574. தண்டனையில் யமதண்டத் தன்மையுநான் அவத்தைகளாம்
எண்டகைய நால்வகையில் யௌவனமாம் அவத்தையுநான்
மண்டலத்தோர் பூசனையின் மானதமாம் பூசனைநான்
கொண்டபடப் பன்னகத்திற் கூறரிய வாசுகிநான்.**

(பொ - ரை) :—தண்டனைகளுள், யமதண்டனையின் சொரூபம் ஆகின்றேம்; எண்ணப் பெறும் தகுதியுடைய நால்வகை அவஸ்தைகளுள், யௌவன அவஸ்தை எம் சொரூபம்; நிலவுலகர் வழிபாடுகளுள், (வாய்த்த) மானச வழிபாடு ஆகின்றேம் ; படம் கொண்ட பாம்புகளுள், யாம் (வளஞ்) சொலற்கரிய வாசுகி, (எ - று).

(குறிப்பு):—மானதம் - மனத்தால் செய்யும் வழிபாடு. வாசுகி - திசைதாங்கும் எட்டுப் பாம்புகளுள் ஒன்று; மற்றவை, அநந்தன், தட்சன், கார்க்கோடகன், பதுமன், மகாபதுமன், சங்கபாலன், குளிகன் என்பவை. (27)

**575. சுவையாறி னுப்பதுநான் சுடர்விரிக்குஞ் செந்தீயின்
நவைதீர்ந்த சாடரத்தீ நான்முதிய காவியத்தின்
உவமையில்ரா மாயணநான் உறுந்தரும சரித்திரங்கள்
அவையின்மனு நான்ஞானத் தருங்கதையிற் கீதையுநான்.**

(பொ - ரை) :—அறுவகைச் சுவையுள், யாம் உப்புச் சுவை; ஒளி பரப்பும் நெருப்புகளுள், குற்றமற்ற உதராக்கினி யாம் ; பழம்பெருங் காவியங்களுள், ஒப்பு சொல்ல முடியாத இராமாயணம் ஆகின்றேம் ; அமைந்த அற நூற்களுள், மனுதரும நூலாக இருப்பது யாம் ; ஞான நூற்களுள், யாம் பகவத்கீதை ஆகின்றேம். (28)

**576. வரகவியில் வியாசனுநான் வாணயன மானவைகட்**
**சூரியவணி கெழுபொருளுன் உள்ளத்தா லிவைகருதிச்**
**சுருதிமுறை யாராய்ந்து தோமறுமுன் பூசனையைப்**
**புரிகுதிநீ யெனவுரைத்தான் பூமகன்றிண் சிரம்புடைத்தான்.**

(பொ-ரை):—தெய்வப் புலமையருள், வியாசனுயினம் யாம்; கண்கட்குத் தெரியவரும் அழகிய பொருள்கள் அனைத்தும் யாம்; உள்ளத்தால் இவைகளை யுணர்ந்து, அரிய நூற்கள் (கூறும்) முறைகளை ஆய்ந்து, குற்றமற்ற சிறந்த நின் வழிபாட்டைச் செய் என்று, நான்முகன் தலையிற் குட்டி (அவனைத் திருத்தி)ய நம்பன் அருளினன், (எ - று). (29)

**577. இத்தகைய விபூதியிய லீராறு தோள்மலையார்**
**அத்தனருள் புரிந்தமர ஆராய்ந்து கணத்தலைமை**
**வித்தகமைப் புயவீரன் வியப்புற்றுன் அக்காதைப்**
**புத்தமுதஞ் சுகமுனிநின் புலனருந்த விருந்தளித்தேன்.**

(பொ - ரை):—பன்னிருதோள் பரமன், தகுதி யுடைய விபூதி இயல்பைத் திருவாய் மலர்ந்து இருப்ப, (வீர) கணங்கட்குத் தலைமை கொண்ட வித்தகரான வீரவாகுதேவர் (கேட்டு, மிக) வியந்தார்; அவ்வரலாருகிய சிறந்த அமுதத்தை, சுகமுனிவா! உனது செவிப்புலனுக்கு விருந்தாக, யானும் பரிமாறினேன்.

(குறிப்பு):—தோள்மலை - உருவகம். ஆர் - வரிசைப்பட்டு நிரம்பிய. அமர-சாந்திபெற. வித்தகமை-ஞானத்திறமை.(30)

விபூதியத்தியாயம் நிறைவு பெற்றது.

---

## 13. விசுவரூப அத்தியாயம்

**எந்தையே பல்லுயிர்க் கிறைவனே சதுர்மறைத்**
**தந்தையே தந்தையுந் தாயுமில் லான்தரு**
**மைந்தனே கலவமா மயில்வருங் கடவுளே**
**முந்துமா னந்தவோங் காரமா மூர்த்தமே**
**என்றுவா கைப்புயத் தேந்தலும் புகலுவான்**
**மன்றல்வா ரீசநாண் மலரடித் தொண்டனேன்**
**துன்றுபே ரன்பினுற் சொலும்விபூ திச்செயல்**
**நன்றியால் புனிதமாய் நவையறுத் தேனியான்.**

(பொ - ரை):—எமது பரம அத்தா! பலவான உயிர்களின் பதியே! நான்மறையின் நாதா! தந்தையும் தாயும் இல்லாத சுயம்புவான சிவனுர் தந்த மைந்தா! மாபெரும் தோகையையுடைய மயிலூரும் தெய்வமே! (எதற்கும்) முற்பட்ட இன்ப ஓம் வடிவனே! (1)

(பொ - ரை):—என்று, வீரவாகு தேவர் துதித்து கூறத் தொடங்கினர்; மணம்கமழும் அன்றலர் மலர் போலும் திருவடிகட்கு ஆட்பட்ட அடியேன்பால் வைத்த பேரன்புடன், (நீர்) திருவாய் மலர்ந்த விபூதி இயலின் விளக்கத்தால், (மனத்) தூய்மை எய்தி, எளியேன் (என் பொல்லாக்) களங்கத்தைப் போக்கினேன், (எ - று).

(குறிப்பு):—உயிர் - உயிர்த்தலை யுடையது; மற்று, உய்திக்குரியது உயிர் எனினுமாம். ‘தாயுமிலி தந்தையிலி தான்தனியன் காணேடி’ எனும் திருவாசகம் இங்கு எண்ணத் தகும். (1)

**வேண்டுமோர் கருமமொன் றுளதியான் விள்ளுகேன்**
**ஆண்டநீ யன்றிவே றரியவான் பொருளெனத்**
**தூண்டுமா றென்றிலைத் தோமின்மா ணைக்கரிற்**
**பூண்டநின் பேருருப் பொற்புறுந் தோற்றமாய்.**

**581. பரவுறும் விசுரூ பத்திருத் தோற்றமாம்**
**தரிசனைக் குள்ளம்வைத் தேனையத் தெரிசனைக்**
**கருணைவைத் தாளெனக் கழறும்வாள் வாகுவாம்**
**குரிசிலுக் கருளொடுங் குருபரன் பகருவான்.**

(பொ - ரை) :—(அடியேன்) விரும்பும் செய்தி ஒன்றுளது; (அதை இப்போது) விண்ணப்பிக்கிறேன்; (அறிவுடைய பொருள், அறிவிலாப் பொருள்கள் அனைத்தையும்) ஆட்சிப் படுத்திய உம்மை யல்லாமல், (அவைகளை) ஊக்கும் அரும்பெரும் பொருள் வேறு ஒன்று இல்லை; மாசில்லாத மாணவர் போல் (இளந் திருமேனி) பூண்ட உமது பொலிவு பொருந்திய பெரிய உருவாகி,

(பொ - ரை) :—வியாபகமாகி விளங்கும் விஸ்வரூபக் காட்சியைத் தரிசிக்க ஆவலித்த உள்ளத்து அடியேற்கு, கருணை பாலித்து அதைக் காண்பித்தருளும் என்று விண்ணப்பித்த வாளேந்திய வீரவாகு தேவர்க்கு, குருவான பரன் அருளொடு கூறத் தொடங்கினன்,

(குறிப்பு) :—வான்பொருள் - பிரமம். விசுவ ரூபம் – உலகமாம் திருவுருவம். (4)

**582. இருடிகட் கரிதுவா னிமையவர்க் கரிதுநூற்**
**சுருதிகட் கரிதுமெய்த் தொண்டருக் கரிதுசொற்**
**கருதுதற் கரிதுளங் காண்பதற் கரிதுமாம்**
**பொருவிலற் புதமொடும் போற்றுநந் தோற்றமே.**

(பொ - ரை) :—ஒப்பில்லாத அற்புதத்துடன் துதிக்கப் பெறும் நம் சொரூபமானது, முனிவர்களாலும் காண முடியாதது; வானவர்க்கு அறிய வாய்ப்பில்லாதது; வேத தேவதைகட்கும் விளங்காதது; மெய்ம்மைத் திருப்பணியர்க்கும் (மேவ) அரியது; (உரைக்கும்) சொற்

கொண்டு உணர்தற்கரியது; அகத்தால் அறிதற்கு அரியதுமாம், (எ - று). (5)

583. ஊனுறுங் கண்களுக் குட்படா துன்றனக்
கானஞா னக்கணே அருளொடுந் தருதுநீ
ஞானநாட் டத்தினு னந்திருத் தோற்றமே
மானவாட் செங்கையாம் வாகுவே காண்டியால்

584. என்னமூ விருமுகத் தெம்பிரான் கருணையால்
மன்னுபே ரண்டமும் மற்றஅண் டந்தொறும்
துன்னுவோர் தோற்றமுஞ் சுரருமா முனிவரும்
பன்னுநான் மறைகளின் பயனுமாய் நின்றனன்.

(பொ - ரை):—சிறந்த வாளேந்திய செவ்விய திருக்கர வீரவாகுவே! (புறக்) கண்கட்குப் புலனுகாதது; (ஆதலின்,) அருளுடன் ஞானக் கண்ணை உனக்கு அளிக்கின்றேம்; அழகிய நம் சொரூபத்தை, (கம்பீரமான) ஞான விழியால் நீ கண்டு கொள், (6)

(பொ - ரை):—என்று அறுமுக எம்மிறைவன், (தன்) அருளால் உருவான பெரிய அண்டங்களும், அந்த அண்டங்கள் தோறும் தோய்ந்து இருப்பார்தம் தோற்றங்களும், வானவர்களும், முதன்மை யுடைய முனிவர்களும், (பன்னிப்) பன்னிப் பாராயணம் செய்யும் நான்கு வேதங்களின் (இன்பப்) பயனுமாகி இருந்தனன், (7)

கருணையாம் வடிவினைக் காண்டலும் நீண்டவாள்
ஒருகையா னிருகையு முச்சிமேற் கூப்பியே
அருவிநீ ரிருவிழிக் காறுமீ ராறெனப்
பெருகவாய் குழறியே களியொடும் பேசுவான்.

(பொ - ரை):—கருணை மயமான (அச்) சொரூபத்தைக் கண்டதும், எடுப்பான வாட்படை ஏந்திய ஒப்பற்ற திருக்கரத்தை யுடைய வீரவாகுதேவர், கூப்பிய இரு கைகளையும் சிரமேற் குவித்தவராய், இரு கண்களின் வழியே நீர் அருவிகள் இரண்டு ஆறுகள் போல் பெருகிவர, சொற்கள் குழறி, பேரானந்த மயமாகிப் பேசலாயினர், (எ - று).

586. அத்தநின் வடிவிலே யளவிலா வமரரும்
பத்தெனும் பிரமரும் பன்னிரண் டாகிய
கொத்துறும் பரிதியுங் கூறுருத் திரர்களாய்
ஒத்தபன் னொருவரா யுளரையுங் கண்டனன்.

(பொ - ரை):—அத்தனே! உமது சொரூபத்தில் எண்ணிலாத இமையவர்களையும், பத்துப் பிரமதேவர்களையும், பன்னிரு சூரியர்களையும், (சிறப்பித்துச்) சொல்லப் பெறும் பதினொரு உருத்திரர்களையும் (உமது திருவுருவில்) பார்க்கிறேன், (எ - று).

(குறிப்பு):—கொத்து - தொகை. ஒத்த - ஒரே தோற்றமுள. (9)

587. ஏழுமால் வரைகளு மேமவான் குன்றமுஞ்
சூழுமால் கோடியாஞ் சுரநதித் தொகைகளும்
வாழிமா கயிலைமால் வரையுமவ் வரையிலே
ஊழியா னடனமும் கண்டுவப் பெய்தினேன்.

(பொ - ரை):—எழுந்த பெரிய (எண்திசை) மலைகளையும், (மேரு எனும்) வானளாவிய பொன் மலையையும், வளந்தரும் அளவிலவான கங்கை முதலிய தொகுதிகளான நதிகளையும், வாழும் மாபெரும் கயிலை மலையையும், அம்மலையில், (ஊழிக் காலத்தும் அதன் பின்னுமுள) சிவனார் இயற்றும் திருக்கூத்தையும், (பரம உமது திருவுருவில்) பார்த்துப் பரவசமடைகிறேன், (எ-று). (10)

588. பாற்றிரைப் புணரியும் பாம்பணைப் பள்ளியும்
ஊற்றிருந் தொழுகுதே னுந்தியங் கமலமும்
ஆற்றலந் திகிரியு மம்புயத் தாயிழை
போற்றுநா ரணனையுங் கண்டுநான் போற்றினேன்.

(பொ - ரை):—அலைகளை யுடைய பாற்கடலையும், (ஆதிசேடனாகிய) பாம்புப் பாயலையும், ஊற்றெடுத்துத் தேனொழுகும் உந்திக் கமலத்தையும், பலம் மிக்க சக்கரப் படையையும், மலர் மகள் வழிபடும் நாராயணரையும், (புனித உம் திருவுருவில்) அடியேன் கண்டு புகழ்கிறேன், (எ - று). (11)

589. அரியபல் யோகியர்க் காதியாங் கபிலனும்
பெரியமா தவன்முதற் பின்னுளோர் தம்மையும்
உரியநான் மறைதெரிந் துளவசிட் டனைமுதல்
இருடியோர் தம்மையுங் கண்டன னெளியனேன்.

(பொ - ரை):—அருமையான பல யோகிகட்கு அதிபரான கபிலர் எனும் சிறந்த தவசிரேட்டர் முதல் பின்னுள்ள பெரியோர்களையும், உரிமையுடைய நான் மறைகளை யுணர்ந்துள வசிட்டர் முதலான முனிவர் களையும், (தகவுடன்) அடியேன் தரிசிக்கிறேன், (12)

590. மனுவினீ டியமுறை மன்னரும் பூரணத்
தினியவா நதிகளு மெழில்வரைத் தலைமுதல்
கனைகடற் றலைவரைக் கடவுளர்த் தொகுதியும்
இனநதிக் கிருகரைக் கிடைதெரிந் தேனியான்.

(பொ - ரை):—மாபெரும் நதிகளின் இரு கரைகளில் இருக்கும் தலந்தோறும், மனுநீதியின் உயர்ந்த மன்னர் களையும், சிறந்து நிறைந்த சிற்றாறுகளையும், அழகிய

மலையிடங்கள் முதல், ஒலிக்கும் கடலிடம்வரை யுள்ள (அரிய) பல ஆலயங்களையும், (தெளிவாக) அடியேன் தெரிசிக்கிறேன், (எ - று).

(குறிப்பு):—கடவுளர்த் தொகுதி - தெய்வத் திருக் கோயில்கள். (13)

591. கருதரும் பெருநவ கண்டமு மவணுறும்
அருவனங் களுமமர் வாளினுற் போரிடைச்
செருமுயன் றுயிர்விடுந் தீரரு மகளிரும்
பொருவருந் தகையவான் புவனமுங் கண்டனன்.

(பொ - ரை):—கருத்திற்கு அடங்காத பெரிய ஒன்பது கண்டங்களையும், அங்கங்குள்ள (கண்ணுழை யாத) காடுகளையும், பொருத்தமான வாளால் யுத்த களத்தில் போரிட்டு உயிரிழக்கும் தீரர்களும், (அவர் களது) துணைவியர்களும் (வாழும்) ஒப்பற்ற தகுதி யுடைய வீர சுவர்க்கத்தையும், (கம்பீர உம் திருவுருவில்) காண்கிறேன், (எ - று).

(குறிப்பு):—நவகண்டம் ஆவன-கீழ்விதேகம், மேல்விதே கம், வடவிதேகம், தென்விதேகம், வடரேபதம், தென் ரேபதம், வடபாதம், தென்பாதம், மத்திய காண்டம் எனப் பெறும்; இதை, பரத வர்ஷம், ஏமகூட வர்ஷம், நிஷதம், இளாவிருதம், நீலம், சிவேதம், குரு, பத்திராசுவம், கேதுமாலம் என்று பெயரிட்டுக் கூறுவாருமுளர். (14)

592. எழுதுதற் கரியவா மெந்தைநின் வடிவினின்
முழுமணிக் கிரணவா பரணமு மொய்கதிர்க்
கழகளித் தொளிர்செய்பொன் னுடையுங் குண்டலக்
குழைவெயிற் சுடர்களீன் கோடிசூ ரியர்களும்.

593. அளவிலா மதனஆ காரமு மளவிலா
ஒளிகள்வாண் மதிதருங் கிரணமு மொள்ளழற்
கொளுவுமா ரழலெலாங் கோலவா னயனமாம்
வளனெலாங் கொண்டதோர் வடிவமைந் துள்ளை நீ.

(பொ - ரை) :—எழுதிக் காட்ட இயலாத் திருமேனி எந்தையே! உமது திருமேனியில் நிறைமணி ஒளிமயமான அணிகளும், கிரணங்கள் மொய்த்த சூரியனுக்கு அழகளித்து ஒளிபரப்பும் பொன்னுடையும், திருச்செவிகளில் குண்டலங்களாகிய பகலொளியை உயிர்க்கும் பலவான பரிதிப் பிரகாசமும்,

(பொ - ரை) :—அளவுட் படாத மன்மத சொரூபமான திருமேனியும், அளவிலா ஒளியுடைய சூரியனும், (குளிர்ந்த) ஒளிதரும் சந்திரனும், (மாலைக் காலச்) செவ்வொளி கொளுத்தும் அரிய வெப்புடைய நெருப்பும் திரண்டது போன்ற, அழகிய (மூன்று) கண்களான வளம் முழுதும் வாய்த்த ஒப்பற்ற திருவுருவை நீர் கொண்டுளீர், (எ - று).

(குறிப்பு) :—குழை - திருச்செவி. உள்ளை - கொண்டுளீர். முதல்வன் முக்கண்கள், முருகற்கும் உள என்பது இதனில் உள்ள செய்தி. (15, 16)

594. அண்டகோ டிகளெலா மையநின் மேனியிற்
கொண்டரோ மத்திடைக் கோத்தமா மணிகளாக்
கண்டன னின்முகக் கமலமுங் கோரமாம்
விண்டபே ரோதையும் விண்ணிடிக் கண்ணவாம்.

(பொ - ரை) :—ஐயனே! அண்டங்கள் அனைத்தையும் உமது திருமேனியில் உள்ள மயிர்க்கால் தோறும் கோர்த்து வைத்த சிறந்த ரத்தினங்கள் போல் இருக்கக்

காண்கிறேன்; உமது திருமுகத் தாமரையும், அச்சம் தரும் தோற்றமாக அமைந்துளது; திருவாய் மலர்ந்த மொழிகளும், விண்ணிலிருந்து எழும் இடியொலி போல் விளைகின்றனவே, (எ - று). (17)

595. சூலம்வாள் தண்டுவில் தோமரங் காமர்சூழ்
வேலெழுச் சக்கர மாயவெம் படைகளும்
சீலநின் கைகளிற் செற்றின பற்றிகல்
மூலமே நடுவிலா துற்றதோர் மூர்த்தமே.

(பொ - ரை):—விருப்பு வெறுப்பு, முதல் இடை (கடை) கடந்துள முதல்வனே! சூலம், வாள், தண்டு, வில், தோமரம், அழகிய வேல், எழு, சக்கரம் ஆன பயங்கரமான படைகளும், சிறப்புடைய உமது திருக் கரங்களில் நிறைந்திருக்கின்றன, (எ - று). (18)

596. அளவிலா ஆனனம் அளவிலா நீள்குழை
யளவிலா நீள்விழி யளவிலா நாசிகள்
அளவிலா துயர்கர மளவிலா நின்வடி
வளவிலா மறைகளா கமமுநா டரியதால்.

(பொ - ரை):—எண்ணிலாத திருமுகங்களும், அளவிலாத திருச்செவிகளும், கணக்கிலாது நீண்ட கண்களும், வரையறையிலாத நாசிகளும், கணிக்க முடியாத பலவா யுயர்ந்த கரங்களுமாக அளவிட்டுக் கூற இயலாத உமது சொரூபம், அளவற்ற வேத ஆகமங்களாலும் ஆய்ந்து காணலாவதோ, (எ - று). (19)

597. புகலருந் திருமுகப் புண்டரீ கந்தொறும்
தகைவபே ரண்டமுஞ் சடசடென் றழலினிற்
றுகளெழப் பல்லின்வீழ் தொனியினு லடியனேன்
அகமுடைந் துருகியுள் ளஞ்சினே னஞ்சினேன்.

(பொ - ரை):—உரைத்தற்கு இயலாத உயர் பொலி வுடைய திருமுகத் தாமரைகள் ஒவ்வொன்றிலும், தனிப் பெரும் அண்டத்தையும் தடுப்பனவாகி, பற்களி லிருந்து தீப்பொறிகள் சட சட என்றெழும் ஓசைகளால் அடியேன் கன்மம் அழிந்து, உள்ளம் உருகி, அளவிலாத அச்சம் அடைகிறேன், (எ - று). (அகம் - பாவம்.) (20)

**598. கோரமீக் கிளர்தரக் கோலநீ கொண்டதால்**
**சீரிதுற் பார்க்கவுஞ் சிறியனே னஞ்சினேன்**
**ஆரைநீ சொல்கென வறிகிலே னென்றலும்**
**வீரவா குணர்தர வேள்மகிழ்ந் துரைசெய்வான்.**

(பொ - ரை):—அதிபயங்கரம் மென்மேலும் அமைய விசுவ உருவை நீர் கொண்டமையால், சிறப்பாகத் தரிசிக்கவும் சிறுவன் அஞ்சுகிறேன்; நீர்யார்? உரைத் தருள்க என்று வினவவும் வாய் வரவில்லையே! என்று விண்ணப்பித்தலும், செவ்வேள் பெருமான் திருவுளம் மகிழ்ந்து, உணருமாறு வீரவாகுவிற்கு உரைப்பா ராயினர், (எ - று). (21)

## வேறு

**599. ஐந்தொழிற் குரிய மூவ ராகியிவ் வடிவத் தோடு**
**வந்துதித் துள்ள கோலங் கடவுளர் மதிப்பார் தங்கள்**
**சிந்தையைக் கடந்த ஞானச் சின்மயா நந்த ரூபம்**
**விந்தையான் மிக்க மூலப் பகுதியாய் வியப்பு நீங்கா.**

(பொ - ரை):—(படைப்பு, காப்பு, அழிப்பு, மறைப்பு, அருள்வு எனும்) ஐந்தொழிலிற்கு உரிய (பிரமன், திருமால், உருத்திரன் எனும்) மூவராகி, (இப்போது) இவ் விசுவ உருவத்தொடு வந்து சேவை வழங்கிய இத் திருவுருவை, இமையவர் எண்ணுவர்; தங்கள்

மனத்திற்கு எட்டாத நிறை ஞானப் பேரின்ப உருவான இது, மூலப் பிரகிருதி போல் ஆகி, (அவர்கட்கு) நீங்கா வியப்பு நேர்விக்கும், (எ - று).

(குறிப்பு):—மகேச சதாசிவர்களை, மூவரி லடக்கி யுரைத்த முறையிது. பகுதி - பிரக்ருதி என்பதன் திரிபு; இது தமிழில் முதனிலை யெனப்பெறும். இப்பாடல், சில பிரதிகளில் இருக்கிறது. (22)

600. இப்பிர பஞ்ச மெல்லா மெய்திய தனுவாக் கொண்டேன்
செப்புல கத்து நன்மை சேர்வுறப் படைத்தல் காத்தல்
தப்பிலா தழித்த லென்னச் சாற்றுமுத் தொழிலுஞ் செய்யும்
ஒப்பிலா முதன்மை யுற்ற வொருவனு னுணர்து வாயே.

(பொ - ரை) :—இவ்வுலங்கள் அனைத்தையும் ஏக திருமேனியாக்கிக் கொண்டேன்; சொல்லப் பெறும் உயிர்கள் சுகம் பெறப் படைத்தல், காத்தல், தவறிலாது அழித்தல் என்று சொல்லப் பெறும் முத் தொழிலும் செய்யும் ஈடு இல்லாத் தலைமை எய்திய ஏகன் யாம்! (ஊன்றி யிதனை நீ) உணர்ந்து கொள், (எ - று).

(குறிப்பு) :—தனு – தேகம். (23)

601. கூறுதற் கரிய ஞான வுருவனுன் குறிக்கொ ளென்றே
ஆறுமா முகத்தன் சொன்ன வருண்மொழி கேட்ட லோடும்
வேறெடுத் துரைக்க நெஞ்சம் வெருக்கொடு வீர வாகு
தேறிநாக் குழறி மீண்டுஞ் சேவடி துதித்துச் சொல்வான்.

(பொ - ரை) :—குறித்துச் சொல்ல முடியாத ஞான வடிவன் யாம்; (இதை உன்) இலட்சியத்தில் வை என்று அறுமுகப் பரமன் அருளிய திருவாசகத்தைச் சிரவணித் ததும், வீரவாகு வேறுகூற மனமஞ்சி, (பிறகு ஒருவாறு) தெளிந்து, சொற்குழறி, மீட்டும் திருவடிகளைப் போற்றிப் புகல்வாராயினர், (எ - று).

(குறிப்பு) :—குறிக்கொள்ளல் - தியானத்தில் வைத்தல். "கூறுதற்கரிய வண்ட கோடிக ளெல்லா மிந்த, வாறுசெய் விப்போ மென்ற வாசகம் கேட்டலோடும்" என முதலிரண்டடிகள் சில பிரதிகளில் மாறியுள. (24)

**602.** **கின்னர ரியக்கர் பாட வரம்பையர் கெழுமி யாடத்**
**துன்னிய முனிவர் சித்தர் தோகையர் தொழுது நிற்பப்**
**பொன்னகர்க் கிறைவ னுள்ள நடுங்குறக் கண்டேன் போற்றி**
**யுன்னருங் கோலம் பார்க்க வுள்ளமும் வெருவு மம்மா.**

(பொ - ரை) :—கின்னரர்கள், இயக்கர்கள் பாடவும், அரம்பையர் கூடி யாடவும், (மோனம்) முதிர்ந்த முனிவர்களும், சித்தர்களும், (அவர்களது) துணைவியர்களும் தொழுத நிலையில் தோன்றவும், பொன்னுலக அதிபனை இந்திரன் நெஞ்சம் நடுங்கி (நிற்கவும்) கண்டேன்; உமது அரிய (விசுவ) ரூபத்தைப் பார்க்க உள்ளமும் அஞ்சுகின்றதே; (உமக்கே) அடைக்கலம்,

**603.** **துதிக்கவு நாவுள் ளேங்குஞ் சொல்லருந் தியானத் தாலே**
**மதிக்கவு நெஞ்ச மேங்கும் வாய்மைசஞ் சலமு மாமால்**
**விதிக்கருங் குணங்க ளாறுன் மெய்க்கலங் கார மாக**
**வுதித்திருந் தருளும் வேற்கை யொருவனே சரணம் போற்றி.**

(பொ - ரை) :—துதிப்பதற்கும் நாக்குழறும்; சொல்லிக் காட்ட இயலாத தியானப் பெயரால், மனனம் செய்யவும் மனம் குலைகிறதே; வாய் வரு மொழியும் தடுமாறுகிறதே; (பிறரால்) தோற்றுவித்துக் கொள்ள இயலாத ஆறு குணங்கள், (ஆறுமுகங்களாகத்) திருமேனிக்கு அழகுபெற அமைய, உதயமாகி யருளும் (நலஞ்சிறந்த) வேற் கரத்து நாதா! (உமது) திருவடிகட்கே அடைக்கலம், (எ - று).

(குறிப்பு) :—நிறையறிவு, நிறையின்பம், இயற்கை யுணர்வு, சுதந்தரத் தன்மை, அழியா ஆற்றல், எல்லையிலா

மகிமை எனும் ஆறு குணங்களே அமலற்கு ஆறுமுகம் என்றபடி. (26)

604. சராசர மனைத்து மாகிச் சராசரத் தன்மை நீங்கும்
பராபர வியற்கை யாகிப் பரவுவா ருள்ளந் தோறும்
விராவிய கருணை யாகி விளங்குநின் மெய்யின் றோற்றம்
மராமலர்த் தொடையல் சூடு மயூரவா கனத்தாய் போற்றி.

(பொ - ரை):—உலகங்கள் யாவும் ஆகி, உலக இயல்புகளில் இருந்து விலகிய இயற்கையின் சொரூப இறையாகி, உணர்வார்தம் உள்ளங்கள் ஒவ்வொன்றிலும் உறவாகி யிருக்கும், (வித்தகக்) கருணை விலாச மாய் உமது விசுவ ரூபம் விளங்குகின்றதே; கடப்ப மலர் மாலை தரித்த மயிலூரும் பெருமா! (உமக்கே) அடைக்கலம், (எ - று).

(குறிப்பு):—பரம் + அபரம் = பராபரம்; பரம் - மெய்ஞ் ஞானம்; அபரம் - கலைஞானம். இவ்விரண்டன் சொரூபம் ஆனவன் பராபரன். பரவுதல் - வழிபடல். விரவுதல் - ஒன்றுதல். மரா - கடம்பு. (27)

605. வயம்புனை வோர்க டம்மில் வீரரில் வயப்போர் நோக்கி
வியந்துளங் களிப்பு நீங்காப் பொருநரில் வில்லோர் தம்மில்
உயர்ந்துளோர் தம்மி லியானென் றுளத்தகங் காரந் தன்னற்
புயம்படைத் தேனை யல்லாற் பொருவருங் கொடுஞ்சூர்த் தானை.

606. வெல்லுத லரிது போலு மெனவுள மேம்பா டெண்ணும்
புல்லுணர் வோடும் வாளா பொருந்துமென் னிதய மாய
கல்லகங் குழைய மோதுங் கருணைவா ரிதியே காணு
எல்லையி லண்ட மெல்லா மெடுத்தபே ருருவ நீத்து.

607. பண்டுள வடிவங் காட்டி யானெனப் பையு ளோடு
முண்டகத் திருத்தாண் மீது மோலியுங் கரமுஞ் சூட்டி
தெண்டனிட் டிறைஞ்சும் வீர வாகுவின் செய்கை நோக்கி
விண்டலத் துதித்து வீசும் விரிகதிர்ப் பரிதி போலும்.

608. ஒளிதிகழ் முகமோ ராறு முயர்புய நிரையீ ராறும்
வளநிறை விழியீ ராறு மாமணிக் குழையீ ராறும்
முளரியந் தாளு மாக முன்னரின் வடிவங் காட்டி
களிமகிழ் சிறந்து வீர வாகுவைக் கைக ணீட்டி

609. எடுத்தன னெடுத்த காலை யெழுந்தருட் கண்ணீர் மாரி
விடுத்தடி வணங்கி நின்ற வீரவா குவைமுன் னோக்கி
முடித்தலை துளக்கி யஞ்சே லொன்றுநா மொழிது மென்னுந்
தொடுத்தபே ரன்பி னோடுஞ் சொல்வதற் குள்ளம் வைத்தான்.

(பொ - ரை) :—வெற்றி மாலை சூடும் வீரர்களை எதிர்க்கும் வீரர்களில், வலிந்து வரும் போரை எதிர் நோக்கி, (அச்சமே இல்லாமல் தம்மைப்) புகழ்ந்து, நெஞ்சில் (வெற்றிக்) களிப்பு விலகாத வீரர்களை எதிர்க்கும் வில் விஜயர்களில், (இன்னும் பலபட) உயர்ந்தோரில் யானே (மிக) உயர்ந்தோன் எனும் மன இறுமாப்பால், தோள்களால் பெயர்கொண்ட எனக்கன்றி, ஒப்பு சொலற்கு அரிய (மிகப் பெரிய) கொடிய சூர சேனைகளை, (28)

(பொ - ரை) :—வெல்வது (பிறர்க்கு) இயலாது என்று இருந்த மேலான தகுதியை எண்ணும் அற்ப அறிவுடன், வீணுகப் பொழுது போக்கும் என் மனமாகிய கல் கரையுமாறு மோதுகின்ற அருட் கடலே! கண் கட்குப் புலனுகா அளவிலாத அண்டங்கள் அனைத்தையும் தாங்கிய (இவ்) விசுவ உருவை விடுத்து,

(பொ - ரை) :—முன்பிருந்த (முருக) திருவுருவை (க் கடையேன் தரிசிக்க)க் காட்டி ஆட்கொள்ளும் என்று, வருந்திய மனத்துடன், (தெய்வத்) தாமரை போன்ற திருவடிகளில் (புனித) மகுடமும் கைகளும் பொருந்த வணங்கி வழிபடும் வீரவாகுவின் செயலைக்

கண்டு, விண்ணில் உதயமாகி, (பரவிய) கிரணங்களைப் பரப்பும் பரிதி போன்ற, (30)

(பொ - ரை):—ஒளி விளங்கும் ஒப்பற்ற ஆறு திருமுகங்களும், உயர்ந்த வரிசையான தூய பன்னிரு தோள்களும், பயனுள வளமுடைய பன்னிரு கண்களும், சிறந்த நவமணி யணிபுனை திருச்செவிகள் பன்னிரண்டும், தாமரை போன்ற இரு திருவடிகளுமாக, முன்னிருந்த (கனிவுள) இளம் மேனி காட்டி, பெருமகிழ்வு பெருகி, கைகளை நீட்டி வீரவாகுவை, (31)

(பொ - ரை):—(தூக்கி) எடுத்தான்; எடுத்த பொழுதே எழுந்து, (புனித) அன்புக் கண்மழை பொழிந்து, (வாழ்வுதரும்) திருவடிகளை வணங்கி நின்ற வீரவாகுவை (அருளொடு) நோக்கி, மகுடம் அணிந்த (அழகிய) சிரத்தை யசைத்து, அஞ்சாதே! ஒன்று கூறுவம் யாம் என்று, தொடர்ந்த பேரன்புடன் (பெருமான்) கூறத் திருவுளங் கொண்டனன், (எ - று). (32)

(குறிப்பு):—பையுள் - பெருந்துன்பம். மோலி - மகுடம். துளக்கி - அசைத்து. (32).

**610.** **எண்ணரும் பிரமர் தாமு மியற்சன காதி யோரும்**
**பெண்ணொரு பாகற் போற்று நந்தியும் பிருங்கி யாதி**
**திண்ணிய கணத்து ளோருஞ் சிந்தைமுற் றொருங்க நோற்றுக்**
**கண்ணினுக் கடங்கா இந்தக் கோலத்தைக் கருத்துள் வைத்தார்.**

(பொ - ரை):—எண்ணக் கணக்கற்ற பிரமதேவர்களும், இயற்கை மயமாக இருக்கும் சனகாதி முனிவர்களும், உமையை ஒருபங்கில் கொண்ட நம்பனை வழிபடும் நந்திதேவரும், பிருங்கி முனிவர் முதலிய (கடுந்தவ) ஆற்றலுடைய கணநாதர்களும், (தம்) மனமுழுவதும் ஒருமை பெறத் தவஞ்செய்து, கண்களின் காட்சியள

விற்கு அடங்காத இத் திருவுருவை (க் காணும்) கருத்து உடையவராயினர், (எ - று).

(குறிப்பு):—பிருங்கி - முத்தி காமியான முனிவர். இவர் உமாபதி யருளால் ஊன்றுகோல் பெற்றவர். (33)

611. அன்னவர் தம்மை நோக்கி யருள்சுரந் தினிய தோற்றத்
தின்னல மினிமுன் னுறு யுகத்தினி லிகல்வெஞ் சூரைக்
கொன்னிலை வேலாற் கீண்டு கந்தமா தனப்பொற் கோயில்
மன்னிவீற் றிருத்த லாக வேண்டினம் மகிழ்ச்சி மிக்கால்.

(பொ - ரை)—(பண்பு மிக்க) அவர்களைப் பார்த்து, இனிய விசுவ உருவ (த்தைச் சேவிக்கவைக்கும்) இன்ப நல அருள் மிகுந்து, இனி அடுத்துவரும் யுக ஆரம்பத்தில் பகைப்படும் சூர பதுமனைப் பெரிய இலைவடிவ வேலால் பிளந்து, (அதன் பின், புனித) கந்தமானத் திருக் கோயிலில், நிலையாக வீற்றிருக்க மகிழ்ச்சிப் பெருக்கால் நினைந்துளம், (எ - று).

(குறிப்பு) :—கொன்—பெருமை. மிக்கால்-மிகுதியால். (34)

612. அவ்வயி னமது சேனைக் காதியாம் வீர வாகு
செவ்வியி னிறைந்த தோற்றத் தெரிசனம் விரும்பு மன்னுற்
கெவ்வமில் வடிவங் காட்டு வோமென விசைத்தேம் நீருங்
கவ்வையி னீங்கித் தோற்றங் காண்மினென் றுரைத்து ளோமால்.

(பொ - ரை):—அந்த இடத்தில் நம் படைகட்கு அதிபனாகிய வீரவாகு, அழகு நிறைந்த (நம்) வித்தக ரூபத்தைத் தரிசிக்க விரும்புவன்; அவனுக்குக் களங்கம் இல்லாத் திருவுருவைக் காட்டுவம் என்று வாக்களித் தோம்; அழிவிக்கும் துயரம் அகன்று, நீங்களும், (அந்நாளில் கம்பீர அவ்) விசுவ ரூபத்தைக் காணுங்கள் என்று அருளியுளம், (எ - று). (35)

613. செப்பிய மாற்றந் தன்னாற் சிந்தனை மகிழ்ச்சி யெய்தி
யிப்பெரு வடிவ முன்பா லெடுத்தனந் தொழுது நீயும்
ஒப்பிலா வுவகை பூத்தா யுள்ளமும் புனிதம் பெற்றாய்
முப்புவ னத்து ளோரின் முதன்மையும் படைத்தி கண்டாய்

(பொ - ரை):—(அங்ஙனம்) அருளிய மொழிப்படி, திருவுளம் மகிழ்ந்து, பெரிய இத்திருவுருவை உன் முன் கொண்டோம்; நீயும் சேவித்து, மாபெரும் மகிழ்ச்சியில் மலர்ந்தனை; (அதனால்) உள்ளமும் தூய்மை யடைந்தனை; (மண்விண் பாதலமெனும்) மூவுலகத்தருள் (நீ) முதன்மையும் பெறுவை, (எ - று).

(குறிப்பு):—கண்டாய் - முன்னிலை யசை. (36)

614. ஆதலி னெழுத்தோ ராறு மற்புதத் தழுத்தி வேத
நீதியான் மெய்த்தி யான நெஞ்சகத் தடக்கி நம்பேர்
ஓதுதி நமது பொற்றா ளூற்றுளோர் தம்மைக் காத்துக்
காதலா லவர்த முள்ளக் கருத்தவா முடித்தி யப்பால்.

615. அளக்கரும் பிரம கற்ப வந்தத்தி னமது பாதத்
தளக்கம லத்து வீடு தந்தன மென்றே யீசன்
குளக்கணிற் றேன்று ஞானக் குருபர னுரைத்தா னன்ன
வளத்திய றன்னல் வீர வீரருவு மனங்கொண் டேத்தி.

616. புகலருங் குமரவேள்வி பூதியுங் கேட்டு மேலாந்
தகையபே ருருவங் கண்டு சததளத் திறைக்கு மெட்டாச்
சுகமடைந் தருந்தி யானத் துதியுட னிருந்து யோகத்
தகமகிழ்ந் தின்று காறு மற்புதப் புணரி யாழ்ந்தான்.

(பொ - ரை):—ஆதலால் ஆறு எழுத்துக்களையும் அற்புதமாக (நாவில்) அழுத்தி, நெஞ்சில் வைதிகப்படி நிறுத்தி, (இப்படியே) நம் திருப்பெயரை உருவேற்றி யிரு; (அதனுடன்) நம் திருவடிகளை அடைக்கலம் என்று

நம்பி யிருப்பவர்களை ஆதரித்து, அன்புடன் அவர் தம் நினைவையும் விருப்பத்தையும் நிறைவேற்று; அதன்பின்,

(பொ - ரை) :—அளக்க முடியாத பிரமன் வாழ் நாளான இறுதி நாளில், நமது திருவடித் தாமரையான (அரிய) வீடுபேற்றை அருள்வம் என்று, சிவபிரான் நெற்றிக் கண்களிலிருந்து உதயமான ஞானபர நம்பன் அருளினன்; அந்த (அருள்) வளமான திருவாசகத் தைச் சிரவணித்த இயல்பால், வீரவாகுதேவர் (எம்மான் திருவடிகளை) மனத்தில் இருத்தித் துதித்து,

(பொ - ரை):—சொல்லற்கரிய குமாரசுவாமியின் சிறந்த பிரபாவங்களைச் சிரவணித்து, மேம்பட்ட தகுதி யுடைய விசுவ உருவையும் சேவித்து, (விகசித்த) நூறு இதழ்த் தாமரையில் வீற்றிருக்கும் நான்முகற்கும் காணொணாத இன்ப மெய்தி, அரிய தியானமும் துதியு மாக இருந்து, (மகத்தான) யோகவுணர்வுடன் மன மகிழ்ந்து, இன்று வரை அற்புத இன்பக் கடலில் ஆழ்ந்து இருந்தார், ((எ - று). (39)

(குறிப்பு) :—எழுத்தோராறு - சடக்கரம். அவா - இட்ட காமியம். பிரமகற்பம் - பிரமன் வாழ்நாள்; அஃது ஆயிரம் கோடாகோடி ஆண்டுகள் என்பர்; "பூரியம் பத்துக் கொண்டது பிரமகற்பம்" என்பது பிங்கலந்தை நிகண்டு. விபூதி - சொரூப லட்சணம். (39)

**617.** பேருரு வமைந்த தோற்றப் பெற்றியும் விபூதி யாய
சீரருட் சிறப்பு மேத்திச் சிந்திப்போர் தீமை நீங்கிக்
கோரவெம் பவவேர் கீண்டு கூறுதற் கரிதாஞ் செல்வ
வாரியிற் றிளைத்து வேண்டு மைந்தரை யடைவர் மன்னோ.

(பொ - ரை):—பெருந் திருவுருவாக அமைந்த விசுவ ரூபத் தன்மையையும், (அதன்) விபூதியான சிறந்த அருளின் சிறப்பையும் துதித்துத் தியானிப்பவர்கள்,

தீமைகள் (யாவும்) தீர்ந்து, கடிய கொடிய பிறவி வேரைக் களைந்து, செப்புதற்கரிய செல்வக் கடலில் மிதந்து, (பெரிதும்) விரும்புதற்குரிய மகப்பேற்றையும் பெறுவர், (எ - று). (40)

**618.** **வஞ்சனை தீநீர் காற்று வருமவ மிருத்து வெந்நோய்**
**சஞ்சல மவர்பாற் செல்லா தண்ணளி யுடனே கேட்போர்**
**நெஞ்சகங் குழைய வேள்முன் னித்தமும் படிப்போர் வாங்கி**
**விஞ்சையி னெழுது வோர்கள் விருப்புட னினைத்த வெல்லாம்.**

**619.** **முற்றொருங் கெய்து வார்கள் முழுதுநம் மாணை யாணை**
**சொற்றன மிதயத் தன்பு தூண்டுதி யெனவி யாசன்**
**கற்றுணர் சுகனுங் கேட்கக் கழறினன் முனிவி ருங்கட்(கு)**
**உற்றமாக் கதையை யின்னு முணர்த்துவ மென்றான் சூதன்.**

(பொ - ரை):—(பிறருடைய) வஞ்சனையாலும், நெருப்பாலும், நீராலும், காற்றாலும் வரும் அகால மரணங்களும், கொடிய நோய்களும், அலைமோத வைக்கும் அவதிகளும் அவரிடத்தில் நேரா; (இதைச்) சிறந்த பொறுமையுடன் சிரவணிப்பவர்களும், உள்ளம் உருக, நாள்தோறும் பரமவேள் திருமுன் பாராயணம் செய்பவர்களும், (பிறரிடமிருந்து இந்நூலைப் பெற்று) வித்தியா விநோதராக விரித்து எழுதுபவர்களும், விருப்புடன் நினைத்த அனைத்தும், (41)

(பொ - ரை) :—ஒரு சேர நிறைவேறப் பெறுவர். இது நம் சத்திய வாக்கு என்று அறிவித்தோம்; உள்ளத்தில் அன்புடன் இதனை உணர்ந்து கொள் என்று, ஓதியுணர்ந்த சுக முனிவரும் கேட்க, வியாசர் உரைத்தருளினர்; முனிவர்களே! உரிய பழைய வரலாறுகளை, உங்கட்கு இன்னும் உணர்த்துகிறேன் என்று, சூத முனிவர் (மேலும்) சொல்லத் தொடங்கினர், (எ - று).

**(குறிப்பு)—சுகர்க்கு வியாசர் சொன்னவை இவையென்று, சூதபுராணிகர் சௌனகாதியர்கட்குச் சொல்லத் தொடங்கினர் என்பது கருத்து. இவ்விசுவ ரூப அத்தியாயத்தை ஓதுவார், எழுதுவார், உரை விரிப்பார் முதலினோர், இம்மை மறுமை வீடுபேறு எனும் மும்மைப் பயனை முறையே எய்துவரென்று மூன்று பாடல்களால் அறிவித்தபடி. (42)**

விசுவரூப அத்தியாயம் நிறைவு பெற்றது.

## 14. மந்திர மகிமை யுரைத்த அத்தியாயம்

மகமாயை யாதி மலமு டறுத்து வளர்கின்ற ஞான மினிதாய்ப்
புகவே செலுத்து மொருகாதை யுண்டு புகல்வாம் நினைக்க வரிதாம்
குகனுள முத்தி வடிவாய தண்ட கூடம்ப ராவ மனுநூற்
சுகனே யருத்தி யுடன்வீர வாகு தொழுநாள் விணோர்க டொழுதே.

**621.** போனு ரிருந்தாப தர்க்காதி யானென்று புகலுங்கை வீணை முனிவன்
ஆனாத பேரன்பு கொண்டுசெவ் வேள்கொண்ட வக்கோலநின்று தொழுதே
வானு றெனக்கண்க ணீர்பாய ரோமங்கள் வடிவத் தரும்ப இதயத்
தானுன வானந்த ஞானப் பெருக்காழி தாழ்ந்தா னுயர்ந்த புகழால்.

(பொ - ரை) :—மந்திர சாஸ்திர மரபறிந்த சுகா ! மகா மாயை முதலிய (அநியாய) அழுக்குகளை அடியொடு அகற்றி, வளரும் சிவஞானத்தை (எங்கும்) சிறக்கப் பரப்பும் (மற்றும்) ஒரு வரலாறு உளது; (உனக்கு அதை) உபதேசிக்கிறேன் ; எண்ணல் அளவைக்கு எட்டாத குகன் கொண்ட முத்தி தரும் விசுவ ரூபமானது, அண்ட கூடங்களில் அளவளாவ, (தூய) அன்புடன் வீரவாகு தேவர் தொழுது இருந்த பொழுதில், வானவர்களும் (சேவித்து) வணங்கி,

(பொ - ரை) :—சென்றனர். (அவர்களுடன் விசுவ உருவைச் சேவித்திருந்த) முனிவர்களுள் முதல்வர் என்று கூறப்பெறும் மகதியாழ் முனிவரான நாரதர், நீங்காத பேரன்புடன், செவ்வேள் பெருமான் எடுத்த அத் திருவுருவை வணங்கி நின்று, ஆகாய கங்கை போல் கண்களி லிருந்து அருவி சொரிய, உடல் மயிர் சிலிர்க்க, உயர்ந்த துதிமொழிகளுடன், உள்ளத்தில் தானே உதித்த அறிவும், இன்பமுமான கடலில் ஆழ்ந் தனர், (எ - று).

(குறிப்பு) :—மகமாயை – சுத்தமாயை. மலம் - ஆணவம், கன்மம், பிரகிருதி எனும் மூவகை அழுக்குகள். அநாதி மலம் ஆணவம்; இடைவந்த மலம் மாயை. ஊடறுத்தல் - இடையறச் செய்தல். (1)

தாபதர் - தபவேடம் தாங்கியவர். "நிலையெடுத்து நெடுநிலத்து நீயிருக்கத் தாபதர்கள், சிலையெடுத்து" எனும் சூர்ப்பணகைப் படலத்தில், கம்பர் இப் பெயரைக் காட்டியதறிக. (2)

622. நீடுஞ்ச ரற்கால மேகத்தின் மின்சார்ந் தனைக்கை வீணை நிலவப்
பீடொன்று முள்ளக் களிப்பாந்த ரங்கம் பிடித்துந்த வான முனிவன்
மூடுந்து ழாய்த்தொங்கல் மோலிப்பி ரான்விண்டு முடிவற்ற இன்பி னமரும்
பாடொன்று வைகுண்ட நல்லால யத்துற்ற பரிவோட டைந்து ளனரே.

(பொ - ரை) :—தேவ முனிவரான நாரதர், நீடித்த கூதிர்ப்பருவ மேகங்களி லிருந்து மின்னல்கள் விளைதற் போல் வீணை விளங்க, பெருமிதமான மனமகிழ்வாம் (தடித்த) அலைகள் பிடித்துத் தள்ளுதலால், துளசிமாலை தோய்ந்த முடியினரான திருமால், அளவற்ற இன்பத் தொடு அமரும் சிறப்புடைய வைகுந்தத்தின் அருமை மிகுந்த ஆலயத்தில், சிறந்த அன்பொடு சென்று சேர்ந் தனர், (எ - று).

(குறிப்பு):—சரத் காலம் - ஐப்பசி மார்கழி மாதங்கள். "மோலிப்பி ரானண்ட மூதண்ட கூட நிமிருந், தாடன் றலைக்கொண்டு நால்வேத கீதந் தலைப்பாடும் வேலை யதனின்" என்றும் பாடபேதம் உண்டு. (3)

623. பாலாழி நடுவிற் சுவேதச் செழுந்தீவு பண்புற்ற நீவி னிடையே
மேலாய வைகுண்ட பட்டினத் தானந்த மயமாய் விளங்கு வதுசீர்
மூலாக மக்கோயி லவையூடு படிகத்தின் மொய்த்துத் திரண்டு நெடிதாங்
காலாயி ரம்பெற்ற மண்டபத் தின்பங் கனிந்தான் பயத்தி னுரைபோல்.

(பொ - ரை) :—பாற்கடல் நடுவில், சுவேதம் எனும் செழித்த (ஒரு) தீவு (உளது); நலம் சிறந்த அத்தீவின் நடுவில் உள்ள மேன்மையான வைகுண்ட பட்டினத்தின் இன்பமயமாக இலகுவது, ஆகமப்படி அமைந்த ஆலயங்கள் ; அவைகளின் நடுவில், பளிங்குக் கற்களால் நெருங்கித் திரண்டு நீண்ட ஆயிரக்கால் மண்டபம் ஒன்றில், பசும்பாலின் நுரைபோல், இன்பம் முதிர்ந்து திருமால் இருந்தார், (எ - று). (4)

**624.** மெலிதாய வெண்மைத் திருச்சேட பரியங்க மிசையான பூவின் மகளும்
நிலமாது மிருபாலி னிலவச் சுனந்தனெடு விச்சுவச் சேன னுவணன்
தலையான நந்தனுயர் சனகாதி யோர்கங்கை தானுதி முந்து நதிகள்
மலர்வான் தருச்சுரபி விண்ணக மடந்தையர் வசுக்களனு சந்தர் முதலோர்.

**625.** வாயார வாழ்த்தித் துதித்துத் துதித்துள்ள மலினந் துரக்கு மதியோர்
ஓயாம லஞ்சலி செலுத்தினர் தொழத்தகைய வும்பர்க்கு ஞான வமுதம்
தாயா யளிக்கின்ற நாராய ணக்கடவு டன்முன்னர் யாழின் முனிவன்
போயாத ரத்தோடு பாதார விந்தங்கள் போற்றிப் பணிந்த பொழுதில்.

(பொ - ரை) :—மென்மையான வெண்ணிற அழகிய ஆதிசேடனாகிய கட்டிலின் மேல், மலர்மகளும் நில மகளும் இருபுறமும் இருப்ப, சுனந்தனுடன் விசுவ சேனன், கருடன், தலைமையனான நந்தன், உயர்ந்த சனகாதி முனிவர்கள் முதலினோர், கங்கை முதலிய நதிதேவதைகள், மலர்களையுடைய ஐந்தருக்கள், காம தேனு, தேவமகளிர், எட்டு வசுக்கள், அனுசந்தர் முதலினோர், (5)

(பொ - ரை) :—வாய் நிரம்ப வாழ்த்தி, இடையறாது துதி செய்து மனமாசு போக்கும் மாதவர்களாய், ஓயாமல் கூப்பிய கைகள் கூப்பியபடியே வணங்கும் தகுதியுடைய மேலவர்கட்கு, அமுதமான ஞானத்தை அன்னையாக இருந்து அருள்கின்ற நாராயண மூர்த்தியின் திருமுன்,

மகதியாழ் நாரதர் சென்று, அவரது திருவடி மலர்களை, அன்புடன் வணங்கித் துதித்த அமையத்தில், (எ - று).

(குறிப்பு):—சேடன் - சேஷன்; பிரளயத்தும் அழியாது சேஷித்து இருப்பவன் என்பது, காரணப் பொருள். சேஷித்தல் - மிச்சப்படுதல்; இவன், பகவத் அனுபவத்திற்கு இடமானவன். பர்யங்கம்-படுக்கை. விசுவ சேநர்—வைகுந்த சேனுபதி. உவணன் - பெரியதிருவடி எனும் கருடாழ்வார். நந்தன் - நித்ய சூரிகளின் தலைவர். சுநந்தர் - விஷ்ணு திக்பாலகர். மதியோர் - திருமாலை வழிபடும் நித்ய சூரிகள். ஆதரம் - அன்பு. ஞானவமுதம் - உபதேசம். (5—6)

626. புகலரு மருக்கிய மிருக்கொடு கொடுத்துமுனி புங்கவனை யங்கனகமே
நகையமணி யாசனத் தினிதிருத் திப்பசிய தண்டுளவ வணிந்த பெருமான்
முகமலர நீயிவண் விழைந்தபொருள் சோர்வற மொழிந்திடுதி யென்ற பொழுதே
அகமகிழ் சிறந்தினிசை நாரதக் கடவுண்முனி யாதரத் தோடு புகல்வான்.

(பொ - ரை):—பசுமையான குளிர்ந்த துளசிமாலை சூடிய பரந்தாமன், நாரத முனிவரை, பொலிவுள நவமணி பதித்த பொற் பீடத்தில் இனிது அமரச் செய்து, முகமலர்ச்சி காட்டி, அரிய மந்திரத்தொடு அருக்கியம் அளித்து, நீ இங்கு விரும்பி வந்த செய்தியை, சோர்விலாதபடி சொல்க என்ற பொழுது, இன்னிசை தேவ முனிவரான நாரதர், அகமிக மகிழ்ந்து அன்பொடு கூறுவாராயினர், (எ — று).

(குறிப்பு):—பல காலம் மழையின்றி, பஞ்சத்தால் மக்கள் பரதவித்தனர். அந்நாளில் உதித்தார் ஒருவர். அவர் பிறந்ததும், நரம் எனும் நன்மழை பெய்தது; அதுபற்றி அப்பிள்ளைக்கு நாரதர் எனும் பெயர் இட்டனர் என்பர். நாரம் எனும் ஞான போதகர் என்பதும் ஒருவகை; பிறவாறு கூறுவாருமுளர். (7)

**627.** உமைதந்த மைந்தன் கொடுஞ்சூ ரறுத்தரிணை யொண்டொடிமை
யானை மகளைக்
கமைகொண் டணைந்துபா ரதகண்ட வைப்பினிற் கனியுமுத் தமிழி னுடனே
யமைவின் றுயர்ந்ததண் பொருநையின் றென்றிசையி னமரர்முனி வரர்கள்
வாழ்த்தச்
சிமையந் தருங்கந்த மாதனச் சாரற் செயந்தியம் பதியி னுறையா

**628.** கொற்றவம் புயவீர வாகுவுக் காகவே கொண்டவா னந்த வடிவம்
செற்றமின் றுயர்முனிவர் கந்தருவர் விண்ணவர்க டிரிசுதந் திரர்க ளுடனே
யுற்றுநின் றெழுவடிவு கண்டுகண் டுள்ளத் துவப்படங் காமை யாலே
மற்றநின் பாதத் துரைப்பான் பொருட்டிலிவண் வந்தன னெனப்பு கலுவான்.

(பொ - ரை) :—உமையம்மை பெற்ற குமரன், கொடிய சூரர் குலத்தை வேரறுத்து; மான்தந்த மகளை, யானை மகளை, ஒற்றுமை கொள்ள உறவாடி; பரத கண்ட நிலப் பரப்பில், (அருள்) கனிந்த (இயல் இசை நாடகம் எனும்) முத்தமிழுடன் அமையாமல், உயர்ந்த குளிர்ந்த தாமிரபரணியின் தென்புறத்தில் சிகரங்களை யுடைய கந்தமாதன மலைச்சாரலில் உள்ள திருச்செந்தில் பதியில், வானவர்களும் முனிவர்களும் வாழ்த்த இருந்து,

(பொ - ரை) :—வெற்றியிற் சிறந்த வீரவாகு (சேவித் தற்) பொருட்டுக் கொண்ட வானளாவிய விசுவ ரூபத் தில், பொருந்தி எழுந்த பல உலகுகளை, மோதலின்றி உயர்ந்த முனிவர்கள், கந்தருவர்கள், தேவர்கள், திரிசுதந்தரர்களுடன் வெகு நேரம் தரிசித்து, (அதனா லான) மகிழ்ச்சி அடங்காமையால், உமதடிக்கீழ் (அதை) உரைத்தல் பொருட்டு இங்கு வந்தேன் என்று, (மேலும்) கூறத் தொடங்கினர், (எ - று).

(குறிப்பு) :—அரிணம் - மான். வைப்பு - நில எல்லை. வான் அந்த வடிவு - எழுந்த உலகத் தோற்றங்கள். மன்ற என்பது, எதுகை நோக்கி மற்ற என்று திரிந்தது. (8—9)

**629. பாரதப் போரிற் றனஞ்சயற் காகநீ பாலித்த வடிவு கண்டேன்**
**சூருடைத் தண்டகா ரணியத்தின் மாதவன் றோழற்கு நன்கு வாய்ந்த**
**மேருவிற் சங்கரன் காட்டுந் திருக்கோல மேவரக் கண்டு தொழுதேன்**
**ஆருமச் சுறவதரி காச்சிரம மதனிலே யரியநர நார ணர்களாம்.**

**இருவோர் தமக்குமொரு காலாக் கினிக்கடவு ளின்பத் தெடுத்த வடிவம்**
**பிரியாது கண்டுகண் டுள்ளங் களித்தனன் பிரமன் றொழிற் கூடவும்**
**பரமே சுரக்கடவுள் மேருமால் வரையினிடை பண்டுகொண் டுள்ள வடிவம்**
**ஒருவாது நின்றுகண் டுள்ளங் களித்தன னுரைக்கடங் காத குமரன்.**

## வேறு

631. கொண்டி ருந்தவிக் கோலத்தைப் போலயான்
கண்டி லேனிது காரண நின்னடிப்
புண்ட ரீகத்தைப் போற்றிப் புகல்வதற்
கண்டி னேனென் றருண்முனி சாற்றினான்.

(பொ - ரை) :—பாரதப் போர்க்களத்தில் பார்த்தனுக் காக நீர் எடுத்த விசுவ உருவைப் பாத்திருக்கிறேன்; அச்சம் விளைவிக்கும் தண்டக வனத்தில், மாதவனும் (உமது) தோழன் அர்ச்சுனனுக்கு, வியனுற வாய்த்த மேருவை வில்லாக் கொண்ட சிவனார் காட்டிய கோலத்தைச், சிறக்கத் தொழுது சேவித்தேன்; எவரும் அஞ்சுமாறுள பதரிகாசிரமத்தில், அருமை நர நாரா யணர்களான,

(பொ - ரை) :—இருவருக்கும், ஒப்பற்ற காலாக்கினி உருத்திரர் இன்பமாகக் கொண்ட விசுவ உருவை, இடையறுது சேவித்து, (இடம் பெயராது நின்று) இன் புற்றேன்; பிரமனுக்குப் படைப்புத் தொழிலைக் காட்டித்

தர, மேருமலையில் முன்பொரு சமயம் பரமேசுவரர் கொண்ட விசுவ ரூபத்தை, நீங்காது கண்டு கண்டு மனம் களித்தேன்; சொல்லளவிற் சொல்லிக் காட்ட முடியாத குமரன்,

(பொ - ரை):—எடுத்த இந்த விசுவரூபத்தைப் போல், கடையேன் (என்றும் எங்கும்) கண்டிலன்; இதன் உள் புல நுட்பத்தை, உமது திருவடிக் கமலங்களைத் துதித்து அறிந்து கொள்ள அணுகினேன் என்று, அருளுடைய நாரதர் அறிவித்தார், (எ - று).

(குறிப்பு):—திருக்கோலம் - பாசுபதம் தந்த காலத் தரிசனம். வதரிகாசிரமம் - வடநாட்டில் உள்ள ஒரு திருமால் திருப்பதி; "போவதரி தானலும் போய்த் தொழுவோம் நெஞ்சமே, மாவதரி யாச்சிர மத்து" என்பது நூற்றெட்டுத் திருப்பதி யந்தாதி; இது நியதியான புண்ணிய தீர்த்தங்கள் நிறைந்தது; நெடும் தேவாலயங்களை யுடையது; கலி தோஷம் தீர்க்கக் காரணமானது; இங்குதான் நர நாரா யணர் இருக்கின்றனர் என்பர்.

'மாதவன் தோழற்கு' என்பதற்கு, மாதவன் ஆகிய தோழனுக்கு எனப் பொருள் கொள்வதும் ஒருவகை. இப்பொருட்கு ஏற்ப, தண்டகாரணியத்தில் தவங்கிடந்த இராமனுக்குப் பாசுபதமும், இராவணனை வெல்லும் ஆற்றலும் அருளிய சிவபிரான், இராமன் காணுமாறு தன் விசுவ உருவைக் காட்டினன் என வடமொழி ஜயந்தி க்ஷேத்ரமகாத் மியம் கூறுகிறது.

காலாக்கினி யுருத்திரர்-அநந்தருடைய மூர்த்திபேதம்; இவர், பிரளயத்தில் உலகங்களை சம்மரிக்கும் உருத்திர முதல் வர். பிருதிவி எனும் பிரமாண்டத்தை அதிட்டித்து இருப் பவர் என்பதும் இங்கெண்ணத் தகும். கூட - கைவல்யமாக. அண்டுதல் - அணுகிவரல். (10-11-12)

632. நார தன்சொல நாரணன் கேட்டுப்புன்
மூரல் கொண்டு முழங்கித்தன் வைகுண்டத்(து)
ஊர டங்கலு மொண்ணில வுக்கருப்
பூர வெள்ளைப் புதுக்குவித் தானரோ.

(பொ - ரை) :—நாரதர் கூற, திருமால் (அவைகளைத்) திருச்செவி யேற்று, புன்னகை புரிந்து, (நகை) ஒலி யெழுப்பி, (சிரிப்பின்) பேரொளியால், தன் வைகுண்டப் பதியில் (உள்ள மாளிகைகள் முழுதும்,) புனித கருப்பூர வெள்ளைகளைக் கொண்டு புதுக்கியது போல் ஆக்கினர்,

(குறிப்பு) :—ஆரம்பத்தில் புன்னகை; அடுத்துப் பெரு நகை முழக்கம்; பற்களின் ஒளி, எங்கும் பிரகாசத்தை எழுப் பியது என்க. (13)

633. கருணை கொண்ட விழியின் கத்தூரியால்
இருடி மேனிக்கு லேபன மப்பிவான்
பருவ மாமுகில் போலும் படிவத்தான்
திருவி ருந்தின் பவளச்செவ் வாய்விண்டான்.

(பொ - ரை) :—பருவகால மேகம்போல் (திகழும்) திருமேனியரான திருமால், கருணை கொண்ட கண்மணி யான கஸ்தூரியால், நாரதரது (வெண்மைத்) திருமேனிக்குக் கருஞ் சாந்து சாத்தி, திருமகட்கு விருந் தாகிய செவ்விய பவளத் திருவாய் திறந்தார், (எ - று).

(குறிப்பு) :—வந்த அயர்வு வழிவிலக, விருந்தினர் உடலில் லேபனம் பூசுவது பழைய மரபு. கருவண்டு போன்ற திருமால் கண்ணொளி, பக்த நாரதர் திருமேனி முழுதும் பரவியது. அது, அவர் திருமேனியில் லேபனம் அப்பியதுபோல் இருந்தது என்றபடி. (14)

634. தத்து வக்கட னீந்தத் தகைமைசார்
முத்த ருக்கு முதன்மைய தாம்பரி
சுத்த யாழ்முனி சொல்லுவன் கேளென
வித்த கத்துப தேசம் விளம்புவான்.

(பொ - ரை) :—தத்துவங்களாகிய (பொருட் பிரபஞ்சக்) கடலை நீந்திக் கரைசேரும் அத் தகுதியுள சீவன் முத்தருக்கு, முதன்மைத் துணையான தூய யாழ் முனிவா! கூறுகிறேன் கேட்டருள் என்று, அறிவான உபதேசத்தை அருளத் தொடங்கினர், (எ - று).

(குறிப்பு) :—கங்குகரை யற்றதாய், அளவு காண முடியாத ஆழமான பல நுட்பங்கள் அமைந்த தொண்ணூற்றாறு தத்துவங்களை, 'கடல்' என்று உருவகித்தபடி, (15)

635. கயிலை மால்வரைக் கண்ணுதல் மூர்த்தியும்
துயிலும் யாமுமொன் ருகிக் குகனுருப்
பயிலு மந்தப் பசுபதி யைம்முகத்(து)
இயலு நம்முக மெய்திய தாறென.

(பொ - ரை) :—திருக்கயிலைத் திருமலையின் நெற்றிக் கண்ணரான நின்மலரும், (பாற்கடலில்) பள்ளி கொள்ளும் யாமும் ஒன்று கலந்து, பசுபதியான அச் சிவனரது ஐம்முகத்துடன், இயல்பா யிருக்கும் நம் திருமுகமும் கூடி, ஆறு (திருமுகங்கள்) எனப் புனித குகன் உருவாகப் பொருந்தும், (எ - று).

(குறிப்பு) :—மலைமேல் சிவபிரான்; நீர்மேல் யாம். அவர் அறிவுக் கண்ணர்; அறிதுயில் கண்ணன் யாம்; அவர் பசுபதி; யாம் பசுக்களின் தலைவன். நாற்புறமும் மேற்புறமுமான ஐம்முகத்தர் சிவபிரான்; கீழ்நோக்கிய அதோமுகம் எம்முகம். அவர் திருமேனியும் எம் உருவும் இணைந்தபோது, அத்திருவுருவம் குகன் எனும் பெயரில் குறிக்கப்பெறும்.

அவ்வுருவின் எம் இருவர் முகங்களும், ஒருங்கு இயைந்து அறுமுகம் ஆயின என இதுமுதல், பின்வரும் பாடல்களே 'வித்தகத்து உபதேசம்' என்றறிக. (16)

636. இறைவன் திண்புயம் எட்டுமட் டார்துழாய்
நறைகொள் நம்புய நான்குமுன் னுன்கதாம்
விறல்கொள் அம்புய மேயவெஞ் சூலமும்
பொறைகொ ளாழியும் பொற்பமர் சத்தியாய்.

637. ஏக மாக இருதலைச் சூலமே
ஆகு மந்த அரன்கலை யாகிய
மாக வான்சுட ராய்நம் வலக்கணின்
பாக மாகி யெழும்பிர பஞ்சத்தை.

638. உண்டு பண்ணும் விட்சேபத் துயர்சத்தி
மண்ட லந்தொழ வள்ளியென் றுற்றனள்;
விண்டு வின்வடி வாக விளங்கிய
எண்த ருஞ்சந் திரகலை யென்பதாய்.

639. இயவு ளாயிடக் கண்ணெனும் ஆநந்த
மயம தாகி வரும்பரி பூரண
உயர்வு நீக்கியுள் ஆவர ணப்பெயர்
அயர்வி லாதுயர் வாகிய சத்தியே.

640. கூற ருந்தெய்வக் குஞ்சர மாதென
மாறி லாதுதித் தாளந்த மாதரே
ஆறு மாமுகற் காமிரு சத்தியும்
வேறி லாது விளங்கும் பிரமமே.

(பொ - ரை) :—சிவபிரானது திண்ணிய எட்டுத் திருத்தோள்களும், தேன் நிறைந்த துளசியின் நறு

மணம் கமழும் நம் தோள்கள் நான்கும் (ஒன்று கலந்து, பரம குமரன் தோள்கள்) பன்னிரண்டாயின ; வெற்றிப் பெருமிதம் கொண்ட (சிவனார்) திருத்தோளில் ஏந்திய உக்கிரமான சூலமும், பாரம் கொண்ட (நம்) சக்கரப் படையும், பொலிவுள நிறைஞான சக்தியாகி,

(பொ - ரை):—ஒன்றுபட்டு, இருதலைச் சூலமே ஆகும் ; அநாதி நித்தியமான சிவகலையாய், விண்ணில் உள்ள சூரியனாய், நம் வலக் கண்ணின் இடமாகி, தோன்றும் உலகத்தின்,

(பொ - ரை):—(பந்தங்களை) நீக்குதலால், (பயனை நிலையை) உண்டாக்கும் உயர்ந்த (விட்சேப) சத்தியே, வள்ளி யெனும் பெயருடன், உலகம் வணங்க உதித்தனள்; விண்ணின் இனிய வடிவாகி, (தியானத்தில்) விளங்குகின்ற எண்ணத்தக்க சந்திரகலை யென்பதாய்,

(பொ - ரை):—ஆயும் தெய்விக (நம்) இடக்கண் இடமாகி, இன்பவடிவாகி, நிறைவின் உயர்வு தோன்றுதபடி விலக்கும் ஆவரணம் எனும் பெயர் தாங்கி, சோர்விலாது எழும் கம்பீரமான (திரோதான) சத்தியே,

(பொ - ரை):—சொல்லற்கரிய (சிறப்புடைய) தெய்வயானை யெனும் பெயரில், மாறுபாடு இல்லாதபடி மலர்ந்தனள் ; அந்த அம்மையர் இருவருமே ஆறுமுகப் பெருமாற்கு அமைந்த (இச்சை கிரியை யெனும்) தேவியர் (ஆயினர்) ; (இங்ஙனம்) பிரமம் (எனும் அப் பெரிய பொருள்,) வேறுபாடு இல்லாமல் விளங்குகின்றது, (எ - று).

**(குறிப்பு) :—' சூலமும்... ஆழியும்... சத்தியாய், ஏகம் ஆக இருதலைச் சூலமே ஆகும்'; 'பிரபஞ்சத்தை உண்டு பண்ணும்**

விட்சேப...சத்தி...வள்ளி'; 'சந்திரகலை யென்பதாய், இயவுளாய்', 'ஆவரண சத்தியே...தெய்வ குஞ்சர மாது' எனக் கூட்டிப் பொருள் கொளப் பெற்றது. விட்சேபம் - (பாசத்தை) விலக்குவது. விண்டு - ஆகாயம். இயவுள் - தெய்வீகம். ஆவரணம் - மறைப்பு. (17, 18, 19, 20, 21,)

## வேறு

**641.** சுப்பிர மணிய னென்று சொலும்பெயர் பதமூன் றாகும்
அப்பதத் திடையுண் டான அரும்பதஞ் சிவனும் ஈற்றின்
மெய்ப்பதஞ் சிவனை யேத்தும் விண்டுவின் வடிவாம் முன்னஞ்
செப்புறு பதமி ரண்டு பதங்களைச் சேர்ந்து காட்டி.

**642.** ஒப்பறும் அயிக்ய மாக வுரைத்தலால் உரைக்க வொண்ணு
மைப்படி மிடற்றி னானும் மாலெனு நாமு மாக
முப்புவ னங்க ளேத்த மூலமு முடிவு மில்லாச்
சுப்பிர மணிய னாகச் சொல்லுநால் வேத மாதோ.

(பொ - ரை):—சுப்பிரமணியன் என்று சொல்லும் திருப்பெயருள், (அரிய) மூன்று பதங்கள் அமைந்திருக்கின்றன; அப்பத (ம் மூன்றுள்,) நடுவில் உளதான (பிரஹ்ம எனும்) அரிய பதம், சிவன் என்பதாம். இறுதியில் இருக்கும் (ந்ய எனும்) மெய்ம்மைப் பதம், சிவத்தைச் சிந்திக்கும் திருமால் எனும் நம் சொரூபமாம்; முன் (சு என்று) சொல்லப் பெறும் பதம், (பின் இருக்கும் ப்ரஹ்ம ந்ய எனும்) இரு பதங்களையும் இணைந்து விளங்கி,

(பொ - ரை):—ஒப்பற்ற அத்துவிதமாக உரைக்கப் பெறுதலால், (சொல் பொருள் துணை கொண்டு) சொலற்கரிய நீலகண்டரும், திருமால் எனும் யாமுமே, மூவுலகும் துதிக்க, காரணமும் இறுதியும் கடந்த சுப்ரமண்யன் என்று, (உயர்ந்த) நான் மறைகள் ஓதுகின்றன, (எ-று).

(குறிப்பு) :—ஸுப்ரஹ்மண்யோம் என்பது, மாபெரும் தெய்வவேத மந்திரம் ; ஸு-தூய இன்பம் ; ப்ரஹ்மம்-பெரிய பொருளாம் ஞான ஆகாயம் ; ந்யம்-(அனுபூதியில், அப்பிர மத்திலிருந்து) வெளிப்பட்டு விளங்கும் ஒளி ; இம்மந்திரப் பொருள் இது. "ஆநந்த சொரூப லட்சண அவிகார பரம் பொருளினிடத்தி லிருந்து உதயமாகி, (1) ஞானப்பிரகாசம் ; (2) ஞானுகாசப் பிரகாசம் ; (3) சர்வஞான வியாபகப் பிரகாசம் ; (4) சுத்தஞான சாட்சிப் பிரகாசம் ; (5) சர்வ பரிசுத்த பரம ஞானனந்த அருட்பிரகாசம் ; (6) அநாதி நித்தியப் பிரம ஞானனந்த சிவப்பிரகாசம் எனும் அனுபவ சொருபமே சுப்ரமண்யம்" எனும் பயனுன குறிப்பை, ஸ்ரீ சுப்ரமண்ய வியாசத்துள் ஸ்ரீ பாம்பனடிகள் அருளியுளர் ; அதையும் இங்கு அறிந்து கொள்ளல் நலம்.

' பிராம்மணர்கட்கு யாம் முக்கிய தெய்வம் ; ஆதலின் யாம் பிரமணியம் ஆவேம் ; நம் புதல்வன் பெரிதும் யாவ ராலும் போற்றப் பெறும் சுப்ரமண்யன் என்று, மகாஸ்காந்த புராண சம்பவ காண்டம், இப்பெயர்க்கு இங்ஙனம் வேறு ஒரு பொருளும் கூறுகிறது. (22-23)

643. சரவண பவனென் றேதுந் தாவறு பதங்கள் மூன்றிற்
பரவுறு சரமென் றுய பதமது சலமே யாகும்
வருவநம் வாச மிந்த வான்பத மிரண்டும் பார்க்கில்
அரிதுமா தவத்து நாரா யணனெனு மருத்த மாமால்.

644. இயலுறு பவனென் றேது மிரும்பதஞ் சிவன்று னுரும்
மயலற இரண்டு மொன்ருய் வழுத்திலா றெழுத்தே யாகும்
பயனெருங் குணரின் ஞானப் பரம்பொருட் சிவனதாய
சுயவடி வாகு மென்றே சொல்லுநான் மறைக ளம்மா.

(பொ - ரை) :—சரவண பவன் என்று உருவேற்றப் பெறும் குற்றமற்ற மூன்று பதங்களுள், துதிக்கப் பெறும் சரம் என்று அமைந்த பதம், (புனித) நீர் எனும் பொருளேயே தரும் ; (அதன்பின்) வரும் வநம் என்பது,

இருப்பிடம் (எனும் பொருளது); சிறந்த இந்த இரு பதங்களையும் ஆய்ந்து நோக்கினால், அரிய பெரிய தவத்தை யுடைய **நாராயணன்** எனும் பொருளை யளிக்கும், (எ — று).

(பொ - ரை):—இயல்பாக அமைந்த **பவ** எனப்பெறும் சிறந்த பதம், **சிவன்** எனும் பொருளைத் தரும்; மயக்கம் இல்லாதபடி, (சரவண-பவ என) இரு பகுதிகளையும் ஒன்றுக்கி உச்சரித்தால், ஆறு எழுத்துக்கள் என்று ஆகும்; (இவைகளின் உயர்ந்த) பொருளை ஒரு சேர உணர்ந்தால், ஞான சொரூபப் பரம் பொருளான சிவ பிரானது இயற்கைத் திருவுரு என்று ஆகும் என, (உயர்) நான் மறைகள் ஓதுகின்றன, (எ - று).

**(குறிப்பு):—சரவண பவன், நாராயணன் எனும் இரு நாமமுள; சரம் - நீர்; வநம் - வசிக்குமிடம்.**

நாரம் - நீர்; வநம் - வாழும் இடம் என்று பொருளாகின்றமையின், இவ்விரு நாமங்களும், திகழும் நீர் வண்ணரான திருமால் எனும் பொருள் தரும் அன்மொழித் தொகை. ஒரு மொழியில், ரகரத்தின் முன் நகரம் வருமேல், அது ணகரமாத் திரியும் எனும் விதிப்படி, சுப்ரஹ்மந்ய, சரவந, நாராயந எனும் திருப்பெயர்கள், சுப்ரஹ்மண்ய, சரவண, நாராயண என்று ஒலிக்கும். மந்திரமாக உச்சரிக்கும் போது, சுப்ரஹ்மண்யோம், ஓம் சரவணபவாய, ஓம் நாராயணாய என ணகரம் பொருந்தவே உச்சரிக்க வேண்டும்.

இவைகள் மலரகித மந்திரங்களாதலின், தாவறு என்று அடை புணர்த்தினர். தா அறு - குற்றம் அற்ற. வாசம் - வசிக்கும் தலம். வான்பதம் - உயர்ந்த மொழி. அருத்தம் - பொருள். இரும்பதம் - செம்மை மொழி. மயல் அற - விபரீத புத்தி விலக. பயன் - பொருள். ஒருங்கு உணரில் — ஒன்றியிருந்து உணர்ந்தால். சுயவடிவு - சொந்த சொரூபம்.

> "நவ்வாதிய சவ்வாதிய நலஞ்சேரெழுத் தோதி
> எவ்வாறருள் பெற்றார்"

என்று திருப்பரங்கிரிப் புராணம் தெரிவிக்கிறபடி, ஓம் நமசிவாய, சரவணபவ என்பவைகள், ஆறெழுத்து மந்திரங்கள் எனலே யறிவம். ச - மங்களம்; ர - ஒளி; வ - அமைதி; ந - போர்; இந் நான்குடன், பவன் - தோன்றியவன் என்று, புனித மேலோர் இப்படியும் பொருள் கண்டுளர். இம் மந்திரம் சடக்கரம், சடக்கர நவாட்சரம், சடக்கர தசாட்சரம் என மூன்றுகவும் எண்ணப் பெறும். ஓம் - பரமான்ம உருவம்; ஐம் – வாக்கு சித்தி; க்லீம் - உலக வசியம்; ஸௌம் – தேக பலம்; ஶ்ரீம் - பெருஞ் செல்வம்; ஹ்ரீம் - நிலவளம் என்று பொருள் தரும் இவைகளைக் கூட்டி உருவேற்றி, உயர்ந்தோர் பலர் உலகிலுளர்; மற்று, சரம் - நாணற் புற்கள்; வநம் - செறிவு; நாணல் சூழ் பொய்கையில் உதித்தவன் என்பதும் உண்டு; இப்பொருளெல்லாம் ஒருசார் பொருந்த, வென்றிமாலைக் கவியரசர், இம்மந்திரங்கட்குக் கொண்ட பொருள் கோடி பெறும். (24-25)

645. மலர்குகன் றான மாவ மயர்வற வகுக்குங் காலை
நிலமணல் சுக்குப் பாறை நிகழ்தருங் கல்லு நான்காம்
குலமவை நமக்கும் வேற்கைக் குமரற்குந் தான மாகும்
பலனுறு நிலனும் மற்றப் பருப்பதஞ் சிவனு காரம்.

(பொ - ரை):—குகன் (அருள்) மலர் இடங்களை, மயக்கம் இல்லாமல் வகைப்படுத்தி உரைக்கும் பொழுது, நிலமும், மணலும், பருக்கைக் கற்களை உடைய பாறையும், (எங்கும்) விளங்கும் மலையும் எனவுள நான்கு இடங்களும், நமக்கும், வேல் திருக்கரக் குமரனுக்கும் (உரிய) இடங்கள் ஆகும்; பயன் விளைவிக்கும் நிலம் நம் சொரூபம்; அடுத்த மலை நிலங்கள், (வரத) சிவனுர் வடிவமாம், (எ - று).

(குறிப்பு):—குலம் - தொகுதி. நிலன் நாம் எனப் பிரிக்க. ஆகாரம் - சொரூபம். இதய குகையில் இருக்கும் பிரணவ

ஆகாயத்துள், பரம ஆகாயமான அதிரகஸ்யப் பரம்பொருளை, 'குகன்' என்று சுருதிகள் குறிப்பிடுகின்றன. சுக்கு - பருக்கைக் கல். (26)

**646. தரையிடன் நாமும் மற்றைத் தடவரை சிவனு மாக**
**மருவுமவ் இடங்க ளெல்லாம் மயூரவா கனத்தி னற்குப்**
**பொருவரும் இடன தாகப் பொருந்துமென் றெடுத்துக் காட்டிச்**
**சுரர்தமக் கமுத மீந்த துழாய்ப்புயல் பின்னுஞ் சொல்வான்.**

(பொ - ரை) :—நிலம் முழுதும் எம் சொரூபமும், மற்றைய சிறந்த மலைகள் சிவனார் சொரூபமுமாக, அந்த இடங்கள் அனைத்தும், மயிலேறும் பெருமாற்கு, ஒப்பற்ற (புனித) வாசத்தானமாகப் பொருந்தும் என்று விரிவாக எடுத்து விளக்கி, வானவர் தமக்கு அமுதம் வழங்கிய துளசீதரரான திருமால், மேலும் சொல்வா ராயினர், ()

**647. வேங்கட வரையும் அந்தவேங்கட வெற்பின் மீதில்**
**ஆம்குக னேரித் தீர்த்த மானதும் அசலத் தூடு**
**பாங்குறு மூர்த்தி தானும் பன்னிரு புயனும் வாசத்**
**தேங்கமழ் துளபம் சூடும் யானுமாய்ச் சிறந்து ளோமால்.**

(பொ - ரை) :—திருவேங்கட மலையும், அவ் வேங்கட மலைமேல் உள்ள குகனேரித் தீர்த்தமும், (அம்) மலை நடுவில் முதன்மையுடன் இருக்கும் மூர்த்தியும், பன்னிரு தோள் குமார பரனும், மணம்கமழ் துளவ மாலை யணிந்த யாமுமாகச் சிறந்துளம், (எ - று).

(குறிப்பு) :—வேம் – பாவம் ; கடம் - எரித்தல் ; எனவே, பாவத்தை யழிக்கும் பரமபதி திருவேங்கடம் எனப்பெறும். மற்று, வேம் - அழிவின்மை ; கடம் - செல்வம் என ஆதலின், அழியாத் திருவைத் தன்னை யடைந்தார்க்கு அருள்வது எனினுமாம். இத் திருக்கோயிலின் முன்னிருக்கும் குளம், குகனேரி எனப்பெறும். "கோனேரி வாழும் குருகாய்ப் பிறப் பேனே" என்றார் குலசேகராழ்வார். இப்பதி, முருக தலமென்றே அருணை முனிவர் திருப்புகழ் அருளியுளர்.

**648.** "தாழ்சடையும் நீண்முடியு மொண்மழுவுஞ் சக்கரமும்
சூழரவும் பொன்னாணுந் தோன்றுமால்—சூழுந்
திரண்டருவி பாயுந் திருமலைமே லெந்தைக்கு
இரண்டுருவு மொன்றா யிசைந்து"

"அரன் நாரணன் நாமம் ஆன்விடை புள்ளூர்தி
உரைநூல் மறையுறையுங் கோயில்—வரைநீர்
கருமம் அழிப்பளிப்புக் கையதுவேல் நேமி
உருவமெரி கார்மேனி ஒன்று"

எனச் சிவ விஷ்ணு அபேதம் வெளிப்பட, முதலாழ்வார் அருளிய நலமும் இங்கு அறியத்தகும். (28)

**649.** நெருப்புறு கலைமுன் மூன்றும் நிலமகள் கமலை நீலி
பொருந்துநான் குடனைந் தாறு வதுமுறை புரையிலாத
உருத்திர னிகரி லீச னுயர்சிவன் கலையிவ் வாறு
திருத்துகார்த் திகையோ ராருஞ் சிவனுமால் வடிவு மாமால்.

(பொ - ரை):—கார்த்திகை நட்சத்திரத்தில் அமைந்த முதல் மூன்று பகுதிகளும், நிலமகள், கமலத்தில் வீற்றிருக்கும் திருமகள், நீல நிறமான மலைமகள் (எனும் மூன்று கலைகளாம்); பொருந்திய நான்கும் ஐந்தும் ஆறும் ஆகிய பகுதிகள், முறையே ஒப்பிலாத உருத்திர, மகேச சதாசிவர்களின் கலைகளாம்; இவ்வண்ணம் திருந்திய கார்த்திகை, ஒப்பற்ற ஆறு பகுதிகளாகி, சிவசொருபமும், (எம்) வடிவுமாகி யிருக்கின்றன, (எ - று).

(குறிப்பு):—நெருப்பு என்பது, கார்த்திகையின் பல பெயர்களுள் ஒன்று. (29)

**650.** ஆயஇத் தன்மை யாலே அளப்பறும் ஆரல் நாளிற்
சேயினுக் குரித்தாம் ஓமம் செபமுப வாசம் பூசை
நேயமோ டியற்றி லீச னெடியமால் விரதத் துள்ள
தூயநற் பலன்க ளெல்லாந் துகளறக் கொடுக்கு மாதோ.

(பொ - ரை) :—ஆன இந்த இயல்பின்படி, அளவற்ற (சிறப்புடைய) கார்த்திகைத் தினத்தில், முருகற்கு உரிய ஓமம், செபம், உபவாசங்கள், (உயர்) வழிபாடு (முதலியவைகளை) அன்புடன் செய்தால், சிவபிரான், திருமால் (ஆன எங்கட்கு உரிய) நோன்புகளை மேற் கொள்வதால் உண்டாகும் தூய நலஞ் சிறந்த பயன்கள் அனைத்தையும், குற்றமகல (க் குமரன்) கொடுப்பன், ()

(குறிப்பு) :—ஆரல் - கார்த்திகை. துகளறல் - மூலமல ஆற்றல் கெடல். "நிலமகள், திருமகள், நீளாதேவி எனும் எமது முக்கலைகளும், பிரதமை, துதியை திருதியை எனப் பெறும். சதுர்த்தி, பஞ்சமி, சஷ்டி எனும் மூன்றும் சிவ கலைகள் ; சிவவிஷ்ணு சொரூபமான இந்த ஆறு நாட்களும் கிருத்திகா தேவிகள்" என வடமொழி ஜயந்தி மகாத்மியம் உரைப்பதும், இங்கு உணரத்தகும். (30)

651. அகரமும் உகரந்தானும் அளப்பரும் மகரந்தானும்
எகினவா கனனும் நாமும் ஈசனு மாகும் அந்த
உகரமே குமரனாகும் உயர்ந்தெழு மகரந் தானும்
அகரமும் தெய்வ மாதும் வள்ளியு மாகு மம்மா.

(பொ - ரை) :—அளவிட்டுக் கூற முடியாத அகரமும், உகரமும், மகரமும், (முறையே) அன்ன ஊர்தியனை பிரமனும், நாமும், உருத்திரனும் (எனும் பொருளுடை யன) ஆகும் ; (மற்றொரு வகையில்,) அந்த உகரமே குமரன் ஆகும் ; உயர்ந்து எழுந்த அகரமும், மகரமும் வள்ளி தெய்வயானை யம்மையர்க்கு இடம் ஆகும்,

(குறிப்பு) :—அகரம் தேவயானை என இங்கு உரை செய்வாருமுளர். இருபுறமும் பிரம ருத்திரர் இருப்ப, நடுவிருப்பம் யாம். அகரமும் மகரமும் இருதேவியர் ; அவர்கட்கு நடுவிருப்பன் குமர நம்பன். இவ்வகையில் யாமே குமரன் ; குமரனே யாம் எனும் திருமால் உபதேசம், உணர்வார் உள்ளம் நெகிழ்தலுறும். (31)

**652.** உரைதரும் எழுத்து மூன்றும் உரைக்கடங் காது நின்ற
பிரணவ வடிவ மாகும் பெண்களோர் இரண்டு பேரும்
சரவண பவனும் ஒன்றுய்த் தனித்தஃதோங் கார மாகும்
சுருதியாழ் முனிவ வுண்மை சொற்றன மென்றுன் மாயோன்.

(பொ - ரை) :—உரைத்த (அம்) மூன்று எழுத்துக்களும், சொற்பிரபஞ்சங்கட்கு அப்பாற்பட்டு இருந்த பிரணவ சொரூபம் ஆகும். இரு தேவியரும், சரவண பவனும் ஒன்று சேர்ந்து தனித்ததே, (அந்த) ஓங்கார சொரூபம். மகதியாழ் மாதவ! (இந்த) உள்பொருள் மறையை, (உனக்கு வெளிப்பட) ஓதினம் என்று திருமால் அருளினர், (எ - று).

(குறிப்பு) :—பிரணவம் பிரிந்தால், அகரம் உகரம் மகரம்; அகரத்தில் வள்ளியார்; உகரத்தில் முருகன்; மகரத்தில் தேவயானை. பிரிநிலை யின்றி ஒன்றுபடும் பொழுது, ஓங்கார சொரூபம். 'ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே முருகன் உருவம்' எனும் கந்தரலங்காரம் இங்குக் கருதத் தகும். (32)

**653.** நாரதற் குரைத்துச் செங்க ணரணன் முனிவ ரோடுஞ்
சீரினுக் கழகு செய்யுஞ் செயந்தியம் பதியின் முன்னம்
தாரகற் றடிந்த செவ்வேள் சரித்திர மினிது காண்பான்
காருடப் பிடர்மேற் கொண்டு கந்தமா தனத்திற் போந்தான்.

(பொ - ரை) :—செங்கமலக் கண்ணரான திருமால், நாரதற்கு (இவைகளை) விரித்துரைத்து, (அம்) முனிவருடன், அழகிற்கு அழகு செய்யும் செந்திற் பதியில், முன்பொரு சமயம் தாருகனை யழித்த செவ்வேள் பரனின் திருவருட் செயல்களை இனிது கண்டு, (உயிர்கட்குக்) காட்டற் பொருட்டு, கருடன் பிடர் மேல் அமர்ந்து, கந்த மாதனத்தில் வந்து சேர்ந்தார், (எ-று).

**654.** கருடவா கனமேற் கொண்டு கண்ணனுங் குற்ற காலை
முருகவேள் சென்று பூசை முறைபிற ழாது செய்யக்
குருபர னுவப்பப் பூசை கொண்டல்மே னியனுஞ் செய்தான்
இருவருங் களித்துக் கந்த மாதனத் தினிது புக்கார்.

(பொ - ரை):—கருட ஊர்தியின் மேல் இருந்து (கமலக்) கண்ணன் அங்கு வந்த அமயத்தில், முருக வேள் (எதிர் கொண்டு) வந்து, முறைதவறுது வர வேற்று வழிபட, கொண்டல் வண்ணரான திருமாலும், குருநாதனை குமரன் குதூகலிக்கும்படி, (சிறப்பான) வழிபாட்டை (த் திருப்பிச்) செய்தார்; (அதன் பின்) இருவரும், (அகம் மிக) மகிழ்ந்து, இனிது கந்தமா தனத்தில் இருந்தனர், (எ - று).

(குறிப்பு);—திருமாலும் முருகனும் வேறுவே றல்லர், அதனுடன் மாமனும் மருகனும் எனல் ஒருவகை. ஆண்டானும் அடிமையும் என்பது ஒரு நடை. இந்த விசித்திர அனுபவ விலாசத்தை, அனுபூதிமான்கள் அறிந்துளர். வழிபடு நிலையை உயிர்கள் உணர, இப்படி ஆடல் காட்டும் அருமையை வேறு பிறர் அறிய இயலாதே! (34)

655. வேதனும் விமான மாக விளங்கிய சிமயக் கந்த
மாதனத் திருந்தான் கந்த வரைச்சகந் நாத மூர்த்தி
ஆதரத் தகில மெல்லாம் அற்புதத் தளித்தான் நேமிச்
சீதரப் புத்தே டானுஞ் செயந்தியம் பதியிற் புக்கான்.

(பொ - ரை):—பிரமனும் விமான உருவாக, விளங்கிய உச்சியை யுடைய கந்தமாதனத்தில் இருந்தனன்; (அக்) கந்தமாதனத்துள உலகநாதப் பெருமான், அன்பால் உல கம் அனைத்திற்கும் (பரம) அற்புத அருளைப் பாலித்தார்; திருவாழி யேந்திய திருமகள் கேள்வரான திருமாலும், செந்தில் பதியில் சேர்ந்து இருந்தார், (எ - று).

(குறிப்பு) :— சீதரன் – திருமகள் மார்பன். மூர்த்திகள் மூவரும், குமரனை முன்னிட்டு, இப்பதியில் கலந்து இருக் கின்றனர் என்பது கருத்து. (35)

656. விண்ணள வாரச் சாரல் விசயமாங் கோயில் தன்னிற்
கண்ணகன் தீர்த்த மான கந்தபுட் கரிணிப் பாங்கர்
எண்ணினர்க் கெண்ணி யாங்கே யின்னருள் புரிந்து வானிற்
பண்ணவர் பரவ வேற்கைப் பரமன்வீற் றிருந்தான் மன்னே.

(பொ - ரை):—விண்ணை யளாவி உயர்ந்த அம்மலையின் வெற்றியான திருக்கோயிலினுடைய பெருந் தீர்த்தமான கந்த புட்கரணியின் பக்கத்தில், நினைவார்க்கு நினைத்த யாவும் அமைய இனிய அருள் பாலித்து, வானவருடன் முனிவர் வணங்கி வழிபட, வேலிறைவன், எழுந்தருளி யிருந்தனன், (எ - று).

**657.** முனைச்சுடர் வேற்கை யானை மொழியவந் தனைகள் செய்ய
நினைக்கமெய்த் தியானஞ் செய்ய நிறைந்தபூ சனைக ளாற்ற
நனைத்துழா யலங்க லாற்கும் நான்மறை முடிவுங் காணப்
புனற்சடை யாற்கும் உள்ளம் பொருந்திய மகிழ்ச்சி யாமால்.

(பொ - ரை):—(கூரிய) நுனியும், (கொழுவிய) ஒளியுமான வேல் திருக்கர விமலனைத் துதிக்கவும், வணங்கவும், நினைக்கவும், மெய்ம்மையாகத் தியானிக்கவும், நிறைவான வழிபாடுகளை நிரப்பவும், (தேனுல்) நனைந்த துளவமாலைத் திருமாலிற்கும், உபநிடதங்களும் உணர இயலாத கங்கை தங்கிய சடைமுடியுடைய கண்ணுதற்கும், திருவுளத்தில் பொருந்திய மகிழ்ச்சி யுளதாகும்,

**658.** இனையமாக் கதைவி யாதன் இசைத்ததே னுண்டு நந்தை
நனைமலர்ப் பாதம் போற்றி நாடரும் மகிழ்ச்சி பூத்து
மனனிலை யுணர்ந்து கண்ட வான்சுக முனிவன் நீண்ட
முனைநெடு வேலோன் பாத முன்னியாங் கிருந்தான் மன்றே.

(பொ - ரை):—உள்ளத்தால் நிலைபெருன பதிப் பொருளை உணர்ந்து, (கனிவுதரும்) பேரின்பம் கண்ட சுகமுனிவர், (அத்தரான) வியாசர் அருளிய (மாபெரும்) இம் மகாத்மியமான (பயன் மிகு) தேனைப் பருகி, (அவரது) மலரடிகளை வணங்கி, மாபெரும் மகிழ்வு மலர்ந்து, மிகக் கூரிய நீள் வேல் முருகன் திருவடிகளை அங்குத் தியானித்தபடியே இருந்தார், (எ - று). (38)

(குறிப்பு):—முனிவன் உண்டு, பூத்து இருந்தான் என இயைக்க.

மந்திர மகிமை யுரைத்த அத்தியாயம்
நிறைவு பெற்றது.

## 15. பலகதை யுபதேசித்த அத்தியாயம்

659. இருக்குமுத னல்வேத முணர்ந்தசுக முனிகேள்
இன்னுமொரு காதையுனக் கெடுத்துரைப்ப னென்றே
குருக்குமதிக் கோடீரக் கடவுளிரு சரணக்
கோகனதக் கரங்குவித்துக் கொண்டுயர் வியாதன்
தருக்குமனக் கொடுஞ்சூரை வேரறுத்த சுடர்வேல்
சண்முகத்தி னிணையடிச்செந் தாமரையுள் ளிருத்திப்
பெருக்குகளி மகிழ்சிறப்ப வுடல்புளக மரும்பப்
பிள்ளைமுகந் தனைப்பார்த்துப் பேசவுளம் பிடித்தான்.

(பொ - ரை) :—இருக்கு முதல் நான்கு மறைகளை உணர்ந்த சுகமுனிவா! இன்னும் ஒரு வரலாற்றை உனக்கு எடுத்து உரைக்கின்றேன்; கேள்! என்று, இளம்பிறை (சூடிய) சடையுடை இறைவனின் இரு திருவடித் தாமரைகளை (உளங் கொண்டு,) குவித்த கரங்களால் கும்பிட்டு, (விளக்கத்தால்) உயர்ந்த வியாசர், இறுமாந்த மனமுடைய கொடிய சூரன் குலத்தை வேரொடு அறுத்துத் தள்ளிய (அருள்) ஒளி வேல் அறுமுகப் பரமன் இரு திருவடி மலர்களைத் தியானித்து, பெருகிய இன்பம் பெரிது விளைய, உடலில் புளகிதம் உண்டாக, (தன்) மைந்தரான சுகர் முகத்தை நோக்கி, (மேலும்) உரைக்கத் திருவுளத்து எண்ணினர்,

(குறிப்பு) :—குருகு - இளமை ; அது, சந்த இன்பம் கருதி குருக்கு என நின்றது. கோடீரம் - சடை. (1)

660. காலமொரு மூன்றினையுங் கருத்தினிடைக் காண்போன்
காமமுடன் வெகுளிமிகு களிமயக்க மொழித்தோன்
சூலநெடு வேல்பிடித்த துண்டமதிச் சடையான்
துணைச்சரண மலர்பரவும் துருவாச முனிவன்
மேலமர ரினிதிருக்கும் விண்ணுலகம் ஆரு
விரிஞ்சனுல கடையவுளம் விரைந்துசெலுங் காலைச்
சேலனைய கருநெடுங்கண் தெய்வமட மாது
சென்னிபணிந் தின்னறவத் தேமாலை கொடுத்தாள்

(பொ - ரை):—முக்கால நிகழ்ச்சிகளையும் மனத்தினிடைக் காணும் மதியினரும், காமத்துடன் வெகுளி மயக்கங்கள் அனைத்தையும் களைந்தவரும், எடுப்பான சூலப்படையை ஏந்தி, பாதிமதி யணிந்த சடைமுடிப் பரமனது இருதிருவடி மலர்களை இறைஞ்சுபவருமான துருவாச முனிவர், பிரமனுடைய சத்திய லோகம் சார, மேம்பட்ட இமையவர் இன்பமாக இருக்கும் வானுலக வழியாக மனோ வேகத்தினும் விரைந்து செல்லும் பொழுது, சேல்மீன் போலும் கரிய பெரிய கண்ணினளான வானவர் உலக வனிதை ஒருத்தி, (வழியிடைப் பட்ட முனிவரை) வணங்கி, இனிய மணமுடைய (மாபெரும்) தெய்வமாலை ஒன்றை, (தன் அன்பிற்கு அடையாளமாக) அளித்தாள், (எ - று).

(குறிப்பு):—களிமயக்கு - மிகு மயக்கம். துருவாசர் - இவர் அத்திரி அநசூயை புத்திரர்; கருப்ப வாசம் துருவாசம் என்று, அநசூயையின் புட்பாஞ்சலியில் வந்த காரணம் பற்றிப் பிறந்த பெயர் இது. கோபத்தாலும், கொடுக்கும் சாபத்தாலும் தவம் வளரும் அதிசய முனிவர் இவர். ஆறு - வழியாக. (2)

661. வாங்குமலர்த் தொடைமாலை வனப்பனைத்து நோக்கி
வார்சடையின் மலர்முகத்தின் மணிமார்பி லணைத்துத்
தாங்கரிய மகிழ்பூத்து முனியகலுங் காலைத்
தருநிழலி லரசிருக்குஞ் சதமகந்த னற்கோட்(டு)
ஓங்கலயி ராவதத்தி னொருத்தமிசை வரக்கண்(டு)
உளங்களித்து மதுமாலை யும்பர்முனி யெடுத்துப்
பாங்கினெடு கொடுத்ததனை வானரசன் வாங்கிப்
பத்தியிலன் போலானை மத்தகத்திற் பதித்தான்.

(பெ - ரை):—வாங்கிய மலர்கள் தொடுத்த (அம்) மாலையின் (பயனன) அழகு முழுதையும் பார்த்து, (அதைத் தம்) நெடுஞ்சடையின் (மேலும்,) மலர்

போன்ற முகத்திலும், அழகிய திருமார்பிலும் அணைத்து, மட்டற்ற மகிழ்ச்சியில் (முகமானது) மலர்ந்து (புனித) முனிவர் (அங்கிருந்து) புறப்பட்ட அமயத்தில், ஐந்தரு நிழலில் அரசு வீற்றிருக்கும் இந்திரன், நான்கு தந்தங் களும், மலைபோல் உயர்ந்ததுமான ஐராவத யானையின் பிடரிமேல் பவனி வரப் பார்த்து, மனம் களித்து, (இவனே இதற்குப் பாத்திரன் எனும் நினைவால்,) தேவ முனிவரான தூர்வாசர், தேன் நிறைந்த (அத்) தெய்வ மாலையை எடுத்து ஆசியுடன் அளிப்ப, வானுலக மன்னனான இந்திரன் (அதை) வாங்கி, (அதன் மேல்) அன்பிலாதவன் போல் யானையின் மேல் வைத்தான்,()

(குறிப்பு) :—தரு – கற்பகமரம். சதமகன் - நூறு பரிமேத வேள்வியால் இந்திர பதம் எய்தியவன். ஓங்கல் - மலைபோன்ற. எருத்தம் - பிடரி. (3)

662. மத்தகத்தின் மணிமாலை வானிறைவன் உகைக்கும்
மதயானை கடங்கவிழ்க்கும் வான்புழைக்கை நீட்டிக்
கொத்தலர நறவொழுகுங் குழங்கல்விரை மாலை
கோட்டாலுங் கரத்தாலுங் குறைபடுத்தக் கண்டு
சித்தமழ லதுதூண்டத் துருவாசன் சீறித்
திசைத்தமரர் கோமானைச் சினந்திருக நோக்கி
யித்தனையுங் கடவுளருக் கிறைவனெனுஞ் செருக்கால்
யானளித்த மாலைதனை யிழிவுபுரிந் தனையால்.

(பொ - ரை) :—(அழகிய) நவரத்தின மாலை யணிந்து, இமையவர் உலகை அரசாளும் இந்திரன் செலுத்து கின்ற இறுமாந்து மதம்பொழியும் ஐராவத யானை, (தன்) நீண்ட துதிக்கையை நீட்டி, மத்தகத்தின் (மேல் வைத்த) கொத்தாகி மலர்ந்து தேன் சிந்தும் மணம்மிக்க (அம்) மாலையை, தந்தங்களாலும் துதிக்கையாலும் சிதைக்க, (அதைத்) தூர்வாசர் கோபம் மனத்தில்

கொப்புளிக்கப் பார்த்து, திகைப்படைந்து, உம்பர் மன்னனை உக்ரத்துடன் உறுத்து நோக்கி, இமையவர்க்குத் தலைவன் எனும் இறுமாப்பால், (அன்பாக) யான் அளித்த மாலையை (இவ்வளவு) அவமதித்தல் செய்தாய், (எ - று).

(குறிப்பு) :—குழங்கல், மாலை - இருபெயரொட்டு. உகைத்தல் - ஊர்தியாக்கி நடத்தல். கடம் - (மும்) மதம். புழைக்கை- துவாரமுடைய துதிக்கை. நறவு - தேன். கோடு - தந்தம். திருகல் - மிகுதல். ஏழுமுழம் துதிக்கை யுடையது அரச இலக்கண யானை ; அதற்கேற்ப, 'வான் புழைக்கை' என்றார். வான் – நெடுமை. (4)

663. ஆதரத்தி லியானளித்த மலர்மாலை வாங்கி
அணிமுடியிற் சூட்டாதுள் அகந்தைபிடித் தேறும்
போதகத்தி னிழிவு புரிந்தெறிந்த பாவம்
பொறையாக நின்னிடத்துப் பூண்டுதனை வாதப்
பாதகத்தி னுனது பதியவுணர் கவரப்
பருவரலுக் கிடனாகிப் பதுமமகள் நீங்கத்
தீதிழைத்துள் அலமந்து மும்மலமும் நீங்காச்
சிறியோரிற் றிரிகவெனத் துருவாசன் மொழிந்தான்.

(பெ - ரை) :—அன்புடன் யாம் தந்த பூமாலையை வாங்கி, அழகிய சிரத்தில் அணிந்துகொள்ளல் செய்யாமல், இறுமாந்த மனம் கொண்டு, ஏறியிருந்த யானையின் மூலம் இழிவுபடுத்தி எறிந்த தீமை, (நெடுஞ்) சுமையாகி உன்னிடத்தில் இருந்து நீங்காது ; அப்பாவத்தால் உனது நகரை அவுணர்கள் அபகரித்துக் கொள்ள, அளவிலாத துன்பத்திற்கு ஆளாகி, நித்தியத் திருமகள் நீங்கிவிட, (மாபெரும்) தீமைகளே செய்து, மனம் குழம்பி, (ஆணவம் கன்மம் மாயை யெனும்) அழுக்கு மூன்றும் அகலாத அற்பர்கள் போல் (நீ) அலைவாயாக என்று, கொடுஞ் சாபம் கொடுத்தார், (எ - று).

(குறிப்பு) :—போதகம் – யானை. பொறை - பாரம். தணவாது - விட்டிடாது. பருவரல் – பெருந்துயரம். அலமந்து - சுழன்று. (5)

664. கொடுஞ்சாபம் மொழிந்ததுரு வாசமுனி பின்னுங்
குலிசநெடும் படையேந்துங் குரிசின்முக நோக்கிக்
கெடுங்காலம் மதியுளத்துத் தோன்றுது போலாம்
கிறிபிறழ்ந்து முதியோரைக் கீழ்மைபுரிந் ததுதீர்ந்
திடுங்கால முணர்ந்துரைக்கக் கூறநினைந் தனமால்
இமையோர்க்கு முனிவர்க்கு மியாவருக்குந் தீமை
நெடுங்காலம் புரிந்தகொடுஞ் சூர்தொலைத்து நெடுவான்
நிலைநிறுத்தும் சுடர்வேற்கைப் பெருமான்ற னிடமாய்.

(பொ - ரை) :—(இங்ஙனம்) கொடிய சாபத்தைக் கொடுத்த துருவாசர், பெரிய வச்சிராயுதம் ஏந்திய இந்திரனை மறுபடியும் நோக்கி, கேடுவரும் காலத்து மதி கெட்டுவிடும் போலும் ; (மாபெரும்) பொய் வாழ்வால் மாறுபட்டு, ஆன்றோரை அவமதித்த பாவம் அகலும் காலத்தை, உணர்ந்து உரைக்க எண்ணினம் ; (சிறந்த) இமையவர்க்கும், (உயர்ந்த) முனிவர்கட்கும், (பிற) எவர்க்கும் பலகாலம் இடரிழைத்த கொடிய சூரன் ஆட்சியைக் குலைத்து, நீண்ட விண்ணுலக ஆட்சியை நிலைபெறச் செய்த (இனிய ஞான) ஒளிமயமான வேல் ஏந்திய பெருமான்றன் இடமாகி, (எ - று).

(குறிப்பு) :—"நீர் கிழிய எய்த வடுப்போல மாறுமே, சீரொழுகு சான்றோர் சினம்" என்று திருவள்ளுவர் அருளிய வாறு சாந்த மெய்திய முனிவர், உடனே சாப நிவாரணமும் கூறினர் என்றறிக. கிறி - பொய். பிறழ்தல்-விளங்குதல். (6)

665. வாய்த்த கந்த மாதனத்து வரையிடத்து நீபோய்
மதிமுகங்க ளாறுகொண்ட வானவன்பொற் சரணம்
ஏத்தியவ ணிருந்துநெடுந் தவம்புரிதி யாயின்
ஈராறு தோளுடைய பெருமான்ற னருளால்
நீர்த்தரங்கக் கடலமுதம் இமையோர்கள் மதிப்பார்
நிறையமுதத் துடன்கமலை முன்னுதிக்கும் அவள்கண்
பார்த்தவுடன் விண்ணரசுந் திருவுமுள வாய்நான்
பகர்சாபந் தீருமெனத் துருவாசன் பகர்ந்தான்.

(பொ-ரை):—வாய்ப்பான கந்தமாதன மலையின் இடத்தில் நீ சென்று, ஆறுமுகப் பரமனின் வனப்புடைய திருவடிகளை வழிபட்டு, அங்குத் தங்கி அருந்தவத்தைச் செய்வாயேல், பன்னிரு திருத்தோள்கள் கொண்ட பரமனுடைய திருவருளால், அலைகளை யுடைய கடலை அமுதத்தின் பொருட்டு அமரர்கள் கடைவர்; நிறைவான அமுத கலசத்துடன், (தூய) திருமகள் முதலில் தோன்றுவள்; (பயனுன) அவள் அருள்நோக்கம் பாலித்தலும், விண்ணுலக ஆட்சியும், (உயர்ந்த) செல்வமும் உளதாகி, (தீராக் கோபத்தால்) நாமுரைத்த சாபமும் தீரும் என்று தூர்வாசர் கூறினர், (எ - று).

மதித்தல் - கடைதல். கமலை - திருமகள். (7)

666. துருவாசன் கொடுஞ்சாப முரைத்திடுந்தன் மையினல்
சுடர்க்குலிச நெடும்படைக்கைத் துறக்கநகர்ப் பெருமான்
தருவான அரம்பையர்கள் சுரபிநிதி யொடுசிந்
தாமணிபு லோமசையின் நலைமையிவை யனைத்துஞ்
செருவால்வெவ் வவுணர்கொள மனமறுகி மறுகித்
திருவிழந்து கவினிழந்து சேனிழந்து நரைப்
பொருவாகை யயிலுடைய குமரேசன் செயந்தி
புகுந்துமுகா ரம்பமுள திருந்துபுனன் மூழ்கி.

(பொ - ரை):—கொடிய சாபத்தைத் தூர்வாசர் கொடுத்த தன்மையால், ஒளிவீசும் பெரிய வச்சிரப் படை ஏந்திய கரத்து வானுலக மன்னன், ஐந்தரு,

தேவமங்கையர், காமதேனு, சங்கநிதி, பதுமநிதி களுடன், சிந்தாமணி, இந்திராணி, விண்ணுலகத் தலைமையிவைகள் யாவும், கொடிய அவுணர்கள் போரிட்டுக் கொள்ளை கொள்ள, குமைந்த மனம் குழம்பி, செல்வம் இழந்து, அழகொழிந்து, துறக்க ஆட்சி தொலைந்து, (பொல்லாத) சூரனைப் போரிட்டு வெற்றிமாலை புனைந்த வேலுடைய குமரக் கடவுளின் செந்தில் பதியில் சேர்ந்து, வதனாரம்பத்தினும் (மற்றும்) உள்ள தீர்த்தங்களிலும் நீராடி, (எ - று).

(குறிப்பு):—துறக்கம் - சுவர்க்கம். மறுகி - சுழன்று. கவின் - அழகு. வாகை - வெற்றி மாலை. (8)

**667.** கூடியநற் செபந்தான முதலியன செய்து
குகனடிக டொழுதுபல பகலிருந்தா னப்பால்
நீடியவிண் ணவர்கூடிப் பாலுததி மதிப்ப
நிறையமுதத் தொடுகமல நேரிழைவந் துதித்தாள்
பீடுபெறு திருமுகத்தின் பேரழகு குலிசப்
பெருந்தகைகண் டரும்பாவம் ஒழிந்தினிய வடிவும்
தோடலர்கற் பகநிழலும் பொன்னகருங் கிடைத்துச்
சுரர்மகுட நிரைவணங்க அரசுபுரிந் தனனே.

(பொ - ரை):—மிகச் சிறந்த செபங்களையும், தானம் முதலியவைகளையும் செய்து, குகனது திருவடிகளைப் பலகாலம் தொழுது இருந்தான்; அதன்பின், பாற்கடலைக் கணக்கற்ற வானவர்கள் சேர்ந்து கடைய, நிறைந்த அமுத கலசத்துடன், (தனிப்பெரும் திருமகள்) தரிசனம் தந்தனள்; அத்தேவியின் பெருமிதத் திருமுகத்தின் பெரும் பொலிவைச் சேவித்து, பெரிய தகுதியுள இந்திரனது அரிய பாவங்கள் அகன்று, இனிய தோற்றமும், இதழ் மலரும் கற்பக நிழலும், (பேருன) பொன்னுலகும் பெற்று, மகுடங்கள்

வரிசைப்பட (வந்து வந்து) வானவர்கள் வணங்க, (நலம் சிறக்க) ஆட்சி நடத்தினன், (எ - று).

(குறிப்பு):—'செயந்திப் பொருப்பின் மன விருப்பமுடன் மருப்பயில் கற்பகத்தார்' என 8-ஆம் பாட்டின் இறுதியடியும், 'சூடியவச் சிரபாணி நெடும் காலம் செவ்வே, டுணைச்சரண வாரீசம் தொழுதிருக்கும் நாளில்' என 9-ஆம் பாட்டின் முதலடியும் சில பிரதிகளில் பாடம்.

(குறிப்பு) :—தீர்த்தம் - (கலங்கல் இன்றித்) திருத்தமான நீர்; இதற்கேற்ப, 'திருந்து புனல்' என்றூர். பால் உததி - பாற்கடல். நேரிழை - திருமகள். நிரை - வரிசை. (9)

**668.** அத்தகைமை மகவான்வெண் களிற்றரசுள் ளுணர்ந்தே
யலமந்து சஞ்சலமுற் றிரவுபக லினைந்து
மத்தகத்தி னணிமாலை நெடும்பனைக்கை நீட்டி
வாரியெடுத் தெறிந்ததனிற் றுருவாசன் சினந்தே
பித்தனென யான்றங்கும் பெருந்தகையுள் ளுடையப்
பெருஞ்சாப மிடநாகப் பேராசு மிழந்தான்
அத்தனென வாய்வெருவித் தலைவனுக்குப் பாவம்
அளித்தனனென் றுளந்தேறி யடலானை விளம்பும்.

(பொ - ரை) :—வெள்ளை யானையான இந்திரனது ஐராவதம், அவ்வரலாற்றைத் தன்னுள் அறிந்து, மனம் குழம்பி வருந்தி, இரவு பகலாக (எப்போதும்) சிந்தித்து, மத்தகத்தில் இருந்த அழகிய மாலையை, பனைமரம் போல் இருக்கும் நீண்ட துதிக்கையை நீட்டி (வீணுக) வாரியெடுத்து வீசியதனுல், தூர்வாசர் சீறி, (இதுவரை) யான் சுமந்த பெருந்தகுதி யுடைய இந்திரன் பித்தன் போல் மனமுடையப் பெருஞ்சாபம் கொடுக்க, (என்) தலைவன் இமையவர் உலகப் பேரரசை யிழந்தனனே! தலைவனுக்குப பாவப் பயனைத் தந்தனனே என்று அஞ்சி யழுது, (ஒருவாறு ஆறி) மனம் தேறி, ஆண்மை யானை (மேலும்) அலறத் தொடங்கியது, (எ - று).

(குறிப்பு) :—களிற்றரசு-இந்திர யானை. அலமரல்-சுழலல். நாகம் - பொன்னுலகம். "இத்தகைமை மகவான்வெண் களிற்றரசுள் உணர்ந்துள் ளேமாந்து சஞ்சலமுற்று" என்றும் பாடம். (10)

## வேறு

669. செய்த தீவினை செய்தவர்க் கேயென
வையஞ் சொல்லும் வழக்குமற் றுண்மையே
கையெ டுத்த கடும்பவந் தீரவேல்
ஐயன் றனை யருச்சிக்க வேண்டுமால்.

670. என்று வேழத் திறையுளத் தெண்ணியே
நன்று ணர்ந்துள நாரதற் போற்றியே
குன்றெ றிந்த குருபரன் பூசனைக்(கு)
ஒன்றும் மந்திர மோதென வோதினன்.

(பொ - ரை) —செய்யப் பெற்ற பாவத்தின் பயன் செய்தவர்களையே சென்றடையும் என்று உயர்ந்தோர் உரைக்கும் வழக்கம் உண்மைதான்; (துதிக்) கையால் (மாலையை) எடுத்த பொல்லாத பாவம் போதற் பொருட்டு, (வாகை) வேல் பரமன் திருவடிகளை வழி படுதல் வேண்டும்—,

(பொ - ரை) :—என்று யானைகட்கு அரசனான ஐராவ தன் மனத்தால் நினைந்து, நலம் (எது என) உணர்ந் திருக்கும் நாரதரை வணங்கி, (குரூர குணமுள) மலையை பிளந்த குமரன் வழிபாட்டிற்குப் பொருந்திய மந்திரத்தைப் புகன்றருளும் என்று விண்ணப்பித் தனன், (எ - று).

(குறிப்பு) :—கை – உபசர்க்கம்; மிகுந்த எனும் பொருட்டுமாம். நன்றுணர்தல் - தெய்வ மெய்ப்பொருளைத் தியானித்தல். குன்று - கிரவுஞ்சம்; மாயாமலை யெனவுமாதலின், அதைச் சேதித்த சேந்தனைக் 'குருபரன்' என்ற பெயராற் குறிப்பிட்டார். இந்திர யானை யாதலின், 'ஓதிஞன்' என உயர் திணை ஆண்பாலாக உபசரித்தபடி. (11-12)

671. கீழ்த்தி சைக்கண் கிளர்ந்தெழு மாதங்கம்
காழ்த்த நெஞ்சக் கவலொழிந் தன்பிஞல்
வீழ்த்த கண்புன லோடுசெவ் வேளடி
வாழ்த்திக் கந்த வரைப்புறஞ் சார்ந்ததால்.

(பொ - ரை):—கிழக்குத் திக்கின் உரிமை கொண்டு உயர்ந்த ஐராவதம், வயிரம் ஏறிய மனக்கவலை தீர்ந்து, (பொங்கிய) அன்பால் பொழிந்த கண்ணீருடன், (வாழ்விக்கும்) செவ்வேள் திருவடிகளை வாழ்த்தி, (சிறந்த) கந்தமாதன மலையின்கண் சேர்ந்தது, (எ – று).

(குறிப்பு):—மாதங்கம் – யானை. காழ்த்தல் - உரமேறுதல்.

672. செயந்தி யம்பதி சேர்புன லாடியே
நயந்து பஞ்சக் குரோசமு நாடியே
வியந்து சூழ்ந்து விரைகொண்மந் தாகினி
பயந்த பங்கயப் போது பறித்திடா.

673. அந்தப் போதை யரன்மகன் ருளர
விந்தப் போதில் வியந்தருச் சித்திடா
முந்தப் போதனை மோதுகை யானைநால்
தந்தப் போதகந் தாழ்ந்துடன் சூழ்ந்ததே.

(பொ - ரை):—செந்திற் பதியில் சேர்ந்துள்ள (நிமல) பொய்கைகளில் நீராடி, அன்புடன் (அத்தலத்தின்)

ஐந்து குரோச எல்லையில் உள்ள ஒவ்வொரு பகுதியையும் வாழ்த்தித் துதித்து வலம் வந்து, மணமுடைய (புனித) பொய்கைகளில் பூத்த மணமுள தாமரை மலர்களைப் பறித்து,

(பொ - ரை) :—அம்மலர்களைச் சிவகுமரன் திருவடித் தாமரைகளில் (அதிக) அன்புடன் அர்ச்சித்து, முன்பு ஒரு சமயம் பிரமனைக் குட்டிய திருக்கர முருகனை, (தனிப் பெரும்) நான்கு தந்தங்களை யுடைய ஐராவதம், வழிபட்ட சூழ்நிலையில் வாழ்வு பெற்றது, (எ - று).

(குறிப்பு) :—குரோசம் - கூப்பிடு தூரம். மந்தாகினி - கங்கை போன்ற கவின்மிகு பொய்கைகள். போது - மலர். அரவிந்தம் - தாமரை. போதன்-(கமல) மலர் அயன். (14-15)

674. இந்தவா றைந்து வைக லிராப்பகல்
தந்தி யேத்திவெஞ் சாபந் தணந்துவேல்
கந்த வேளின் கருணைகொண் டிந்திரன்
முந்து பக்கத்து மொய்ம்புடன் சென்றதே.

(பொ - ரை) :—இவ்வாறு ஐந்து தினம் இரவும் பகலும் (அந்த) யானை ஆராதித்து, உக்கிர சாபம் ஒழிந்து, வேல்பரமன் வியனருள் எய்தி, (அமரருள்) முந்திய இந்திரன் அண்மையில், தக்க ஆண்மையுடன் சென்று தங்கியது, (எ - று). (16)

675. ஆத லாற்கும ரேசன்பொன் ஞலயம்
மாத வத்தின் வடிவம தாகுமால்
கேத நீங்கச் சுகமுனி கேட்டியால்
ஈது நிற்க இனியொன் றுணர்த்துவாம்.

(பொ - ரை) :—ஆதலினுல், குமரக் கடவுளின் அழகிய திருக்கோயில் (அரிய) தவவடிவம் ஆகும்;

இதுவன்றி, சுகமுனிவா! (தீராப் பிறவித்) துயர்தீர, உரிய வரலாறு ஒன்றை உணர்த்துகின்றோம்; (அதையும்) கேட்டருள், (எ - று).

(குறிப்பு) :—கேதம் - துன்பம். ஆல் இரண்டும் அசைகள். (17)

676. கருத்தி னுக்கடங் காதுயர் கந்தனுக்(கு)
அருத்தி முற்றச்சொ லாகமத் தாற்றினல்
திருத்து பூசை தினந்தொறு மெட்டதாய்ப்
பொருத்து சாமந் தொறுங்களி பூப்பதே.

(பொ - ரை) :—எண்ணும் நினைவிற்கு எட்டாத மேம்பட்ட கந்தப் பரமற்கு, அன்பு முதிர அறிவிக்கும் ஆகம விதிப்படி, நாள்தோறும் எட்டாக இணங்கும் யாமந்தோறும், திருத்தமுறச் செய்யும் வழிபாடு, (நல்) இன்பம் மலர நடை பெறும், (எ - று). (18)

677. கால மெட்டுங் கருதிமெய்ப் பூசனைச்
சீல ராகிய சீரிய நாலிரு
பால ராகப் பகலிர வும்மறை
நூலி ஞற்றினர் நாம நுவலுவாம்.

(பொ - ரை) :—இரவு பகல் என்னும் எட்டு யாமத்தும் (இடையருது) நினைந்து, மெய்ப்பொருள் வழிபாட்டை (மேற்கொண்டு, என்றும்) சிறப்புடைய எண்மராகி, வைதிக விதி வழுவாமல் வழிபட்டோர் பெயர்களை (வரிசைப் படுத்தி) உரைக்கின்றேம், (எ - று). (19)

## வேறு

678. பகற்கால நாற்கால மந்தநாற் காலமுதற் பகருங் காலம்
முகைக்கமலன் பூசையிரண் டாங்காலம் பலமுனிவர் முயலும் பூசை
மகத்துவமுன் ருங்காலங் கந்தருவர் சித்தருக்கு வாய்ந்த பூசை
பகுத்தநா லாங்காலம் திக்கிறைவ ருடன்மகவான் பரிந்த பூசை.

(பொ - ரை):—பகல் பொழுது நான்கு யாமங்கள், (வழிபாட்டிற்கு என்று வகுத்தவை); அந்த நான்கு யாமங்களுள், குறிக்கப்பெறும் முதல் யாமத்தில், அரும்பி மலரும் தாமரை ஆசன அயன் செய்யும் வழிபாடு; இரண்டாம் யாமத்தில், முனிவர்கள் பலர் முயன்று செயும் வழிபாடு; மகிமையுடைய மூன்ருவது யாமத்தில், கந்தர்வர் சித்தர்கள்செய் வாய்ப்பான வழிபாடு; பகுக்கப் பெற்ற நான்காம் யாமத்தில், அன்புடைய திக்குப் பாலகருடன் இந்திரன் ஆராதிக்கிருன், (எ - று).

(குறிப்பு):—முகை - அரும்பு. திக்கிறைவர் - அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசான்யர் முதலினேர். (20)

**679.** **உரிமையினைந் தாங்காலம் திருமுதலாஞ் சத்திகளுக் குவந்த பூசை**
**தெரிதருமா ருங்காலம் அவுணருடன் பணிக்கிறையாஞ் சேடன் பூசை**
**விரிதருமே ழாங்காலம் வள்ளிதெய்வ யானையுளம் விரும்பும் பூசை**
**கருதுமெட்டாங் காலமுயர் கங்கைமுத னதிகளுடன் கண்ணன் பூசை.**

(பொ - ரை):—(இரவுக்கால) உரிமையுடைய ஐந்தாவது யாமத்தில், இலக்குமி முதலான (வாழ்விக்கும்) சக்திகள்செய் அன்புமிக்க ஆராதனை; அறியப் பெறும் ஆருவது யாமத்தில், அவுணர்களுடன் அரவுகட்குத் தலைவனுன ஆதிசேடன் புரியும் வழிபாடு; விரிந்த ஏழாவது யாமத்தில், வள்ளி தெய்வயானையர் செயும் உள்ளம் உவந்த வழிபாடு; கருதத் தக்க எட்டாவது யாமத்தில், உயர்ந்த கங்கை முதலிய நதி தேவதைகளுடன், வரத திருமால் வழிபடுகின்ருர், (எ-று). (21)

**680.** **எட்டான காலமுறை யியற்றுநர்பூ சனைநோக்கி யிருகண் ணீர்கள்**
**விட்டாறு முகக்கடவு ளினைச்சரணக் கோகனத விடு காத்துக்**
**கட்டாரி கரமெடுத்த வீரவா குவுமிதயங் களித்தா னந்த**
**மூட்டாத கடன்மூழ்கி விளையாடுஞ் செய்கையெம்மால் மொழியப் போமோ.**

(பொ - ரை):—வாள் படை ஏந்திய திருக்கர வீரவாகு தேவரும், எட்டு யாமங்களில் முறைப்படி ஆராதிப்பார் வழிபாட்டைத் தரிசித்து, இரு கண்கள் இன்பக் கண் மழை மொழிய, ஆறுமுகப் பெருமானின் இரு திருவடிக் கமலங்கள் எழுந்தருளி யிருக்கும் அகக் கோயில் (புறக்கோயில்) காவல் செய்து, உள்ளத்து உவகையுடன், வழுவிலாத ஆநந்தக் கடலில் ஆழ்ந்து, இன்பக் கூத்தாடும் செயல் எம்மால் இயம்பும் தரத்ததோ, (எ - று).

(குறிப்பு):—கோகனதம் - தாமரை. வீடு – ஆலயம். கட்டாரி - கைவாள். தகராகாசமாம் இதய கோயிலும், புறக் கோயிலும் ஆன இரண்டையும் நினைவுறுத்த, 'கோகனத வீடு' என்று குறிப்பிட்டார். (22)

**ஈதுநிற்க இன்னுமொரு காதையுண்டக் காதையுனக் கெடுத்துக் காட்டி**
**யோதுதுமியா மென்றுசுக முனிவரனை முகநோக்கி யொருநான் காக**
**வேதமுறை விதித்ததவ வியாதமுனி யகங்குழைந்து விருப்ப மிக்க**
**மாதவத்திற் புலிக்காலைக் கொண்டகவு தமன்சரிதை வழுத்தல் செய்வான்.**

(பொ - ரை):—இது ஒரு புறம் இருப்ப, இன்னும் ஒரு வரலாறு உளது; அதை யாம் (விரிவாக) உனக்கு எடுத்து விளக்கி யுரைக்கின்றேம் என்று, மறைகளை நான்காக வகுத்து வைத்த தவத்தரான வியாச முனிவர், உளம் நெகிழ்ந்து, (பண்புடைய) சுக முனிவரைப் பார்த்து, அன்பு மிகுந்த தவஞ் சிறந்த புலிக்கால் முனி வரான கவுதமர் வரலாற்றை அறிவிக்க லாயினர், (எ-று).

**682. புண்டரிக புரமான புலியூரிற் கனகமணிப் பொதுவின் ஞானத்**
**தொண்டர்களும் பதஞ்சலியும் விண்ணோரு முனிவருந் தொழுது போற்றத்**
**தண்டலிலா னந்தநடத் திருக்கூத்துப் பயிலீசன் சரணப் போது**
**கண்டுகளி மகிழ்தூங்கும் புண்டரிகத் தாண்முனிவன் கவற்சி தீர்ந்தான்.**

(பொ - ரை):—புண்டரீகபுரம் ஆகிய சிதம்பரத்தில் அழகிய பொன்னம்பலத்தின் (அருள்) ஞான அடியவர்களும், பதஞ்சலியும், வானவரும், (தூய) முனிவர்களும் தொழுது துதிக்க, தடைபடாத ஆநந்தத் திருக்கூத்தியற்றும் இறைவரது திருவடி மலர்களைத் தரிசித்து, பெருமகிழ்ச்சி பெருகும் புலிக்கால் முனிவர், (பிறவியின்) அயர்வு நீங்கியவர் ஆயினர், (எ - று).

(குறிப்பு):—புண்டரிகபுரம்-இதயகமல தகராகாசத் தலம். புலிக்கால் முனிவர் பூசித்த அப்பதி, புலியூர் என்றும் புகலப் பெறும். தண்டலில் - அழிதல் இல்லாத. புண்டரிகத் தாள் – புலிக்கால். (24)

பொதுவினிடைச் சதிநடனம் புரியுமலை பரன்றுணைத்தாட் போது தாழ்ந்து
மதிவகிரை யணிந்தசடை யெம்பெருமா னின்கருணை வாரி யாலே
கதிரவன்சூழ் பேருலகிற் கடவுணதிப் புனலாடிக் கயிலை யாதி
முதியதலம் பலதொழுதற் குளம்வைத்தே னெனப்பாணி முகிழ்த்துப்
[போற்ற.

(பொ - ரை):—அம்பலத்தில் தேவியுடன் ஆநந்த தாண்டவம் செய்யும் இறைவரது திருவடி மலர்களை இறைஞ்சி, இளம்பிறை அணிசடை எம்பெருமானே! உமது அருள் வெள்ளத் துணையால், (புனித) சூரியன் வலம் வருகின்ற பூவுலகில் இருக்கும் (முதன்மைத்) தெய்வ நதிகளில் மூழ்கி, திருக்கயிலை முதலிய பழந் தலங்கள் பலவற்றைச் சேவிக்க மனங்கொண்டேன் என்று கைகுவித்துப் பிரார்த்திக்க, (எ - று).

(குறிப்பு):—சதி - தாள ஒற்றுமாம். வகிர் – பிளப்பு. பாணி - திருக்கரம். முகிழ்த்தல் - கூப்புதல். 'அவனருளாலே அவன்றாள் வணங்கி' என்றபடி, இந்நினைவு உமது திருவருளால் எழுந்தது என்பார், 'கருணையாலே உள்ளம் வைத்தேன்' என்றார். (25)

**684.** அன்னபரி சரனளிக்க வியாக்கிரத்தா ளருந்தவனங் ககன்று வேலை
பன்னுலகிற் கடவுணதி பலமூழ்கி மேயதலம் பலவும் போற்றி
முன்னமுகி றளைபடுத்து பாண்டியருக் கருள்புரிந்து முடியா முத்தி
நன்னலந்தந் தருள்பொருநை யிருகரையிற் றீர்த்தமெலா நாடி யாடி.

(பொ - ரை) :—(அப் பிரார்த்தனைக்கு இரங்கிய) அமலன் அப் பணிக்கு அனுமதி யளிக்க, அருந்தவ முனிவரான புலிக்காலர் அங்கிருந்து புறப்பட்டு, நெடுங்கடல் சூழ்ந்த நிலவுலகில் (நியதியுள) பல தெய்வ நதிகளில் நீராடி, (வாழ்விக்கும்) பல தலங்களையும் வழிபட்டு, முன்னொரு காலத்தில் (சிறந்த) மேக தேவதைகளைச் சிறையிட்ட பாண்டியர்க்குத் திருவருள் பாலித்து, அழியா முத்தி யின்பத்தை அருளிய தாமிரபரணியின் இருகரைகளில் இருக்கும் விளக்கமான தீர்த்தங்கள் அனைத்திலும் விரும்பி மூழ்கி, (எ - று). ( )

**685.** சந்திரனுக் கிருஞ்சாபந் தீர்த்தசோ மாரணியந் தன்னிற் போந்து
மந்திரத்தின் வடிவான சோமலிங்கர் பங்கயத்தாள் வந்தித் தேத்திச்
சிந்துமணி யெடுத்தெறியுஞ் செயந்திபுரத் திருக்கோயில் சென்று வேற்கைக்
கந்தனைவந் தனைபுரிந்தா கமவிதியிற் பூசனையுங் களித்துச் செய்தான்.

(பொ - ரை) :—சந்திரனுக்கு உண்டான பெருஞ் சாபத்தைத் தீர்த்தருளிய சோமவனத்திற் சென்று,மந்திர வடிவரான சோமேசரின் வனசமல ரடிகளை வணங்கி வழிபட்டு, கடல் முத்துகளை (அலைகளாகிய கைகளால்) எடுத்து வீசுகின்ற (அரிய) திருச்செந்தில் திருக்கோயிலை யடைந்து, (கம்பீர) வேலாயுதக் கந்தப் பரமனை விரும்பி வணங்கி, ஆகம விதிப்படி மகிழ்ந்து ஆராதித் தார், (எ - று).

(குறிப்பு) :—வியாக்கிரத் தாள்–புலிக்கால். தளை - விலங்கு. நன்னலம் - பேரின்பம். நாடி - விரும்பி. (27)

**686. ஆனந்த மயமான கூப்பிடோ ரைந்துமுளத் தன்பா னேக்கித்**
**தானந்த மில்லாத வேள்விபுரிந் தாறுமுகன் றனக்காம் வண்ணம்**
**ஞானந்த னுள்ளமிசை மீதூரச் சிந்துபுர நகர்க்கும் வாசப்**
**பூநந்த வனஞ்செறிசோ மாரணியந் தனக்குநடுப் புடையோர் வைப்பின்.**

(பொ - ரை):—இன்ப மயமாக இருக்கும் ஐந்து குரோச தூரம் பக்தியுள்ளம் கொண்டு பார்த்து, உள்ளத்தில் ஞானம் ஊற்றெடுக்க, ஆறுமுகப் பெருமாற்கு ஆகும்படி, குறைவிலாதபடி (நிறைவான) வேள்வியைச் செய்ய விரும்பி, செந்தில் பதிக்கும், மணங்கமழ் மலர்களை யுடைய பூங்காவனம் பொலிந்த சோமாரண்யத்திற்கும் இடையில் உள்ள ஒரு இடத்தில், (எ - று).

(குறிப்பு):—கூப்பிடு ஓர் ஐந்து - ஐந்து குரோ எல்லை. நந்தல் - அழிதல். நடுப்புடை - நடு இடம். (28)

**பயனளிக்கு மறைவேள்விச் சாலைதனை விதிமரபிற் பணிந்துட் போந்து**
**கலைமுதிர்ச்சி யாரிடரு மந்தணரும் பெரியோருங் கவினச் சூழ்ந்து**
**வலனுயர்த்த தனுவடிவு முக்கோணத் தின்வடிவு மனுமுன் சொற்ற**
**தலைமைபெறச் சதுரமெனுங் குண்டமுமும் முறையாகத் தானே சேர்த்தி.**

(பொ - ரை):—பயன்தரும் வைதிக வேள்விச் சாலையை விதிப்படி அமைத்து, (புனித) அதனுள் புகுந்து, (முதன்மைக்) கலைஞானம் கைவந்த முனிவர்களும், அந்தணர்களும், (மற்றுமுள) வித்தகரும் சூழ்ந்து விளங்க, வலப்புறத்து எழுப்பிய வில்வடிவம், முக்கோண உருவம், சதுரரூபம் எனும் (மும்மைக்) குண்டங்களையும் மனுநூல் முன் சொன்ன (அரிய) முதன்மை தோன்றத் தாமே அமைத்து, (எ - று). (29)

**பிராணன்வடி வாங்கோதா அபானனெனும் உற்காதா பெயர்வி யானன்**
**பராவடிவாய் வருபிரமா வுதானனெனும் அத்வரியு பகர்ச மானன்**
**விராவுபச மானனெடு தங்கடங்க விடந்தோறும் வியப்பின் மேவத்**
**தராதலமெல் லாம்பரவ வேள்விமுறை யினிதாற்றுந் தன்மை யோர்ந்து.**

(பொ - ரை):—பிராணன் வடிவமான ஹோதா (எனும் இருக்குமறை வல்ல அறிஞரும்), அபானன் வடிவமான உற்காதா (எனும் சாமவேதம் வல்ல சதுரரும்), வியானப் பெயருடைய (விரிந்த) புகழுடன் தோன்றும் பிரமன் (எனும் வேள்விப் புரோகிதரும்), உதானன் எனும் அத்வர்யு (வாகிய யசுர் மறையில் சிறந்தவரும், (சிறப்பித்து) உரைக்கப் பெறும் சமானன் வடிவாகி, அளவளாவும் யசமான(ன் எனும் தன்)னுடன் தம்தம் இடங்களில் வியப்புத் தோன்ற விளங்கி யிருப்ப, உலக மெலாம் உவந்து போற்ற வேள்வியை முறையாக இனிது நடத்தும் தன்மையை உணர்ந்து, (எ - று).

(குறிப்பு) :—வேள்வி விவரங்கள் ஆகம நூல்களில் விரிவாகவுள ; அவைகளை வல்லார்வாய்க் கேட்டுணர்க. (30)

**புண்ணியத்தெண் திரைக்கோதா வரிச்சுருதி மாநதியாம் பொருவின்மாதுள்**
**ளெண்ணியருட் டிருத்தாதை சண்முகனுக் கற்புதமா மினிய யாகம்**
**நண்ணளியிற் புரிவித்தா னவபிருத நானமவன் றனின் றுடக்**
**கண்ணகன்பே ராருகிப் போதுமென மகச்சாலை களித்தாங் குற்றுள்.**

(பொ - ரை):—தூய்மையுடன் தெளிந்த அலைகளையுடைய கோதாவரி யாகிய ஒப்பிலாத வைதிக மங்கை, (எனது) அருட்செல்வ எந்தை கவுதமர், அறுமுகப் பரமனுக்கு அற்புதமான இனியதொரு வேள்வியை அமைதி வழியில் அன்புடன் நிகழ்த்தி வைத்தனர்; வேள்வி நிறைவு பெற்றபின், இவர் இன்று நீராட இடமகன்ற பெரிய ஆருகிப் புறப்படுவம் என்று, மகிழ்ந்த நிலையில் அம் மகச் சாலையின் பிரவேசித்தாள், (எ - று).

(குறிப்பு) :—'சுருதி மாநதி பொருவு இல் மாது' என்பது, கோதாவரியின் சீலத்தைக் குறிப்பிட்ட செய்தி. அவபிருத நானம் என்பது, வேள்வி இறுதியில் நீராடலின் பெயர். கோதாவரி – கோதமன் மகள். உள் எண்ணி உற்றுள் என்க.

**ஆங்கெழுகோ தாவரியி னவபிருத நானமர பாடி நீயென்**
**பாங்குபெண் ணுகையினற் றந்தையர்க்குக் கைம்மாறு பரிவிற் செய்தாய்**
**ஈங்கிவணீ பரிதிமதி நால்வேத முள்ளளவு மெனது சீர்த்தி**
**யோங்கவென வருள்கூர்ந்து பின்னருமா தவனவள்பா லுரைப்ப தானுன்.**

(பொ - ரை):—பெருந் தவத்தரான புலிக்கால் முனிவர், அங்குவந்த கோதாவரியில் நியதிப்படி அபவிரத நீராடி, (கோதாவரி !) நீ என் வயிற்றில் உதித்த மகளாதலின், (மகள்) தந்தைக்குச் செய்யும் (பிரதி) உதவியை அன்புடன் செய்தனை ; இந்த இடத்தில் நீ, சூரிய சந்திரர்களும், நான்கு மறைகளும் உள்ள காலம் வரை, என் பெயர் தாங்கி உயர்ந்து இருப்பாயாக என்று உரைத்தருளி, மாதவக் கோதமர், பின்னரும் அவள் பால் (சில) பேசலாயினர், (எ - று).

(குறிப்பு) :—நானமரபாடி - மரபு நானம் ஆடி என இயைத்துப் பொருளறிக. நானம் - ஸ்நானம். (32)

**விருத்தகங்கை யாகியகோ தாவரிநீ பொருநையெனும் வேத மாதுக்**
**கருத்திபெறு திருந்துணைவி யாகியிவ ணடைந்தடைவார்க் கமுதம் போலத்**
**திருந்துநற் சிறப்பாக இருந்தியென்றே யருமகமுஞ் செவ்வேட் கன்பாற்**
**பொருத்தியவ னிருகிரண சரணதா மரைவிரைத்தண் போது போற்றி.**

(பொ - ரை):—விருத்த கங்கை என்று விளம்பப் பெறும் கோதாவரியே ! நீ தாம்பிரபரணி எனும் வைதிக மகட்கு அன்புடைய சிறந்த தோழியாகி, இங்கு வந்து (உன்னிடம்) அடைக்கலம் புகுவார்க்கு அமுதமென அமைந்து, தகுதியுடைய செல்வமும் சிறப்பும் தந்து கொண்டு இரு என்று பணித்து, செக்கர் வேள் பெருமாற்கு அன்பாக அரிய வேள்வியையும் நடத்தி முடித்து, அப்பரனது ஒளிமயமான இரு திருவடிகளாகிய தாமரையாம் மணம் கமழ் மலர்களை வந்தித்து,

**நீங்காத பரிவினெடு விடைபெற்றே யவணகன்று நிமல மாய**
**வோங்காரத் திருவடிவாஞ் சிவகலைக்கோர் வைப்பாக வொளிர்பொன்**
**[மன்றிற்**
**பூங்காலின் றிருக்கூத்துப் புலிக்காலின் றிருமுனிவன் புகழ்ந்து போற்றம்**
**பாங்காக அவணடைந்தான் கிடையாத பரபோகப் பதம்பெற் றுய்ந்தான்.**

(பொ - ரை):—புலிக்கால் முனிவர், பிரியா அன்புடன் அனுமதி பெற்று, அங்கிருந்து, தூய்மையான ஓங்காரத் திருமேனியாம் சிவகலைக்கு ஒப்பற்ற இடமாக ஒளிரும் பொன்னம்பலத்தில், திருவடிகளின் திருக்கூத்தைப் புகழ்ந்து துதிக்க, அந்த இடத்தில் உரிமையுடன் அடைந்தார்; (அதனால் மற்றவர்க்கு) அகப்படாத (அரிய) பெரிய பேரின்ப வீட்டைப் பெற்று உய்தி யடைந்தனர், (எ - று). (34)

(குறிப்பு):—பரபோகம் - சிவானுபவம்.

**693.** **முத்தெறிசங் கமமூழ்கிச் சோமவா வியிற்படிந்து முடிவி லாத**
**அத்தரெனுஞ் சோமலிங்கர்த் தொழுதுபுலிக் கான்முனிவன் அரிது வேள்வி**
**வித்தகச்சா லையிற்கோதா வரியாடிச் செயந்திபுர மேவி வேற்கை**
**நித்தனையன் பிற்பணிவார் பிறப்பொழித்துக் குகன்சரண நீழல் வாழ்வார்.**

(பொ - ரை):—முத்துகளை (கரையில்) இறைக்கும் சங்கம தீர்த்தத்தில் நீராடி (அதன்பின்) சோம தீர்த்தத்தின் மூழ்கி, அழிவிலாத அத்தர் எனப்பெறும் சோம லிங்கேசரை (சோமேசையுடன்) வழிபட்டு, புலிக்கால் முனிவர் (செய்த) அரிய குணமுள்ள வேள்விச் சாலையி லுள்ள கோதாவரியில் நீராடி, திருச்செந்திலை யடைந்து, வேல் ஏந்தி என்றுமுள எம்மானை அன்புடன் இறைஞ்சுபவர், பிறவித் துன்பம் நீங்கி, (பெருமித) குகன் திருவடி நிழலில் பெருவாழ்வைப் பெறுவர், (எ - று). (35)

**இன்னுமொரு காதையுனக் கெடுத்துக்காட் டுதுஞ்சுகனீ யினிது கேளென்**
**றுன்னரிய வியாதமுனி கனிசிறந்தாங் கவனுணர வுவப்பு மிக்குத்**
**தன்னகப்பூங் கமலமலர்ந் தாதரத்தி னியாவருமே தலைமை யான**
**தன்னலம்பெற் றிடவேதம் பகுத்தவா யாற்சிறிது நவில்வ தானுன்**

(பொ - ரை) :—மற்றுமொரு வரலாறுளது; சுகா! உனக்கு (அதையும்) எடுத்து உரைக்கின்றேன்; நீ கேண்மையுடன் கேள் என்று, உவகை மிகுந்து (அவர்) உணருமாறு, பெருமகிழ்வுடன், தன் மனமாகிய தாமரை அன்பால் மலர்ந்திட, (சிரவணிக்கும்) எவரும் முதன்மை யான நல்லின்பம் கொள்ள, மறைகளை வகுத்துக் கூறிய திருவாயால், உள்ளங் கொண்டு உணர இயலாத வியாச முனிவர், ஒரு சிறிது உரைப்பாராயினர், (எ - று). (36)

**695.** மாதவத்தி னுயர்வசிட்டன் மகிழ்வாம தேவன்சா பாலி மாயை
காதன்மிக்காங் காசிபன்மார்க் கண்டனொடு கவுதன்முற் கலன்வே தத்திற்
கோதில்கவு சிகமுனிவ னெடுங்காலங் காசிநகர் குறுகிக் கூனல்
சீதமதிக் கீறணிந்தான் பதம்பணிந்து தவமியற்றிச் சிறந்தாங் குற்றார்.

(பொ - ரை) :—வளரும் தவத்தால் உயர்ந்த வசிட்டரும், மகிழும் வாம தேவரும், சாபாலியும், மாயையின் காதலில் மிக மயங்கும் காசிபரும், மார்க்கண்டேயருடன் கவுதமரும், முற்கலரும், (குறிப்பாக) மறையின் (நுட்பம் உணர்ந்த) குற்றமில்லாத கவுசிகரும், பலகாலம் காசியம் பதியிற் பயின்றிருந்து, வளைவான குளிர்ந்த பாதிமதி யணிந்த பரன் திருவடிகளைப் பணிந்து, (செம்மைத்) தவத்தில் சிறந்து அங்கிருந்தனர், (எ - று).

(குறிப்பு) :—மாயையில் காசிபர் மயங்குதலை, கந்த புராணத்திற் காண்க. முற்கலர் - மிருகண்டு மாமனூர்; மருத்துவதியின் தந்தை; மார்க்கண்டேயரின் தாய்ப் பாட்டன்; சிறந்த தவசி; மற்றுமுள முனிவர்கள் வரலாற்றை, இந்நூல் சூதமுனி சென்ற அத்தியாயம் 1-2–பாடல்களில் காண்க. (37)

**696.** நாலிருமா தவமுனிவர் காசியகி லேசரடி நாட்பூச் சூடி
யேலுமவன் விடைகொடுப்பக் காசியகன் றகலாத வியல்பு நீடுஞ்
சீலமறை முறைநிறையுஞ் செயந்திபுரந் தனையடைந்த சிறந்த ஞான
மூலமெனுஞ் சண்முகனற் கருணைவா ரியின்றலைமை முழுதும் பெற்றார்.

(பொ- ரை) :—(முற்குறித்த) எட்டு முனிவர்களும், காசி விஸ்வேசர் திருவடியாகிய அன்றலர்ந்த மலர்களைச் சிரமேல் அணிந்து, அப்பெருமான் அருளொடும் விடையளிக்க, (நேரிய) காசிப் பதியை நீங்கி, நீங்கா இயற்கை நீடித்து, வைதிக மறையொழுக்கம் நிறைந்த செந்திலம் பதியிற் சென்று சேர்ந்து, சிறந்த ஞானகாரணம் எனும் அறுமுகப் பரனது சிறந்த அருட்கடலின் முதன்மை (இன்பம்) முழுதும் எய்தினர், (எ - று).

(குறிப்பு) :—இறுதியடி எவரும் மறக்க இயலாத அருமையுடையது. (38)

**697.** பெற்றமா தவர்குமரன் கந்தமா தனவடிவும் பெயர்வி லாது
சுற்றுமா மணிதரங்கந் தூற்றுவத னரம்ப முதலா ஞான
முற்றுநா லாறுன புண்ணியதீர்த் தமநோக்கி முன்னுங் காதற்
பற்றினற் றனித்தனியே பேருலகெ லாமுணரப் பகர்வ தானர்.

(பொ - ரை):-(அப்போது சிறப்புப்) பெற்ற அருந்தவர் (அனைவரும்), குமரனது கந்தமாதன வடிவையும், இடம் பெயராது சூழும் முத்துக்களை அலைகள் வாரியிறைக்கும் வதனாரம்பம் முதலான ஞானத்தை மிகச் செய்யும் இருபத்தினான்கான புண்ணிய தீர்த்தங்கள் யாவற்றையும் கண்டு, (அவைகளை) எண்ணும் அன்பின் தொடர்பால், (ஒவ்வொருவரும்) தனித்தனியாக (அவைகளின் சிறப்பை,) உலகெலாம் உணருமாறு உரைக்கலாயினர், (எ - று). (39)

**698.** மண்டுதிரைக் கடலுடுத்த புடவிதனிற் போகமொடு வளங்கள் முத்தி
யுண்டுபடுத் தியதலங்கள் பலகோடி யுண்டவைக ளுவமை யில்லாக்
கொண்டசுடர் வேற்குமரன் செயந்திபுரந் தனிற்கிழாங் குறிக்கி னென்றே
துண்டமதிக் கோடீரன் றனைப்பழிச்சும் வசிட்டமுனி சொற்றுன் மாதோ(40)

**(பொ - ரை)** :—நிறைந்த அலைகளை யுடைய கடல்சூழ் உலகில், போகத்துடன் விரிந்த செல்வங்களையும், வீடு பேற்றையும் விளைவிக்கும் எண்ணிறந்த தலங்கள் பல இருக்கின்றன. அவைகளைக் குறித்துக் கூறுமிடத்து, உவமை கூற இயலாத ஒளி மிகும் வேல் குமரனது திருச்செந்தில் பதிக்குத் தாழ்ந்தனவே என்று, பாதிமதிச் சடைப் பரமனை வழிபடும் வசிட்ட முனிவர் திருவாய் மலர்ந்தனர், (எ - று).

**(குறிப்பு)** :—வளங்கள் - செல்வப் பெருக்கங்கள். கோடீரம் - சடை. (40)

**698.** **பிரமகத்தி கள்ளருந்நல் வேதநசாத் திரநிந்தை பேசும் பாவர்**
**ஒருதினத்திற் செயந்திபுரத் துபவசிக்கி லன்னபவ மொழித்து மேலாம்**
**பரகதிக்க ணெய்துவரெய் துவர்திண்ணம் திண்ணமெனப் பயிலும் வேதம்**
**வரையறுக்கும் தவவாம தேவமுனி வரன்பகுத்து வகுத்தான் மாதோ. (41)**

**(பொ - ரை)** :—பிரமகத்தி, மதுபானம், வைதிக நூற்களை வசை கூறல் எனும் பாவமயமான படிறர், ஒருநாள் செந்திலில் தங்கி உபவாசம் இருந்தால், அப்பாவங்கள் அகன்று, மேலான வீடு பேற்றை யடைவர்; இது என்றும் நிச்சயம் என்று, பாராயண நூலான மறைகள் வரையறுத்துக் கூறும் தவத்தை மேற்கொண்ட வாமதேவ முனிவர், பாகுபாடு செய்து, (விரித்து) வகையாக விளக்கினர், (எ - று).

**(குறிப்பு)** :—திண்ணம் திண்ணம் எனும் அடுக்கு, பெரிது நிச்சயம் எனும் பொருட்டு. (41)

**700.** **படப்பாந்தள் தலைசுமக்கும் பாரிடத்திற் கடவுணதி பலவுஞ்சூழ்ந்த**
**கடற்பாலி லுளதீர்த்தத் தொகையுமிவை தருபலனுங் கருதித் தூக்கி**
**யெடைப்பார்க்கி னியகந்த புட்கரிணிக் கிணையாகா வெனச்சா பாலி**
**திடப்பான்மை யென்றுணை யிட்டுரைத்தா னியாவருக்குந் தெரிய மாதோ.**

(பொ - ரை) :—படங்களை யுடைய அநந்தன் தலை யால் தாங்கும் தரணியின் (உள்ள முதன்மைத்) தெய்வ நதிகள் பலவற்றையும் முற்றுகை யிட்ட கடற் கரை யோரத்தில், குறித்த தீர்த்தக் கூட்டங்களையும், இவைகள் அளிக்கும் பயன்களையும், சிந்தித்துச் சீர் தூக்கி, சரிநிகர் சமஞ்செய்து ஆய்ந்தால், இன்பமான கந்தபுட்கரணிக்கு ஒப்பாகா; (யாம் கூறிய இது,) உறுதித் தன்மை என்று ஆணையிட்டு, அனைவரும் அறியு மாறு சாபாலி முனிவர் அறிவித்தார், (எ - று).

(குறிப்பு) :—பாந்தள்—பாம்பு. பாரிடம் - நிலவுலகம். (42)

**701.** **பிறந்தநாண் முதலாவி போங்காறும் பிரயாகை பிரிவின் றுடிச்**
**சிறந்தவான் கதிநனிலுங் கார்த்திகையிற் கார்த்திகைநாட் செவ்வேண்**
**[முன்னர்**
**உறைந்தவார் கலிமூழ்கி யுமாபதிசே யைப்பரவி லுயர்ந்த கோடி**
**நிறைந்தவான் கதிகாட்டு மாணையெனக் காசிபனு நிகழ்த்தி னானல்**

(பொ - ரை) :—கார்த்திகைத் திங்களில் வரும் கிருத் திகை யன்று, செவ்வேள் திருமுன் இருக்கும் வதனாரம்ப தீர்த்தத்தில் மூழ்கி, பார்வதி சமேதரான பரமன் அருளிய முருகனை வழிபடில், பிறந்த அன்று முதல் மரணநாள் வரை நீங்காது (நாள்தோறும்) பிரயாகை யில் நீராடி, (அதன் வழி) பெருகி உயரும் பேற்றினும், கோடி மடங்கு உயர்ந்து நிறைந்த பயனை உதவும் என்று, ஆணையிட்டுக் காசிபர் அறிவித்தார், (எ - று).

(குறிப்பு) :—பிரயாகை - வடநாட்டில் உளதொரு தீர்த்தப் பெயர். (43)

**702.** **பருவமொரு நூறளவும் பரம்புமணி கன்றிகையிற் படியும் நீர்மை**
**யொருதரந்தென் செயந்திபுரஞ் சென்றுகும ரேசனடி யுவந்து வாழ்த்தும்**
**பெருமையினர்க் கெளிதாகக் கிடைக்குமென மூவாறு பெரும்பு ராணம்**
**விரிவுரைக்கு மாணையென மார்க்கண்ட னுத்தமும்ப விளம்பி னானல்.**

(பொ - ரை) :—செந்திற் பதிக்கு ஒருதரம் சென்று, குமரப் பெருமான் திருவடிகளை மகிழ்ந்து துதிக்கும் திறத்தினர்க்கு, நூறு வயது வரை, (காசிப் பதியில்) பரவிக் காணப் பெறும் மணிகன்றிகையில் நீராடும் சிறந்த பயன் எளிதாகச் சித்திக்கும் என, பெருமை யுடைய பதினெட்டுப் புராணங்கள், விரிவாக ஆணையிட்டு விளம்பும் என்று, நாத்தழும்பேற மார்க்கண்டேயர் நவிலல் ஆயினர், (எ – று). (44)

**மழைதிறம்ப அறந்திறம்பிக் கொடுமைபுரி கொடுங்கால வரம்புள் ளாகத்**
**தழையுமுக மாயிரமும் வரையாம லனமளிக்குந் தவத்தின் மேன்மை**
**யுழைமகள்கா தலனுறைந்த செயந்திபுரத் தொருதிவச முற்றோ ரெய்தும்**
**விழைவுறுநற் பயனிகரா தாணையெனக் கவுதமனும் விரித்துச் சொன்னான்.**

(பொ - ரை) :—தருமம் தவறி, (அதன் பயனாகப் புனித) மழை பெய்யாமல் போக, கொடுமையை விளைவிக்கும் தீய கால எல்லையை உள்ளடக்கி இருக்கும் ஆயிர யுகம்வரை, அன்னதானம் செய்தல் எனும் புண்ணியத்தால் வரும் பயன், மான்மகள் மணாளர் எழுந்தருளிய செந்திலம் பதியில் ஒரு நாள் தங்கினவர் பெறும் விரும்பத் தக்க நற்பயனை ஒப்பாக மாட்டாது; (இது) நம் ஆணை யென்று விரித்துக் கோதமர் விளம்பினர், (எ - று).

(குறிப்பு) :—திறம்பல் – மாறுபடல். உகம் - யுகம். உழைமகள் - வள்ளியம்மை. திவசம் - நாள். (45)

**704. தருப்பைநுனி கோலியநீர் தனையருந்திக் காமாதி தணந்து மோன**
**விருப்பினொடு பருவமொன்று நனிபுரியு மத்தவத்தின் மேன்மை யேமப்**
**பொருப்பரசி மகன்செயந்தி புரத்திருப்பார் தங்கள்வயிற் புகலும் கோடி**
**திருப்புகழுண் டாகுமென முற்கலமா முனிவரனுஞ் செப்பி னானல்.**

(பொ - ரை) :—தருப்பை நுனியால் எடுத்த நீரை உட்கொண்டு, (நீதமற்ற) காமம் முதலியவைகளை நீங்கி, (வித்தக) மவுன விருப்புடன், ஒரு ஆண்டு காலம் மிக்குச் செய்யும் அத்தவத்தின் பயனைவிட, இமய மலைமகள் தந்த மைந்தரது செந்திலில் தங்கி யிருப்பவரிடத்து, உரைக்கப் பெறும் கோடிப் பங்கு மிக்க புகழ் உளதாகும் என்று, சிறந்த முற்கல முனிவர் செப்பினர், (எ - று).

(குறிப்பு) :—கோலுதல் - துழாவி யெடுத்தல். ஏமம்- ஹிமம் என்பதன் திரிபு. (46

**705.** வயப்புரவி மகநூறு வாசபே யப்பெயரா மகத்தி னூறு
வியப்புறுந்த சனனமுத லிறுறுங்கா லந்தினமு மிக்காச் செய்த
நயப்பினிய செயந்திபுரந் தனிலுறைவார் தினமடைவ ரென்ன நாட்பூ
வயக்கடவுள் சனகாதி யோகியர்முன் யானுணர வறைந்தா னென்ன.

(பொ - ரை) :—வியப்பாக எண்ணப் பெற்ற பிறப்பு முதல் இறப்பு நாள் வரை, தினந்தோறும் அசுவமேத வேள்வி நூறு; வாசபேயம் எனும் பெயருடைய வேள்வி நூறு மிகுதியாம்படிச் செய்த பயனை, இனிய திருச்செந்திலில் வசிப்பவர் நாள்தோறும் பெறுவர் என்று, புதுமலரில் பொலிவு பெற்றுள பிரமதேவர், சனகர் முதலிய யோகிகள் முன்னிலையில், அடியேன் உணருமாறு அறிவித்தார் என்று, (எ - று). (47)

**706.** கோசிகனி தானையெனப் புகன்றனனு லிதுநிற்கக் குனிப்பிலாத
மாசிறவச் சுகமுனிகே ளரித்துவா ரத்தின்முகில் வனப்பு வாய்ந்த
கேசவன்முன் றெருமாக மூழ்குபலன் வேறுளக்கக் கிளர்ந்து வாசம்
விசுகந்த புட்கரிணி யொருதரமூழ் குநர்க்காகும் விளம்பி னம்மா.

(பொ - ரை) :—சொல்லிய இது, சத்தியமான செய்தி யென்று கோசிகர் கூறினர்; இது ஒரு புறம் நிற்க,

கோணுதல் இல்லாத தூயதவச் சுகமுனிவா ! (மேலும்) கேள் ; அரித்துவாரத்தில், மேக நிற அழகமைந்த திருமேனியுடைய கேசவர் திருமுன், ஒரு மாசித் திங்கள் முழுதும் நீராடும் பயன், வேலாயுதம் துளக்க விம்மி விளங்கி, மணம் பரப்பும் கந்தபுட்கரிணியில் ஒரு தரம் மூழ்குநர்க்கு விளையும் என்று விளம்பலாம், (எ-று).

(குறிப்பு) :—அரித்துவாரம் - வடநாட்டுத் திருப்பதி. கேசவன் - மயிர்முடி யழகுடையவன்; கேசி எனும் அசுரனைக் கொன்றவன் எனலுமாம். அம்மா - வியப்பிடைக் கிளவி. (48)

**707.** களவினுற் றிரிவோர்கள் பின்னவர்தங் கன்னியர்பாற் காம வாஞ்சை
யளவளா வுறுமறையோர் மறையோரை நிந்தனைசெய் யறிவி லாதோர்
தெளிவிலாக் கைம்மையர்பால் வந்துறுபு ருணகத்தி செய்வோர் வானின்
இளநிலாக் கலைதவழுங் கோடீரர்க் குணர்வுரைத்த இளைய சேயின்.

(பொ - ரை):—திருட்டுத் தொழில் செய்து திரிபவர்களும், நாலாங் குலத்தவருடைய நங்கையர்கள் இடத்தில் காம தாபத்தால் கலக்கும் அந்தணர்களும், அந்தணரை நிந்திக்கும் அறிவில்லாதவர்களும், தெளிவிழந்த விதவைகள் இடத்தில் இணங்கிக் கருச்சிதைத்தல் செய்தவர்களும், விண்ணில் உள்ள இளம் பிறை தவழும் சடைமுடிச் சங்கரர்க்கு உபதேசித்த முருகனின்,

(குறிப்பு) :—பின்னவர் - பிற்பட்ட இனத்தவர். அளவளாவல் - கலத்தல். கைம்மையர் - கணவனை யிழந்த காரிகையர். கோடீரர் - சடையுடைய சிவபிரான். புருணகத்தி - கருச்சிதைவு. உணர்வு - உபதேச நுட்பம். (49)

சேவடியைப் பணிந்தொருநாட் செயந்திபுரத் தினிதிருப்பால் தீமை பூண்ட
பாவவினைக் குறும்பறுத்துப் பரகதிவா னகத்திருந்து பரிவின் வாய்ந்த
மூவிரண்டு முகத்தனடி நிழலிருப்ப ரீதுநிற்க முனிவ கேளென்
றுவலுடன் வியாதமுனி பின்னுமொரு காதையெடுத் தறைவ தானுன்.

(பொ - ரை) :—(வாழ்விக்கும்) திருவடிகளை வணங்கி, ஒருநாள் இனிது செந்திலில் இருத்தலால், அணிகலனாகத் தீமையை அணிந்த பாவச் செயலாகிய பகையை அழித்து, முத்திப்பேறு எனத் திருந்திய அன்பு நிறைந்த அறுமுகப் பரமன் திருவடி நிழலில் அமர்பவராவர்; இது ஒருபுறம் இருப்ப, (சுக) முனிவா! கேள் என்று, ஆர்வத்துடன் வியாச முனிவர், மேலுமொரு வரலாற்றை எடுத்துக் கூறலாயினர், (எ - று).

(குறிப்பு) :—குறும்பு – பகை. பரிவு - அன்பு. (50)

709. அற்பினுடன் கார்த்திகையிற் கார்த்திகைநாட்
 செயந்திபுரத் தமரர் போற்றப்
பொற்புநிறை திருமுகங்க ளோராறுங்
 களிசிறப்பப் புகழ்ந்து போற்றுக்
கற்பினர்க ளெவரேனுஞ் சந்திரசூ
 ரியருலவுங் காறும் மாறு
மற்புரைவே சரியாவர் நிச்சயமீ
 தெனநூல்கள் வகுக்கு மாதோ.

(பொ - ரை) :—கார்த்திகைத் திங்களில் வரும் கிருத்திகை யன்று, திருச்செந்திலம் பதியில் வானவரானோர் (வந்து) வணங்க, (அவர்கட்குப்) பொலிவை நிறைவிக்கும் அழகிய திருமுகங்கள் ஆறையும், அன்புடன் இன்பம் பெருகப் புகழ்ந்து துதிக்காத புலவர்கள் எவரேயாயினும், சந்திர சூரியர்கள் உள்ள காலம்வரை, (அவர்கள்) பெருகிய முரட்டுக் கழுதைகளாகப் பிறப்பர்; இது உண்மை என்று, அருள் நூற்கள் வகையாக அறிவிக்கும், (எ - று).

(குறிப்பு) :—அற்பு - அன்பு. கற்பினர்கள் - கற்றுவல்ல புலவர்கள். மல் - வலிமை. வேசரி - கழுதை. (51)

710. புழுத்தகரு மலம்புசிக்கும் வாலேய
மாயிடினும் பொறையாய் மூத்த
அழுக்குடம்பு செயந்திபுரந் தனிலொழிந்தால்
அதுவுமொழி யாத ஞானம்
பழுத்துமறு சனனமின்றிக் கதியடையும்
இனுங்காதை பகர்வன் வேத
விழுத்தகுமெய்ப் பொருளாகு மெனச்சுகற்கு
வியாதமுனி விரித்தான் மன்னோ.

(பொ - ரை) :—புழுத்த கருமலம் தின்னும் கழுதையே யாயினும், பாரமாய்ப் பருத்த (தன்) அழுக்கு உடம்பைச் செந்திலில் விட்டு இறந்ததேல், அக் கழுதையும், நீங்காத ஞான நிறைவெய்தி, வேறு பிறப்பின்றி வீடுபேறு அடையும்; (இதுவன்றி,) வேதங்களிற் சிறந்த உள்பொருளான மற்றுமொரு வரலாற்றைக் கூறுகின்றேன்; (கேள்) என்று, வியாசர் சுகர்க்கு விரித்துரைக்கலாயினர், (எ - று).

(குறிப்பு) :—வாலேயம் - கழுதை. பொறை - சுமை. 'வேத விழுத்தகுமெய்ப் பொருளாகும் காதை இனும் பகர்வன் என' என்று கூட்டுக. (52)

711. சொல்லருமா காதையொன்று சந்தான
விரதமெனத் தொடர்ந்த பேராம்
அல்லலொழித் தடியவர்பா லன்புவைக்கும்
முருகனுளத் தருளே போலாம்
எல்லைதவி ரருந்தவத்துச் சுகமுனிகே
ளிம்பரும்பர்க் கிணங்கக் கையின்
நெல்லியென லாகவதன் முறைதிறம்பா
துலகுணர நிகழ்த்து வேனல்.

(பொ - ரை) :—அளவிறந்த அருந்தவத்தை யுடைய சுகமுனிவா ! கேள் ! (யாம் இனி) உரைக்கும் அரிய பெரிய வரலாறு, சந்தான விரதம் எனத் தொடரும் பெயரை யுடையது ; (அது) இந்நிலவுலகர், விண்ணவர் (இருவருக்கும்) ஒரு சேரத் துன்பம் தீர்த்து, அடியவர்கள் இடத்து அன்பு கொள்ளும் முருகன் திருவுளத்து அருளே போல்வது ; உள்ளங்கை நெல்லி போல், அதன் முறைமையைப் பழுதிலாதபடி உலகம் உணருமாறு (உனக்கு) உரைக்கின்றேன், (எ - று).

(குறிப்பு) :—சந்தானப் பிரதம் என்றும் பாடமுண்டு. இது, மகப்பேறு கருதினோர் மேற்கொள்ளும் மாபெரும் நோன்பு. 53

712. அரியநோன் பியற்றுகின்ற காசிபன்கா
 தற்குரிய அதிதி யாகும்
தெரியிழைநன் மைந்தரிடத் திச்சைவைத்துத்
 திசைமுகத்தன் சிரூரிற் றேர்ந்த
சுருதியாழ் முனிசரணம் பணிந்தேத்தி
 மைந்தரொடு தூய வாழ்வுந்
தருவதா மொருவிரத மெனக்கருள
 வேண்டுமெனச் சாற்றி னாள்.

(பொ - ரை) :—சிறந்த தவத்தை (இடையறுது) செய்கின்ற காசிப முனிவரின் அன்பிற்கு உரிய அதிதியெனும் அணங்கு, வித்தகப் பிள்ளைகளைப் பெறும் விருப்பம் கொண்டு, நான்முகரின் மக்களுள், இசையறிவில் தெளிந்த மகதியாழ் நாரத மாதவர் திருவடிகளை வணங்கி வழுத்தி, (நன்) மக்களொடு தூய வாழ்வையும் நல்குவதான ஒரு நோன்பை, அடியேற்கு (விளங்க) உபதேசித் தருளும் என்று விண்ணப்பித்தனள், (எ - று).

(குறிப்பு) :—பிள்ளைகள் கன்மவழியிற் பிறப்பர்; வேதனை களை அதற்கேற்றபடி விளைவிப்பர்; இறைவனை எண்ணி நோன்பியற்றி, அமலன் அருள்வழி உதிக்கும் நன்மக்கள், தாமும் வாழ்ந்து பிறரையும் வாழ்விக்கும் தகுதியராதலின், 'மைந்தரொடு தூய வாழ்வும் தருவதாம் ஒரு விரதம்' என்றார். (54)

713. சாற்றியுடன் வணங்கதிதி யுரைகேட்டுத்
தந்திரியாழ் தாங்குஞ் செங்கை
மாற்றருஞ்சீர் நாரதனும் வானவர்தஞ்
சிறையகற்றும் வைவே லண்ணற்
கேற்றதவ விரதமுனக் கறைகுதுமால்
உளங்கவற்சி யின்றி யின்று
கோற்றொடிகேட் டுணர்தியெனச் சந்தான
விரதமது கூறு கின்றான்.

(பொ - ரை):—(அங்ஙனம்) விண்ணப்பித்து உடனே வணங்கும் அதிதியின் மொழிகளைக் கேட்டு, நரம்புகளை யுடைய மகதியாழ் தாங்கும் திருக்கரத்துடன் மாறுப் புகழுடைய நாரதரும், விண்ணவரைச் சிறையி லிருந்து விடுவித்த பேரருள் ஞானவேல் பெருமாற்கு உரிய (அரிய) தவநோன்பை உனக்கு அறிவிக்கின்றேன்; மன விகற்பம் இல்லாமல், அழகிய வளையணி அதிதீ! இன்று ஊன்றிக் கேட்டு (இதை) உணர்ந்து கொள் என்று, சந்தானப் பிரத விரதத்தைச் சொல்லத் தொடங்கினர்,

(குறிப்பு) :— கவற்சி - கவலை. கோல்தொடி - அன்மொழித் தொகை. (55)

714. பெட்புடன்கார்த் திகைத்திங்கள் பூரணையிற்
செயந்திபுரம் பிறங்குங் கந்த
புட்கரிணி முதலான நாலாறு
தீர்த்தமுறை புகுந்து மூழ்கி

விட்புலவர்க் கரசளித்த கௌமாரி
குமரவுளம் விரும்பு நோன்பு
கட்பொதிதா மரைத்தாளுக் காகவொரு
பருவமுற்றக் கருணை வேண்டும்.

(பொ - ரை) :—கார்த்திகைத் திங்கள் பௌர்ணமி யன்று செந்தில் பதியில் அன்புடன் சென்று, (அங்கு) விளங்கும் கந்தபுட்கரிணி முதலிய இருபத்திநான்கு தீர்த்தங்களில் நியதிப்படியே நீராடி, உம்பர்கட்கு அரசளித்த உமைகுமரா! தேன் பொதிந்த தாமரை போன்ற (உம்) திருவடிக்கு (அன்பு செலுத்தும் வழி) அமைய, உள்ளம் விரும்பிய இந்நோன்பை, ஒருஆண்டு வரை மேற் கொள்ள, அருள் பாலியும், (எ - று.)

(குறிப்பு):—பெட்பு - அன்பு. பூரணை – பௌர்ணமி. விட்புலவர் – தேவர்கள். கட்பொதி - தேன் நிறைந்த. (56)

715. என்னமறை யாலறைகூஉய் மூவெட்டா
கியதீர்த்த மினிதின் மூழ்கிப்
பன்னிரண்டு தரங்கோயில் வலஞ்சூழ்ந்து
பன்னிரண்டு கண்ணான் பாதம்
மன்னிநின்று பன்னிரண்டு தரம்பணிந்து
பின்னெழுந்து மவுன மாகத்
துன்னியசூர் மாப்பாட்டிற் போய்வடக்கு
முகமாகிச் சுவாமி செந்தாள்.

(பொ - ரை) :—என்று மந்திரச் சொற்களால் பெருங் குரல் கொடுத்துக் கூவி, (மேல் கூறிய) இருபத்திநான்கு தீர்த்தங்களிலும் இனிது நீராடி, பன்னிருதரம் ஆலயத்தை வலம் வந்து, பன்னிரு திருக்கண் பரன் திருவடிகளை அண்மி யிருந்து, பன்னிருதரம் வீழ்ந்து

வணங்கிப் பின் எழுந்து, மவுனத்துடன், சூரனுகிய மாமரத்தை தொலைத்த இடத்தில் சென்று, வடக்கு முகமாகத் தெய்வக் குமரன் திருவடிகளை, (எ-று). (57)

716. நோக்கியிருந் தனுமிகையிற் குடபாலிற்
சுதரிசன நுவலுங் கீழ்பால்
தாக்கருமுச் சூலநடுச் சத்தியிவ்வா
றெருமுப்பாற் றரையிற் றீட்டி
யாக்கியசோ டசவிதியால் பூசனைசெய்
தாறிரண்டி னளவை யாகத்
தேக்கருளின் வந்தனையால் திருக்குமரன்
ஆலயத்தின் திசைபார்த் தன்பால்.

(பொ - ரை) :—பார்த்த கண் வாங்காது பார்த்து, மோதிர விரலால் மேற்புறத்தில் சக்கரமும், சொல்லப் பெறும் கீழ்ப்புறத்தில் (எந்த ஆயுதங்களாலும்) தாக்கி வெல்ல இயலாத திரிசூலமும், (இந்த இரண்டின்) நடுவிலே வேலும் (ஆகிய) இவ்வடிவங்களைத் தரையில் முப்புறமாக எழுதி, (அம் மூன்றனையும்) வழிபட்டு, நிறையருளை வாழ்த்துதலுடன், அழகிய குமரன் ஆலயம் இருந்த திசையை அன்பொடு நோக்கி, (எ - று). (58)

(குறிப்பு) :—அனுமிகை - மோதிரம் அணியும் விரல். குடபால் - மேற்குத் திசை. சுதரிசனம் - திருமால் சக்கரம். கீழ்ப்பால் - கிழக்குத் திசையில். சத்தி - வேல்படை.

717. பேரருட்சுப் பிரமணிய என்றென்றே
மூன்றுதரம் பேசிப் பேசி
யாருமிடற் றெழுமோசை யெவ்வளவோ
அவ்வளவு மறைகூஉய் வாகைச்

**சூருயிர்போய்க் கதியடைந்த அவ்வயின்தெண்**
**கடன்மூழ்கிச் சுடரு லாய**
**வீரவடி வேற்கரத்த னாலயத்தின்**
**மவுனமொடு மீண்டும் போகி.**

(பொ - ரை):—பெருங்கருணைச் சுப்ரமண்யப் பெரு மானே என்று மூன்று தரம் ஓதி, (அந் நாமத்தை) நிறைந்த மிடற்றின் ஒலி எவ்வளவு எழ இயலுமோ அவ்வளவு (உயர்த்தி) வலிந்து மந்திரத்தால் அழைத்து, வாகை மாலை புனைந்த சூரன் உயிர் சென்று பேறு பெற்ற அந்த இடத்துத்தெளிந்த கடலில் மூழ்கி, மீட்டும் மவுனத்துடன், ஒளி பரவிய வேல் ஏந்திய திருக்கரத்து இறைவன் (புனித) திருக் கோயிலுள் புகுந்து, (எ-று).

(குறிப்பு):—மிடறு - கண்டம். மறை – மந்திரம். (59)

718. **சந்நிதியை யடைந்துகுரு முகமாகக்**
**கும்பமொன்று தாபித் தேத்தித்**
**துன்னுபதி னறுவிதத் தன்பினிற்பூ**
**சனைபுரிந்து தூநீர்க் கும்ப**
**மன்னுபுன றனின்மூழ்கி யனைத்தினுக்குங்**
**காரணமாய் மருவி நின்ற**
**பன்னிருகைக் குமரேசன் றிருவடித்தா**
**மரைமலரைப் பணிந்த பின்னர்.**

(பொ - ரை):—சந்நிதியுள் நுழைந்து, (தனிப்பெரும்) ஆசாரியன் திருமுன் ஒரு கும்பத்தைத் தாபித்துத் துதித்து, (புனித) பதினாறு உபசாரங்களால் அன்பொடு பூசித்து, தூய நீர்மையுடைய கும்பத்தில் இருக்கும் நீரில் முழுகி, காரணமாக யாவற்றினும் கலந்திருக் கின்ற பன்னிரு திருக்கரப் பரமனது திருவடித் தாமரை களை வணங்கிய பின், (எ - று). (60)

719. அந்தணர்பன் னிருவருக்கும் ஊட்டுவித்தா
றெழுத்துமனத் தழுத்தி வேற்கைக்
கந்தனைச்சிந் தனைக்கோயி லூடிருத்தி
யுபவசித்துக் கழித்துப் பின்னர்
வந்ததினத் தினிமைதரும் பாரணையூண்
விதிமரபின் வாய்ப்பச் செய்தே
முந்தறையு மிவ்வாற்றாற் பன்னிரண்டு
பூரணையு முற்ற நோற்று.

(பொ - ரை):—பூதேவரான அந்தணர் பன்னிருவர்க்கும் அமுதம் அருத்தி, ஆறெழுத்து மனுவை அகத்தில் பதித்து, உள்ளமெனும் ஆலயத்தில் திருக்கரத்தில் வேல் ஏந்திய தெய்வக் கந்தனை உவகையோடு பாவித்து உபாசித்து, (அந்நாளைப்) போக்கி, அடுத்த தினத்தில் பாரணை உணவை விதிப்படி கொண்டு, முன்னுரைத்த இவ்வகைப்படி, (அரிய) பன்னிரண்டு பௌர்ணமிகளிலும் அனுட்டித்து, (எ-று).

(குறிப்பு):—உபவசித்தல் – உபாசித்தல். (61)

720. மற்றவிருச் சிகத்திங்கட் கார்த்திகையின்
இவ்விரத மரபி னாற்றிக்
கற்றமறை யோர்க்கரிய கோதான
முதலாய களிக்கும் தானம்
முற்றுமகிழ் வொடுபுரிக இந்நெறியி
னோற்றவர்கள் முருகப் புத்தேள்
உற்றதிருக் கருணையினால் வரவரவேண்
டியவிருப்பி னுவந்து வாழ்வார்.

(பொ - ரை):—அடுத்த கார்த்திகைத் திங்களில் வரும் கிருத்திகையிலும் (அரிய) இந்நோன்பை

முறையே அனுட்டித்து, கலைஞான அந்தணர்க்கு உயர்ந்த கோதானம் முதலிய உவகைதரும் தானங்கள் அனைத்தையும் (சிறந்த) ஆர்வத்துடன் செய்வாயாக; இங்ஙனம் நோற்றவர்கள், முருகப் பரமன் பேரருளால், விரும்பிய பொருள் விரும்பியவாறே நிறைந்து அடுத்து அடுத்து விளைய, அகங்களித்து வாழ்பவர் ஆவர், (எ-று).

(குறிப்பு):—விருச்சிகத் திங்கள் - கார்த்திகை மாதம். (62)

721. இவ்வாறு மறையவர்க ளியற்றுநர்க
ளாமாகில் இருஞ்சி லேடைக்
கொவ்வாத கலையனைத்தும் பெற்றதிக
சந்தானத் துவந்து வாழ்வார்
மைவாரி யிருநிலத்தி லரசரியற்
றுநராகின் மருவார்ச் செற்றுச்
செவ்வாமன் னிலைபுரிந்து சந்தானம்
பலவடைந்து சிறப்பின் வாழ்வார்.

(பொ - ரை):—இந்த நோன்பு நெறியை அந்தணர்கள் இயற்றுவரேல், பெரிய சிலேடைப் பொருள்களால் (எவர்க்கும் எளிதில்) விளங்காத உயர்ந்த நூற்கள் அனைத்தையும் உணர்பவர்களாய், மாபெரும் மக்கள் பேற்றுடன் மகிழ்ந்து வாழ்வர்; நீலக்கடல் புடை சூழ்ந்த பெரிய இந்நிலவுலக மன்னர்கள் மேற்கொள்வரேல், (வீணான) பகைவர்களை வென்று, நன்றாக அரசியலை நடத்தி, பல மக்களைப் பயந்து, (வளம்மிகு) சிறப்புடன் வாழ்பவர் ஆவர், (எ - று).

(குறிப்பு):—சிலேடை – பல்வேறு பொருள் படுதல். ஒவ்வாத – ஒத்து வராத. சந்தானம் - புத்திரப் பேறு. மை - கடலுக்கு அடை. மருவார் - மருவி வாழ அறியாத பகைவர்கள்; மருவுதல் - கலத்தல். செவ் - செம்மை. மன்னிலை - நிலையான அரசியல். (63)

**722.** வணிகரிந்நோன் பியற்றிடினற் றனதனைப்போ
லாய்மகவின் மகிழ்வார் மற்றைத்
தணிவரும்பின் னவரியற்றி லளவறுநல்
வளத்தொடுசந் தான வாழ்க்கை
யணிபொருந்தி யினிதிருப்பா ரெனமொழிந்தான்
நாரதன்மற் றதிதி கேட்டுப்
பணிதல்புரிந் தாசிரிய நாரதமா
முனியாகப் பாவித் தேத்தி.

(பொ - ரை) :—வைசீரியர்கள் இவ்விரதத்தை அனுட்டித்தால், நிலவுலக குபேரர்கள் போல் நிலைத்து, மகப்பேறுகளால் மகிழ்வர்; மற்றுமுள குறைவற்ற நாலாம் குலத்தவர் அனுட்டித்தால், அளவற்ற சிறந்த செல்வத்துடன், அழகிய மகப்பேற்று வாழ்க்கை அமைந்து இன்புற்று இருப்பர் என்று நாரதர் அருளினர்; அதிதி தேவி (அதைச்) சிரவணித்து, நாரத முனிவரை ஆசாரியாகப் பாவித்து வணங்கி வாழ்த்தி, (எ – று).

(குறிப்பு):—வணிக் - வர்த்தகம்; அதையுடையவர் வணிகர். தனதன் - குபேரன். சந்தானம் - புத்திரப் பேறு. (64)

**723.** ஓர்பருவ மதிதியருஞ் சந்தான
நோன்பியற்றி யொளிர்வேற் சேயின்
சீரருளி னிந்திரனை யுபேந்திரனை
மகிழ்சிறப்பத் திருவி னீன்று
சோர்வொழிந்தின் றளவுமுற்ற ளாதலினல்
இவ்விரதந் துணிவி னேற்றோர்
போரயிலற் காளாகி யன்னவன்றாள்
வீட்டின்பம் புகுவர் மாதோ.

(பொ - ரை) அதிதிதேவி, ஒரு ஆண்டு முழுவதும் சந்தான விரதம் எனும் (மேதகு) நோன்பை மேற்கொண்டு, ஒளி பரப்பும் வேலிறைவன் திருவருளால் இந்திரனையும் உபேந்திரனையும், மகிழ்வுமிகப் பெருஞ் செல்வ மக்களாகப் பெற்று, எத்தளர்ச்சியும் இல்லாமல் இன்றுவரை வாழ்கின்றாள்; ஆதலால், இந்நோன்மை நிச்சயமாக நம்பி அனுட்டிப்பவர்கள், (அறியாமை அழியப்) போர் புரியும் வேற்பெருமாற்கு அன்பராகி, அப்பெருமான் திருவடிக்கீழ் பேரின்பம் பெறுவர்,

(குறிப்பு) :—ஓர் பருவம் – இங்கு ஒரு ஆண்டு எனும் பொருளது. உபேந்திரன் – இந்திரனுடைய தம்பி எனும் பொருட்டு. (65)

724. ஈதுநிற்க சுகமுனிகே ளின்னுமொரு
காதையுண்டா லியம்பு கேனியான்
மாதவத்தின் முறைதிறம்பா வொருமறையோன்
மறைநான்கு மங்க மாறும்
ஓதியுணர்ந் துண்மையெலா மாராய்ந்து
தன்னுள்ளத் தொருங்கே யாக்கி
வேதியர்க்கெல் லாமுணரத் தானுணர்த்திப்
புகழ்நிறுவி வியப்பு மேலாய்.

(பொ - ரை) :—இது ஒரு புறம் இருப்ப, சுகமுனிவா! இன்னுமொரு வரலாறு உளது; அதையும் யாம் அறிவிக்கின்றோம்; கேள்! (முற்பிறப்பில்) பெருந்தவ ஒழுக்கம் பிழைபடாத அந்தணன் ஒருவன், நான்கு வேதங்களையும், ஆறு அங்கங்களையும் ஓதி உணர்ந்து, (அவைகளின் உள்ள அரிய) நுட்பங்களை யெல்லாம் ஆராய்ந்து, (ஓதி ஆய்ந்து உணர்ந்தவைகளைத்) தன் உள்ளத்தில் ஒன்று படுத்தி, (மற்ற) அந்தணர் அனை

வருக்கும் உணருமாறு, (அவைகளை அவர்கட்கு) உணர்த்தி, மேலவர் எவர்க்கும்) வியப்பு மேலிட, தனது நெடும்புகழை (எங்கும்) நிலை நாட்டி, (எ - று). (66)

725. புகலுறுவை திகஞ்சைவம் வைட்டிணவம்
வாமமிசை பொருந்து மேலோர்
பகர்சவுர முயர்காணு பத்தியமே
யாறுகப் பகுத்துக் காட்டும்
தகையமத விகற்பமெலாந் தானுணர்ந்தும்
பிறர்க்குரைத்துந் தனக்குத் தானே
நிகரொருவ ரில்லாது புகழ்நிலவாற்
புடவிதனி னெடிது வாழ்ந்தான்.

(பொ - ரை):—(சிறப்பித்துச்) சொல்லப்பெறும் வைதிகமும், சைவமும், வைணவமும், வாமமும், புகழுடைய மேலவர்கள் புகலும் சவுரமும், உயர்ந்த காணுபத்தியமும் என ஆறுகப் பகுத்து விளக்கப் படுத்தும் தகுதியுடைய சமய பேதங்கள் அனைத்தை யும் தான் உணர்ந்தும், அயலவர்க்கு எடுத்து அறிவித்தும், ஒப்பானவர் தன்முன் ஒருவர் இல்லாமல், புகழாகிய ஒளியுடன் நிலவுலகில் இனிது நெடுநாள் இருந்தனன், (எ - று).

(குறிப்பு):—வைதிகம்-வேதாந்தம். சைவம் - சித்தாந்தம். வைணவம் – திருமாலை வழிபடும் கொள்கை. சவுரவம் - சூரிய வழிபாடு. வாமம் - சக்தி வழிபாடு. காணுபத்தியம் - கணபதி வழிபாடு. இங்கு உரைத்த அறுசமயச் செய்திகளை விளக்கின், அது கடல் போல் பெருகும் எனவறிக. (67)

726. பையரா முடிதாங்கு நெடும்புடவிக்
கண்வதிந்து பவத்தின் மூத்துச்
செய்யதாய் தந்தைகுருச் சிவனயன்மால்
மறையோர்கள் தெய்வஞ் சார்ந்த

துய்யதா மந்திரமா தீர்த்தமருந்
　　தவந்தருமஞ் சுருதி நன்னூல்
பொய்யிலா மறைவேள்வி யருந்ததிக்கற்
　　பினில்வாய்ந்த புரைதீர் மாதர்.

727. சொற்றிடுமிவ் வாறனைத்து நிந்தனையே
　　யேன்றுமனந் துணிந்து கண்பால்
உற்றனமெய் காணாத வுறுபொருளா
　　னவைபொய்யா முண்மை ஞானம்
பெற்றவருஞ் சுவர்க்கமொடு நிரயமுள
　　என்பரவண் பெயர்வி லாது
முற்றஇருந் திவணடைந்தோம் எனவொருவர்
　　சகந்தெரிய மொழிந்து ளார்யார்.

(பொ - ரை):—படங்களை யுடைய (ஆயிரந்தலை) அநந்தன் தாங்கும் நிலவுலகில், (அம்மறையவன் அவ்வாறு) வாழ்ந்து, (முற்பிறப்பில் அவனை யறியாது செய்த பாவத்தால், தனிப்பெரும் அறிவு வரவரத் தளர்ந்து, மோசமான) பாவம் முதிர்ந்து, சிறந்த அன்னை, தந்தை, குரு, சிவன், பிரமன், திருமால், அந்தணர்கள், (மாபெரும்) தெய்வ சார்புடைய மந்திரங்கள், புனித நதிகள், அருமைத் தவம், தருமம், வைதிக நூற்கள், பொய்ம்மை யில்லாத வேத வேள்விகள், அருந்ததி போலும் கற்புடைய அரிவையர், (68)

(பொ - ரை):—(என்று இவ்வாறு) சொல்லப்பெறும் அனைத்தையும் (சதா) நிந்தித்தல் செய்து, கண்களால் காணப் பெற்றவை, நெஞ்சத்தால் நிச்சயிக்கப் பெற்றவையே மெய்யாம்; கண்களால் பார்க்கப் பெறு தனவாய் உள்ள எப்பொருளும் பொய்யாம்; உண்மை அறிவு உடையவர்களும் சுவர்க்கத்துடன் நகரமுளது

என்று கூறுவர்; (ஆனல்) அந்த இடங்களில் நீங்காது பலகாலம் இருந்து, (அங்கிருந்து) இங்கு வந்தோம் என்று உலகறிய உரைத்தவர்கள் யார்? (எ - று).

(குறிப்பு) :—பை - (ஆயிரம்) படம். அரா - ஆதிசேடன். புடவி - நிலவுலகம். பவம் - பாவம். புரைதீர் — ஒரு குற்றமும் இல்லாத இயல்புடைய; ஏன்று - ஏற்று. கண்பால் உற்றன - பிரத்தியட்சப் பிரமாணம். (69)

728. எனநினைந்து தன்வேத முறைதிறம்பி
யறம்பாவத் தியல்போ ராது
சனனநெடும் பொறைதாங்கி நெடுங்காலங்
கொடுந்தொழிலிற் றனே மூத்து
மனனுணர்வு தள்ளாட நாக்குழற
நரைமுதிர்ச்சி வந்தூழ் முற்ற
வினையுழன்று சுழன்றகறங் காஞ்சடலச்
சுமையதனை விட்டான் மாதோ.

(பொ - ரை) :—என்று எண்ணி, தன் வைதிகநெறி மாறி, புண்ணிய பாவ இயல்புகளை (அனுபவம் கொண்டு) உணராமல், பிறப்பாகிய பெரும் பாரத்தைச் சுமந்து, பலகாலம் வரை தீய செயல்களில் தானே மிகுதிப்பட இருந்து, (தன்) மனத்தின் உணர்வு தள்ளாட, சொற்கள் தழுதழுக்க, நரை (திரை) முதிர்ந்து வந்து, (மோதும்) வினையாட்சி முடிதலின், கர்மத்தால் கலங்கிச் சுழலும் காற்றுடி போலாம் காய பாரத்தைக் கைவிட்டு உயிர் துறந்தான், (எ - று).

(குறிப்பு) ;—மேதையே யாயினும், தவக்குறை அறிவைத் தளரவிடும். அதற்கேற்ற சிந்தனையும் செயலும் இருக்கும் எனலை ஆய்ந்த அறிவினர், மதிகெட்டார் குற்றங் கண்டு மனம் நோகமாட்டார்கள் என்பதற்கு, இந்த வரலாறும் ஒரு

எடுத்துக் காட்டாக இருக்கிறது அல்லவா. 'வினையுழன்று சுழன்ற கறங்காஞ் சடலம்' என்ற இப் பாட்டின் இறுதி வரியை, ஓதும்போதே உடலாடுகிறதே! (70)

729. ஆவிபோம் பொழுதியம படர்பாச
மெடுத்தழுந்தக் கட்டிக் காலன்
ஏவலா லங்கங்கு விடஇருபத்
தெட்டாக வியம்புங் கோடி
பாவமா கியநிரயத் தூடழுந்திப்
பின்வழுதிப் பாண்டி நாட்டின்
தாவருக் கொடுங்குரல்வாய் வாலேய
மாய்மீண்டுஞ் சனித்தான் மாதோ.

(பொ - ரை) :—(பூத உடலை நீங்கி) உயிர் புறப்பட்ட சமயத்தில், இயம தூதுவர்கள் பாசத்தை எடுத்து இறுகக் கட்டி (இழுத்துச் சென்று,) காலதேவன் கட்டளைப்படி அங்கங்கு உள்ள நரகத்தில் தள்ள, இருபத்தெட்டு கோடி என்று கூறப்பெறும் தீமையின் பயன்களாகிய (அதிவேதனை) நகரங்களில் அழுந்தி, பிறகு (அங்கிருந்து மீண்டு,) பாண்டிய நாட்டில் கெடுதல் தீராத கொடிய குரலுடைய வாயுள்ள கழுதையாய்ப் பின்னும் ஒரு தரம் பிறந்தான், (எ - று).

(குறிப்பு):—சகுனத்திற்குக் கழுதையின் குரல் நல்லதெனினும், கேட்க சகிக்கா தாகலின், 'தாவருக் கொடுங்குரல்வாய்' என்றார். தெய்வ நிந்தை, சாஸ்திர நிந்தை, பெரியோர் நிந்தை செய்வோர் கதியைக் கூறும் இப்பாடலை, ஓதும் போதே உடலாடுகிறதே. (71)

730. யாவருக்கும் அருவருக்கும் வாலேய
வுருத்தாங்கி யிருந்த காலத்
தோவறமுன் குருமுகமாய் வேதமதி
கரித்ததவத் துயர்ச்சி யாலே

நாவலந்தீ வுக்கணித்தாஞ் சிந்துபுரந்
தனிலடைந்து நவையின் மூத்து
மேவருமச் சடச்சுழ்மைப் பெரும்பாரந்
தனை நீத்து விழுந்த தன்றே.

(பொ - ரை):—எத்தகையர்க்கும் அருவருப்பைத்தரும் கழுதை உருக்கொண்டு இருந்த காலத்தில், (முன்னைய பாவம்) முடிந்தொழிய, முற்பிறப்பில் (எவர்க்கும்) குருவாகி, வைதிக நூற்களை அதிகம் கற்றிருந்த அளவிறந்த புண்ணியத்தால், சம்புத் தீவிற்கே அழகு தரும் திருச்செந்திற்பதி யடைந்து விழுந்து, குற்றங்கள் பெருகியுள அவ்வுடல் சுமையாகிய பெரும் பாரத்தை உதறி இறந்தது, (எ - று).

(குறிப்பு) :—ஒவற - ஒழிதலால் மிச்சம் இல்லையாக. நவை- குற்றம். மேவரல் - வருதல். சடச்சும்மை - தேகபாரம். (72)

731. சிந்துபுரந் தனிலாவி விட்டொழிந்த
தன்மையினுற் சிறந்த ஞானக்
கந்தனரு ளால்ஞானக் கருத்தடைந்து
வருங்காம தேனுத் தாரு
முந்துமரம் பையர்சூழத் தேரேறிக்
கொண்டுவண்டு மொய்த்தூ டாடும்
கந்தமல ராசனத்தா னுலகடைந்திந்
நாளளவுங் களிப்பா லுய்ந்தான்.

(பொ - ரை) :—திருச்செந்திற் பதியில் உயிர் உடலை விட்டுப் புறப்பட்ட உயர்வால், சிறந்த ஞான மணமான கந்தப் பரமன் கண்ணருளால் சிவஞான உணர் வெய்தி, (அருளாணையால் எதிர் கொண்டு) வந்த காமதேனு, கற்பகத்தரு, முந்திவரும் தெய்வ அணங் கினர் மொய்த்து வர, (அரிய தெய்வ) விமானத்தில்

அமர்ந்து, வண்டுகள் மொய்த்து இசை பரப்பும் மணங் கமழ் மலரணை அயனது உலகை யடைந்து, இன்றுவரை மகிழ்ந்து இருக்கின்றான், (எ - று).

(குறிப்பு) :—உய்ந்தான் என்பது, கால வழுவமைதி; நலமாக இருக்கின்றான் என்பது பொருள். (73)

732. அருந்தவத்துக் கொருநாஞ்சி லாகியதென்
செயந்திபுரத் தமர்ந்து வேதம்
பொருந்தவுரைத் தாறுமுகப் பெருமான்றன்
இருசரணப் போது போற்றி
யிருந்தெவர்க்கும் பசியாம லனங்கொடுத்துப்
பின்னுடலத் திடும்பை நீத்த
பெருந்தவத்தர் பெரும்பேற்றை யெம்மனோர்க்
கெடுத்தெடுத்துப் பேசொ ணாதால்.

(பொ - ரை) :—அரிய தவங்கட்கு ஒப்பற்ற காப்பிடமான திருச்செந்தூரில் தங்கி, (உதாத்தம், அனுதாத்தம், சொரித மெனும் ஓசை) பொருந்த வேதங்களை ஓதி, (தூய) அறுமுகப் பரனது இரு திருவடித் தாமரைகளைத் துதித்து, (அங்கு) இருந்த யாவர்க்கும் பசியிலாதபடி அன்னம் பாலித்து, பிறகு பிறவியால் உளதான துன்பத்தை ஒழித்த பெருந்தவத்துப் பெரியோர்கள் பெறும் பயனை, எம்போன்றவரால் எடுத்துரைக்கல் ஆவதில்லை, (எ-று).

(குறிப்பு) :—நாஞ்சில் - அரண். மூன்றாவது அடியை இருந்த எவர்க்கும் எனப் பிரித்துப் பொருள்கொளப் பெற்றது. எத்தனை சொன்னாலும் ஆவதில்லை என்பதை, 'எடுத்து எடுத்துப் பேசொணாதால்' என்பதில் அறிக. ஆல் - அசை. (74)

பலகதை யுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

---

## 16. சிந்துபுர வைபவமுரைத்த அத்தியாயம்

733. அருந்தவ நெடுங்கட லளந்துணர் வியாசன்
திருந்துசுக மாமுனிவ செப்புவது கேளென்
றிருந்துணர்வி னுலுலக மேழிலுயர் சிந்து
புரந்தனை யடைந்தவர் புகும்பரி சுரைப்பான்.

(பொ - ரை):—அரிய தவப்பெருங் கடலை அளந்து உணர்ந்த வியாசர், (ஒழுக்கத்தால்) திருந்தி உயர்ந்த சுக முனிவா! (யாம்) உரைப்பதை (மேலும்) கேள் என்று, உணர்வால் (உய்தி பெற்று) இருந்து, ஏழுலகத்தும் சிறந்த செந்தில் பதியை அடைந்தவர் பெறும் பேற்றை உரைப்பா ராயினர், (எ - று).

(குறிப்பு):—மேல் நோக்கி உணர்வு தாவும் நிலையது தவம் எனப் பெறும். அதன் முயல்வுகள் அளவிறந்தன; அவ்வப்போது நேரும் அனுபவங்கட்கும் அளவில்லை. இடையில் தருக்குக் குறுக்கிடும்; இவ்வளவிற்கும் தப்பி உய்ந்தவ ராதலின், 'தவ நெடுங்கடல் அளந்துணர் வியாசன்' என்றார்.

734. சங்கமெறி வாரிதி தனிற்பொருளை நாடி
வங்கமொடு சென்றுபல வாணிக முயன்றே
கங்குல்பக லுந்துயில கன்றுகட லூடே
பொங்குபல மீனொடு புலாலினிது தின்பான்.

(பொ - ரை):—பொருளை ஆவலித்து, சங்குகளை (க் கரையில்) எறிகிற (அலைகளை யுடைய) கடலில் (எடுப்பான) தோணிகளில் (ஏறிச்) சென்று, இரவும் பகலும் நித்திரை யின்றி, பலவகை வர்த்தகத்தை முயன்று வளர்த்து, கடலில் உள்ள மிகுதியான பலவகை மீன்களுடன், புலாலை இன்பமாகப் புசிப்பான், (எ - று).

735. கற்றுணர்வி லாதுள மிலேச்சனது காலை
யற்றமறு சேனையுட ளுழியிடை நாவாய்
உற்றபல வாணிகர்க ளுள்ள நிதி யாவுஞ்
செற்றமொ டெடுத்தவர்கள் சென்னிதுணி விப்பான்.

(பொ - ரை):—கல்வியறிவு இன்றி யிருந்த (ஒரு) மிலேச்சன், (இங்ஙனம் கடலில் சஞ்சரித்திருந்த) அக் காலங்களில், தளர்வற்ற (தன்) பரிவாரங்களுடன், கடலில் மரக்கலங்களில் வரும் பலவணிகர்கள் இடத்தில் உள்ள திரவியம் அனைத்தையும் குரூரங் காட்டிக் கொள்ளை கொண்டு, அவர்கள் தலைகளும் அறுபடச் செய்பவன், (எ - று).

(குறிப்பு):—கற்றலும், உணர்வு முற்றலும் இலாதார் மிலேச்ச குணமே மேவுவர் என்பது குறிப்பு. அற்றம் - சோர்வு. ஆழி - கடல். நாவாய் - படகு. செற்றம் - பகை. (3)

736. தீமைபுரி வித்துமறை செல்வழி நடாத்தும்
ஓமமறை வாணர்சினை யோடுறு பசுக்கள்
தாமற வொறுத்துள தசைக்கறி சமைத்தே
காமுற நுகர்ந்துகிளை கட்குநுகர் விப்பான்.

(பொ - ரை):—வைதிக நெறியில் ஓமங்களைச் செய்யும் வேதியர்கட்குத் தீமையை விளைவித்து, கருப்பத்துடன் இருக்கும் பசுக்களின் பூண்டறக் கொன்று, (அவைகளின்) இறைச்சியைக் கறியாகச் சமைத்து, (தான்)விரும்பிப் புசித்து, உறவினர்கட்கும் (அவன்) உண்பிப்பான்,

(குறிப்பு):—சினை - கருப்பம். கிளைகள் - உறவினர். (4)

737. தன்னுள புலைச்சமய மேசமய மென்றென்
றுன்னிநிக ரின்றிவளர் வுற்றசம யத்தோர்
சென்னியற வெட்டிய செருக்கினொடு பாவம்
துன்னுமுட லச்சுமை சுமந்துபல காலம்.

738. திரிந்துழியோர் காலமுயர் சிந்துபுர நண்ணி
அருந்தவர் வணங்குறுபொன் ஆலயமுன் ஞகி
விரைந்திவிடம் ஏதென விஞவியுள் வெகுண்டே
புரந்தரன் இறைஞ்சுவளர் கோயிலிடை போஞன்.

(பொ - ரை) :—தனக்குள்ள கீழ்மைக் கொள்கையே தக்க நெறி என்று பலகாலம் எண்ணி, ஒப்பிலாது வளர்ந்துள (உயர்ந்த) சமயத்தவர்தம் தலைகளை அறவே தள்ளிய தருக்குடன், பாவமே நிறைந்த உடல் பாரத்தைப் பலகாலம் சுமந்து, (எ - று).

(பொ - ரை) :—(சுற்றித்) திரிந்த காலங்களில் ஒரு நாள், (மூர்த்தி தலம் தீர்த்தம் மூன்ருனும்) உயர்ந்த திருச்செந்தில் பதியை அடைந்து, அரிய தவத்தினர் வணங்கும் அழகிய ஆலயத்தின் முன் வந்து, இது என்ன இடம் என்று (தனக்குள் தானே) உள்ளம் கொதித்து விரைந்து விஞவி, வழிபாட்டை அமரர் தலைவன் வளர்த்த ஆலயத்தை அணுகினன், (எ - று).

(குறிப்பு) :—புலை - அற்பம். சமயத்தோர் - வைதிக நெறியினர். புரந்தரன் - இந்திரன். (5–6)

739. போனபொழு தாறுமுக புங்கவனை யேத்தி
மோனமொடு நான்மறைசொல் முப்புவன வைப்புத்
தானமெனு மந்தணர்க டம்மையெதிர் நோக்கி
யானவுரு ஏதெனலு மந்தணர்கள் சொல்வார்.

(பொ - ரை) :—(அங்ஙனம் அவன்) சென்றபொழுது, ஆறுமுகப் பரனை மவுனத்துடன் வழிபட்டு, (அதன் பின்) வேத பாராயணம் செய்து கொண்டிருந்த திரிசுதந்தரர்களை ஏறிட்டு நோக்கி, (இங்கு) இருப்பது என்ன விக்ரகம் என்று வினவலும், அந்தணர்கள் (அவனுக்கு) அறிவிக்கத் தொடங்கினர், (எ-று).

(குறிப்பு) :—புங்கவம் - மிடுக்கு; அதை யுடையவன் புங்கவன். முப்புவன வைப்புத் தானம் எனும் அந்தணர்கள் - (பிரமலோகம், மண்ணுலகம், விண்ணுலகம் எனும்) மூன்று உலகும் (எம்) இடம் எனும் திரிசுதந்தரர். (7)

740. சங்கர னுதற்கண்வரு சண்முகவ னுமால்
வெங்கய முகாசுரனை வென்றமர ரெல்லாம்
எங்கள்குழு வுக்கரச னென்னவொரு பேரும்
துங்கமொடு பெற்றுள சுவாமியிவ னுமால்.

(பொ - ரை) :—இப்பெருமான், சிவபிரானது (உயர்ந்த) நெற்றிக் கண்களி லிருந்து உதித்த ஆறுமுகப் பரன் ஆகும்; கொடிய தாரக அவுணனைத் தடிதலால், தேவர்கள் யாவரும் எங்கள் கூட்டத்திற்கு அதிபதி என்று கூற, (தேவ சேனபதி என்ற) ஒரு பெயரையும் உயர்வுடன் எய்திய சுவாமி யாவர், (எ-று).

(குறிப்பு) :—கயமுகன் - யானைமுக தாருகன். துங்கம் - உயர்வு. (8)

போற்றுமெளி யோர்களிடர் போக்கியருள் ஞானம்
மாற்றரிய சீரொடு வழங்கவுள வாஞ்சை
யாற்றலொ டிருந்தபொரு ளாகுமென முன்னம்
சாற்றுமறை யோருரை தடுத்துமுரை சாற்றும்.

(பொ - ரை) :—துதிக்கும் எளியவர்கள்தம் துன்பத்தைத் தொலைத்து, அருளால் ஞானத்தையும், மாற்ற முடியாத (இன்ப) மதிப்பையும், (இம்மையுலக) விருப்பங்களையும் உதவவுள (பரம) சத்தியொடு எழுந்தருளியிருக்கும் பரம்பொருளாகும் என்று, முன்கூறும் அந்தணர்கள் சொற்களை (இடையில்) தடுத்தும், (அவ்வேடன் பின்வருமாறு) கூறலாயினன், (எ - று).

(குறிப்பு) :—வாஞ்சை - மனவிருப்பம். (9)

**அரனெவன் அவன்பெறுவ தாகவரும் வேற்கை**
**முருகனெவன் என்றுளம் முனிந்துநெடு வாளாம்**
**சுரிகையொடு சீறினன் நடந்துசுடர் வேலோன்**
**அருகுசெல வோடிவிழுந் தாவியு மழிந்தான்.**

(பொ - ரை):—சிவன் யாவன்? அவன் பெற்றதாக வந்த வேல் கர முருகன் யாவன்? என்று மனம் சினந்து, நீண்ட வாளுடன் சீறி நடந்து, சுடர்கின்ற வேலிறைவனின் அண்மையிற் செல்ல, ஓடி விழுந்து உயிரொழிந்தான், (எ - று).

(குறிப்பு) :—வாளாம் சுரிகை - இருபெயரொட்டு; ஒளியுடையதான வாள் எனினுமாம். (10)

743. **ஆவியழி போதுவிழும் அவ்வளவி லாதி**
**மூவிரு முகத்தனடி முன்னமுடி யாத**
**பாவிதர முன்புவிழு பான்மைபணி வோரின்**
**மேவர இருந்ததெழு மேதினி நடுங்க.**

(பொ - ரை):—உயிர் நீங்க, (ஆக்கை நிலத்தில்) விழும் அச்சமயத்தில், அறுமுக முதல்வர் திருவடிகளின் முன், அழியாப் பாதக (வேடனது நீசத்) தகுதியை நினைந்து, ஏழுலகும் நடுங்க, அவன் விழுந்த தன்மை, வீழ்ந்து வணங்குபவர் செயல்போல் இருந்தது, (எ-று).

(குறிப்பு) :—தரம் – அற்ப வலிமை. முன்பு - நினைந்து; இது, செய்பு எனும் வாய்பாட்டு வினையெச்சம். பணிவோரின் எனுமிடத்து இன் - போல எனும் உவம வுருபு. மேவர - மேவ; பொருந்த. (11)

744. **பாசமொடு காலபடர் பற்றவரும் வேலை**
**யீசன்மக னைத்தொழு திருந்தகண நாதர்**
**மாசறு குமாரனடி வாழ்வுபெறு வோனை**
**நீசர்விடு மென்றவரை நீக்கினர்கள் மாதோ.**

(பொ - ரை):—காலதூதர்கள் கயிறு கொண்டு கட்ட வரும் பொழுது, சிவகுமாரரைச் சேவித்திருந்த சிவகணத் தலைவர்கள், (இயல்பாகவே) மலசம்பந்தம் இல்லாத குமரன் திருவடியில் (விழும்) வாழ்வு பெறும் அவனை, நீசர்களே! விட்டு விடுங்கள் என்று (கூறி), அத்தூதர்களை விலக்கினர், (எ - று).

(குறிப்பு):—பாசம் - (சூக்குமக்) கயிறு. படர் - தூதர். (12)

**அன்னவர்க டென்றிசையி னாணைகொடு போற்றும்**
**மன்னனை வணங்கவர லாறுபுகல் வீரால்**
**என்னமுறை கூறவளி யேற்றமுகில் போலாய்ச்**
**சென்னியு நடுங்கவுயர் சிந்துபுர முற்றான்.**

(பொ-ரை):—(அங்கிருந்து ஓடிய) அந்த யமதூதர்கள், தென்திசையில் (சிவனார்) ஆணையை (மேற்) கொண்டு ஆட்சிசெயும் (தம் மாபெரும்) மன்னனை வணங்க, (அவன், என்ன செய்தி?) நடந்தது (யாது) நவலுதிர் என்ன, (முன் நிகழ்ந்ததை அவர்கள்) முறையே கூற, (வேகமான) காற்றில் எதிர்ப்பட்ட மேகம் போல் அலமந்து, தலை நடுங்க, (அந்தகன்) உயர்ந்த செந்திலை யடைந்தனன், (எ - று.)

(குறிப்பு):—வளி - காற்று. சென்னி நடுங்கல் - தலையாட்டம் காணல். (13)

746. உற்றபொழு தாறுமுக முள்ளகும ரேசன்
பற்றினெடு வாழ்திரி சுதந்திரர் பராவ
முற்றவுணர் கும்பமுனி மோனமுனி வோர்கள்
கற்றசன காதியர் களிப்புடன் வணங்க.

747. மானருண் மடக்கொடியும் வானரச னீன்ற
வேனகுக ருங்கண்மத வேழமட மாதும்

**தானமொ டிரண்டுபுற முந்தழுவ வேல்வேள்**
**ஞானமுறு முத்திரையி னன்குற இருந்தான்.**

(பொ - ரை):—(அவன் அங்கு) வந்த அப்பொழுது, ஆறுமுகமான குமரபிரான், அன்பொடு வாழும் திரி சுதந்திரர்கள் ஆராதனை செய்ய, முழுதும் உணரும் அகத்திய முனிவரும், மோன (ஞான) முனிவர்களும், (முற்றும்) கற்ற சனகர் முதலினோரும் மகிழ்வொடு வணங்க, (எ - று). (14)

(பொ - ரை):—மான் தந்த இளங்கொடியான வள்ளியம்மையும், வானவர் தலைவன் தந்த வேல்போல் மிளிரும் கரிய கண்களையும், மும்மத ஐராவத யானையின் வளர்ப்புமுடைய தேவ யானையும் இடங்கொண்டு இருபுறமும் தழுவி அமர, வேல் ஏந்திய செவ்வேள் பரன், சின்முத்திரையுடன் இனிய திருவோலக்கமாக எழுந்தருளி இருந்தனன், (எ - று).

(குறிப்பு):—குமரனை யன்றிப் பிறிதொரு பொருளைக் குறியாமையின், 'மடம்' என்றார். இருந்தானைத் தழுவி இருந்தனராதலின், 'கொடி' என்றார். தானம்-வலிமையுமாம். திருச்செந்தில் கோலத்தை, இப்பாடல்கள் அறிவிப்பதை ஓர்க.(15)

748. **நன்றியுடன் ஆறுமுக நாயக னிரண்டு**
**மன்றன்மல ராஞ்சரண வாரிசமு ளுகத்**
**தென்றிசை புரக்குமிறை சென்னிபணிந் தேத்தி**
**நின்றுகும ரேசனடி நேர்கொடு துதித்தான்.**

(பொ - ரை):—தென் திசையை ஆளும் (இயம) தருமன், ஆறுமுகப் பெருமானின் மணம் கமழ் மலர்களான இரு திருவடிகளை, (அச்) சந்நிதி முன், (அன்பு) நலத்துடன், தலையால் வணங்கி நின்று வாழ்த்தி, குமரபிரானின் திருவடிகளை நேர்முகமாகத் துதிக்கலாயினன்,

749. தேவரிடர் தீர்த்தவுணர் தேவியர் கழுத்தின்
மேவுகல னீக்குமறை மிக்கவுரை காணு
மூவிரு முகக்கடவுள் முண்டக மலர்த்தாள்
பூவென வியந்துதரு மன்புகல்வ தானன்.

(பொ - ரை):—அறுமுகக் கடவுளின் அரவிந்த மலர் போன்ற திருவடிகள், தேவர்கள் துன்பங்களைத் தீர்த்து, அவுண மாதர் கழுத்தில் இருந்த மங்கல அணிகளை யகற்றும்; மேம்பட்ட வேத மொழிகளாலும் அறியலாகா (அருமையன) என்று, தருமன் (தூய மொழிகளால்) வியந்து; துதிசெய லாயினன், (எ - று).

(குறிப்பு):—'தீர்த்து, நீக்கும் கடவுள் தாள்பூ, மறைமிக்கவுரை காணு என வியந்து' எனக் கூட்டுக. (17)

750. இழுதையர்க ளாயிடினு மெந்தைசரணத்தே
தொழுமவரை நான்மறை துதித்தமுதி யோரும்
வழிபட இயற்றிய மயூரவரை மாதின்
குழவியென வாழ்த்தியுயர் கூற்றிறை துதித்தான்.

(பொ - ரை):—அறிவிலாதவர்கள் ஆயினும், எந்தையே! திருவடிகளில் (விழுந்து) வணங்குபவரை, நான்மறைகளைப் பாராயணம் செய்த பெரியோர்களும் வழிபடும்படிச் செய்த மயிலூர் பரமா; மலைமகள் மைந்தா என்று வாழ்த்தி, உயர்ந்த யமராசன் (உவந்து) போற்றினன், (எ - று).

(குறிப்பு):—இழுதையர்தான்; எனினும் இவர்கள் செந்தில்பதியைச் சேவித்தவர்கள்; வேதபாராயண வித்தகர் தான்; ஆயினும், இவர்கள் செந்திலாண்டவனைச் சேவிக்காதவர். ஆதலின், அவ் வைதிகர்கள், இந்த இழுதையரை வழிபடுகின்றனர் என்றபடி. (18)

751. நாடரிய தேவபல நாயகனு மாகப்
பீடுபெறு நிற்கொடு பெரும்பகை யொழித்த
நீடமரர் வானிலைமை நிற்கவருள் செய்த
ஆடல்முரு காவெனவும் அந்தக னறைந்தான்.

(பெ - ரை):—அறிதற்கு இயலாத தேவசேனுபதி (எனும்) திருப்பெயரும் (உமக்கு) உளதாக, பெருமிதம் எய்தும் உம்மைக் கொண்டு, (அவுணப்) பெரும் பகையை அழித்த அளவிலாத் தேவர்கள் விண்ணில் நிலைத்து விளங்கும்படி, (அவர்கட்கு) அருள் பாலித்த (செயலை, எளியதொரு) திருவிளையாடலாக இயற்றிய முருகா என்றும் இயமன் துதித்தான், (எ - று).

(குறிப்பு):—பாசபசு ஞானிகளால் பார்த்தற்கு அரியவனுத லின், 'நாடரிய' என்றார். ஆடல் - வெற்றி எனினுமாம். (19)

752. பகவதி தருங்குக பராவருமை ஞான
அகவிரு ளகற்றுமரு ணேதயசொ லாறு
முககுரு பராவுனது முண்டக மலர்த்தாள்
புகலெனவும் யாமிய புலத்திறை பணிந்தான்.

(பொ - ரை):—பகவதி அருளிய குகா! பரனே! அரிய ஞான ஒளியால் அகஇருளை யழிக்கும் செஞ்ஞாயிறே! (உலகெலாம்) புகழும் அறுமுகா! குருபரா! உமது (தெய்வக்) கமலத் திருவடிகட்கே அடைக்கலம் என்றும் (துதித்து,) தென்திசை யதிபன் (வீழ்ந்து) வணங் கினன், (எ - று).

(குறிப்பு):—பகவதி – (அழகு, செல்வம், புகழ், வீரம், ஞானம், வைராக்யம் எனும்) ஆறு குணத்துள் அமரும் தேவி. பரம் - மேலிடம்; அங்கிருப்பவன் பரன். யாமியம் - தென் திசைப் பெயர். புலம் – இடம். (20)

753. தண்ணளியி லாதகொடுந் தானவர்க ளாய
புண்ணொடு மழுந்துபுல வர்க்கரு மருந்தாம்
பண்ணவ கயம்பரம வென்றுரை பராவி
யெண்ணரிய கூற்றுவ னிறைஞ்சியவ ணின்றான்.

(பொ - ரை):—கருணையே இல்லாத கொடிய அவுணர்களான புண்ணில் அழுந்திய அமரர்க்கு, அரிய மருந்தான ஆண்டவனே! தேவயானை மணாளா என்று கூறித் துதித்து, நினைத்தற்கு அரிய இயமன் (மீட்டும்) வணங்கி அங்கு நின்றான், (எ - று).

(குறிப்பு):—புலவர்கள் - விண்ணவர்கள். புண்களாயினர் அவுணர்கள்; அதனால் வருந்துபவர் வானவர்கள்; அந் நோய் தீர்க்கும் மருத்துவ முருகனைப் 'பண்ணவன்' என்றார். மற்று, அவரவர் வினைக்குத் தக்கபடி, உபத்திரவிக்கும் நோயை உண்டாக்கினான்; அனுபவித்துத் திருந்தியபின், அந்நோய் தவிர்க்கும் அருள் மருந்தானான்; மருந்து தரும் மருத்துவனும் ஆயினனாதலின், 'பண்ணவன்' என்றார் எனலும் ஒருவகை. (21)

754. நின்றநம னைக்குமர னீடருளி னோக்கி
யுன்றுதியி னைமன துளங்களி சிறந்தாம்
இன்றுவர லாறுபகர் வாயென இயம்பத்
தென்றிசை புரக்குமிறை செப்புதல் துணிந்தான்.

(பொ - ரை):—(எதிரில்) இருந்த இயமனைக் குமரன் பரம அருளொடு பார்த்து, உனது துதிமொழிகளால் யாம் மனமகிழ்ச்சி எய்தினம்; இன்று (நீ) வந்த காரியம் யாது? கூறுக என்று அருள, தென்திசை யாளும் இயமன் கூறத் துணிந்தனன், (எ - று).

(குறிப்பு);—தூய குமரன் திருமுன் வாய்திறக்கத் துணிவு வேண்டும்; ஓதுக என்று உத்தரவு பிறந்தபின், பேசும் தைரியம் பிறந்தது என்றபடி. (22)

755. பிறைமவுலி யானது பெருங்கருணை யாலே
அறமொடு கொடும்பவ மடைந்தவர்கள் யாரும்
நிறைதரு சுவர்க்கநிர யம்படர ஈரேழ்
உறுகரிமு னுகவுறு வித்திடல்செய் வேனுல்.

(பொ - ரை) :—இளம்பிறை யணிசடை இறைவனது பேரருளால், புண்ணியங்களுடன் கொடிய பாவங்களைச் செய்தவர்கள் யாவரையும், நிறைவு தரும் சுவர்க்கத்தும், (குறைவு செயும்) நரகத்தும் (முறையே) அழுந்துமாறு, (சால்புடைய மனுக்கள்) பதினான்கு பேரும் சான்ருக, (இதுவரை ஆட்சி) நடத்தி வந்தனன்,

(குறிப்பு):—பிறைமவுலியான் - சிவபிரான். நிரயம் - நரகம். கரி - சாட்சி. மனுக்கள் - சுவாயம்புவன், சுவாரோசிடன், உத்தமன், தாமசன், ரைவதன், சாட்சூசன், வைவசுதவன், சூரிய சாவர்ணி, தட்ச சாவர்ணி, பிரம்ம சாவர்ணி, ருத்ர சாவர்ணி, தர்ம சாவர்ணி, ரௌசியன், பௌசியன் எனப் பதினான்கு மனுக்கள் உளர். இவர்கள் படைப்பின் ஆரம்பத்தில் பூமி பரிபாலனத்தின் பொருட்டு இறைவனுல் படைக்கப் பெற்றவர்கள். இம்மனுக்களே அவ்வப் படைப்புதோறும் மாநுடரைத் தோற்றுவிப்பவர்; இப்போதுள மனு வைவசுதமனு; இது ஏழாவது மந்வந்தரம் என்பதெலாம் இங்கு எண்ணத் தகும். (23)

756. இந்தமுறை தானுமியல் வேதியரு முன்னூல்
விந்தையுணர் கின்றமனு வேந்தரு மருங்கே
வந்துட னிருப்பமதி மாலைபுனை வோர்க்கென்
சிந்தனை வெருண்டவர் வினைச்செய லுணர்ந்தே.

757. நீதிபுரி தன்மையுடை யேனெறியி னில்லாப்
பாதக னியற்றியிடு பாதகமு ணர்ந்தே
யேதமொ டிவன்றனை யழைத்திடு மெனுமுன்
தூதரை விடுத்தனன் விடுத்தவர் தொடாமுன்.

**758. தின்னருகு நின்றுள நெருங்குகண நாதர்**
**என்னுடைய தூதரை யிடித்தொரு மிலேச்சன்**
**றன்னையுன் னடிக்கமல வீடுதழு விப்ப(து)**
**என்னென நமன்புகலு மின்சொலது கேளா.**

(பொ - ரை) :—(எனது) இந்த நீதியும், இயற்கை (யை யுணரும்) அந்தணரும், முதனூல் வித்தையை (முதலில்) உணர்கின்ற மனு (எனும் பதினன்கு) மன்னர்களும் அண்மையில் வந்து அமர்ந்திருப்ப, பிறைமாலை புனைந்த பெருமாற்கு அடியேன் உள்ளம் அஞ்சியதாகி, அவரவர் கன்மங்களை அறிந்து, (எ - று). (24)

(பொ - ரை) :—நீதி செலுத்தும் தன்மை யுடையவனாய், (பயனை) ஒழுக்கம் இல்லாத பாதக மிலேச்சனது பாவங்களை உணர்ந்து, இவனைத் துன்புறுத்தி இழுத்து வாருங்கள் என்று, முதலில் தூதர்களை அனுப்பி வைத்தேன் ; (என்னல்) அனுப்பப் பெற்றவர்கள், (தொல்லையா யிருந்த அவனைத்) தொடுதற்கு முன்—(25)

(பொ - ரை) :—உமது அருகில் நெருங்கி(க் கம்பீரமாக) நின்றிருந்த கணத் தலைவர்கள், எனது தூதர்களை (அப்பால்) தள்ளி விட்டு, ஒரு மிலேச்சனை, உமது திருவடித் தாமரையாகிய முத்தியைத் தழுவும்படி செய்விப்பது என்னையோ என்று இயமன் விண்ணப்பித்த இனிய மொழிகளை, (தெய்வக் குமரன்) திருச்செவி மடுத்து, (எ - று).

(குறிப்பு) :—முதனூல் - ஆதிமறை. விந்தை-வித்தை. (26)

**759. ஞானமுள ராயிடினு ஞானமில ரேனும்**
**மானின்விழி யார்மிசை மயங்கினர்க ளேனும்**
**ஏனைய அழுக்கின்முறை நாடினர்க ளேனும்**
**ஆனத மியற்றெழி லடைந்திலர்க ளேனும்.**

760. முந்துபவ மூழ்முறை முயன்றுளர்க ளேனுஞ்
சுந்தர மறைத்திரி சுதந்திரர்கள் சூழ்ந்து
வந்துதொழு நம்முக மலர்ச்சியது நோக்கிற்
சிந்துபுரம் வந்தினி திருக்குமவர் செய்த.

761. தீவினை யொழித்தினிய செம்மையின ராகி
யாவலொடு நந்தம தடிக்கமல நீழன்
மேவரவி ருப்பரிவன் மேயமுக மாறுந்
தாவர விழித்தவுடன் சாய்ந்துயிர் விடுத்தான்.

(பொ - ரை):—அறிவுடையவ ராயினும், அறிவே யில்லாதவர்க ளாயினும், மான்போலும் (மருளும்) விழிகளை யுடைய மங்கையரிடத்தில் (மோகத்தால்) மயங்கி யிருப்பவர்க ளாயினும், மற்றைய தீய நெறியினை விரும்பினர்களாயினும், தமது (குல ஒழுக்க) இயல்பிற்கு உரியதான செய்கைகளைக் கைவிட்டவர்களாயினும், ()

(பொ - ரை):—ஊழின் முறைப்படி, முற்பட்ட தீமைகளை (மேலும்) முயன்று செய்தவர்களாயினும், (அவர்கள்) திருச்செந்திலை யடைந்து, அழகிய மறை (யுணர்) திரிசுதந்திரர்கள் வலம்வந்து வணங்கும் நம் மலர்ந்த திருமுகத்தைத் தரிசிப்பரேல், இனிது இருக்கும் அவர்கள் செய்த, (28)

(பொ - ரை):—தீவினைகள் நீங்கி, இனிய ஞான இருப்பினராய், அவாவுடன் நமது திருவடித் தாமரை நிழலில் அன்பு கொண்டு அமர்பவர் ஆவர். இம் மிலேச்சன், (அமைதி) யமைந்த நம் ஆறு திருமுகங்களையும், குற்றமறத் தரிசித்தவுடன் விழுந்து இறந்தான், (எ - று).

வருதிரி சுதந்திரர்முன் வாயுரை புகன்றுன்
விரைவினுயர் நம்முகம் விருப்பினெடு பார்த்தான்

பரிபவ மொழித்துமறை பண்பினி னிறைஞ்சும்
இருசரண தாமரை யிருங்கதி யடைந்தான்.

(பொ - ரை):—வந்து திரிசுதந்தர்கள் முன் வாய் திறந்து வார்த்தை சொன்னான்; உயர்ந்த நம்திருமுகத்தை விருப்பத்துடன் விரைந்து நோக்கினன்; (அதனால் அவன்) இழிந்த குறைகளை ஒழித்து, மறைகள் மரபொடு வழிபடும் (நமது) இரு திருவடிக்கமல வீடு பேற்றை எய்தினன், (எ - று).

(குறிப்பு):—பரிபவம் – இழிந்த நிலை. (30)

763. ஆணைநம தாணையென ஆறுமுக வேலோன்
ஏனுடைய கூற்றின்முக மின்னருளி னேக்கித்
தானுவின் மகன்றகைய தண்ணளி சுரப்ப
வாணிநிக ரானமணி நாவினின் மகிழ்ந்தே.

764. அந்தகனை நோக்கிமுரு கேசனறி விப்பான்
சிந்துபுர மானது சிறப்பினொரு மூவர்
முந்துறு தவத்தரொடு நாமு முறையாக
விந்தையுடன் வாய்த்துதி விளம்புபதி யாமால்.

(பொ - ரை):—(இது) நமது ஆக்ஞை! ஆக்ஞை என்று ஆறுமுக வேலரான சிவகுமாரர், ஆற்றலுடைய இயமனது முகத்தை, தகுதியுடைய தட்ப அன்பு தழைக்க இன்ப அருளொடு (ஏறிட்டு) நோக்கி, மாணிக்கமான நாவில் உதித்த வாக்கால் மகிழ்ந்து,

(பொ - ரை):—இயமனைப் பார்த்தபடி முருகபிரான் (மேலும்) அறிவிப்பார்; செந்தில் பதியானது, சிறந்த திரிமூர்த்திகளும், பழைய தவமுனிவர்களுடன், யாமும் முறையே அறிவாகாரமாகி, வாயால் புகழ்ந்துரைத்த (அருமைத்) தலமாகும், (எ - று).

(குறிப்பு) :—ஆணை எனும் அடுக்கு, இது நிச்சயம் என வலியுறுத்தற் பொருட்டு வந்தது. 'தாணுவின் மகன் ஆறுமுக வேலோன்' எனக் கொண்டு கூட்டுக. தாணு - ஸ்தாணு; நிலைபேறுடைய நிமலன். ஏண் - வலிமை. வாணி நிகரான மணிநா - வாக்தேவிக்கு ஒப்பான திருநா எனினுமாம். (31)

விந்தை - வித்தை; அறிவு எனும்பொருட்டு; வியப்பு எனினுமாம். (32)

## வேறு

765. என்று பன்னிரு தடம்புயக் குமரவே ளெதிராய்
நின்ற கூற்றுவ னுணர்தரக் கூறினன் நிலையார்
தென்றி சைக்கணு னறுமுகன் சேவடித் துணையை
நன்றி பெற்றகை யுச்சிமேற் கூப்பின னடந்தான்.

(பொ - ரை) :—என்று (இவ்வாறு) பன்னிருதோள் குமாரபரன், எதிர் நின்ற இயமன் உணர உரைத்தனன்; நிலையாகத் தென் திசையை நிர்வகிக்கும் இயமன், (அவைகளைச் சிரவணித்து,) ஆறுமுகப் பரன் இரு திருவடிகளை உளங்கொண்டு, நலம் பெற்ற கரங்களை உச்சிமேற் குவித்துக் கும்பிட்டு, (அங்கிருந்து தன் இடம்) சென்றான், (எ - று).

(குறிப்பு) :—கொடுக்கும் கரத்தைத் 'தடம்புயம்' எனவும், உச்சிமேல் குவித்துக் கும்பிடுங் கரங்களை 'நன்றி பெற்ற கை' எனவும் கூறினர். துணை சேவடியை என இயைத்து, உயிர்த் துணையான திருவடிகளை எனினுமாம். (33)

766. ஆய தன்மையாற் சுகமுனி யறிதர வியாதன்
பாய தெண்டிரைப் புணரிசூழ் செயந்தியம் பதிதான்
சேயின் மிக்கசா யுச்சியத் திருநெடும் பதியாம்
மேய சத்தியஞ் சத்திய மெனவுரை விடுத்தான்.

**(பொ - ரை):**—அத்தன்மையால், பரவிய தெளிந்த அலைகளை யுடைய கடல்சூழ் செந்திற் பதியானது, மேம்பட்ட குமரனது சாயுச்சியம் தரும் அநாதி நித்தியமான அருளார்தரு பெரும்பதி யாகும்; (இது) சத்தியம் சத்தியம் என்று, சுகமுனி அறியுமாறு வியாசமா முனிவர் விரித்து விளக்கினர், (எ - று).

(குறிப்பு) :—பாய - பரவிய. சத்தியம் சத்தியம் எனும் அடுக்கு, இது பெரிதும் மெய்ம்மை யெனும் அறிவிப்பு.

எதிர்த்த சூரன் மயிலாகி எதிர்வந்த போது, அவனை யேன்று கொண்டான் பெருமான். அதுபோல் எதிர்த்த வேடன், திருமுகத்தைச் சேவித்தபடியே வீழ்ந்து இறந்தான்; அப்பேறு எவர்க்கு வாய்க்கும்? மேலும் முனிவரர் தவமும், சிவனாருளும், கந்தன் கருணையும், அன்பர்கள் முழக்கும் அளவளாவிய அரும்பதியிது; தலவிசேடம், தீர்த்த மாண்பு, மூர்த்தி மகிமை மூன்றுமுடைய இப்பதியில், தன் திருமுன், இறந்தானைக் குறித்து, இயமனிடம் எம்பிரான் மொழிந்த ஒவ்வொரு மொழியும் உணர்தற்குரியன என்க. (34)

சிந்துபுர வைபவம் உரைத்த அத்தியாயம் முற்றிற்று.

---

## 17. பிரமன் உபதேசித்த அத்தியாயம்

767. விரிந்த சீர்மறை நான்கெனத் தொகுத்தசீர் வியாதன்
தெரிந்த மேலவர் புகழ்சுக முனிவனுள் தெளியப்
பரிந்த மாதவச் செயந்தியம் பதியின்மான் மியமே
பொருந்து காதையொன் றுணர்த்துவன் கேளெனப் புகல்வான்.

(பொ - ரை) :—(பலவாகப்) பரவிய மறைகளை நான் கெனத் தொகுத்த சிறப்புடைய வியாசர், தேர்ந்த மேலோர் போற்றும் சுக முனிவரின் (தெளிந்த) உள்ளம் (மேலும்) தெளிவுபெற, (எவரும்) அன்பு செலுத்தும் சிறந்த தவத்திற்கு இடமான செயந்திப் பதியின் மகிமை பொருந்திய (மேலும்) ஒரு வரலாற்றை, உணர்த்துகிறேன் ; கேள் என்று உரைப்பாராயினர்,

(குறிப்பு) :—தெரிந்த மேலவர் - ஆய்ந்து கண்ட அறிவினர்; காலம் மூன்றும் கண்டவர் எனினுமாம். (1)

பாவ காரியாய் வணிகர்தங் குலத்திலுற் பவித்து
மூவர் தம்மையும் பூசுரர் தம்மையும் முதுபார்
மேவு மாதிரத் திறையவர் தம்மையும் மேலாம்
ஏவர் தம்மையும் நிந்தனை புரிந்துமூத் திருந்தான்.

(பொ - ரை) :—(உத்தம) வணிகரது குலத்தில் உதித்து, (பிரமன், திருமால், உருத்திரர் எனும்) மூவரையும், பூலோக தேவர்களான அந்தணர்களையும், பெரிய நிலவுலகைக் காக்கும் (இந்திரன், தீக்கடவுள், இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசாந்யன் எனும்) எண்திசைத் தலைவர்களையும், மேம்பட்ட (பிற) எவரையும், (மோசமாக) நிந்தித்தல் செய்து, (பாவம்) முதிர்ந்து இருந்தான் (ஒருவன்), (எ - று).

(குறிப்பு) :—பாவகாரி - பாவம் செய்தலில் பழுத்தவன். மாதிரம் – எண் திசை. (2)

வாணி கத்தினிற் சோரவா ணிகமன மதித்துத்
தூணி விற்பவர் முன்னதிற் பாதியுஞ் சுருக்கிப்
பேணி விற்பவன் ஆய்தரு மாப்பொனிற் பிரித்துக்
காணி கைக்கொளச் செட்டியா பாரமுங் கற்முன்.

(பொ - ரை):—வர்த்தகத்தில் கள்ள வாணிபத்தையே கருத்தில் நினைத்து, தூணி அளவு விற்பவர் முன், அதில் பாதியையும் குறைத்து, வீணுசை கொண்டு விற்பவன்; மதித்துப் பார்க்கத் தக்க மாப்பொன்னைப் பிரித்து, காணிப் பொன் கைவரும் அளவு, செட்டுத்தன மான தொழிலும் கற்றவன், (எ - று).

(குறிப்பு) :—சோரம் - திருட்டுத்தனம். தூணி - நாலு மரக்கால் கொண்ட அளவு. பேணி - விரும்பி. ஆய் - தாய் எனினுமாம். மா - ஒரு சிற்றெண். காணி – எண்பதில் ஒரு பங்கு. செட்டி - செட்டுத் தனம்; நியாய வாணிபம் வியா பாரம்; அதர்ம வாணிபம் யாபாரம் என்று இழித்துரைத்தபடி.

769. தானு மீகில னீகுநர் தம்மையுந் தடுக்கும்
ஈனன் புண்ணிய பாவமா யுள்ளன விரண்டும்
மானிலத்திடைப்பொய்யெனப் புகன்றபேழ் வாயான்
ஞான மானமூ தறிவொரீஇ அவங்கொடு நடப்பான்.

(பொ-ரை) :—தானும் தர்மம் செய்யான்; செய்பவரை யும் தடுக்கும் இழிவினன்; (இப்) பெரியவுலகில் புண்ணிய பாவம் எனவுள இரண்டும், பொய்க்குரல் என்று பெரிதாக வாய்திறந்து பேசுபவன்; ஞானமான பேரறிவி லிருந்து நீங்கி, உவர்க்கும் செயல்கொண்டு ஒழுகுபவன், (எ - று).

(குறிப்பு) :—தானும் ஈயான்; ஈவாரையும் ஈயவொட்டான் என்னும் பழமொழிக்கு இலக்கணமானவன் என்பது முதலடியின் கருத்து. ஈனம் - இழிவு. பேழ் - பிளவு. அவம் - பயனின்மை; வீண். (4)

770. வருண நான்கையு மொன்றெனா நின்றவ மதிக்கும்
இருண யந்தநோ ருணர்வினன் வருணநான் கினிலும்
பொருண யந்ததொன் றின்றுநால் வகையெனப் பூண்டோர்
தருண மோர்ந்துகூத் தாடுவோர் வேடத்தின் றகைமை.

(பொ - ரை) :—நாற்பால் குலங்களும் (ஒன்றிற்கொன்று வேறு பட்டன அன்று;) ஒரே குலந்தான்; (வகுத்து வைத்தவர்கள் அறிவில்லாதவர்கள்) என்று, (எப்போதும்)அவமதித்துப்பேசும் மயக்கத்தைவிரும்பிய மனத்தன்; நான்கு வருணத்திலும், (கைகால் முதலிய உறுப்புகள் ஒத்திருத்தலின், வேறு படுத்திக் கூறலில்) பொருள் குறிப்பு இல்லை. நான்குவகை என (நாமம்) கொண்டவர், (குறிப்பான) காலம் பார்த்து, தகுதியான வேடந்தாங்கிக் கூத்தாடும் கூட்டத்தார் ஆவர், (எ-று).

(குறிப்பு) :—வருணம் – குலம். இருள் - மயக்கம். தருணம்- சமய சந்தர்ப்பம். பிறப்பும் இறப்பும், உடலின் உறுப்பும், எவர்க்கும் ஒரே தன்மையன. அவர் அந்தணர், இவர் அரசர், இவர் வணிகர் எனப் பிரித்தவர்கள் சுயநலத்தார். ஆதலின், 'பொருள் நயந்தது ஒன்று இன்று' என்று குழறி வழிந்தான் என்றபடி. (5)

பெரிய வான்சிலை யுருவமும் பிறங்குதா மிரத்தின்
உரிய சீருரு வதனையுந் தெய்வமென் றுரைக்கில்
நரர்கள் தம்மொடு நவிற்றுத லில்லையால் நரலைப்
பரவை மாநிலத் தியல்புள ரென்பது படிறே.

(பொ - ரை) :—உயர்ந்த பெரிய சிலையாலான உருவங்களையும், விளங்கும் செம்பாலான சிறந்த உருவங்களையும்

தெய்வம் என்று உரைத்தால், (அந்தப் பேருருவங்கள், என்றும்) மக்களொடு பேசுவது இல்லை; (அவை நாம் செய்துவைத்த ரூபங்கள் தானே!) கடல் சூழ்ந்த பெரிய இந்நிலப் பரப்பில், இயல்பாக (சிலையில் இறைவர்) உளர் என்று சொல்வது, பொய்யே யாகும், (எ - று).

(குறிப்பு):—நரர்கள் - மானுடர். நரலைப் பரவை - கடல்; இருபெயரொட்டு. ஒலியுடையதாய்ப் பரவிய கடல் எனினுமாம். (6)

771. தாய ராவதுந் தந்தைய ராவதுந் தவத்திற்
சேய ராவதுஞ் சுற்றம தாவதுஞ் சிறப்பின்
மேய தேவர்க ளாவதுந் தேவரின் மேலாந்
தூய மாதவ ராவதும் மாய்விலாச் சொன்னம்.

(பொ - ரை):—தாயர் ஆவதும், தந்தையர் ஆவதும், பிள்ளைகள் புண்ணியத்தால் பிறக்கின்றார் என்பதும், உறவினர் ஆவதும், சிறப்பு மிக்க தேவர்கள் என்று சிறப்பிப்பதும், தேவர்களின் மேம்பட்ட தூய்மையிற் சிறந்த தவத்தினர் என்பதும், அழியாச் செல்வத்தின் ஆதிபத்தியந்தான், (எ - று).

(குறிப்பு):—பணமிருந்தால் தாயைத் தந்தையைப் பாராட்டுவான் மகன்; இருக்கும் செல்வத்தை அனுபவிப்பானென்றோ, அல்லது குன்றுபோல் செல்வத்தைக் குவிப்பானென்றோ பிள்ளைமேல் பெரியோர் பிரியம் காட்டுவர். பணத்தைக் கருதியே தம்பி! அண்ணா! மாமா! மாமீ! என்று உறவு கொண்டாடுகிறது உலகம். தங்கம் செய்ய இரசவாதம் கற்கவே முனிவராவோர் பலர்; பொன்னுலகை ஆள்கிறார் தேவர்கள். எல்லாம் பணம் பண்ணும் கூத்து. அடடா! பணமே உலகத்தைப் பல்லிளிக்க வைக்கிறது. பணந்தான் தெய்வம்; எல்லாம் பணத்தின் மகிமைதான். பணமில்லாதவன் பிணம் என்று படபடத்தான் வணிகன் என்க. (7)

என்ன நெஞ்சினுள் யாரையும் யாவையு மிகழ்ந்து
பன்ன கப்பிட ராற்றிய புடவிக்கோர் பரமாய்
நன்ன லத்துட னிருந்தன னிருந்தநாள் பலபோய்ப்
பொன்னின் இச்சையாற் கப்பலிற் புணரிநீந் தினனால்

(பொ - ரை):—என்று (பணத்திற்கே அதிக மதிப் பளித்து,) மனத்துள் எவரையும் எதனையும் இகழ்ந்து உரைத்து, தலையால் சேடன் தாங்கிய நிலத்திற்குப் பாரமாய், நலம் (பலவகையில்) தரும் பணம் பெருக்கி இருந்தான்; இருந்த நாள் பல கழிந்து, (மேலுமான) பணத்தாசையால், கப்பலில் ஏறிக் கடலில் சென்றான்,

(குறிப்பு):—பன்னகம் - பாம்பு. பிடர் - பிடரி; ஆகுபெய ராய்ச் சிரத்தை யறிவித்தது. ஆற்றிய - தாங்கிய. புடவி - பூமி. பரம் - பாரம். புணரி - கடல். (8)

புணரி சூழ்ந்ததீ வாந்தரத் திடமெலாம் புகுந்து
வணிகர் தன்மையிற் பலபொரு ளியாவையு மாறிக்
கணித மில்பொரு டேடிநீள் கப்பலி னேறித்
தணிவ ருங்களி கொண்டுதண் கடனடுச் சார்ந்தான்.

(பொ - ரை):—கடல் நடுவில் உள்ள (சிறந்த) தீவுகள் அனைத்தினும் சென்று, (தான் முன் மேற்கொண்ட) வாணிப இயல்பின்படி பல பொருள்களைப் பண்டமாற்றுச் செய்து, அளவிலாப் பொருள்களை யகப்படுத்தி, அடங்கா மகிழ்ச்சி மேற்கொண்டு, எடுப்பான (தன்) கப்பலில் ஏறி, குளிர்ந்த நடுக்கடலை யடைந்தனன், (எ - று).

(குறிப்பு):—தீவாந்தரம் - தீவுகள். கணிதம் - அளவு. (9)

774. வங்க நீரிடைச் செல்லுழி மழையுமோ வாது
பொங்க மாருதச் சூறையு மெறிதரப் புணரி
தங்கு தோணியுந் தகர்ந்தது நிதியமுஞ் சலதி
அங்கு வீழ்தர வணிகனும் புணரியு ளாழ்ந்தான்.

(பொ - ரை) :—கப்பல் கடலில் போம் பொழுது, இடையருது பெருமழை பொழிய, சூருவளி எனும் காற்று சுழன்று மோத, கடலில் இருந்த கப்பலும் (சுக்கு நூருக) உடைந்தது ; (தேடிய) பொருள்களும் கடலில் கவிழ்தர, வணிகனும் (ஆழமான அக்) கடலில் அழுந்தினன், (எ - று).

(குறிப்பு) :—வங்கம் - கப்பல். சூறைமாருதம் என மாற்றுக; மாருதம் - காற்று. கடலில் காற்றும் மழையும் கலந்தபோது, தோணிபோல் கப்பல் தோன்றியதாகலின், 'தோணியும்' என்ருர். கப்பல் பெரிது; தோணி சிறிதென அறிக. (10)

வீழ்ந்த செட்டியு நீந்தினன் மிதந்தனன் விரிநீர்
சூழ்ந்த தெண்டிரைத் தரங்கநீ ரீர்த்திடச் சுரர்தாந்
தாழ்ந்த சீர்வத ஞரம்பச் சந்நிதி சார
வாழ்ந்த பேருணர் வொழிதரச் சென்றது வாழ்நாள்.

(பொ - ரை) :—(நெடுங் கடலில்) விழுந்த வணிகனும் நீந்தி மிதந்து, பரவிய நீர் நிறைந்த குளிர்ந்த கடலின் அலைகள் இழுத்துவர, வானவர் வணங்கும் சிறப்புடைய (தீர்த்தமான) வதஞரம்ப(க் கரையிலுள) சந்நிதி சார்ந்த அமயம், நிலைத்திருந்த பேரறிவு நீங்க, (போகிறேன் என்று அவன்) ஆயுள் நாளும் போயிற்று, (எ - று).

776. உயிரொ ழிந்திடும் யாக்கையை யவ்விடத் துறைவோர்
இயல்பி னெடுத் தீமத்தி னய்கனுக் கேற்ற
நயனு ணர்ந்தழற் கருமமு மாற்றினர் நன்ஞற்
பயனு ணர்ந்துமா சுகமுனி கேளெனப் பகர்வான்.

(பொ - ரை) :—உயிர் நீங்கிய (வணிகனின்) உடலை, அப்பதியில் இருந்த அவனுக்கு உரியவர்கள், (எடுக்கும்) முறைப்படி எடுத்து, வணிக இனத்திற்கு ஏற்ற வரிசையை அறிந்து, சுடலையில் அக்கினி காரியமும்

செய்தனர் ; சிறந்த நூலான சுருதியின் பயனுணர்ந்த சுகமுனிவா ! கேள் என்று, (வியாசர் மேலும்) விளம்பு வார் ஆயினர், (எ - று).

(குறிப்பு):—ஈமம் - சுடலை. நாய்கர் என்பது, வணிகர் மரபுப் பெயர். அழல் காரியம் – எரிக்கும் செயல். (12)

செட்டி செய்தவெம் பவமெலாஞ் சிறுகுழி யிடத்து
மட்டு றும்புன லிரவிசெங் கதிரினால் வறந்து
விட்ட பான்மைபோல் வேளரு ளாலற விண்ணோர்
இட்ட தேர்மிசைக் களித்துட னேறின னிருந்தான்.

(பொ - ரை):—சிறுபள்ளத்தின் அளவா யிருந்த நீர் செஞ்ஞாயிற்றின் கிரணத்தால் வற்றிவிடும் தன்மை போல், செட்டி செய்த கொடிய பாவச் செயல் அனைத் தும் செவ்வேள் அருளால் சிதைந்திட, வானவர் கொணர்ந்த (மாபெரும்) தேர்மேல் ஏறி மகிழ்ந்து, (இனிது அவர்களுடன்) இருந்தான், (எ - று).

(குறிப்பு):—மட்டு - அளவு. வறந்து - வற்றி. (13)

தேரி னேறினன் பரிதியின் காந்தியிற் சிறந்து
மேரு வில்லுடைப் பரமன்சா ரூபமாய் விளங்கிக்
காரி னேர்தரு கண்டமுஞ் சந்திர கலையும்
ஏரு டன்றரித் தருங்கணத் தவரொடு மிருந்தான்.

(பொ - ரை):—தேரில் ஏறி, (உரிய ஞான) சூரியன் போல் ஒளிமிகும் உடலுடன், மேருமலையை வில்லாக் கொண்ட விமலன் சாரூப்பியமாக விளங்கி, கருமையின் சொரூபம் போன்ற நீல கண்டமும், பிறைமதியும் கவினக் கொண்டு, அருமையான கணநாதர்களுடன் (ஒருசேரக்) கலந்தான், (எ - று).

(குறிப்பு) :—சாரூபம் – சிவசம உருவம்; இது, நாற்றோள், சந்திரகலை, பாம்பாபரணம், நீலகண்டம், பிறைக்கண்ணி யுடைய சிவத்தைப் போன்ற திருவுருவம். (14)

வரையி லாதுசெய்பவத்தினுன்மூத்தவோர்வணிகன்
உரிய தாயசா ரூபத்தை யுற்றன னென்றால்
அரிய மாதவர் செயந்தியம் பதியிடத் தடைந்து
துரிய மெய்திடிற் கதியெவன் சொல்வது துணிந்தே.

(பொ - ரை) :—(மோசமான) அதி பாவத்தால் முதிர்ந்த ஒரு வணிகன், (அரியதான) சாரூப கதியை உரிமையாக அடைந்தனன் எனில், அரிய பெரிய தவத்தினர் திருச்செந்தூரை யடைந்து ஆயுள் முடிந்தனரேல், (அவர்கள் பெறும்) கதி இத்தகையது என்று, எங்ஙனம் துணிந்து கூற இயலும்? (எ-று).

(குறிப்பு) :—வரை - அளவு. துரியம் - மரணம்; (நனவு, கனவு, சுழிப்பு மூன்றும் கடந்த) நான்காவது நிலை எனலுமாம். கதி - சாலோக சாமீப சாரூப சாயுச்சியம் எனும் நாற்பேறுகளுள் ஒன்று. அளவிலாப் பாவத்தினனாயினும், அருள்வியாபக சந்நிதிமுன் ஆவி நீத்தமையின், வணிகன் சாரூப மெய்தினன்; ஆக்கமான அருள் நுட்பத்தை ஓராது, பாவிக்கும் கதியோ என்று பெரிது பேசுவது பிழை என்க.(15)

பகர்வ தற்கரி தாகிய செயந்தியம் பதிக்கு
நிகரெ னப்பல தலங்களை யுவமித்து நிகழ்த்துந்
தகவி னோர்களுங் கொடும்பவச் சலதியிற் ருழ்ந்து
மிகைப டைத்தகூற் றுவன்புரந் தன்னின்மேவுவரால்

(பொ - ரை):—ஓதற்கரிய திருச்செந்தூர்க்கு ஒப்பாகத் தலங்கள் பலவற்றை உவமிக்கும் தகுதியினரும், ஆக்ரமிக்கும் பிறவிக் கடலில் ஆழ்ந்து, மிகுதியான நரகங்களை யுடைய இயமபுரம் அணுகுவர், (எ - று).

(குறிப்பு) :—சலதி - கடல். மிகை - மிகுநரகம். (16)

**சடமெ டுத்துளோர் யாரையும் பரகதி தன்னில்**
**உடனி ருத்திய செயந்தியம் பதிக்குவ மானங்**
**கடனி லத்துவே றெண்ணினோர் காலனீள் கண்ணும்**
**வடவை பற்றிய புதுவிருந் தென்னவும் வதிவார்.**

(பொ - ரை) :—(கன்மத்தால்) உடலெடுத்த எத்தகையோரையும், (சேவை மாத்திரத்தால்) சிறந்த வீடு பேற்றில் சேர வைக்கும் திருச்செந்தூர்க்கு, கடல்சூழுலகில் உள்ள மற்றைய தலங்களை உவமித்து மதித்தவர்கள், இயமனது (சினங்கொள்) பெரிய கண்களாகிய வடவைத்தீ பற்றற் கமைந்த புது விருந்தினர் என்று புகலத் தக்கவராவர், (எ - று).

(குறிப்பு) :—சடம் - உடல். சமம் கூறுவாரைச், சமன் கோபப் பொரி பறக்கக் குரூரமாக நோக்குவன் என்பது குறிப்பு. (17)

**புண்ணி யத்தலச் செய்கையை யுந்திபூத் துடையோன்**
**விண்ண கத்துள இந்திர னதியாம் வியன்சீர்ப்**
**பண்ண வர்க்கெல்லாம் பகர்ந்திடு மளவையிற் பரிவா**
**யெண்ணு தற்கரி தாஞ்சிந்து புரமென இசைத்தான்.**

(பொ - ரை) :—(திருமாலின்) உந்திக் கமலத்து உதித்த பிரமன், விண்ணில் உள்ள இந்திரன் முதலிய பெரும் சிறப்புடைய அமரர் அனைவருக்கும், புண்ணிய தலங்கள் குறித்துப் புகன்ற பொழுது, அன்பொடு தியானித்தற்கு அருமையானது திருச்செந்தூர் என்று அறிவித்துளன், (எ - று).

(குறிப்பு) :—அரிது என்பது, இலட்சியத்தில் வைக்கத் தக்க பதியிது எனும் குறிப்பு; மற்ற தலங்களை எளிதாகத் தியானிக்கலாம்; செந்தில் தியானம் சிறந்ததெனினும்,

அவ்வளவு சுலபமல்ல. அது, தொடர்ந்து தியானித்தார்க்கே உரிய பயனை யுதவும் எனலும் ஒருவகை. (18)

782. படைத்த நான்முகன் காசியே பகர்பிர மபுரம்
அடற்பு டார்ச்சுனம் கழைவனம் ஆன்றசீர் பலவும்
மடுத்த தாயசோ ராடவி மற்றவை தம்மின்
எடுத்து ரைத்தனன் செந்திலம் பதிதலை யென்றே

(பொ - ரை):—காசி, சிறப்பித்துக் கூறப் பெறும் பிரம புரம், அடர்ந்த திருவிடைமருதூர், திருநெல்வேலி, நிறைந்த பல சிறப்புடைய களாவனம் என்னும் கருவை நல்லூர் ஆகியவைகளுள், திருச்செந்தூரே ஏற்றமானது என்று படைப்புக் கடவுளான பிரமதேவர், உரத்துக் கூறினர், (எ - று).

(குறிப்பு):—பிரமபுரம் - சீகாழி. புடார்ச்சுனம் – வடமொழி யில் மத்தியார்ச்சுனம் எனப்பெறும். வடமொழி செயந்தி மகாத்மியம், சோராடவியைத் தஸ்கர கானனம் என்று தெரிவிக்கிறது. (19)

783. எடுத்த நான்முகன் காசிநீ டியற்சகந் நாதம்
தொடுத்த மாதவத் துவாரகை தோட்டலர் விரிஞ்சற்
கடுத்த மாபுர மைந்திலிங் கத்தலம் அரங்கம்
அடற்பு டார்ச்சுன புரிகழை தழையுமா வனமே.

784. பச்சை மாநதி சூழ்ந்தசோ ராடவிப் பகுவாய்
நச்சு மிழ்ந்திடு நாகணைச் சயனமா நகரம்
இச்சை கொண்டவந் நகர்க்கெலாம் மேலதாம் இனிய
முச்ச கந்தொழுஞ் செயந்தியம் பதியதே முதன்மை.

(பொ - ரை):—(மேலும்) சொல்ல ஆரம்பித்த பிரம தேவர், காசி, நெடுங்காலத் தலமான சகந்நாதம், தொடர்ந்த தவத்திற்கு இடமான துவாரகை, இதழ்

மலர்ந்த தாமரையாசனன் வழிபட்ட பிரமாபுரம், (சிதம்பரம், காளத்தி, அண்ணுமலை, ஆனைக்கா, காஞ்சியெனும்) ஐந்து லிங்கத் தலங்கள், (மரங்கள்) அடர்ந்த மத்தியார்ச்சுனம், விரும்பத்தக்க மூங்கில்கள் விளையும் வேணுவனம், (எ - று). (20)

(பொ - ரை) :—சிறந்த பச்சை நதி பாய்ந்து வளம் செயும் சோராடவி, பிளந்தவாய் திறந்து நஞ்சுமிழும் சேடசயனத் திருவரங்கம் எனப் பலவாம்; விருப்பம் கொண்ட அத் தலங்கட்கெல்லாம் மேலான, இனிய, (பாதல பூதல மீதலமான) மூவுலகும் வணங்கும் திருச்செந்தூரே தலையாய தலம், (எ - று).

(குறிப்பு) :—20, 21, ஆன இந்த இரு பாடல்களும், சில பிரதிகளில் இருக்கின்றன. (21)

> என்றடிக்கடி நான்முக னெடுத்தெடுத் திசைத்தான்
> தென்றிசைச்செல்வோர் செயந்தியம் பதியெனத் தேரார்
> அன்றி வெற்பெறி வேலினன் செயந்தியும் மலர்ப்பூங்
> கொன்றை சுற்றிய வேணியான் இதயகோ கனதம்.

(பொ - ரை) :—என்று (இங்ஙனம்) பிரமதேவர், பல தரம் எடுத்துக் கூறியுள்ளனர்; திருச்செந்தூர் (ஒன்றுளது) என்று உணரும் தெளிவில்லாதவர்கள், தென் திசையில் உள்ள இயமலோகம் செல்லும் தீவினையராவர்; பகைப்பட்ட கிரவுஞ்சத்தைப் பிளந்த வேலிறைவனது செந்திற்பதி, கொன்றைமலர் மாலை சூடிய சடையுடைய சிவபிரானது இதய கமலம் போன்றது (எனவும் அறிந்துகொள்), (எ - று).

(குறிப்பு) :—அன்றி - பகைத்து; அதுவல்லாமல் எனவுமாம். கோகனதம் - தாமரை. (22)

## வேறு

786. திங்க டோறுந் திகழ்திருக் கார்த்திகைத்
துங்க வேற்கைச் சுவாமியைப் போற்றுவார்
பங்க மாம்பவ பாச மறுத்துயர்
சங்க ரன்பதத் தாமரை சார்வரால்.

(பொ - ரை):—மாதந்தோறும் வரும் திருக்கார்த்திகைகளில், தூய வேல் இறைவனை இறைஞ்சுபவர், சேருன பிறவிப் பாசத்தைச் சேதித்து, சிவனுர் திருவடித் தாமரை (நிழலில்) சேர்வர், (எ - று.) (23)

787. மாத முப்பது மாகங் கருதிவேல்
ஆதி முன்வத ஞரம்ப மாடுவார்
ஏதி லாப்புன லெத்தல மூழ்கினும்
போது தற்கரி தாம்பவம் போக்குவார்.

(பொ - ரை):—மாசித் திங்கள் முப்பது நாள்களிலும், வேலிறைவன் திருமுன்புள்ள வதஞரம்பத் தீர்த்தத்தில் சங்கற்பித்து நீராடுவோர், குற்றமிலாத எத்தலங்களினும் உள்ள புண்ணிய தீர்த்தங்களில் மூழ்கினலும் போக்கற்கு அரிய பாவத்தைப் போக்குநராவர், (எ - று).

(குறிப்பு):—மாகமாதம் முப்பதும் எனக் கூட்டுக. (24)

789. வேள்வி நூறும் விதிமர பாற்றிய
நீள்க திக்கெதி ராக நிகழ்த்திடின்
மூளு மாக முகாரம்பங் கோடியாச்
சூளு ரைக்கும் பலனைச் சுருதியே.

(பொ - ரை):—நூறு வேள்விகளை விதிமுறைப்படி விளைவிப்பதால் விளையும் உயர்ந்த பயனுக்கு, மாசித் திங்களில் வதஞரம்பத்தில் நீராடலால் உளதாம் பயனை

எதிராக இயம்பத் துணிந்தால், (அதைவிட இது) கோடி மடங்கு அதிகம் என்று, ஆணையிட்டுச் சுருதி யறிவிக்கும், (எ - று).

(குறிப்பு) :—சூள் – ஆணை.

790. சிறந்த கார்த்திகைக் கார்த்திகைத் தீபத்தால்
நிறைந்த ஆறு நிலாமுக மண்டலம்
பிறந்து சாமுன் னொருதரம் பெட்புற
வுறைந்து போற்றுநர்க் கோர்பிறப் பில்லையே

(பொ - ரை) :—பிறந்து, (வளர்ந்து வாழ்ந்து) இறத்தற்குள், ஒருதரமேனும் சிறந்த கார்த்திகைத் திங்களில் வரும் கிருத்திகை யன்று, விளக்கொளியால் நிறைந்து விளங்கும் (பெருமானது) ஆறு திருமுக மண்டலத்தை (ச் சேவித்துத்) துதிப்பவர்க்கு, (இனிப்) பிறவி யில்லை,

(குறிப்பு) :— உறைந்து - தங்கி. ஓர் - ஒரு. (25)

## வேறு

791. சிந்துநன் னகர மல்லால்
சிறந்தனூ ரிருந்தா னெய்யாற்
கந்தன்முன் றீப மேற்றக்
கற்பிக்கு முதியோர் தாமும்
முந்துவான் பரியின் வேள்வி
முற்றினோர் கதியை யன்னோர்
விந்தையாற் பெறுவ ரென்றே
வேதமோ யாது சாற்றும்.

(பொ - ரை) :—சிறந்த பதியான செந்திலில் (கார்த்திகை) இரவில் தங்கி, கந்தன் திருமுன் பசுநெய்யால் விளக்கேற்றுமாறு (பிறர்க்கு) உபதேசிக்கும் ஆன்றோர்,

உயர்ந்த முதன்மை யுடைய அசுவமேத வேள்வியை நிகழ்த்தினோர்க்குரிய பேற்றினை, அவர்கள் உபாயத்தால் அடைபவராவர் என்று, ஓயாது வேதம் உரைக்கும்,

(குறிப்பு) :—அல்லால் - இரவுப் பொழுதில். விந்தை - வியக்கும் தந்திரம். (27)

792. அற்றைநாட் கந்தன் மேவு
மாலய முழுதுஞ் சோதி
பெற்றவான் றீபம் பார்க்கும்
பெட்பினோர் தங்கட் கெல்லாம்
மற்றுமோர் சனன மின்றால்
வானுளீர் விரிப்ப தென்னே
கற்றுளோ ரேனுங் கல்லாக்
கடைநிலத் துற்ற ரேனும்.

(பொ - ரை) :—கற்றவராயினும், (சிறிதும்) கல்லாத கீழ்ப்பட்டவராயினும், அக்கார்த்திகை நாளில் கந்தன் எழுந்தருளியுள்ள ஆலயம் முழுதும் ஒளிதரு மகத்தான தீபங்களைத் தரிசிக்கும் புண்ணியப் பொலிவினர் யாவர்க்கும், வேறு ஒரு பிறப்பு விளைவது இல்லை ; விண்ணவர்களே ! (மேலும் இதன் பெருமையை) எவ்வாறு விரித்துரைப்பது ? (எ - று). (28)

793. சென்னியா றுடைய வையன்
செயந்தியம் பதியி னீங்கா(து)
அன்னிலை பொருந்து மேலோர்
அடங்கலுங் கயிலை யீசன்
பொன்னடி பெறுவ ரீது
புகன்றது வாய்மை யென்னப்
பன்னினன் கடவு ளோர்க்குப்
பதுமப்பூந் தவிமக் கோமான்.

(பொ - ரை) :—ஆறு திருமுடி யுடைய ஐயனது திருச்செந்தூரிலிருந்து நீங்காச் சிறப்பு நிலை பெற்ற மேலவர் யாவரும், கயிலை இறைவன் சிவபதம் சேர்வர்; கூறிய இது வாய்மை என்று, கமலாசன நான்முகன் இமையவர்களிடம் இயம்பினன், (எ – று).

(குறிப்பு) :—பதுமப்பூந் தளிமக் கோமான் - அன்றலர்ந்த தாமரை மேலுள அயன். (29)

794. ஒன்றிரண் டொருமூன் றுன
வுயர்தினந் தோறு மன்பாய்ச்
சென்றிருந் தாலுந் தீமை
செயத்துணிந் தார்க ளேனும்
நன்றுணர்ந் திருந்தா ரேனும்
நான்மறைச் செயந்தி யுற்றார்
கன்றிய பாவ நீங்கிக்
கடவுளர்க் குரிய ராவார்.

(பொ - ரை) :—தீங்கு செய்யத் துணிந்தவர்கள் ஆயினும், நான்மறைகளை நலமுற ஓதி உணர்ந்தவர்கள் ஆயினும் ஒருநாள், இருநாள், மூன்று நாட்கள், புண்ணிய விழாக் காலங்களில் (சேவிக்க) அன்புடன் சென்றிருந்தாலும், வருத்திய பாவம் வழி விலக, செந்திலை யடைந்தவர்கள் விண்ணவர்க்கு உரிய (விருந்தின) ராவர், (எ - று). (30)

795. கருதரு மேலை வீட்டுக்
கேறுதற் காக வைத்த
பொருவரும் ஏணி சிந்து
புரமெனப் பிரமன் விண்ணோர்

தெரிதர நுட்ப மாகத்
 தேற்றின னெனவி யாசன்
பரிவுடன் சுகற்குத் தேறப்
 பகுத்தனன் றொகுத்து மாதோ.

(பொ - ரை) :—நினைத்தற்கு அரிய மேதகு முத்தியில் ஏறற்கு வைத்த ஒப்பற்ற ஏணியே திருச்செந்தூர் என்று, பிரமதேவர் தேவர்கள் தெரிந்து கொள்ளும்படி நுட்பமாக உணர்த்தினர் என்று, அன்புடன் சுகர் தெளியுமாறு, வியாசர் (பகுதி) பகுதியாக (இப்புராணத்தைத்) தொகுத்துக் கூறினர், (எ - று).

(குறிப்பு):—அண்ட பிண்ட சராசரங்கட் கெல்லாம் அப்பாற் பட்டது; வேத தேவதைகள் சதா உள்ளம் கொள்வது; உலகெலாம் உணர்ந்தும் ஓதற்கு அரியது ஆதலின், முத்திப் பேற்றை 'மேலை வீடு' என்றார். மும்மலம் நீங்கி, காமம் முதலிய அறுபகை அகன்று கடைத்தேறிய அருள் ஞானிகள் எய்தற்குரிய அப் புனித முத்தியை, எவரும் எளிதில் எய்தற்கு ஏணிபோல் இருக்கிறது திருச்செந்தூர். சென்று சேவிப்பார் எவர்க்கும் உணர்வில் நெகிழ்வு உதித்தல், இன்பலயம் எளிதின் எய்தல் இன்றும் அனுபவம். இந்தப் பரம ரகசியத்தை, படைப்புக் கடவுள் அன்றே உயிர்கட்கு அறிவித்தார் என்று, குறிப்பாக சுகப்பிரமத்திற்கு வியாசர் கூறினர் என்றபடி. பகுத்தல் - பல அத்தியாயங்களாகப் பகிர்தல். (31)

பிரமன் உபதேசித்த அத்தியாயம்
நிறைவுபெற்றது.

## 18. சுகப்பிரமரிஷி பூசித்த அத்தியாயம்

796. நாடருந் தவத்தின் வைப்பாம்
நைமிசா ரணியத் துற்ற
பீடுறு முனிவர் கேட்பப்
பெருமறைச் சூத னென்பான்
நீடருள் சுரப்ப நோக்கி
நெடுநிலா வேணி பொற்ருள்
சூடிமற் றவர்முன் ருகச்
சொல்லுதற் குள்ளம் வைத்தான்.

(பொ-ரை) :—ஆய்தற்கு அரிய தவநிலயமான நைமிச ஆரண்யத்தில் இருக்கும் சிறந்த முனிவர்கள் சிரவணிக்க, பெருமையை யுடைய வைதிகஞான சூதபுராணிகர் என்பவர், (அம்முனிவர்களை,) பேரருள் பெருகக் கடைக் கணித்து, உயர்ந்த இளம்பிறை தரித்த இறைவனின் திருவடிகளைச் சிரமேல் சூடி, (அவர்கள்) திருமுன் இருந்து, (மேலும்) உபதேசிக்க உள்ளங் கொண்டனர்,

(குறிப்பு) :—வைப்பு - அருள் வாய்ப்பான நிலம். மனோலயம் ஆனல், பொறிபுல சேட்டைகளை வெல்லல் இயலும்; அதன் பின் ஆன்ம உணர்வு, தற்பரா! என்று கூவித் தாவும்; அந்நிலை கண்டு, தாயான பரனது அருளொளி, வலிந்து வந்து தழுவும்; அத்தகைய பேற்றிற்கு இடம் செய்தலின், 'தவத்தின் வைப்பாம் நைமிசாரண்யம்' எனப்பெற்றது. (1)

797. நவையிலா மறையின் மூத்து
நாரண வடிவந் தாங்கும்
உவமைதீர் வியாசன் றன்பா
லுறுசுக முனிவன் கேட்பச்

சிவனருள் குமர மூர்த்தி
செயந்தியம் பதியிற் காதை
யவையுப தேச மாக
அறிவொருங் குணர்த்துகின்றான்.

(பொ - ரை) :—பழுதிலா வைதிக அறிவில் பழுத்து, திருமாலின் அமிசம் தாங்கி உவமை கடந்து உயர்ந்த வியாசர், (சிறக்கத்) தன்னிடம் அடைந்த சுகர் சிரவணிக்க, சிவனார் அருளிய குமரனின் செந்தில் பதியின் சிறப்புகளை, உபதேச உருவில் உணர்வொடு (மேலும்) உரைப்பா ராயினர், (எ - று).

(குறிப்பு) :—வியாசர் சுகர்க்கு உபதேசித்த மற்றுமுள செய்திகளையும் உங்கட்குச் சொல்லுகிறேன் என்று, சூத புராணிகர் சௌனகாதியர்க்குச் சொல்ல ஆரம்பித்தார் என்பது குறிப்பு. காதையவை-அக் கதைகளை. (2)

பாரத கண்டத் தூடு பகர்தரு மூவா றன
சீரிடங் குமர மூர்த்திதிருவருள் போலா யுற்ற
பேரினைப் புலரிக் காலைப் பேசினர் யாரு முள்ளத்
தாரருள டைந்து பாவத் தருந்தளை யகற்று வாரால்.

(பொ - ரை) :—பரதகண்டத்தில் பகரப் பெறும் பதினெட்டுத் திருப்பதிகள், குமரவேளின் திருவருள் சொரூபம் போலத் திகழ்கின்றன; (அவைகளின்) திருப் பெயர்களை (அதி) காலையில் ஓதினர் அனைவரும், (இனிய) நிறையருள் உள்ளத்து எய்தி, அரிய பாவ விலங்கை அகற்றுபவர் ஆவர், (எ - று).

(குறிப்பு) :—புலரி - விடியற்காலம். தளை - பந்தம். (3)

799. எழுமுகிற் படலை தூங்கும்
இமையமால் வரையின் பாங்கர்
அழகினுக் கழகு செய்யும்
ஆடியின் சிறப்பு வாய்த்துச்
செழுமைபெற் றுயர்ந்த ஞானச்
செய்யவிந் திரநீ லப்பேர்
தழுவிமுத் தேவர் காக்குந்
தகையபட் டணமொன் றுண்டால்

(பொ - ரை):—ஏழு மேகங்களும் தங்கி இளைப்பாறும் பெரிய இமயமலையின் பக்கத்தில், அழகிற்கு அழகு செய்யும் கண்ணாடி போல் (மாசற்ற) சிறப்பெய்தி, வளங்கொண்டு வளர்ந்த ஞானச் செம்மை (யை நினைவுறுத்தும்) இந்திர நீலம் எனும் பெயர் தாங்கி, (படைப்பாதி புரியும்) முத்தேவர்கள் காவல் புரியும் தகுதி யுடைய நகரம் ஒன்றுளது, (எ - று).

(குறிப்பு):—ஏழுமேகம் - சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவருணம் என்பவை. படலை - படலமான கூட்டம். ஆடி - கண்ணாடி. தகைய - தக்க சிறப்புள. (4)

அந்தமா நகரிற் றேவர் யாவருந் திரண்டன் பாக
முந்துமோர் தேவர் சேனாபதியென முருக வேட்குச்
சிந்தையார் வத்தி னோடும் திருமணி மவுலி சூட்டிச்
சந்தநான் மறையின் வாழ்த்தித் தண்மலர் மாரி தூற்றி.

801. அன்றுதொட் டின்று காறு
மாரரு ளபிஷே கப்பேர்
ஒன்றிய குமர னென்ன
வும்பர்கள் வணங்கி யேத்த

வென்றிவே லண்ணல் போற்றி
வேண்டுநர் வேண்டி யாங்கே
நன்றருள் புரிந்து வேதம்
நவிற்றவீற் றிருந்தான் மாதோ.

(பொ - ரை) :—நலஞ் சிறந்த அந்நகரில் அமரர் அனைவரும் ஒருங்குகூடி, அன்புடன் முந்திய ஒப்பற்ற தேவசேனாபதி என, முருகப் பரமற்கு மனமகிழ்வுடன் அழகிய மணிமகுடம் புனைந்து, இசையுடைய நான் மறை மொழிகளில் வழுத்தி, குளிர்ந்த (புனித) மலர் மழையைப் பொழிந்து, (எ - று). (5)

(பொ - ரை) :—அன்று முதல் இன்றுவரை, நிறைந்த அருளுடைய மகுடம் சூடிய குமாரசுவாமி என்று தேவர்கள் வணங்கித் துதிக்க, வெற்றிவேல் பெருமான், துதித்து வேண்டுவார் வேண்டிய வண்ணம் நலமுறும் அருளை நல்கி, வேத (தேவதைகள்) போற்ற வீற்றிருந் தருளினன், (எ - று).

(குறிப்பு) :—அபிஷேகம் - முடி; ''உரகர்பதி அபிடேகம் ஆயிரமும்'' எனும் அருணை முனிவர் சீர்பாத வகுப்பிலும் இது இப்பொருளாதலை அறிக. (6)

802. கங்கையின் கரையி னோர்சார்
கனகல மென்னுந் தீரத்
தங்கினி தமர்ந்து தாதை
யளித்துள கலைக ளெல்லாம்
மங்கல மரபி னோர்ந்து
மறைகளுக் கெட்டாச் செவ்வேள்
பங்கமில் சிவமா ணுக்க
னெனப்பெயர் பரித்தா னம்மா.

(பொ - ரை) :—சிறந்த வேதங்களுக்கும் அகப்படாத செவ்வேள் பரன், கங்கைக் கரையின் ஒரு புறத்து கனகலம் எனும் பதியில் இனிதாக அமர்ந்து, தந்தையான சிவபிரான் தந்த கலைகள் அனைத்தையும் உயர்ந்த விதிப்படி உணர்ந்து, மாசிலாச் சிவ மாணவன் என்று (ஒரு) திருப்பெயர் எய்தினன், (எ - று).

(குறிப்பு) :—தீரம் - கரை. கனகலம் - தட்சன் வேள்வி செய்த இடம் என்பர். (7)

803. மலையத்தின் மேற்பால் முத்தி
வழங்குமந் தரங்க மான
நிலையத்திற் குமர தாரை
நீணதிக் கரையின் பாங்கர்க்
கலைமுற்று முணர்ந்த வேத
ஆரிடர் கண்ணே யாகித்
தலைமைத்தாம் வேத பாடந்
தணப்பிலா தவர்கள் கூட.

804. இருந்துருச் சொல்லிக் கொண்டே
யாவர்க்கு மிறைவ னாகிக்
கருந்தட நெடுங்கட் செவ்வாய்க்
கவுரிவார் முலைப்பால் ஞானத்
தருந்திவெஞ் சமணை மாய்த்த
ஆறுமா முகங்கொண் டுற்ற
பெருந்தகை யருட்கு மாரப்
பிரமசா ரிப்பேர் பெற்றான்.

(பொ - ரை) :—பொதிய மலையின் மேல் திசையில் உள்ள முத்திதரும் அந்தரங்கமான (ஒரு) இடத்தில், (அரிய) குமார தாரை எனும் ஆற்றங் கரையின் ஓரத்

தில், கலைகள் முழுதும் கற்றுணர்ந்த வைதிக மேலோர் தம் கண்களே போன்று இருந்து, தலைமையான வேத பாராயணத்தை இடையருது அவர்களுடன், (8)

(பொ - ரை) :—இருந்து உருவேற்றிக் கொண்டே, அனைவர்க்கும் தலைவனுகி, கரிய பெரிய நீண்ட கண்களை யும், சிவந்த வாயையுமுடைய கவுரியின் கச்சணிந்த குயங்களின் பாலை சிவஞானத்தோடு பருகியவனும், (திரு ஞானசம்பந்தராகி,) கொடிய சமணர்களைக் குமைத்த வனும், ஆறுமுகம் கொண்டு அருள் பாலிப்பவனுமான பெருந்தகுதியுடைய பிரான், கருணை யுடைய குமாரப் பிரமசாரி என்னும் திருநாமம் எய்தினன், (எ-று). (8-9)

805. பனிமுகிற் படலை நீங்காப்
பழநியஞ் சார ருப்பண்
தனிமுத லாகி மூத்த
தன்கிழக் கோலங் காட்டி
முனிவரர் நால்வர்க் குண்மை
முற்றொருங் குணர்த்தி யாங்குச்
சினகரத் திருந்து ஞான
தேசிக னெனும்பேர் பெற்ருன்.

(பொ - ரை) :—குளிர்ந்த மேகங்களின் கூட்டம் நீங் காத அழகிய பழநிமலை நடுவில் தனிப்பெருந் தலைவ ராய்க், கனிந்த தன் கிழக் கோலத்தைக் காண்பித்து, நான்கு முனிவர்க்கு உள்பொருள் முழுதையும் ஒருசேர புந்தியில் தங்கிப் போதித்து, அங்குள்ள ஆலயத்தில் ஞான தேசிகன் என்னும் திருப்பெயர் எய்தினன், (எ-று).

(குறிப்பு) :—படலை - கூட்டம்; "விரவுபன் மணிகள் கான்ற விரிகதிர்ப் படலை" எனும் பெரிய புராணம் கண்ணப்ப

நாயனூர் புராணத்தும் இப்பிரயோகம் காண்க. கிழக்கோலம் - உரிமையுடைய பல உருவம் எனலுமாம். சினகரம் - கோயில். (10)

806. தொன்மறை முடிவு மூத்த
 சுவாமிமால் வரையின் ஞானம்
சின்மயத் தந்தை யுள்ளந்
 தெளிதர வோங்கா ரத்தின்
தன்மைமுற் கூறி யீசன்
 றன்குரு வடிவா யார்க்கு
நன்மைசார்ந் துயர்சு வாமி
 நாதனென் றொருபேர் பெற்றான்.

(பொ - ரை) :—ஆதியான மறைகட்கும் அப்பாற்பட்ட அநாதியான சுவாமி மலையில், சிவகுருவாம் திருமேனி தாங்கி, அருள்ஞான மேனியரான சிவபிரான் திருவுள்ளம் தெளிவு பெற ஓங்கார ஞான இயல்பை முதலில் உணர்த்தி, (வித்தக) நலத்தை எவர்க்கும் விளைவித்து, உயர்ந்த சுவாமிநாதன் என்ற ஒப்பற்ற திருப்பெயரை யுடையவ னாயினன், (எ - று).

(குறிப்பு) :—தெளிதரக் கூறி என இயைத்து, அதிநுட்ப சாரமானவற்றை அறிவித்து எனலுமாம். உயர் சுவாமிநாதன்- (பிரபவ முதல் ஆண்டுகள் அறுபதும் அறுபது படிகளாக, காலாதீதன் எனக் காட்ட) அதன் உச்சியில் அமர்பவன் எனினுமாம். (11)

807. விந்தையங் கிரியி னோர்சார்
 விகாரபட் டணத்தில் யானை
தந்துள மாதை வேட்டுத்
 தண்ணளி சுரந்து வானத்

திந்திரன் முதல தேவர்
இறைஞ்சமுன் வதுவைக் கோலச்
சுந்தர வடிவத் தோடு
துலங்கினன் குமர மூர்த்தி.

(பொ - ரை) :—விந்தை மலையின் ஒரு புறத்துள்ள விகார பட்டணத்தில், (ஐராவத) யானை தந்த (மாபெரும்) தேவயானையை மணந்து, பேரருள் பொங்கிப் பெருகி, விண்ணின் தலைவனை இந்திரன் முதலிய இமையவர் முன் வந்து இறைஞ்ச, முன்னைய திருமணக் கோல அழகிய ஒளியுள வடிவொடு குமர மூர்த்தி, (என்றும்) விளங்கி யிருக்கின்றான், (எ-று). (12)

803. தினகரன் மரபிற் றோன்றுஞ்
சித்திர சேன னென்றோர்
முனைநெடுஞ் சுடர்வே லண்ணல்
முதியமா தவத்தின் ஞானத்
தனிவரை யதனி னேற்குந்
தன்மைகண் டினிய கந்தன்
நனிமகிழ் சிறந்து வேட்ட
தேதென நவில்வ தானான்.

(பொ - ரை) :—சூரிய குலத்தில் உதித்த சித்திர சேனன் எனும் கூர்மையும் நீட்சியும் ஒளியுமுள வேல் கொண்ட ஒரு வேந்தன், ஒப்பற்ற ஞானமயமாம் திருப் பரங்குன்றில், முதிர்ந்த பெருந்தவம் செய்யும் முதன் மையை இன்பக் கந்த இறைவன் கண்டு, (மாபெரும்) திருவுளம் மகிழ்ந்து, விரும்பியது யாது என்று கேட்ப, (அவன்) விளம்புவான் ஆயினன், (எ - று.) (13)

809. கூடலி னினிதா யுள்ள
கோலமோ ரறுபா னுன்காய்
ஆடிய நடனம் யாவும்
அளியனே னினிது காண
நாடகச் சுருதி யாக
நடித்திடாக் காட்டல் வேண்டித்
தேடின னென்று கூறத்
திருவுளஞ் சிறப்ப நோக்கி.

810. கூறரு மறுபா னுன்காங்
கோலத்தின் செய்கை யெல்லாம்
வேறுவே ருகக் கந்த
வேடிரு நடனங் காட்டி
யூறுதே னருவி கால
வுயர்ந்தவான் பரங்குன் றத்தின்
ஏறுசீர் நடன நாதன்
எனவொரு பெயர்பெற் ருனல்.

(பொ - ரை) :—நான்மாடக் கூடல் எனும் மதுரையில், (தற்பரன்) இன்பமான திருமேனிகள் தாங்கி, அறுபத்தினுன்காகச் செய்த ஆடல் அனைத்தையும், அடியனேன் இனிது அறிதற் பொருட்டு (நீர்) ஆடிக்காட்டலை ஆவலித்து, (தவம் எனும் வழியில் உணர்வால் உம்மை) எண்ணி யிருந்தேன் என்று விண்ணப்பிக்க, திருவுளம் மகிழ்ந்து நோக்கி, (எ - று). (14)

(பொ - ரை) :—(சொல்லளவில்) சொல்லிக் காட்ட இயலாத அறுபத்தி னுன்கான ஆடல் செயல்கள் அனைத்தையும், கந்தவேள், தனித் தனியான திருவிளை யாடலாக (த் தாமே ஆடிக்) காண்பித்து, ஊற்றெடுக்

கும் (புதுத்) தேன் அருவியாகப் பொழிய, உயர்ந்துள திருப்பரங்கிரியில் ஏற்றம் பெற்ற நடனநாதர் என்னும் திருப்பெயர் எய்தி யிருந்தனன், (எ - று). (15)

811. தேறலி னருவி தூங்கும்
தென்மலை யத்துத் தென்பால்
ஆறுடை னந்த தான
அரன்பதி யவையின் கீழ்பால்
வீறுமங் கலப்பொற் சாரல்
வீற்றிருந் தகில நல்கும்
நாறுபூங் கமல வீட்டு
நான்முகன் வணங்கிப் போற்ற.

812. வேதனுக் குலகம் யாவும்
விதித்திடு செயலும் ஞான
போதனச் செயலு முள்ளம்
பொற்புற வுபதேசித்துக்
காதலிற் சிறந்த வேற்கைக்
காங்கேயன் கருணை காட்டித்
தீதறு போக மோக்கத்
தியாகியென் றிருந்தான் மன்னோ.

(பொ - ரை) :—தேனருவி ஒழுகும் தென் திசைப் பொதிகைத் தென்புறத்துள்ள பதினொரு சிவத்தலங் களின் கீழ்ப்புறத்தில் இருக்கும் விளக்கமான சாரல் நிறைந்த மங்கலக் குன்றில் (மகிழ்ந்து) இருந்து, உலகங் களை யுருவாக்கும் மணங்கமழ் தாமரை மலர் மாளிகை யின் நான்முகன் வணங்கி (இனிது) வழிபட, (16)

(பொ - ரை) :—வேதம் வல்ல (அந்) நான் முகனுக்குப் படைக்கும் தொழிலையும், (புனித) ஞானம் போதிக்கும்

செயலையும் உள்ளம் பொலிவுற உபதேசித்து, (உள்ளக்) காதலில் உயர்ந்த வேல் ஏந்திய திருக்கரக் காங்கேயன் பரம திருவருளைப் பாலித்து, தீதற்ற போக மோட்சத் தியாகி என்னும் திருப்பெயர் கொண்டு இருந்தனன், ()

813. பொருநைச்சங் கமத்துத் தென்பாற்
பொலன்குவ டுயர்ந்த சந்த
வரையினில் வீர வாகு
வழுத்துதற் காக வேண்டிக்
கருணையின் விசுவ ரூபங்
காட்டியெஞ் ஞான்று நீங்கா
தருடரும் விசுவ ரூபன்
என்றநும் பெயர்கொண் டானால்.

(பொ - ரை):—தாமிரபரணி கூடும் இடமான தென் புறத்தில் (உள்ள) அழகிய சிகரம் உயர்ந்த சந்தனுசலத்தில், (தூய)வீரவாகு தேவர் துதித்தது காரணமாக, கருணையொடு விசுவ உருவைக் காண்பித்து, எந்நாளும் இடையறாது பரமதிருவருளைப் பாலிக்கும் விசுவ ரூபன் என்ற (ஒரு) அரிய திருப்பெயரும் எய்தினன், (எ - று).

(குறிப்பு) :—சந்தனுசலம் - பொதிகை. (18)

814. தெண்டக வனத்துக்கோதா
வரிநதித் தென்பாற் சீதை
யொண்டொடி பிரிந்து காமத்
தொள்ளழல் பொருத ராமக்
கொண்டனெஞ் சகமுன் தேறக்
கோதில்வாக் கியமோர் நான்கு
பண்டுரைத் தருளி ராம
னெனப்பெயர் பரித்தாங் குற்றுன்.

(பொ - ரை):—தண்டகாரண்யக் கோதாவரி நதியின் தென் புறத்தில், மங்கல வளையணி சீதையைப் பிரிந்து, காமக் கனல் கனற்றத் தாங்க லாற்ருத மேக வண்ண ஞுன இராகவனின் தேரு உள்ளம் தெளிவு பெற, களங்க மற்ற நான்கு மகாவாக்கியங்களை (உயர்ந்த வகையில்) அன்று உபதேசித்து, அருள்ராமன் எனும் திருப்பெயர் எய்தி, (இனிது) அங்கு எழுந்தருளி யிருந்தனன், (-).

(குறிப்பு):—சனகர் வேள்விச் சாலைக்கென நிலத்தை உழ, அவ்வுழுபடைச் சால்வழி வெளிப்படுதேவி, சீதை எனும் பெயரிற் சிறந்தனன். ராமன் - ரமிக்கச் செய்யும் கோலமும் குணங்களும் கொண்டவன் எனும் பொருட்பெயர்.

(1) தத்துவமஸி - தத் - அது; த்வம் நீ; அஸி - ஆகிருய்; இது சாமவேதம் அருளிய மகா வாக்கியம். அந்த அது என்பது, எது எனும் கேள்வி எழுமேல், அதற்கு,

(2) ப்ரஜ்ஞாநம் ப்ரஹ்ம-பேரறிவின் சொருபமே (அப்) பெரிய பொருள்; என இருக்குமறை விடையளிக்கும்.

(3) அயமாத்மா ப்ரஹ்ம - அயம் ஆத்மா - இந்த ஆன்மா; ப்ரஹ்ம – பெரிய பொருள்; இது அதர்வண வேத அறிவிப்பு. இது, ஆன்மாவிற்கு அந்தரியாமியாய் உள்ள பரமான்மாவே அப் பிரஹ்மம் எனும் பொருளது.

(4)அஹம் ப்ரஹ்மாஸ்மி என்கிறது யஜுர்மறை, நான் பிரமம் ஆகிறேன் எனும் பொருளுடைய இது சாதனை அனுபவம்; வெறும் பேச்சன்று. இங்ஙனம் மகாவாக்கியங்கள் நான்கும், ஒன்றை ஒன்று தொடர்ந்து, ஸோஹம் என்று அமைதி யடையும். இதை இராமனுக்கு இறைவன் அருளின னென்றபடி. (19)

815. கொண்டரும் மகேந்தி ரத்திற்
குருங்கத்திற் றென்கீழ்ப் பாங்கர்
அண்டுதற் கரிய கூர்மச்
சிலையிடை யணிகொள் சோதி

மண்டபத் திரண்டு மாதர்
ஊடியும் புணர்ந்தும் வானோர்
கண்டடி வணங்கக் காமக்
கடவுளென் றொருபேர் பெற்றான்.

(பொ - ரை):—மேகங்கள் இளைப்பாறத் தங்கும் மகேந்திரமலையில் இருக்கும் குருங்கம் என்னும் ஊரின் தென்கீழ்ப் பகுதியில், (எவரும்) அணுக முடியாத ஆமை வடிவான பாறை மேல் உள்ள அழகமைந்த மாபெரும் ஒளிமயமான மண்டபத்தில், இருதேவி யருடன் ஊடியும் கூடியும், வானோர் சேவித்துத் திருவடி களை வணங்க, காமக் கடவுள் என்ற ஒரு திருப் பெயரை எய்தினன், (எ - று). (20)

816. வானுயர் சையச் சித்த
மல்குகேத் திரத்துச் சித்தர்
ஊனமில் சனக ராதி
யோகியர்க் குண்மை யான
மேனிமிர் குளிகா சித்தி
பாதுகா சித்தி மிக்க
ஞானமாம் பிராண யாம
சித்தியு நன்க தாக.

முந்துற வுபதே சித்து முடிவிலா யோகி யோக
சுந்தரர் யோக நாதர் தூயயோ கீசர் வேத
மந்திர வடிவாம் யோக வல்லரென் றறைந்தா னந்த
நந்தலில் நாமந் தாங்கிக் குமரவேள் நண்ணி னானல்.

(பொ - ரை):—வானோங்கி வளர்ந்த சைய மலையில் உள்ள சித்தர்கள் நிறைந்த (ஒரு) தலத்தில், களங்கம்

இல்லாத சனகர் முதலிய யோகிகட்கு, உள்பொருளான மேல் எழச் செய்யும் குளிகை சித்தி, (இயங்க வைக்கும்) பாதுகை சித்தி, பேரறிவிற்கு இடமான பிராணுயாம சித்தி (முதலியன) நலமுற விளைய, (21)

(பொ - ரை) :—உயர்ந்த நிலேகளை உபதேசித்து, அநந்த யோகி, யோகசுந்தரர், யோகநாதர், சுத்த யோகீசர், வேத மந்திர சொரூபமாக இருக்கும் யோக வல்லபர் என்று சொல்லப் பெற்ற அழிவிலா இன்பப் பல பெயர்களுடன், (என்றும்) குமரவேள் எழுந்தருளி யிருந்தனன், (எ - று).

(குறிப்பு) :—தொட்டு நினைக்கில், நினைத்த இடத்தில் சேர்க்கும் நிலேயது பாதுகாசித்தி. வாயில் இட்டு எண்ணில், விண்ணில் உயர்த்தும் குளிகைசித்தி. சுவாசத்தைக் கும்பகமாக்கி, குண்டலினியை எழுப்பி, அருளமுதம் பருகச் செய்து அறிவு மயம் ஆக்கும் பிராணுயாம சித்தி என்க. (22)

திரிகூடா சலத்தீ சான திக்கினில் இலஞ்சி யான
புரியினிற் கபில ராதி யோகியர் புகழ்ந்து கேட்ப
அரியமுத் தேவர் மூவ ராவது நாமே யென்று
சுருதியின் வரதராசத் தொல்பெயர் சூட்டிக்
கொண்டான்.

(பொ - ரை) :—(திருக்குற்றுல மலேயெனும்) திரிகூடா சலத்தின் வடகீழ்த்திசையில் உள்ள திருஇலஞ்சி எனும் திருப்பதியில், கபிலர் முதலிய யோகிகள் (சிறக்கத்) துதித்துச் சிரவணிக்க, (ஆக்கல், காத்தல், அயர்வகற்றல் செயலில், அயன் மால் அரனெனும்) மும்மை ஒளிமய மூவர் ஆவதும் யாமே என்று அருளி, (ஓதும்) வேதங்களே உணர்த்துதலால், வரதராசர் எனும் புராதனத் திருப்பெயரைப் புனைந்து கொண்டனன், (எ-று).

(குறிப்பு) :—கம்பீரமான முச்சிகரங்கள் இருக்கும் காரணத்தால், இம் மலை திரிகூடாசலம் எனும் திருப்பெயர் பெற்றது ; திருக்குற்றாலம் என்றும் இதற்குப் பெயர் உண்டு. இது பாண்டி நாட்டில் உளவொரு பழம்பதி. இலஞ்சி - காசிபர், கபிலர், துருவாசர் மூவருக்கும் உண்டான மயக்க மகற்றி, சிவமே மெய்ப்பொருள் எனத் தெளிய வைத்த தலம். இத்தல விருட்சம் இலஞ்சி; அதாவது மகிழமரம்; அதனால் இப்பதி இலஞ்சி யெனும் பெயர் எய்தியது. அகத்தியர் இலஞ்சி முருகன் அருள் பெற்றே திருக்குற்றால உலகநாதரை இலிங்கமாக்கினர் என்றும் வரலாறு இருக்கிறது. (23)

819. விந்தைமால் வரைக்கு மேல்சார்
வெய்யவ னெடுந்தேர் தட்டக்
கொந்துலாங் கவடு போக்குங்
குமாரமா வனத்தி னுப்பண்
நந்தகோ பாலர் தம்மில்
நாகிளங் கதிர்போ லுற்ற
முந்துசீ கரப்பேர் கொண்ட
மூதுல கேத்துங் கோமான்.

கண்ணனுற் பத்தியான காரண முதலா யன்னுன்
எண்ணுதற் கரியதாய வைகுண்ட மெய்தல் காறும்
நண்ணிய தினமோர் பத்தி னுடகத் தியற்கை யாகத்
தண்ணளி சிறப்ப ஆடிக் காட்டென வணங்கித்
தாழ்ந்தான்.

(பொ - ரை) :—பெரிய விந்தை மலைக்கு மேல் புறத்தில் பரிதியின் (தனிப்) பெருந்தேர் தடைப்படுமாறு, பூங்கொத்துக்கள் பரவிய கிளைகள் உயர்ந்த சிறந்த குமார வனத்தின் நடுவில், இடையர்களுள் இளம்பரிதிபோல்

இருந்த முதன்மைச் சீகரன் எனும் பெயர் கொண்ட உலகம் புகழும் உயர்ந்தவன் (ஒருவன்), (24)

(பொ - ரை) :—கண்ணன் திருவவதரித்த காரணத்தின் ஆரம்பம் முதல், அப்பரன் எவர் நினைவிற்கும் எட்டாத வைகுண்டம் அடையும் வரை (நிகழ்ந்த வைகளை,) தொடர்ந்து பத்துநாள் வரை, நாடக முறைப் படி, கருணை மிக ஆடிக் காட்டியருள் என்று, வணக்கத் துடன் விநயம் வெளிப்பட விண்ணப்பித்தனன், (எ-று).

(குறிப்பு) :—விகுண்டை என்பாள் தவம் கருதி உருவான தனிப்பெரும் இடம் வைகுண்டம்; வைகுந்தம் - பரமபதம் என்பது ஸ்ரீ வைணவர்கள் சித்தாந்தம். (25)

821. கோகுலத் தாயன் வேட்ட
குறிப்பெலா நடித்துப் பின்னர்
ஓகையிற் கண்ண னுய
வுயர்திருக் கோலங் காட்டி
வாகுறு கண்ணன் சாயுச்
சியத்தையும் வழங்கிச் செவ்வேள்
சீகரக் கடவு ளென்றோர்
திருப்பெயர் சூட்டிக் கொண்டான்.

(பொ - ரை) :—கோகுலத்து இடையர் பெருமகன் விரும்பிய குறிப்பனைத்தையும் நடித்துக் காண்பித்து, உவகை யுடைய கண்ணன் (தானே) ஆன சிறந்த கோலத்தையும் சேவிக்கச் செய்து, வெற்றிக்குரிய திருமாலின் சாயுச்சியத்தையும் அருளி, சீகரக் கடவுள் என்ற ஒரு திருப்பெயரைச் செவ்வேள் எய்தினன், ( )

(குறிப்பு) :—கோகுலம் - வடநாட்டுத் திருப்பதி. ஓகை - உவகை. வாகு - தோள். (26)

822. கங்கையின் வடபாற் சிங்கி
பேரபட் டணத்திற் காமர்
தங்கெழிற் சிலையி ராமன்
றனைத்தியா னித்து வாழுந்
துங்கமாங் குகற்கி ராமன்
றொல்கதை யனைத்துஞ் சோரா
தங்குநா டகக்கூத் தாக
வருளொடு நடித்துக் காட்டி.

823. சுந்தரச் சிலையி ராமன்
தோற்றமுங் காட்டி ஞானம்
முந்திய பிரமா னந்த
முத்தியுங் கொடுத்து வேத
மந்திரக் குகச்சு வாமி
யென்னவும் வாய்ந்து பேரா
னந்தநா யகனென் றோது
நாமமுங் குமரன் பெற்றான்.

(பொ - ரை) :—(சிறந்த) கங்கையின் வடக்கே உள்ள சிருங்கிபேர புரத்தில், (வேடுவர் தலைவனாய்), விரும்பத் தக்க வனப்பமைந்த கோதண்ட ராமனைத் தியானித்து வாழும் குணத்தால் உயர்ந்த குகனுக்கு, இராகவனது பழங்கதை யாவும், ஒரு பகுதியையும் சோரவிடாமல், அங்கு சிறந்த நாடகமாகக்கருணையொடு நடித்துக் காட்டி, (எ - று.) (28)

(பொ - ரை) :—(அந்த) அழகிய கோதண்ட ராமன் தானே எனும் (அரிய) சேவையையும் அருளி, ஞானத்துடன் முற்பட்ட பேரின்ப வீடுபேற்றையும் உதவி,

வேதமந்திரக் குகசுவாமி எனவும் விளங்கி, பேரானந்த நாயகன் எனப்பெறும் திருப்பெயரும் குமரன் பெற்றனன், (எ - று). (28)

திருமுது கிரியி லீசன் றிருமுன்பு பொன்ன னீன்ற
கருதரும் புதல்வ னுன கசன்றனக் ககார மூன்று
மருவிய வகாரமூன்று வகைபட வுபதே சித்துக்
குருபர னுயர்ந்த மாயா மயகுமா ரப்பேர் கொண்டான்

(பொ - ரை) :—பழமலேயில் சிவனுர் திருமுன், தேவ குரு பெற்ற கருதற்கு அரிய (தவமுடைய) மைந்தனை கசன் என்பவனுக்கு, (ஆகருஷ்ணம், அதிர்சியம், அஞ்சனம் எனும்) அகரத்தை முதலாக வுடைய மூன்று வித்தைகளேயும், (வசியம், வாதம், வயத்தம்பம் எனப்) பொருந்திய வகரவித்தைகள் மூன்றையும் (புனித) வகையாகப் போதித்து, குருபரன், உயர்ந்த மாயாமய மான குமரன் எனும் பெயர் கொண்டனன், (எ - று).

(குறிப்பு) ;—திருமுதுகிரி - விருத்தாசலம், பொன்னன் என்பது, தேவ குருவான பிரகஸ்பதியின் பெயர். (29)

825. புகலுதற் கரிய மூகாம்
புரியினிற் கபில யோகிக்
ககமகிழ் சிறந்து காலன்
ஆணையைக் கடக்க வேண்டித்
தகையமந் திரஞ்சொல் வாய்ந்த
தந்திரம் பசும்பூ டாதித்
தொகைசொலிச் சகல லோக
குருப்பெயர் சூட்டிக் கொண்டான்.

(பொ - ரை):—சொல்லற்கரிய மூகாம்புரியில், காலன் ஆக்ஞையைக் கடக்க விரும்பிய கபில யோகிக்குத் திருவுளம் மிக மகிழ்ந்து, தகுதியுடைய மந்திரம், பதம் (முதலிய) வாய்ப்பான ஆகமம், பசுமைப் பூண்டு முதலியவைகளை (ஒரு) தொகுப்பாக உபதேசித்து, சகல லோக குரு என்னும் திருப்பெயரை எய்தினன், (எ-று).

(குறிப்பு):—மூகாம்புரி - வடநாட்டுத் தலம். தந்திரம் - ஆகமங்களின் பெயர். பூண்டு - மூலிகை வகை. (30)

826. பரம்பிய தரங்கத் துங்க
பத்திரை வடபா லாக
அருந்தவத் துயர்ந்த கோசி
கப்பெய ரந்த ணாளன்
திருந்துற ஞான மெல்லாந்
தெளிதர வுணர்த்தி ஞானம்
பொருந்துதே சிகப்பேர் சூட்டிக்
கொண்டனன் போர்வே லண்ணல்.

(பொ - ரை):—பரந்த அலைகளை யுடைய துங்கபத்திரா நதியின் வடபுறத்தில், அரிய தவத்தில் உயர்ந்த அந்தண கோசிகர் திருந்துமாறு, (உயர்) ஞான நுட்பம் அனைத்தும் தெளிவாக உபதேசித்து, பொருந்திய ஞானதேசிகன் என்னும் திருப்பெயரைப் போர்வேல் முருகன் புனைந்து கொண்டனன், (எ-று).

(குறிப்பு):—தரங்கம் - அலைகள். துங்கபத்திரை - வடநாட்டுப் புண்ணிய நதி. (31)

827. ஆரிடர் கேண்மோ மூவா
ருண நன் னகரந் தோறுஞ்
சீருட னிருக்குந் தோற்றஞ்
செயந்தியம் பதியிற் சந்தச்

சாரலின் வீர வாகின்
தகையபே ரன்புக் காகக்
கூரிலை வேலோன் காட்ட
லுளங்கொடு குறிப்பிற் சொற்ருன்.

(பொ - ரை) :—முனிவர்களே! கேண்மின்கள்! (மேற்கூறிய) நலஞ் சிறந்த பதினெட்டுத் தலந்தொறும் சிறப்புடன் வீற்றிருக்கும் (தன்) கோலத்தைச், செந்தில் பதிசார் சந்தனுசலத்தில், வீரவாகுவின் பெருகி எழுகிற பேரன்பிற்காக, கூரிய இலைவடிவான வேலிறைவன் (எதிர் காலத்தில்) காண்பிக்க இருத்தலையும், (வியாசர், சுகர்க்குத் தம்) உள்ளக் குறிப்பால் உணர்ந்து ஓதினர்,

(குறிப்பு) :—ஆரிடர் - ஆரிஷர் என்பதன் விளி, இது சிறந்த முனிவர்கள் எனும் பொருட் பெயர். கூறிய முறையை அடுத்த பாடல் கொண்டு அறிக. (32)

828. சொற்றிடுஞ் செய்கை யெல்லாஞ்
சூருரம் பிளந்த வேற்கைக்
கொற்றவ னினிமுன் ருகுங்
கோகன தத்துள் ளானுக்
குற்றநற் கற்பத் தெல்லை
யும்பர்வான் முனிவர் போற்ற
அற்புட னடிக்கு மென்ன
அறிவொருங் குணர்த்தி னுல்.

(பொ - ரை) :—சூரபதுமன் மார்பைப் பிளந்த வெற்றி வேற்படைத் திருக்கர விமலன், இனித் தோன்ற இருக்கும் கமலாசன நான்முகனுக்குரிய பிரம கற்பத்தில், வானவர் முனிவர் வாழ்த்துதல் செய்ய, (இதுகாறும்)

கூறிய வரலாறுகள் அனைத்தையும், அன்புடன் நடித்து அறிவிப்பன் என்று, ஞான நோக்கால் அறிந்து உணர்த்தினர், ((எ - று).

(குறிப்பு) :—மாபெரும் பிரமகற்பத்தில், பழைய அருளாடல் அநுபவ வரலாறுகள் பல மறைந்து விடும்; நிமலன் உயிர் கட்கு அவைகளை நினைவுறுத்த, கருணையொடு மீண்டும் நடித்துக் காட்டுவன் என்பது கருத்து. இந்த அத்தியாயத் தில் இதுவரை குறித்த செய்திகள், வடமொழி மகாத்மியத் தில் இல்லை. எனவே இவைகள், பிற நூல்களி லிருந்து தெரிந்து பாடிய திறமென்றோர்க. (33)

829. ஒருங்குற வுணர்த்திப் பின்ன
ருலகெலாந் தானே யாக
வருங்குகன் சரணச் செந்தா
மரைமல ருள்ளத் தேத்தி
யருங்குளி ரிமயச் சார
லரித்துவா ரத்தை நீங்கித்
தருங்கதி மூல மான
வதரிகாச் சிரமஞ் சார்ந்தான்.

(பொ - ரை ):—(வியாசர் இவைகளை) ஒருசேர (சுகர்க்கு) உணர்த்தி, அதன்பின், உலகெலாம் தானே யாக எழுந்தருளும் குகனது சிவந்த திருவடிக் கமலங் களை மனங்கொண்டு துதித்து, மிகக் குளிர்ந்த இமய மலைச் சாரலில் இருக்கும் அரித்துவாரத்தை விட்டுப் புறப்பட்டு, வீடு பேறு விளைதற்குக் காரணமான பதரிகா சிரமத்தை அடைந்தார், (எ - று).

(குறிப்பு):—உலகெலாம் தானேயாக வருதல்-விஸ்வரூபத் திருமேனியாதல். அரித்துவாரம் - உத்திரப் பிரதேசத்தி லுளது. இத்தலம், இமயத்தில் உள்ள பல தலங்கட்குச்

செல்லும் வாயில்போல் அமைந்துளது. திருக்கேதாரம் பதரிகாசிரமம் முதலிய தலங்கட்குச் செல்வோர், பெரும் பான்மை அரித்துவார வழியாகத்தான் செல்கின்றனர். ஹரித்வாரம் என்று வைணவரும், ஹரத்வாரம் என்று சைவர்களும் அத்தலப் பெயரைக் குறிப்பிடுகின்றனர். முத்தி தருதலங்களுள் இஃது ஒன்று என்பர். ஆதிபத்ரி, தியானபத்ரி, பவிஷ்ய பத்ரி, விலாச பத்ரி, விசாலபத்ரி என ஐந்து பத்ரிகள் உள. அவைகளுள், விசால பதரிதான் விசேட மென்க. "வண்டு பாடும் தண் துழாயான் வதரி வணங்குதுமே" என்றார் திருமங்கையாழ்வார். (34)

830. அழிவிலாச் சீவன் முத்த னுஞ்சுக முனிவ னென்பான்
கழிபெருங் காதல் கூர்ந்து கடவுளர்க் குரிய ஞானம்
பொழிதருங் கருணைச் சிந்து புரத்தியல் தந்தை செவ்வாய்
வழிமது செவிச்செவ் வாயான் மாந்தினன் மகிழ்வு பூத்தான்.

(பொ - ரை):—இறப்பு இல்லாத சீவன் முத்தராம் சுகமுனிவர் என்பார், மேதகு அன்பு மிகுந்து, அமரர் கட்கு உரிய ஞானத்தைப் போதிக்கும் அருட்பண்புள (வியாசராம்) தந்தையின் செவ்வாய் மலரிலிருந்து வழியும் செயந்தி நகரின் சிறப்பாகிய தேனை, (தன்) செவியாம் சிறந்த வாயால் பருகி, மகிழ்வில் மலர்ந்தனர்,

(குறிப்பு):—சீவன் முத்தன் – கட்டு அகன்றவன். (35)

831. உயிரினுக் குயிராங் கந்த னுபயதா மரைப்பொற் பாதம்
பயிலுநெஞ் சகத்த னகிப் பனிவரைச் சாரற் றாங்கும்
வியனுடை யரித்து வாரந் தன்னில்வீற் றிருந்து வேதத்
தியலுணர் கருத்து மீதூர்ந் தெண்ணின னெண்ணி யாங்கே.

(பொ - ரை):—உயிர்க்கு உயிராகும் கந்தப் பரமனது கமலமல ரடிகளைப் பதித்த மனத்தராய், இமயமலைச் சாரலின் இருக்கும் (அரும்பெரும்) சிறப்புடைய அரித் துவாரத்தில் எழுந்தருளி யிருந்து, வைதிக இயல்பை

உணரும் சிந்தனை மென்மேலும் மேம்பட்டு, எண்ணி யவைகளை எண்ணியபடியே, (எ - று). (36)

832. விழிதுயில் வாரே போல மிக்குயர் பிராண யாமத்
தழிவிலா யோக முற்றி யைந்தெனும் பிராண மாயைக்
குழுவினை யொன்ற தாகக் கூட்டமிட் டவையை மேலைச்
சுழுமுனை யதனிற் கூட்டித் தொடர்வினை யகற்றுந் தூயோன்.

(பொ - ரை) :—கண்ணுறங்குவாரைப் போல், மேம்பட்டு உயர்ந்த பிராணயாமத்தின் மூலம் நித்திய யோகத்தை நிறைவேற்றி, மாயம் செய்யும் ஐந்தெனும் அறிகருவிகளின் கூட்டங்களை ஒருமுகமாக் கூட்டி, (ஒன்றுபட்ட) அவைகளை மேலிடமான சுழுமுனையில் படுத்தி, (சங்கிலி போல்) தொடர்ந்த வினைகளை யறுக்கும் தூய சுகமுனிவர், (எ - று).

(குறிப்பு) :—இயமம் நியமம் ஒழுக்கங்கள்; ஆதலின், ஆகாமியம் இல்லை. சுகாசனம், பத்மாசனம் என ஆசனம் பல்வகை; இவைகளால் சுவாசம் திட்டமிட்டபடி கட்டுப் படும். பிராணயாமம்—உயிர்ப்பைக் கும்பகம் செய்தல்; இதனால் மனோலயம் உண்டாகும். உணர்வைச் சுழுமுனையில் நிறுத்தல் பிரத்தியாகாரம். மனவுணர்வு மேலேறல் தாரணை. தியானம்—திருவடிகளை ஊன்றி உணர்தல். அறிதுயில் கொள்வார்போல் பதியை அழுந்த மதித்திருத்தல் சமாதி. இங்ஙனம் இயமம், நியமம், ஆசனம், பிராணயாமம், பிரத் தியாகாரம், தாரணை, தியானம் சமாதி எனும் எட்டு அங்கங் களும் இதனில் பிணைந்து இருப்பதை யறிக. (37)

833. அந்தரத் திடையா றுக வாறுமா முகத்துப் புத்தேள்
செந்திநன் னகரம் போற்றச் செல்வழி திரும்பி நின்று
முந்துமா லிரித்து வார முதுபனி யிமயச் சாரல்
புந்தியால் வணங்கி மீண்டும் போயினன் போது மாற்றின்.

(பொ - ரை) :—வானத்து நடுவிடமே வழியாக, ஆறு முகப் பரமனுடைய திருச்செந்தூர் எனும் சிறந்த தலத்தைச் சேவிக்கப் புறப்படும் அமயம், பெரும்பனி யுடைய இமயச் சாரலில் முற்பட்ட பெருமையுடைய அரித்துவாரத்தைத் திரும்பி நோக்கி, மனத்தால் வணங்கி, அங்கிருந்து புறப்பட்டனர்; (புறப்பட்டு) வரும் வழியில், ()

## வேறு

834. பனிதாழ்வரைக் கேதாரமும் பழநான்மறை முழுதுந்
தனிபாடிய சோமீசுரன் றனையும்வலஞ் சூழ்ந்தான்
வினைதீர்தர அருள்காசி விசாலாட்சியெ னும்பூங்
கனிதோய்தரு பெருமானையுங் கண்டான்வினை காணான்.

(பொ - ரை) :—இமயமலையில் இருக்கும் திருக்கேதார இறைவரையும், அநாதியான நான்மறை முழுதும் தனியிருந்து துதிக்கும் சோமீசரையும், (அவ்வவ் ஆலயங்களில்) வலம் வந்து வணங்கினர்; கன்மமலக் கட்டறுக்கும் கருணையை யுடைய காசியில், விசாலாட்சி எனும் மென்சுவைக் கனியை நுகரும் விசுவநாதரை, (ஆகாமிய) வினையை யறியாத சுகர், கண்கள் பெற்ற பயனைக் கண்டு வணங்கினர், (எ - று).

(குறிப்பு) :—சம்பந்தரும், சுந்தர மூர்த்திகளும் கேதாரத்தைப் பாடியுளர். கேதாரமும் சோமேசமும் வடநாட்டுத் திருப்பதிகள். கங்கைக்கு ஒப்பான நதியில்லை; காசிக்கு ஒப்பான பதியில்லை என்பர். காசி - பேரொளித் தலம். கண்டான் வினை காணான் என்னும் பிராச அருமை, ஓதுவார் உளத்தை உருக்கிவிடும். கண்டான்-காணான் என்பது முரண்.

835. பெரிதாங்கதி வடிவாம்பிர யாகைத்திரு நதியுந்
தரைமீதுய ரடலட்சய வடமுந்தழை தென்பாற்
குரியார்க்கருங் கதிகாட்டிய கெயையும்மவ னுறுசீர்
அரிபாதமுந் தொழுதானகத் தரன்றுளினை தொழுதான்.

(பொ - ரை):—பெரிய கதிசொரூபப் பிரயாகை எனும் திருநதியையும், நிலத்தின் மேல் உயர்ந்த வெற்றியுள அட்சயவடம் எனும் தலத்தையும், பிதிரர்கட்குப் பெருங்கதி காட்டும் கயா தீர்த்தத்தையும், அங்குள்ள ஸ்ரீ அரிபாதம் எனும் தலத்தையும், உள்ளத்தில் சிவத்தின் திருவடிகளை (சதா) சிந்திக்கும் சுகமுனிவர், (வந்தித்து) வணங்கினர், (எ - று).

(குறிப்பு) :—அரிபாதமும் தொழுதான், அகத்து அரன் தாள் இணை தொழுதான் என்பதில், நிறையருள் ஞானிகள் மனநிலை இப்படித்தான் இருக்கும் என்பதை நினைவூட்டுகின்றன. தென்பாற்கு உரியார் - தென் திசையில் வாழ் பிதிர்க்கள். (40)

836. சகநாதமெ னும்புண்ணிய தலஞ்சூழ்ந் தொருமுனிவன்
மகளாகிய கோதாவரி வாறுறு படிந்து
துகடீர்தரு கோகன்னமுந் தொழுதேதிருப் பதியுங்
குகனேரியின் சீருங்கரங் குவித்தானைந்து மவித்தான்.

(பொ - ரை) :—ஐந்து வேட்கையை அடக்கிய சுகர், சகந்நாதம் என்னும் புண்ணியப் பதியையும் வலம் செய்து, ஒப்பற்ற (கௌதம) முனிவரது மகளான கோதாவரி (எனும்) நிமல நதியில் நீராடி, குறை தவிர்க்கும் கோகர்னத்தையும் வழிபட்டு, திருவேங்கடமும், (அங்குள) குகனேரியின் மகிமையையும், குவித்த கரங்களால் கும்பிட்டார், (எ - று).

(குறிப்பு) :—'கரங்குவித்தான் ஐந்தும் அவித்தான்' எனும் பிராசச் சொல்லணியில், கை குவித்தவர்கள் ஐந்தும் அவித்தவர்களாயின், அவர்கட்கு அம்மான் அருள்வன் எனும் அருள் நூற்களின் அறிவிப்பு நினைவிற்கு வரும். "பொறி வாயில் ஐந்தவித்தான் பொய்தீ ரொழுக்க நெறிநின்றார் நீடு வாழ்வார்" என்பது பொதுமறை. (41)

337. கச்சிப்பெரு மானைப்புடை களிக்குஞ்சிறு மானை
யச்சத்தொரு மானைத்தொட ரம்மானெனு மறைவாய்ப்
பச்சைப்பெரு மானைப்புணர் பதுமத்திரு மானை
யிச்சைப்படி தொழுதான்புக ழிறவான்வயின் பிறவான்.

(பொ - ரை):—இறவாப் புகழினரும், (இனியொரு) கருவில் (புக்குப்) பிறவா நிலையினருமான சுகர், கச்சிப் பதியில் எழுந்தருளிய சிவபெருமானையும், (அவர்) இடப் புறத்தில் மகிழ்ந்திருக்கும் (காமாட்சி எனும்) இளம் மானையும், அச்சம் விளைவித்த (மாரீசன் எனும்) ஒரு மானைத் தொடர்ந்த அம்மான் எனும் மறை ஓதும் திருவாயுடைய பச்சைப் பெருமானையும், (அவரொடு) கூடும் பங்கயாசனத்தில் இருக்கும் திருவான மானையும் அன்புபோன வழியெல்லாம் (மனஞ்செலுத்தி) ஆராதித் தார், (எ - று).

(குறிப்பு):—மான் எனும் சொல் பலதரம் வந்தது பொருட் பின்வரு நிலையணி. கச்சிப் பெருமான் - ஏகாம்பரநாதர். அம்மான் - மாமன். பச்சைப் பெருமான் – கச்சியில் எழுந்தருளிய திருமாலின் திருநாமம். திருமான் - திருமகளா கிய மான். இறவான் பிறவான் என்பது முரணணி. (42)

338. சொலகோபல நரசிங்கமத் தூமலங்கல கிரிவாழ்
வலநீணர சிங்கம்புகழ் வலநாடு சுவாலைப்
பெலமாநர சிங்கந்தனைப் பிரமாம்பிகை பெட்பார்
பலமாதல மொருமாதவப் படிவத்தினன் பணிந்தான்.

(பொ - ரை):—ஒப்பற்ற சிறந்த தவக்கோலச் சுகமுனி வர், (பெரிது எங்கும்) பேசப் பெறுகிற அகோபிலத்து (அமர்ந்த) நரசிங்கத்தையும், மங்கல கிரியில் வாழ்கிற புனிதமும் வன்மையும் உயர்ந்த அந் நரசிங்கரையும், புகழாலும், ஆற்றலாலும், (பெரிது எவரும்) விரும்பப் பெறுகிற சுவாலைப் பதியின் பலம்மிகு நரசிங்கத்தையும்,

(பெரிய பொருள் ஆன சிவ) பிரானும் அம்பிகையும் (அன்பரில் கொண்ட) ஆர்வத்துடன் எழுந்தருளியுள பல பெரும் பதிகளையும் வணங்கினர், (எ - று).

(குறிப்பு) :—சொல் அகோபிலம் என்று, முதல் அடியைப் பிரிக்க. அகோபிலம் - இது நரசிம்ம க்ஷேத்திரம். "தெய்வ மல்லால் செல்ல வொண்ணுச் சிங்கவேழ் குன்றமே" என்று, திருமங்கையார் இத்தலங் குறித்துப் பாடியுளர். பிரமம் - சிவம்; அம்பிகை - தேவி. (43)

**839.** திருமுட்டவ ராகத்திரு மாலைத்திக ழிலந்தைத்
தருவைத்தண வாதேயவண் தாழ்வார்க்குயர் வாக்கி
வருமச்சுத னரநாரணன் மலர்த்தாளினை வணங்கித்
திரைமுத்தின நிலவார்நரு மதையாறுடன் சிறந்த.

**840.** தரங்கத்திரை பணிலத்திரை தருதுங்கபத் திரைநீர்
பரம்பத்திரை விரிசோணபத் திரைகண்டகி பவமாம்
இரும்புக்கரம் போலாங்கவு சிகையாறிவை யைந்துங்
கரம்பற்றுற வெடுத்தாகமுங் கவினத்தெளித் தனலுல்.

(பொ - ரை) :—*திருமுட்டத்தில் எழுந்தருளி யுள்ள வராகாவதாரத் திருமாலையும், விளங்குகின்ற இலந்தை மரத்தை நீங்காத (வதரியாச்சிரமம் எனும்) அந்த இடத்தில் வணங்குபவர்க்கு வாழ்வளித்து வரும் அச்சுத ரான நரநாரணரையும், மலர்போலும் திருவடிகளை வணங்கி, அலைகள் கொழிக்கும் முத்துக்களின் மென்மை ஒளி மேதக விளங்கும் நருமதை யாற்றுடன், சிறந்த ()*

(பொ - ரை) :—*அலைகளின் ஆரவாரம், சங்குகளின் ஓசை (இடையறுது) விளையும் துங்கபத்திரை; நீர் பரவ அலைபடரும் சோணபத்திரை; கண்டகி; (இறுகிய) பாவமாகிய இரும்பை (அராவி) அழித்தற்குரிய அரம் போன்ற கவுசிகை (எனப்பெறும்) இந்த ஐந்து ஆறு களின் (தீர்த்தத் துளிகளை,) அன்புடன் கரத்தால்*

அள்ளித் திருமேனியிற் சிறக்கத் தெளித்துக் கொண் டனர், (எ - று).

(குறிப்பு) :—தரங்கம் - அலை. இரை – இரைச்சல். (45)

**841.** **நீடுந்தவ நேமிப்பெயர் நெடுமாவன மிருப்பார்**
**பீடொன்றிய இருதாண்மலர் பிடித்தான்சிர முடித்தான்**
**கோடும்பிறை முடிந்தேமுது குன்றந்தனிற் குன்று**
**தாடுங்குழ கன்றாளிணை யடைந்தான்றுய ரடையான்.**

(பொ - ரை) :—பெருந்தவத்திற்கு இடமான நைமிசம் எனும் பெயருடைய கவின்மிகும் பெரிய காட்டில் இருக் கும் தவசிகளது பெருமை பொருந்திய இருதிருவடி மலர் களையும், (கரத்தில்) பற்றிச் சிரத்தில் தரித்தார்; வளைந்த இளம்பிறை சூடி, பழமலையில் குறைவிலாது கூத்தியற் றும் இளம்பிரான் திருவடிகளை (அடைக்கலம் என்று) அடைந்தார்; (அதனால் என்றும்) துன்பம் எய்தார் ஆயினார், (எ - று).

(குறிப்பு):—நேமி - உருளை போலான தர்ப்பைப் புல். கோடும் - வளைந்திருக்கும். 'தாள்மலர் பிடித்தான் சிரம்முடித் தான்; தாளிணையடைந்தான் துயரடையான்' எனும் இப்பிராச நுட்பத்தால், அடியரடி பற்றி அமலனடி சார்ந்தார்க்குப் பிறவியில்லை என்று அறிவித்தபடி. புட்கர தலத்தில் திருமால் தீர்த்த வடிவம்; நைமிசாரண்யத்தில் ஆரண்ய வடிவம் ஆக அவதரித்தார் என்பது புராண வரலாறு. (46)

**842.** **சுருதித்தலை யன்னமலை தொழுதான்சுரர் போற்றும்**
**அருமைத்திருக் காளத்திசென் றடைந்தானன வரதம்**
**பரதத்துட னடுஞ்சபை பணிந்தான்பணி மீதே**
**மருவித்துயில் கோவிந்தனை மதித்தன்பொடு துதித்தான்.**

(பொ - ரை) :—திருவருணையில் மறைநாயகரைத் தொழுதார்; காளத்தியிற் சென்று, அமரர் வழிபடும் (அத்தன்றன்) அரிய அருளை யெய்தினர்; எந்நாளும் பரத விதிப்படி (ப்பரன்) ஆடும் பொன்னம்பலம் (கண்டு) போற்றினர்; (அதே இடத்தில் புனித) சேடன் மேல் பொருந்தி, அறிதுயிலமரும் கோவிந்த ராசரைத் (தூய) அன்புடன் தொழுதனர், (எ - று).

(குறிப்பு):—மறை தொடத்தொட நீண்ட நீளன் ஆதலின், வேதவுச்சிக்கும் அப்பாற்பட்டவன் என்பதை, முதலடியி லறிக. பரத அத்துடன் எனப்பிரித்து, பாவம் ராகம் தாளம் தவறாத மரியாதையுடன் எனவும், பர தத்துடன் எனப் பிரித்து, பரதத்துவ நுட்பத்துடன் எனலுமாம். கனக சபையின் எதிரெதிராக ஆடலரசரும் கோவிந்தராசரும் என இரு மன்னர்கள் இருக்கும் அருமையே அருமை. (48)

843. முத்நாங்கனி நாவற்கிடை முளைத்நாளைக்கை முகிழ்த்நான்
சித்நாமல கத்நாடவித் தெத்நாத்திரே யன்றுள்
மெய்த்நாமரை விரைப்போதினை மேவிப்பணிந் தேதன்
கைத்நாமரை குவித்நான்றிரைக் காவேரியி னிறங்கி.

(பொ - ரை) :—முத்துக்களைப்போல் (பழுத்த) பழங்களை யுடைய நாவல் மரத்தடியில் சுயம்புவான நம்பனைக் (கை குவித்துக்) கும்பிட்டார்; சித்தாமலகக் காட்டில் இருக்கும் தத்தாத்திரேயர் திருவடி மலர்களை அடைந்து பணிந்து, அலைகளை யுடைய காவிரியில் இறங்கி, தன் கைக் கமலங்களைக் குவித்தார், (எ - று).

(குறிப்பு) :—நாவற்கிடை முளைத்தவர் சம்புகேச்சுரர்; இப்பதி திருவானைக்கா எனப்பெறும். அத்திரி முனிவர் புத்திரப் பேறு கருதி யருந்தவம் செய்தார். அவர்க்குத் திருமால், தம்மையே மைந்தராகத் தத்தம் செய்தார். அவரே

தத்தாத்திரேயர் எனப் பெறுவர். இவரால் உலகம் எய்திய நலம் பல. இவர் வரலாறு வேறு வேறு கூறுவாருமுளர். (48)

844. அரங்கத்தர வணைமேற்றுயி லாழிப்புய லிருதாள்
தரங்கைக்கொடு தாழ்ந்தானெறி தரங்கத்திரைப் பொன்னி
வரம்பெற்றதண் ணதிப்பாலிரு கரைவாழ்பதி யனைத்தும்
விரும்பித்துதித் திடபக்கிரி மீதாயனை வியந்தான்.

(பொ - ரை):—திருவரங்கத்தில் பாம்பணைமேல் பள்ளி கொள்ளும் ஆழியேந்திய முகில்நிறத் திருமாலின் இரு திருவடிகளை, தகுதியுடைய (தம்) கரங்களால் விழுந்து வணங்கினார்; அலைகளை வீசி ஆரவாரிக்கின்ற காவிரி யின் மேதகு தன்மை மேவிய (இரு) கரைகளிலும் இருக்கும் தலங்கள் அனைத்தையும், அன்பொடு துதித்து, இடப மலையில் இருக்கும் (தூய) திருமாலைத் துதித்தார்,

(குறிப்பு):—தரம் - தகுதி. வரம் - மேன்மை. (49)

845. எட்டாகிய வெட்டாடலி னியைந்தேவினை யாடும்
மட்டார்புனற் பிறைதாங்கிய மதுராபுரிக் கரசாம்
கட்டாகிய கடம்பாடவிக் காமாரிநாற் சரணந்
தொட்டாடிக்கொண் டாடிக்களி துளங்கத்துதித் தார்ந்தான்.

(பொ - ரை):—அறுபத்திநான்கு ஆடல்களை விளை யாட்டாகச் செய்தவரும், (வேகத்தை) மட்டுப் படுத்திக் கங்கையும் இளம்பிறையும் தாங்கிய மதுரை மன்ன ரும், அடர்ந்து பெருகிய கடம்பவனத்தில் அமர்ந்தவரு மான காமனை யெரித்த (கண்ணுதல்) இறைவரின் திருவடிகளை, (தூய இரு கரங்களாலும்) தொட்டு, இன்பங் கொண்டு கூத்தாடி, களிப்பு மிகுதியாகப் பலதுதி செய்து, (தன்னுளத்தில் அத் திருவடிகளை) பதித்தனர், (எ - று). (50)

(குறிப்பு) :—எட்டால் பெருக்கிய எட்டு என்க. ஆடல் ஒவ்வொன்றும் அற்புதமானவை; அமலற்கு அவைகளே, 'விளையாட்டு' என்றார். (50)

846. பொதியாசலத் துயர்மாதவன் பூந்தாமரைச் சரணம்
விதியாலுடன் றுதித்தான்விதி வேதாகமப் பொருநை
நதியாடின னதியின்கரை யிருபாலுள நவைதீர்
பதியாமிரு வோர்வாழ்பதி பலவுந்தொழு தனனால்.

(பொ - ரை) :—பொதிய மலையில் சிறந்த உயர்ந்த தவத்தினரான அகத்தியருடைய கமல மலரடிகளை முறைப்படி வணங்கினர் ; வேதாகம விதிப்படி, (முதன்மைப்) பொருநை யாற்றில் மூழ்கினர்; (அந்) நதியின் (இரு) கரைகளிலும் உள்ள களங்கமற்ற (சிவமும், திருமாலும் ஆன) இருபெரும் முதல்கள் எழுந்தருளி யிருக்கும் தலங்கள் அனைத்தையும் தொழுதனர்.

847. பொருநைத்திரு நதிச்சங்கமப் புணரிப்புனன் மூழ்கி
யருமைக்கள கண்டத்தின ராற்றூரை வணங்கி
மருமைக்குழற் கோதாவரி மகிழ்பூப்பச் சென்றுடித்
திருவுக்கணி மலர்போல்வளர் செயந்திப்பதி புகுந்தான்.

(பொ - ரை):—பொருநை யெனும் சிறந்த நதி (வந்து) கலக்கும் கடலில் நீராடி, அரிய திருநீலகண்டரான ஆற்றூர்ப் பரனை ஆராதித்து, (அங்கிருந்து) புறப்பட்டு, மணம் கமழ் கரிய கூந்தலை யுடைய கோதாவரி நதியில் மகிழ்வு பெருக முழுகி, திருமகட்கு (இடமான) அழகிய தாமரைபோல் வளரும் திருச்செந்தூரில் பிரவேசித்தார்,

(குறிப்பு) :—களகண்டத்தினர் - (ஆலமுண்டிருண்ட) நீல கண்டர். மரு - மணம். மை - கருமை.

848. மீதாறின னிருந்தேகந்த வெற்புஞ்சிந்து புரமும்
ஓதாதுணர் வான்ருளிணை யுளங்கொண்டுடன் ருழ்ந்தான்
தாதான்மயங் காப்பூசுரர் தமையஞ்சலி செலுத்திக்
கோதாமத நீத்தைந்து குரோசத்தெல்லை சூழ்ந்து.

(பொ - ரை):—விண்வழி வந்த சுகர், (செந்தில் எல்லையில்) தங்கி, (தனக்குத் தந்தையும் குருவுமான) ஓதாதே (யாவும்) உணர்ந்த வியாசருடைய திருவடிகளை உள்ளங் கொண்டு உணர்ந்து, (அதன்பின்) சந்தனுசலத்தையும், செந்திற் பதியையும் (நோக்கி) வீழ்ந்து வணங்கினர்; (அதன்பின்) பணத்தாசையில் மயங்காத (திரிசுதந்திர) அந்தணர்களைக் குவித்த கரங்களால் கும்பிட்டு, இறுமாக்கும் குற்றம் இல்லாதவராய், ஐந்து குரோச எல்லையதான (அப்பதியை)வலம் வந்து,(எ-று).

(குறிப்பு):—மீது ஆறு - ஆகாய வழி. தாது - பொன். கோது ஆம் மதம் எனப் பிரித்துப் பொருள் கொளப் பெற்றது.

849. இரவித்தடந் தேர்தோய்ந்தெழு மிரவிப்பெயர்ச் சந்த
வரையிற்கடி திழிந்தவ்வழி வளர்பூசுரர் வழங்கும்
அருமைச்சுரு தியின்வாய்ந்துள ஆறுவருக் கியமும்
பருவத்துடன் வாங்கித்திரை வதனுரம்பம் படிந்தான்.

(பொ - ரை):—சூரியனது பெரியதேர் உராய்ந்து புறப்படும் அளவு உயர்ந்த கந்தமாதனம் எனும் பெயருடைய மலைச்சாரலில் விரைந்து இறங்கி, அவ்விடத்தில் பெருகிய ஞானத் திரிசுதந்தரர்கள் வழங்கிய அரிய மந்திர சுருதியுடன் நெடும் தன்மை நீங்காத அருக்கியத்தையும் விநயத்துடன் ஏற்று, அலைகளை யுடைய வதனுரம்ப தீர்த்தத்தில் (முதன்மை யன்புடன்) மூழ்கினர்,

(குறிப்பு):—முதலடியில் இருக்கும் இரு இரவிகளில், முதலது பருதி; அடுத்தது மலை என அறிக. ஆறு - நீங்காத. பருவம் - ஏற்கும் விநய நிலை. (54)

3850. கங்கைக்கெழு மடங்காங்கடற் கரைக்கந்தபுட் கரிணி
சங்கற்ப விகற்பத்தொடு தாழ்ந்தான்றவத் துயர்ந்தான்
அங்கற்புத நிறைதீர்த்தமொ ரறுநான்கையும் படிந்தான்
திங்கட்பிள வளவுஞ்சடைச் சிவன்றுன்சிரம் புனைந்தான்.

(பொ - ரை) :—(உரிய) தவத்தால் உயர்ந்த சுகர், கங்கையினும் எழுமடங்காக உயர்ந்த கடற்கரையிலுள்ள கந்தபுட்கரணியில், வெவ்வேறுன சங்கற்பங்களுடன் மூழ்கினுர்; அங்குள அற்புதம் மிக்க இருபத்திநுன்கு தீர்த்தங்களினும் நீராடினுர்; இளம்பிறை யுலவும் சடையுள சிவபிரான் திருவடிகளை உச்சிமேற் கொண்டார், (எ - று).

(குறிப்பு) :—விகற்பமாவது, உலகம் வளம் தருக; உயிர்கள் நலனுறுக; சிவ அருளாட்சி எங்கும் சிறக்க என்று வேறுபடப் பல புனைதல். இறுமாந்தார் இழிந்தார்; தாழ்ந்தார் உயர்ந்தாராவார் எனலை யிங்குணர்க. (55)

3851. போரானை முகத்தானடிப் போதாகம விதியிற்
பேராதரத் தாராதனைப் பெரும்பூசனை புரிந்தான்
ஆராவமு தடித்தாமரை யணிநூபுர மணியிற்
சீராலுறு நவவீரர்க டிருத்தாள்மலர் துதித்தான்.

(பொ - ரை) :—(மல) கண்டனம் செய்யும் யானைமுக கணபதியின் திருவடி மலர்களை, ஆகம விதிப்படிப் பேரன்புடன் வழிபாடு பெரிது புரிந்தார்; (உணரவுணர) உவட்டாத அமுது ஒத்த உமை யம்மையின் திருவடித் தாமரையின் அழகிய சிலம்புகளி லிருந்த (ஒன்பது) இரத்தின சக்திகளின் மகிமைகளி லிருந்து உதயமான (புனித) நவவீரர்களின் திருவடி மலர்களைப் போற்றிப் புகழ்ந்தார், (எ - று).

(குறிப்பு) :—அடிப்போது - திருவடிமலர். (56)

852. அயிராவதந் தருமாதினை யடித்தாமரைப் போதுங்
குயில்வாய்மொழிக் குறக்கோமளக் கொடித்தாமரை யடியுந்
துயில்மாலையு முவணத்தையுஞ் சூழ்தேவர்க டமையுஞ்
செயிர்தீர்மனு விதியான்மல ரிறைத்தேசிரங் குவித்தான். (57)

(பொ - ரை):—ஐராவதம் அளித்த தேவயானையின் திருவடி மலர்களையும், குயிலிசை போலும் மொழிகளை யுடைய அழகிய குறப்பூங் கொடியான வள்ளியம்மை யின் மலரடிகளையும், அறிதுயில் புரியும் திருமாலையும், கருடனையும், சூழ்ந்த தேவர்களையும், குற்றம் அகற்றும் மந்திரங்களால், விதிப்படி மலர் தூவி அர்ச்சித்து, சிரத் தில் (கரத்தைக்) குவித்தனர், (எ - று). (57)

853. பொன்னீடு விமானத்துருப் போலாந்திசை முகனின்
நன்னேயமுச் சூலச்சகந் நாதச்சிவக் கொழுந்தைத்
தன்னேரிலம் முனிபுங்கவன் தருசோடச விதியால்
இன்னேயருள் வீரென்றல ரிறைத்தான்வினை குறைத்தான்.

(பொ - ரை):—(செந்திலில்,) உயர்ந்த பொன் விமானம் போல் உருவான நான்முகன் இனிய அன்பிற்கு இலக்கான முத்தலைச் சூல சகந்நாதர் எனும் இளங் கோலச் சிவத்தை, தனக்கு ஒப்பார் இல்லாத (தவ) மிடுக்குடைய சுகமுனிவர், தகுதியுள பதினாறு உபசாரங் களுடன், (விமல!) இப்போதே அருள் புரிக என்று விண்ணப்பித்து, (அரிய) மலர்களைக் கொண்டு அருச் சித்தார்; (அதன் பயனாக,) ஆகாமிய கன்மத்தைச் சேதித்தா ராயினார், (எ - று).

(குறிப்பு):—சோடசம் - பதினாறு. இறைத்தான் வினை குறைத்தான் என்ற பிராசச் சொல்லணி, உய்யும் வழியைக் குறிப்பாக உணர்த்துகின்றது. (58)

**854.** **சுரர்மாதவர் முறைசூழ்தரத் துளவோனருள் மடவார்**
**இருபாலுற நெடுவேலொடு மிகற்சூர்ப்பகை தணிப்பான்**
**வருகாரண மாய்முக்குணங் கடந்தானந்த மயமாம்**
**முருகேசனை யிமையாதுள மோனத்தொடு பார்த்தான்.**

(பொ - ரை) :—வானவரும் முனிவரும் முறையாக வலம்வர, துளசிமாலைத் திருமால் அருளிய அருள்மய அம்மையர் இருபுறத்து இருப்ப, நீண்ட வேற்படையுடன் வலியுள சூரனாகிய (தானவப்) பகையைத் தணிப்பதன் பொருட்டு வெளிப்பட்ட காரணமாகி, (இராசச தாமச சாத்விகமாம்) முக்குணங்கட்கும் அப்பாற்பட்ட இன்ப வடிவ முருக இறைவனை, இமையா நாட்டத்தராய், (நுட்ப) மன மவுனத்துடன் நோக்கினர், (எ - று).

(குறிப்பு) :—மன மௌனந்தான் வாழும் வழிமுறை. அதைத்தான் தட்சிணா மூர்த்தமும் அறிவிக்கின்றது; அதற்கு அயலான வாய் மௌனம் ஆதிய, வெறும் ஆரவார நீர்மைய என அறிக. (59)

**855.** **பார்த்தான்பதி னாறும்விதிப் படிபூசனை பரிவிற்**
**கூர்த்தாறுமு கேசன்பதக் கொழுங்கோகன தம்பூத்**
**தூர்த்தான்விழிப் புனன்மாமழை சொரிந்தான்மயிர் கூச்சுப்**
**போர்த்தான்கரங் குவித்தஞ்சலி புரிந்தாவலிற் புகழ்வான்.**

(பொ - ரை) :—(அங்ஙனம்) நோக்கிய சுகர், விதி முறைப்படி பதினாறு உபசாரங்களுடன் (புனித) அன்பு மிக வழிபாடு புரிந்து, ஆறுமுகப் பெருமானது திருவடி மலர்களில் மலர்களைத் தூவி, இன்பக் கண்ணீர் மழையைச் சொரிந்து, உடலெல்லாம் உரோமபுளகிதம் உண்டாக, கைகளைக் குவித்துக் கும்பிட்டு, (எழுந்த) மகிழ்வில் ஏத்துவா ராயினர், (எ - று).

(குறிப்பு) :—**கூர்ந்து - மிகுந்து. கோகனதம் - தாமரை.**

## வேறு

**856.** பன்னிரு கரத்தாய் போற்றி பசும்பொன்மா மயிலாய் போற்றி
முன்னிய கருணை யாறு முகப்பரம் பொருளே போற்றி
கன்னிய ரிருவர் நீங்காக் கருணைவா ரிதியே போற்றி
யென்னிரு கண்ணே கண்ணு ளிருக்குமோர் மணியே போற்றி.

(பொ - ரை):—பன்னிரு கரங்களை யுடையவனே! வணக்கம்; பசிய அழகிய மயிலூர்வானே! நமஸ்காரம்; அருள் முந்திய ஆறுமுக மெய்ப்பொருளே! வணக்கம்; (இச்சை கிரியை எனும்) இரு தேவியரைப் யென்றும் அகலா அருட்கடலே! (உமக்கே) அடைக்கலம்; (கவினும்) என் இரு கண்ணனவனே! (அக்) கண்ணுள் இருக்கும் சிறந்த மணியானவனே! காத்தருள், (எ-று).

(குறிப்பு) :—முன்னிய – தியானிக்கப் படுகிற எனினுமாம். போற்றி என்பது, வணக்கம், அடைக்கலம், காத்தருள் எனும் பொருளில் நிற்கும். "கண்ணே கண்ணிற் கருமணியே" எனும் அப்பர் தமிழ் மறை, இங்கு நினைவில் எழுந்து நிழலிடுகின்றது அல்லவா. (61)

**857.** கருணைமா ருதுன் ஞூறுங் கண்கள்பன் னிரண்டி னலே
யிருவினை களைந்த மேலோர்க் கினியவா னந்த மெல்லாம்
வரன்முறை பெருக்கி யன்னர் மனமெனுங் கோயிற் றூண்டாத்
திருவிளக் கொளியாம் வைவேற் செயந்தியம் பதியாய் போற்றி.

(பொ - ரை) :—ஓயாது பெருகும் (கவின்மிகு) பன்னிரு கண்ணருளால் இருவினை தடிந்த தகுதியர்க்கு, இன்ப சுகம் அனைத்தையும் வரலாற்று முறைப்படி வளரச் செய்து, அவர்கள் தம் உள்ளமெனும் கோயிலில் தூண்டா விளக்காய், (என்றும்) தோன்றும் ஞானவேல் செந்தில் நாதா! (உமக்கே) அடைக்கலம், (எ - று).

(குறிப்பு) :—உள்ளுறும் கருணை நோக்கம், உணர்வார் வினைகள் ஒழிந்துபடும்; அதன் வழியே வாராத இன்ப மெலாம் வலிந்தெய்தும்; இந்நிலையர் மனக் கோயிலில், விளக் காயிருந்து நாளும் விளங்குவன் வேலன் எனும் இப்பாடல், எவரும் மனனம் செய்தற்குரியது. (62)

**858.** **அருஞ்சகந் நாதா செம்பொ னுரியங் கடவுள் வேதன்**
**பொருஞ்சமர் வீர வாகு பொருதலைத் தெரியுந் தெண்ணீர்க்**
**கருங்கடல் வணங்கும் நோன்றாட் கலவமா மயிலாய் தேவி**
**தருஞ்சிறு குருந்தே வானோர் தமக்கெலாங் குருவே போற்றி.**

(பொ - ரை) :—அரிய உலக நாதா! திருமகளையும் ஆழியையும் கொண்ட திருமாலாலும், வேதம் ஓதும் நான்முகனாலும், மோது போரின் (முன்னேறும்) வீரவாகு வாலும், அலைமோதி வீசும் தெளிந்த நீருடைய நீலக் கடலாலும் வணங்கப்பெறும் வன்மைத் திருவடிகளை யும், தோகையையும் உடைய மாபெரும் மயிலை ஊர்பவனே! பார்வதியார் பயந்த இளம் பாலனே! இமையவர் அனைவர்க்கும் குருவானோனே! (உமக்கே) அடைக்கலம், (எ – று).

(குறிப்பு):—நோன் தாள் - வலிமைத் திருவடிகள். (63)

**859.** **கருதரு ஞான மாய கருத்தினை விளக்கும் வானப்**
**பரிதியங் கதிரின் மூத்துப் படிவம்போ னளவை யாறு**
**இருசுட ரவையு மொன்று யியற்றியோர் பரம மாகக்**
**குருவடி வாகி வந்த குமரனே போற்றி போற்றி.**

(பொ - ரை) :—கருதுதற்கு அரிய ஞானமாகிய கருத்துக்களை விளக்கி வைக்கும் (ஞான) ஆகாய சூரியனை சிவபிரானுடைய (அருளெனும்) முதன்மை அழகொளியில் முதிர்ந்து, (அளவுபடாத்) திருவுருவம் அளவுபடும்படி வெளிவரும் ஆறு அனல் பொறிகளையும்

ஒரு முகமாக்கி, ஒப்பற்ற மேலான குரு சொரூபமாக வந்த குமரா! அடைக்கலம்! (உமக்கே) அடைக்கலம்.

(குறிப்பு) :—படிவம் - உருவம். பரம மகா என்பது, பரம மாக என்று திரிந்தது. (64)

860. இருமையி னுண்மை மூவா இளமைசேர் ஞானி யோர்தம்
விரிதரு தியான மேவி மேயவிந் திரியத் தாலுந்
தெரிதரற் கரிதா யார்க்குந் தேற்றரு நுட்ப மாகுஞ்
சரவணத் தளிமஞ் சாருஞ் சண்முகத் திறையே போற்றி. (65)

(பொ - ரை) :—இருவினையும் இல்லாத, அறிவு நுட்பம் அழியாத, (என்றும்) இளமை யுடைய ஞானி களின் விரிந்த தியானத்தில் விளங்கி, (பொருந்திய) அறிகருவிகளாலும் அறிதற்கு அரிதாய், எவராலும் தெளிதற்கு அரிய நுண்பொருளான சரவணக் கோயி லில் சார்ந்திருக்கும் சண்முக தெய்வமே! (உமக்கே) அடைக்கலம், (எ - று).

(குறிப்பு) :—இருமை - நல்வினை, தீவினை. மேவி - விரும்பி; அல்லது தங்கி எனலுமாம். இந்திரியம் - மெய் வாய் கண் மூக்கு செவியெனும் ஐம்பொறிகள்; இவைகள் அறிகருவிகள் எனப்பெறும். தளிமம் – கோயில்; மலரணை எனினுமாம். (65)

861. காமமே முதல ஆறுங் களிதரும் பருவம் ஆறும்
ஓமெனும் பொருண்முன் னான வுயர்மய கோசம் ஆறுந்
தோமறு சுவைக ளாறுஞ் சூத்திரம் ஆறு மாகத்
தாமொரு வடிவ மான சண்முக சரணம் போற்றி.

(பொ - ரை) :—காமம், (குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம்) முதலிய ஆறு (பகைகளு)ம்; மயக்கம் அளிக்கும் (குழவி, பாலன், வாலிபன், வயோதிகன், விருத் தன், மரணம் எனும்) ஆறு பருவங்களும்; ஓம் எனப்

பெறும் பிரணவத்தின் முன் உளதான உயர்ந்த (பிரணவ கோசம், அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆநந்தமய கோசம் எனும்) ஆறு கோசங்களும்; குற்ற மற்ற (தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு, கைப்பு எனும்) சுவைகள் ஆறும்; (கன்மகாண்டம் குறித்து ஆபஸ்தம்பர் முதலிய) ஆறு முனிவர்கள் அருளிய சூத்திரங்களும் தாமே யாகத் திருவுருக் கொண்ட ஆறுமுகத் தெய்வமே! (உமது) திருவடிகட்கே அடைக்கலம், (எ - று).

(குறிப்பு):—களி - மயக்கம். கோசம் - சட்டை. தோம் - குற்றம். சூத்திரம் ஆறு என்றது, சுப அசுப செயல்களைக் குறித்த விதிமுறை யடங்கிய நூல்களை; இவைகளைச் செய்த வர்கள் ஆறு முனிவர்கள்; அவர்கள் பெயர்களே அந்நூற் கட்கும் அமைந்தன. அவைகள் போதாயனம், ஆபஸ் தம்பம், சத்யஷாடம், திராஹ்யாயனம், அகஸ்தியம், சாகல் யம், ஆச்வலாயனம், சாம்பவீயம், காத்யாயனம், வைகான ஸம், சௌணகீயம், பாரத்வாஜம், அக்நிவைச்யம், ஜைமினீ யம், வாதூலம், மாத்யந்தினம், கௌண்டின்யம், கௌஷீ தகம், ஹிரண்ய கேசி எனும் பலவகைப் பெறும் என்பர். (66)

862. விள்ளுதற் கரியவாறு விதத்தொடு பகவ னாகித்
தெள்ளுமுக் குணங்க டந்து வேதியர் சிறப்பி னேத்தக்
கொள்ளுமுத் தேவர் தம்மாற் குவலயம் புரப்பச் செய்து
வள்ளியோர் பங்கில் வைத்த வானவ சரணம் போற்றி. (67)

(பொ - ரை):—(அளவிட்டுச்) சொல்லுதற்கரிய (திரு, ஐஸ்வர்யம், புகழ், வீரியம், ஞானம், வைராக் கியம் எனும்) ஆறுவகையுடன் பகவன் ஆகி, தெள்ளிய (இராசச தாமச சாத்விகம் எனும்) மூன்று குணங் களையும் கடந்து, வேதம் வல்ல பெருமக்கள் சிறப்பு வகையில் துதிசெய்ய, (உரிமை) கொண்ட மூன்று

மூதலிகளை உலகத்தை காக்குமாறு உதவி, வள்ளி யம்மையை ஒப்பற்ற வலத்தில் வைத்திருக்கின்ற தெய்வமே! (உமது அருளார்) திருவடிகட்கே அடைக் கலம், (எ - று).

(குறிப்பு):—பகம் - ஆறு; அதை யுடையவன் பகவன். முத்தேவர் – அயன், அரி, அரன். (67)

863. மறையவர் மகத்தி னீட்டு மாகுதி வழங்கக் கூவும்
நிறையுமந் திரமுன் னோர்ந்து நீடிருங் கதியன் னோர்க்கு
முறைபுரிந் தருளு மாறு முகமுரு கேச பூந்தாள்
நறைமலர் கமலப் போது நம்பினேன் போற்றி போற்றி. (68)

(பொ - ரை):அந்தணர்கள் வேள்வியில் அகப்படுத் திக் கொண்ட அவிர்ப்பாகத்தை அளிக்கக் கூப்பிடுகின்ற நிறையும் மந்திரங்களை நினைவால் உணர்ந்து, நீடிய பெருங்கதியை அவர்கட்கு முறையாக வழங்கியருளும் ஆறுமுக முருக தெய்வமே! (உமது) அழகிய திருவடி களாகிய மணம் கமழ் தாமரை மலர்களையே நம்பினேன், அடைக்கலம்! (உமக்கே) அடைக்கலம், (எ - று).

(குறிப்பு):—மகம் - வேள்வி. ஆகுதி - ஓமத் தீயில் நெய் விடுதல். (68)

864. குகமெனு நுட்ப மாகிக் குகையெனு மிதய வீட்டிற்
குகைவரை யிருப்பார் தங்கள் குகையெனு மிதயப் போதி
லகமகிழ்ந் தன்னம் போல வருளுட னிருக்கும் ஆறு
முகஇகத் தெனையாட் கொண்ட முளரிப்பூஞ் சரணம் போற்றி.

(பொ - ரை):—குகையெனும் (பிரமாண்டத் திரு வுருவ) இதயத் தானத்தில், குகம் எனும் அதிரகஸ்ய மாகி, மலைகளில் உள்ள குகைகளில் இருக்கும் ஞானி களுடைய குகையெனும் இதய கமலத்தில், திருவுளம் மகிழ்ந்து அன்னம் போல் அருளுடன் இருக்கும்

ஆறுமுகா! இவ்வுலகில் எளியேனை ஆளாக் கொண்ட (உமது) கமலமலர் அடிகட்கே அடைக்கலம், (எ - று).

(குறிப்பு):—குகரம் எனும் வடமொழி, குகம் எனக் குறைந்தது. இதயப்போது - தகராகாசம்; சிற்றம்பலம். ஞானிகளின் இதய தாமரையில் ஒரு அன்னம் இருக்கிறது. அருளுடைய அதன் நாமம் ஆறுமுகம் என்னும் அருமையே அருமை. (69)

**865.** பரன்சிகை தருமன் சென்னி பதுமத்தன் மேல்வாய் வேள்வி
யுரந்தரு கீழ்வாய் கண்ண னுளமுயர் வருடங் கோசம்
நிரந்தவச் சுவினிப் புத்தேள் நீண்முன்கால் உதர நாப்பண்
புரிந்தஅத் திரியோ டாமித் திரன்பின்கால் புனலின் வேந்தே.

(பொ - ரை):—சிவபிரான் குடுமி; தருமன் சிரம்; (மேதரு) கமல நான்முகன் மேல்வாய்; வேள்விபுருடன் வலிமையைத் தரும் கீழ்வாய்; திருமால் இதயம்; உயர்தரு ஆண்டுகள், குறி; முறையான தேவ மருத்துவர் நீளும் முன்கால்கள்; திருவயிற்று நடுவில், அனைத்தும் அறிந்த அத்திரியுடன் ஆமித்திரன்; வருணன் பின்னங் கால்கள், (எ - று.) (70)

**866.** வாற்கணு அனலி ரண்டாம் வான்கணு மகவான் மூன்றும்
பாற்கணுப் பிரமர் பத்துப் பகர்தரு நான்காய் நீண்ட
மேற்கணு அபயத் தெய்வ மேயவோர் சிஞ்சு மாரத்
தேற்புறப் புடவிகாக்கு மின்னருட் கடம்பா போற்றி.

(பொ - ரை):—ஒளியுடைய திருவடிக்கணு, அக்கினி; இரண்டாம் பெரிய கணு, இந்திரன்; மூன்றுவதான பகுப்புடைய கணு, பத்துப் பிரமர்கள்; சொல்லப் பெறும் நான்காக நீண்ட மேல் கணு, அபய தேவதை; (இவ்வண்ணம்) பொருந்திய முதலை வடிவுட னிருந்து, உலகைக் காக்கும் இனிய அருள் வடிவக் கடம்பா! (உமக்கே) அடைக்கலம், (எ - று).

**(குறிப்பு)** :—பால் – பகுதி. வால் – ஒளி. சிஞ்சுமாரம் – முதலை; முதலையான செய்தி, முதனூலில் இல்லை. ஏற்புற – பொருந்த. புடவி – நிலவுலகம். (71)

## வேறு

867. ஓர்வடிவ மரமிரண்டு வினைக்கவடு மலமூன்
றுயர்வேர்வைத் தறமாதி நான்குபழம் பழுத்தே
யார்பூத மஞ்சுசிறு கப்பாகி யாரும்
அருங்காம முதற்றழைவைத் தெழுதாது தோலாய்
ஏர்புரியட் டகமாய எண்பூக்கொண் டொன்பான்
எனும்வாயிற் கணுவைத்துத் திசைபத்து நிழலாம்
சீர்பெருகு பலமரங்கள் பயிராக்கி வளர்க்குஞ்
சிந்துபுரக் குமராவுன் செஞ்சரணம் போற்றி.

(பொ - ரை) :—ஓர் உடலாகிய மரம்; இருவினைகளாகிய கிளைகள்; மும்மலங்களாகிய உயர்ந்த வேர்கள் ஊன்றி, (அறம் பொருள் இன்பம் வீடு முதலிய) பழங்கள் நான்கு பழுத்து, (மண் நீர் நெருப்பு காற்று விண்ணென) நிறை ஐந்து பூதங்கள் சிறு கிளைகளாகி, அரிய காமம் (குரோதம் லோபம் மோகம் மதம் மாச்சர்யம்) முதலிய தழைகளைக் கொண்டு, (தோல், மாமிசம், எலும்பு, உதிரம், மேதஸ், கொழுப்பு, சீழ் எனவுள) ஏழு தாதுக்களே (மரத்தின்) மேல் தோலாக, (தன்மாத்திரை ஐந்தும், அகக்கருவி மூன்றும் சேர்ந்த) அழகிய நுண்ணுடல் ஆன எண்வகை மலர்களைக் கொண்டு, ஒன்பது எனும் (நவத்) துவாரங்களாகிய கணுக்களை வைத்து, பத்துத் திசையிலும் நிழலைப் பரப்புவதான சிறப்புப் பெருகும் பல மரங்களைப் பயிராக்கி வளர்க்கும் திருச்செந்தூர்க் குமரா! செவ்விய (நின்) சரணங்கட்கே அடைக்கலம்,

(குறிப்பு):—ஒன்று முதல் பத்துவரை எண் வந்த இப் பாடல், எண்ணலங்காரம் எனப்பெறும். கவடு - பெருங்கிளை. கப்பு - (கிளைகளில் உள்ள) மிகச்சிறு கிளை. தாது — (மலர்களி லுள்ள) மகரந்தங்கள். புரியட்டகாயம் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் எனும் தன் மாத்திரை ஐந்தும், மனம், தெளி முதல், வினைத்தன்மை மூன்றும் கூடிய நுண்ணுடல் என்னும் எண்ணுடல். எண்பூ - பொறுமை, உண்மை, புலனடக்கம், இரக்கம், தியானம், ஞானம், தவம், யோகம் ஆகிய எட்டு மலர்கள்; அல்லது, இயம, நியம, ஆசன, பிராணயாம, பிரத் தியாகார, தாரணை, தியான, சமாதி எனும் மலர்கள் எனவு முண்டு. ஒன்பான் வாயில் — கண் துவாரம் உ; மூக்குத் துளை உ; வாய் 1; செவித்துளை 2; ஆஸனத் துவாரம்; 1; மூத்திரத் துவாரம் 1; ஆக ஒன்பது பொத்தல் உடைய உடலிது. (72)

868. *சாற்றியகம் மொளியாகிக் கம்மெனுமிந் திரியந்*
*தமைக்கடந்து ககரென்னுஞ் சுரர்கணத்தின் பதியாய்ப்*
*போற்றுகக மயிலுகைத்துக் கம்மெனுமின் புருவாய்ப்*
*புகல்கமெனிந் திரியவணி பூண்பவனு மாகி*
*யாற்றலுறு கம்மான ஆகாயந் தனக்கும்*
*ஆதிநடு முடிவாகி யடியேனுக் கிருதாள்*
*ஏற்றமுள்ள கதிகாட்டி யெனையாண்ட சுடர்வேல்*
*ஏந்துகரச் சிந்துபுரத் திறைபோற்றி போற்றி.*

(பொ - ரை)—(*சிறப்பித்துச்*) சொல்லப் பெற்ற (கம் எனும்) பரிதி ஒளியாகி, கம் எனப்பெறும் (மெய்வாய் கண் மூக்குச் செவிகளாம்) அறிகருவிகளால் அறிய இயலாததாய், ககர் எனப்பெறும் அமரர் கூட்டத்திற்கு அதிபதியாய், (ஆன்றோர்) வழிபடும் ககம் எனும் மயிலை ஊர்தியாச் செலுத்தி, கம் எனப்பெறும் இன்ப வடிவாய், (கற்பித்துச்) சொல்லப் பெறும் கம் எனும் ஞானத்தை அணிகலனாக அணிந்தவனுமாகி, (எல்லா) ஆற்றலு

முடைய கம் எனும் பெயர்கொண்ட ஆகாயத்தின் முதலிடை கடை முழுதுமாகி, அடியவனுன இந்த எளியவனுக்கு இரு திருவடிகளாகிய கம்பீரமுடைய கதியைக் காண்பித்து, என்ஃன ஆளாக்கிக் கொண்ட ஒளியுடைய வேஃல உயர்த்திய திருக்கரத்துச் திருச்செந்தூர் அரசே! அடைக்கலம்! (உமக்கே) அடைக்கலம், (எ - று).

(குறிப்பு):—கம் - சூரியன், ஐம்பொறி, ஆநந்தம், ஞானம், ஆகாயம். ககர் - விண்ணவர்; பறவை. இங்ஙனம் பலபொருளொருசொல்ஃலப் பயன் படுத்திய பாடலிது. (73)

869. கோவான இனனுகிக் கோவான புவனிக்
குழுவிஃனயும் நடத்தி யந்தக் கோவானதுறக்கக்
கோவாகிக் கோவான பசுபதியு மாகிக்
குகையான இதயமெனுங் கூடாகி வாக்காம்
கோவாலும் விழியான கோவாலும் புவன
கோடியிலுண் டானசர மசரமஃனத் திஃனயும்
கோவாகிப் புரந்தளிய னுளக்கமலத் துள்ளே
குடியிருக்கும் அருட்கடம்பக் குமரனடி போற்றி.

(பொ - ரை) :—(கோள்களின்) தஃலவனுன பரிதியாகி, தஃலமையான உலக கோளங்கஃள (த் தோற்றுவித்துச்) செயல்படுத்தி, அந்த (உலகங்களின்) தஃலமையான விண்ணுலகத்து அதிபனுகி, சிறந்த பசுபதி எனும் சிவமாகி, குகையாகிய இதயம் எனும் கூடு ஆகி, வாக்காம் மேன்மையாலும், கண்களாம் ஒளியாலும் சராசரம் அஃனத்தையும் தஃலவனுகிக் காத்து, எளிய அடியேன் உள்ளமாகிய தாமரையுள் எழுந்தருளி யிருக்கும், மணமுள கடப்ப மாஃல யணிந்த (அருமைக்) குமரன் அடிகட்கே அடைக்கலம், (எ - று).

(குறிப்பு) :—கோ - தலைமை, மேன்மை, ஒளி, முதல்வன் எனும் பலபொருள் ஒரு சொல். இனன் - பரிதி. சரம் அசரம் - இயங்குதிணை, நிலைத்திணை. மரு - மணம். (74)

870. ஞானவடி வாகிமுது ஞானவிதை யாகும்
நன்னுதலின் முலையமுதக் கின்குழவி யாகி
ஞானமெனும் பாற்கடலின் நடுச்சுழிய தாகி
ஞானநிழ லாம்பெரியர் நன்கிடமு மாகி
ஞானநிறை கதிராகி ஞானியர்க்கும் எட்டா
ஞானஇரு சத்தியுடன் இருந்தெவையுங் காத்து
ஞானமொடு வடநிழலி னிருப்பார்க்கும் விருப்பாம்
ஞானவுரை விரித்தகுரு நாதனடி போற்றி.

(பொ - ரை) :—ஞான சொரூபமாகி, முதிர்ந்த ஞான வித்தாகிய மங்கள நெற்றியுடைய உமாதேவியின் குயங் களின் அருளமுதம் பருகற்குரிய இனிய சேயாகி, ஞானம் எனப்பெறும் பாற்கடலின் நடுவில் (சுழிக்கும்) சுழியாகி, ஞானிகளின் ஞான நிழலான மேலோர்தம் நலம் சிறந்த இடத்தில் இருப்பதாகி, நிறைஞானப் பரிதியாய், ஞானிகட்கும் அகப்படாத அறிவுமய (வள்ளி தெய்வயானையர் எனும்) இரு சக்திகளுடன் இருந்து, (கருணையுடன்) எவைகளையும் காத்து, ஞானத்தொடு கல்லாலின் நிழலில் இருக்கும் தட்சிணா மூர்த்திக்கும் அன்பொடு ஞானமொழி விரித்துரைத்த குருநாதன் அடிகட்கே (அடியேன்) அடைக்கலம், (எ - று).

(குறிப்பு) :—நன்னுதல் - பார்வதியார்; அன்மொழித் தொகை. கதிர் – கிரணங்கள். இருசக்தி - இச்சை கிரியை யெனும் சத்திகள்.

871. விரிக்குமிளங் கதிராகி மேவியந்தச் சுடரை
விளக்குவிக்கு மவனுகி விளக்குமிளங் கதிரால்
பெருக்குமயன் மாலீசன் போற்படைத்துங் காத்தும்
பின்றுடைத்துஞ் சிவனிதயப் பேரிடத்து நிறைவால்
நெருக்கியவுற் பவமுதல ஆருகும் பருவம்
நிறையுமந்த வடிவகன்று நினைவார்கள் உளத்தே
யிருக்குமிருக் கறியாத பரம்பொருளு மாகி
யென்னுவிற் குடியிருக்குங் குமரனடி போற்றி.

(பொ - ரை):—(கிரணங்களைப்) பரப்பும் இளம்பரிதியாய் (எங்கும்) கலந்து இருந்து, அப்பரிதியை விளக்குவிக்கும் அக் கடவுளாய், விளங்கும் மென்மை ஒளியுடன் (உலகை) வளர்க்கும் அயன், திருமால், உருத்திரர் (எனும் மூவர்)போல் படைத்தும், காத்தும், பிறகு அழித்தும், இதயம் போன்ற சிவபிரான் திருநாமங்கள் தோறும் (பொருள் கொள்ள) நிறைந்து, நெருக்கமான பிறப்பு முதல் ஆருகும் பருவம் நிறையும் அத் தேக அபிமானம் நீங்கி, (என்றும்) நினைபவர்தம் உள்ளத்தில் (நிலையாக) இருந்து, இருக்கு வேதம் (இன்றுவரை) அறியாத மெய்ப்பொருளுமாகி, அடியேன் நாவில் குடிகொண்ட குமரன் அடிமலர்கட்கே அடைக்கலம்,(எ-று).

(குறிப்பு):—ஆருகும் பருவத்தை 66 ஆம் பாட்டுள் உரைத்துளம்; அதை ஆங்கறிக. ஒவ்வொரு மந்திரத்தையும் பொருளுணர்ந்து ஓதில், சிவநாமம் யாவும் சிவகுமரன் நாமமாதலை அறிதும். இருக்கு - நான் மறைகளுள் முதல் மறை; துதி ரூபமாக இருப்பது. (76)

872. பக்கமென வாம்கருமை வெண்மையின வாம்கார்ப்
பாசஇரு நூல்கொண்டு பாயசர டாக்கி
மிக்கஅதி லேமூன்று நூற்றறுபத் தைந்தா
மேவுதின மணிக்குவைகள் கோவைநனி செய்த

*தக்கவட மொன்றலபல் கோடியுகந் தோறும்*
*சாத்தியிரு சத்தியிரு சாருமுற வைத்தோன்*
*கொக்குவரை யோடுதுணை குருகுவரை பெயரக்*
*கூர்வேற்கை யேந்திய குமாரனடி போற்றி.*

(பொ - ரை) :—(வளர்பிறை, தேய்பிறைப்) பக்கங்களாம் கருமை வெண்மை நிறமுள இருவகைப் பருத்தி நூல் கொண்டு, (தேரிய) பெரிய சரடாகத் திரித்து, தடித்த அதில் முற்நூற்று அறுபத்தைந்தாக வரும் நாள்களாகிய மணிக் கூட்டங்களைச் சிறந்த கோவையாகச் செய்த அழகிய மாலையை, ஒன்றல்ல, அளவிலா யுகந்தோறும் அணிந்து, இரு சக்திகளை இருபுறத்தும் கொண்டோன்; மலைபோலும் மாமர வடிவான சூரபதுமனுடன், (அவன்) தம்பியாகிய தாருகனும், கிரவுஞ்ச மலையும் நிலைகுலைந்தழிய, கூரிய வேல் கைக் கொண்ட (தெய்வக்) குமரன் திருவடிகட்கு வணக்கம், (எ - று).

(குறிப்பு) :—பக்கம் – பட்சம். கார்ப்பாசம் - பருத்தி. தினம் - நாள். வடம் - (நாள்) மாலை. இருசார் - இருபுறம். கொக்கு - மாமரம். குருகு வரை - கிரவுஞ்சமலை. (77)

873. *திங்களிரண் டறுபதிதழ்ச் செங்கமலப் போதாம்*
*திகழ்பருவ மாறுசெறி வருடமொரு கொத்தாம்*
*தங்குவரு டக்குலைக ளறுபதென நீள்செந்*
*தாமரைத்தண் மலர்மாலை தன்னிலள வில்லாக்*
*கொங்குயிர்த்த பலகோடி புனைந்துபொரு சூரன்*
*குடர்மாலை யுடன்வாகை மணமாலை புனையும்*
*துங்கநெடுஞ் சுடர்விரித்த இரண்டுமுனைக் கதிர்வேல்*
*சூலமெடுத் தோன்கிரணத் துணைச்சரணம் போற்றி*

(பொ - ரை) :—இரு மாதங்களாகிய (ஒரு பருவம்), அறுபது நாள்கள் எனும் இதழ்களையுடைய ஒரு செந்தாமரை அரும்பாம்; விளங்குகின்ற ஆறு பருவங்கள் நிறைந்த ஆண்டு ஒரு (பூங்) கொத்தாம்; (அவ்வண்ணம்) அமர்ந்த ஆண்டுக் கொத்துகள் அறுபது ஒரு மாலையில் உள்ளன என்று கூறும்படி, அளவிலாத மணமான பலகோடி மாலைகளைப் புனைந்து, போர் புரிந்த சூரனது குடர் மாலையுடன், வெற்றி மாலையையும் தரித்த மிக்குயர்ந்த ஒளி பரப்பும் இருமுனைகொள் வேற்படையை ஏந்தியவன்தன் ஒளிமயமாம் திருவடிகட்கே (அடியேன்) அடைக்கலமே, (எ – று).

(குறிப்பு) :—இருமாதங் கொண்டது ஒரு பருவம்; அது ஒரு மலர்போல் மலர்கிறது. அம்மலரில் உள்ளவை அறுபதிதழ்; அப்படி ஒரு கொத்தில், ஆறு மலர்களுள. அத்தகைய அறுபது கொத்துக்கள் போலுளது அறுபது ஆண்டுகள் எனும் அருமை மறக்க இயல்வதில்லையே. (78)

874. *தாரவிரு சத்திகாஞ் சாருமொரு சத்தி*
*தரித்தருமந் திரசத்தி யுற்சாக சத்தி*
*சீரியநற் பிரபுசத்தி யிம்மூன்றிற் சிறந்து*
*செய்யுமறம் பொருள்காமஞ் செவ்விதுறவுதவும்*
*ஆரருளின் வாய்ந்துபதத் தம்புயம்ப ராவும்*
*அன்னோர்க்கன் னையர்தந்தை குரவரினன் புற்றே*
*பேரருளின் சீர்காட்டுந் துணைக்கடம்ப மாலைப்*
*பெருமான்ற னிருசரணப் பிரசமலர் போற்றி.*

(பொ - ரை):—துணைவியரான (இச்சை கிரியை எனும்) இரு சத்திகளுடன், திருக்கரத்தில் ஒப்பற்ற (வேல் எனும் ஞான) சக்தியையும் தாங்கி, அரிய மந்திர சக்தி, உற்சாக சக்தி, சிறந்த நல்ல பிரபு சக்தி எனும் (உத்தம) இம் மூன்று சக்திகளாலும் உயர்ந்து,

செய்யப் பெறும் அறம், பொருள், இன்பம் (மூன்றையும்) செவ்வையாக உதவுகின்ற மேதகு கருணையை மேற் கொண்டு, திருவடி மலர்களை வழிபடுகின்ற அன்பர்கட்கு அன்னையும் தந்தையும் ஆசாரியனும்போல அன்பு அமைந்து, பெருகிய அருளின் சிறப்பான வீடு பேற் றைக் காட்டுகின்ற கடப்பமலர் மாலையணிந்த பெரு மானுடைய இரு திருவடிக் கமலங்கட்கே அடைக்கலம்,

(குறிப்பு) :—தாரம் – மனைவியர். ஒரு சக்தி - ஒப்பற்ற வேல். செவ்விதுற - மங்கலம் பெற. பிரசம் - தேன். (79)

875. *ஆகமனம் வாக்கென்னு மவைமூன்றின் கருமம்*
*மாறுகும் வினையகற்றி யரியபத்தி யோடுஞ்*
*சேகறுமுக் கரணமுற வந்தனைசெய் வோரைத்*
*திருக்கருணை காட்டிமலத் திரயாதி நீக்கிக்*
*கோகனதத் தாளான கோயிலர சளித்துக்*
*கும்போத யற்குமுறை கூறியெனை யாளும்*
*கேகயப்புள் ளரசேறு சோதிவடி வேலோன்*
*கிளரருண கிரணமுறு சரணமலர் போற்றி.*

(பொ - ரை) :—உடல் மனம் மொழி எனும் அம்மூன் றின் செயல்கள் (ஒரு வழிப்படாதபடி) வேறுபடும் தீவினையை விலக்கி, அருமையன்புடன் உரமற்ற (அம்) முக்கரணங்களும் ஒருமுகமாகி வழிபடுகின்ற உத்தமர் களை, கனிவுடைய கருணை காட்டி, (அதன் மூலம், மலம் மாயை கன்மங்கள் எனும்) மும்மலங்களி லிருந்து விலக்கி, திருவடி மலர்களான ஆலய ஆட்சியை அருள் பவனும்; அகத்தியர்க்கு உபதேசம் அருளியவனும்; அடியேனை ஆட்கொண்ட பறவை அரசாம் மயிலை ஊர்தியாக வுடையவனுமான பேரொளிப் பிழம்பாம் வேலிறைவனது, விளங்குகின்ற செவ்வொளி மயமான அடிமலர்கட்கே அடைக்கலம், (எ - று).

(குறிப்பு) :— ஆகம் - தேகம். சேகு அறு - வயிரமற்ற. முக்கரணம் - மனம் வாக்கு காயம். திரயம் - மூன்று. கும்போதயன் - குடமுனி யெனும் அகத்தியர். கும்பம் - குடதிசை; அஃதாவது மேற்றிசை. மேற்குமலைத் தொடர்ச்சியில் அகத்தியர் தவங்கிடந்து வெளிப்பட்ட முனிவர் ஆதலின், கும்போதயர் எனப் பெறுவர்; பிறவாறும் வரலாறு கூறுவாருளர். கேகயம் - மயில். (80)

## வேறு

876. வருணமாச் சிரம நான்காய் வாழ்பவர் பரவ அன்னோர்
விரியுநாற் றிசையிற் கீர்த்தி விளக்குவித் தறமுன் னுன்கும்
பொருளொரு நான்குஞ் சேரப் புரந்தருள் குமர மூர்த்தி
திருவடித் துணைய தாகுஞ் செழுமலர்க் கமலம் போற்றி.

(பொ-ரை) :— வருணாச்சிரமம் நான்கினும் வாழ்பவர்கள் வழிபாடு புரிய, அவர்களது புகழைப் பரந்த நான்கு திசைகளிலும் பரவுமாறு விளக்கி, அறம் முதலாகச் சொல்லப்பெறும் (அந்) நான்கையும், (அவைகளின்) பயன் நான்கையும் ஒரு சேர உதவும் உயர்குமரன் உபய மலரடிகட்கே அடைக்கலம், (எ-று).

(குறிப்பு) :— வருணம் - குலம். ஆச்சிரமம் - நிலையிடம். நான்காய் – அந்தண, அரச, வாணிப, வேளாண் குலம் நான்கிலும். அறம் முன்னுன்கு - அறம் பொருள் இன்பம் வீடு. பொருள் நான்கு – (அறம் பொருள் இன்பம் வீடு எனும் அவைகளால் விளையும்) பயன் நான்கு. (81)

877. பன்னெறிந் திரியற் கெட்டாப் பரமவா னந்த மாகி
மன்னுமிந் தியக்கோ வாகி வான்செப வடத்தி னுலே
துன்னருஞ் சிறப்பு வாய்ந்துச் சூழ்ந்தவிந் திரியா நீக்கும்
முன்னவ ரருச்சித் தேத்து மூவிரு முகத்தாய் போற்றி.

(பொ - ரை):—(மனமும், அறிகருவிகள் ஐந்தும், தொழிற் கருவிகள் ஐந்தும் ஆக) பதினொரு கருவிகளை யுடைய ஆன்மாவிற்கு அகப்படாத (வளரும்) பேரின்ப வடிவாகி, நிலைபெறும் கருவிகளை இயக்கும் தலைவனாகி, பெரிய செபமாலையின் துணையால் பெறற்கரிய பேறனைத்தும் பெற்று, முற்றுகை யிட்ட அக் கருவிகள் செய் வினைன சேட்டைகளை விலக்கும் வித்தகர்கள் வழிபட்டு வாழ்த்தும் ஆறுமுகா! (உமக்கே) வணக்கம், (எ - று).

(குறிப்பு) :—பன்னொர் இந்திரியம் – பதினொரு கருவிகள். அவை மெய் வாய் கண் மூக்கு செவி எனும் அறிகருவிகள் ஐந்து; வாக்கு, பாதம், கை, எருவாய், கருவாய் எனும் தொழிற் கருவி ஐந்து; மனம் ஒன்று ஆகப் பதினொன்று. கோ- தலைமை. வடம் - மாலை. (82)

378. சீவனுக் கான்மா வாகிச் சிறந்தபூ ரணமென் றுன்னும்
தாவறு முதியோர் நங்கள் தியானத்தால் தன்னைக் காட்டி
மேவர வுலகுக் கெல்லாம் வியன்குரு வாகி யாண்ட
மூவிரு முகத்துப் புத்தேள் முண்டகத் துணைத்தாள் போற்றி.

(பொ-ரை):—உயிர்க்குயிராகி, சிறந்த நிறைபொருள் எனத் தியானிக்கும் அழிவற்ற மேலோரது தியானத்தால் (அவர்கட்குத்) தம்மை அறிவித்து, (தம்பால்) அன்பு கொள் உலகர் அனைவர்க்கும் அருள்குருவாகி ஆட்கொள்கின்ற ஆறுமுகப் பெருமானின் (அழகிய) கமலமலர் போன்ற இருதிருவடிகட்கே அடைக்கலம்,

(குறிப்பு) :—பூரணம் - நிறைவு. தா அறு - கேடு அற்ற. மே - அன்பு. (83)

379. மகத்தினி லிரண்டு நான்கு மற்றவோ ரிரண்டும் பின்னர்த்
தொகுத்தவோ ரைந்தி ரண்டு சூழ்ந்திடு மெழுத்தா யோம
அகத்துமந் திரமு மாகி யாகுதி யனைத்தும் போற்றிப்
புகத்தவாக் கதிமுன் காட்டும் பூங்கடம் பத்தாய் போற்றி.

**(பொ - ரை) :—**(இனிய) வேள்விகளில் இரண்டு, நான்கு, மற்று அவ் ஓர் இரண்டும், பிறகு தொடர்ந்த ஒப்பற்ற ஐந்து, இரண்டு (யாவும்) சூழ்ந்த (பதினைந்து) எழுத்துக்கள் (எனும் பஞ்சாட்சரி, தசாட்சரி மந்திரங்கள்) ஆகி, ஓமங்களின் இடத்து (மற்றை) மந்திரங்களுமாகி, (அவ்வேள்வித் தலைவர்கள் தரும்) அவிர்ப்பாகங்களையும் (பிற கிரியைகள்) அனைத்தையும் பாதுகாத்து, பிறகு அழியாக் கதியை அடையுமாறு அருளும் கடப்பமலரணி பெருமா! (அடியேனைக்) காத்தருளும், (எ-று).

**(குறிப்பு) :—**மகம் - யாகம். தவா - கெடாத. பஞ்சாட்சரி, தசாட்சரிகள் ஆசாரியர்களிடம் நேர் முகமாக அறியத்தக்கவை. (84).

**880.** பொன்னலர் கமலத் தண்ணல் புவனமே யாதி யாக
மன்னுமெப் புவன வாழ்வும் வறிதெனக் குமர மூர்த்தி
தன்னருட் சலதி மூழ்கத் தாழ்விலாக் கருணை காட்டி
யென்னிடத் தன்பு பூத்த இணையடிக் கமலம் போற்றி.

**(பொ - ரை) :—**அழகிய தாமரையில் அமர்ந்துள்ள அயன் உலகம் முதலாக அமைந்த எவ்வுலக வாழ்வும் சாரமற்றதென்று (சான்றோர் வெறுத்து,) குமரப் பெருமானது அருட்கடலில் ஆழ, (அவ்வியல்பிலா) எளியேன் இடத்தில் தாழ்வறியாத தயை காட்டி, (என் உள்ளத்தில் மாபெரும்) அன்பை மலர வைத்த இருதிருவடித் தாமரைகட்கே அடைக்கலம், (எ - று).

**(குறிப்பு) :—**வறிது - பயனிலாதது. சலதி - கடல். (85).

**881.** கதியெனு முதிய வீட்டின் கண்ணினே தென்றுள் ளெண்ணித்
துதிதரு முனது கீர்த்தித் தோத்திரம் புராண மான
மதுரவா ரிதியி னீந்த மகிழ்ந்தருள் சுரந்தன் னூர்கள்
இதயதா மரைப்பூங் கோயி லிலங்குநல் விளக்கே போற்றி.

(பொ - ரை) :—தலைமையான கதி என்னும் வீட்டிற்கு இவைகளே எண்ணத் தக்க இனிய மூலம் என்று உணர்ந்து துதிக்கப் பெறும் உனது கீர்த்தனங்கள், துதிமொழிகள், புராண விரிவுரை யாதிய (நெகிழ் விக்கும்) சுவைக் கடலில் (அன்பர்கள்) நீந்த, (அது கண்டு) மகிழ்ந்து, (உரிய) அருள் ஊற்றெடுத்து, அவர்தம் உள்ளமாகிய கமலக் கோயிலில் விளங்கும் மங்கல விளக்கே! (உமக்கே) அடைக்கலம், (எ - று).

(குறிப்பு) :—வீட்டின் கண் இன் ஏது என்று பிரிக்க. ஏது - மூலம். கீர்த்தி – கீர்த்தனைகள். (86)

882. உடைந்தவான் கும்பம் போல வுள்ளொடு புறமு மொன்றாய்
யடைந்தவா ரிதியின் மூழ்குங் குடம்புற மகமு மொன்றாய்
மிடைந்தவா ரியினுள் ளாகி வெளியுமாய் விளங்கிச் சூர்மாக்
குடைந்தநெட் டிலைவேல் கொண்ட குமரனே போற்றி போற்றி.

(பொ - ரை) :—உடைந்த குடத்துள் (இருந்த) ஆகாயம் போல், (உடலிறக்கும் போது) அகமும் புறமும் ஒன்றாகி; பொருந்திய கடலுள் ஆழ்ந்த குடத்தின் அகத்தும் புறத்தும் ஒன்றுபட்ட நீர் போல், (உடம்புள காலத்து) அகத்தும் புறத்துமாய் (உயிரொடு கலந்து) விளங்கி; சூரனாகிய மாமரத்தை ஊடுருவிய நீண்ட வேல் கைக் கொண்ட (அருட்) குமரா! அடைக்கலம்! (உமக்கே) அடைக்கலம், (எ - று).

(குறிப்பு):-குடத்துள் இருந்த ஆகாயம், குடமுடைந்தால், குடாகாயப்பெயரழியும். எனினும்,ஆகாயம் அழிவதில்லை.அது போல், மரணத்தின் பின்னும் உயிரிலுளது இறை சொரூபம். ஆழ்கடலில் குடத்தை அமுத்தினால், குடத்தின் அகத்தும் புறத்தும் நீருளது; அதுபோல் உடம்புள நாளில் உடலிலும், உயிரிலும் இறையாட்சி யிருக்கின்றது என்றபடி. (87)

883. தத்துவ மிருபத் தஞ்சாச் சாற்றுநர் தமக்கு மந்தத்
தத்துவ மிருபத் தாருய் நினைத்துளோர் தமக்கு மீளத்
தத்துவ மிருபத் தேழு தானென்பார் தமக்கு மந்தத்
தத்துவத் தியல்பாய் நின்ற சண்முகத் திறையே போற்றி.

(பொ - ரை) :—மண் முதலிய தத்துவங்கள் இருபத்தைந்து என்று கூறுபவர்க்கும், அத் தத்துவங்கள் இருபத்தாறு ஆக எண்ணி யிருப்பவர்கட்கும், மேலும் இருபத்தேழு தத்துவங்களே என்று சாதிப்பவர்தங்கட்கும், (அவரவர் அறிவிக்கும்) அத் தத்துவ சொருபமாக நின்ற ஆறுமுக தெய்வமே! (உமக்கே) அடைக்கலம்,

(குறிப்பு) :—தத்துவம் - உள்பொருள். (88)

884. செய்யதொம் பதம தான சீடற்குத் திருந்து மேன்மைத்
துய்யதற் பதம தான பிரமத்தைத் தொடர்பாற் காட்டிப்
பையவே அசிய தென்னும் பதத்திறு லொன்ற நாக்கும்
மெய்யுணர் குருவாஞ் சோதி வேற்படைக் குமரா போற்றி.

(பொ - ரை) :—செம்மையை யுடைய துவம் என்னும் சொல்லிற்குப் பொருளான மாணவற்கு, திருந்திய மேன்மையும் தூய்மையுமுடைய தத் எனும் பதத்திற்குப் பொருளான பிரமத்தை (அரிய) தொடர்புடன் அறிவுறுத்தி, நிதானமாக, அசி என்னும் பதத்தால் ஒன்று சேர்க்கும் மெய்ம்மை மயக் குருவான ஒளிமய வேல் குமரா! (உனக்கே) அடைக்கலம், (எ - று).

(குறிப்பு) :—தத்வமசி எனும் மகாவாக்கிய நுட்பத்தைக் குமரனே முன் வந்து கூறினுல், அது அனுபவ ஞான அறிவிப்பு என்று அறிவித்தபடி. தத் - அது ; துவம் - நீ ; அசி - ஆகிருய் என்று பதப் பொருளறிக. (89)

885. அயனெனப் ரயாகை மூழ்கு மையனே யிலந்தைக் கானின்
நயனுறு செபத்தின் வாழ்ந்த நாரண வடிவே ஞாலத்து
உயர்சகந் நாதந் தன்னி லூணருந் தரியே வானப்
புயனிறக் கண்ண னுகித் துவாரகை புரப்பாய் போற்றி.

(பொ - ரை):—பிரமதேவரைப்போல் பிரயாகை நதியில் மூழ்கும் ஐயனே! வதரிகாச்சிரமத்து, நலம் அமைந்த செபத்திற் சிறந்த (நர) நாராயண சொரூபா! உலகில் உயர்ந்த சகந்நாதத்தில் உணவருந்தும் திருமாலே? வானில் உள்ள மேக வண்ணக் கண்ணனாய், அரிய துவாரகையை ஆண்டவனே (உமக்கே) அடைக்கலம், (எ - று).

(குறிப்பு):—இலந்தைக் கான் - பத்ரிவனம் என்பதன் தமிழ்ப் பெயர். (90)

886. தாண்டவக் கூத்துத் தில்லை தனிற்பரா சத்தி யோடு
மூண்டிருந் தகில வாழ்க்கை முற்றுறக் கலையி னீதி
யாண்டிருந் தளப்போய் கூட லணிநகர்ச் சித்த ராகி
வேண்டிய விநோத மாற்றும் வேலெனடும் படையாய் போற்றி.

(பொ - ரை):—கலைகள் கூறும் கணிதப்படி, (உயிர் கட்குச்) சிறக்க முயன்ற வாழ்க்கை சித்திக்க, சிவகாமியாருடன் தில்லையில் (ஆநந்தத்) தாண்டவமாம் கூத்தை ஆடிக்கொண் டிருந்து, (அவரவர் வினைப்பயன்களை) அளத்தல் உடையவரே! நான்மாடக் கூடல் எனும் (சிறந்த மதுரைத்) திருநகர்ச் சித்தராகி, விரும்பிய விநோதங்களைக் காட்டிய வேலிறைவா! (உமக்கே) அடைக்கலம், (எ - று). (91)

887. வாரண வாசியான மன்றத்துக் கன்ன தானக்
காரண வுமைபோற் காக்குங் கடவுளே காஞ்சி தன்னிற்
பூரணக் கம்பை நோற்கும் பூவையா யரங்கந் தன்னின்
தாரண வடிவாய்த் துஞ்சு நான்மறைக் கடம்பா போற்றி.

(பொ - ரை) :—(மாபெரும்) காசிப்பதியில் உள்ள மன்றத்தில், அன்ன தானத்திற்குக் காரணமான அன்ன பூரணிபோல் அருளும் தெய்வமே! காஞ்சித் தலத்தில் நிறைவுடைய கம்பா நதிக்கரையில் நோக்கும் காமாட்சி யாய், திருவரங்கத்தில் திருமால் உருவாய் அறிதுயில் கொள்ளும் நான்மறைகளை யுடைய கடம்பா (உமக்கே) அடைக்கலம், (எ - று).

(குறிப்பு) :—களங்கு - களங்கம். சுரும்பு – வண்டு.

வாரணசி - காசி; வரணை, அசி எனும் இரு நதிகளை யுடைய காரணத்தால் வந்த பெயர் இது. கம்பை - கம்பா நதி. அரங்கம் - (காவிரி, கொள்ளிடம் எனும்) இரண் டாற்றின் நடுவிருக்கும் நற்றலம். அன்னபூரணியின் செயல் ஆரம்பம்; அடுத்தது காமாட்சியாரின் கனிவுத் தவம்; அதன்பின் அறிதுயில் எனும் ஆநந்த நித்திரை; பிறகு (சிவ) போக அடையாளக் கடம்பணிந்த காட்சி. சரிதை போல் வருகிறது இவ் வரலாறு; ஊன்றி உணர, அனுபவ ஞானம் இங்குப் பொங்கித் ததும்பிப் பூரிப்பது ஓர்க. (92)

888. விளம்பிய இவையல் லாது விராட்பெரு வடிவ மாகி
யுளங்களி சிறப்ப யாவு மொன்றென நிறைந்து மாயக்
களங்கறுத் திடுவோ ருள்ளக் கமலப்பூஞ் சுரும்பே வேதம்
அளந்தறி யாத செவ்வே லையனே போற்றி போற்றி.

(பொ - ரை) :—(மேற்) சொன்ன இவைகளே யன்றி, (சொலற்கரும்) விராட் எனும் அரிய பெரிய திருமேனி யாகி, உள்ளம் மகிழ் கொள்ள அனைத்தும் (எங்கும்) ஒன்றே என்ன நிறைந்து, மாயா மலத்தை மாய்த்த மாபெரும் ஞானிகளின் உள்ளக் கமலத்தில் வாழும் தெய்வ வண்டே! வேதங்களால் அளவிட்டு அறிய இயலாத வேலிறைவா! அடைக்கலம் (உமக்கே) அடைக்கலம், (எ - று). (93)

889\. சொல்லரு ஞான வீட்டுச் சுடர்விளக் குலக மான
செல்வியான் றிலக மேலாய்ச் சிறந்தவா னந்த சாரம்
அல்லல்தீர்த் தெனையாட் கொண்ட அற்புத வடிவே யின்றுன்
மெல்லடிப் போது சூட்ட விருப்பமுற் றடைந்தே னென்றான்.

(பொ - ரை) :—(சொற்களால்) சொல்லிக் காட்ட முடியாத ஞான மாளிகையின் சோதி ரூபமே! மாபெரும் நிலமகளின் மங்கலத் திலகமே! (இனிது) மேல் வந்து கவியும் இன்பத் தெளிவே! அல்லலை யகற்றி, எளியேனை ஆளாக்கிக் கொண்ட அற்புத சொரூபமே! இன்று உன் மென்மைத் திருவடி மலர்களை, (முடியில்) புனைந்து கொள்ள ஆர்வம் கொண்டு அணுகினன் என்று, (வித்தகச் சுகர்) விண்ணப்பித்தனர், (எ - று).

(குறிப்பு) :—விளக்கு, திலகம், சாரம் என்பவைகளில், விளியுருபு தொக்கது. (94)

890\. அஞ்சலி செலுத்தி வேற்கை யாறுமா முகத்துப் புத்தேள்
செஞ்சிலம் பலம்புந் தண்டைச் சீறடிக் கமல மீது
நெஞ்சகங் குழையச் சென்னி நிலமிசை தாழா நின்ற
எஞ்சலில் சுகனைக் கையா லெடுத்தனன் குமர மூர்த்தி.

(பொ - ரை) :—வேற்படைத் திருக்கர அறுமுக விமலனின் செய்ய சிலம்பும் தண்டையும் ஒலியெழுப்பும் திருவடிக் கமலங்களைக் குவித்த கரங்களால் கும்பிட்டு, உள்ளம் நெகிழ, தலை நிலம்பட வணங்கி நின்ற குறை வொன்றும் இல்லாத சுகமுனிவரை, குமரமூர்த்தி (வாரி) எடுத்தனன், (எ - று).

(குறிப்பு) :—அலம்பும் - ஒலிக்கும். எஞ்சல் இல் - குற்றமே இல்லாத. (95)

891\. கையினு லெடுத்துக் கந்தன் கடம்பமார் பிறுகப் புல்லித்
துய்யமா தவத்தின் மேலாஞ் சுகமுனி வேத சார
மெய்யினுற் றுதித்த வெல்லாம் விருப்பமிக் கடைந்தோ மென்று
வையமின் றளித்தா ளீன்ற மைந்தனன் குரைப்ப தானன்.

(பொ - ரை) :—கந்தப் பரமன் (சுகரைக்) கரங்களால் எடுத்து, கடப்ப மாலை யணிந்த அழகிய மார்பில் அழுந்தத் தழுவி, தூய்மையுடன் சிறந்த தவத்தின் மேற்பட்ட சுகமுனிவா! வேத சார சொற்களால் (நீ) அன்பால் துதித்த அனைத்தையும் அருள்மிகுந்து ஏற்றனம் என்று, உலக அன்னையான உமையாள் அருளிய குமரன், நலமுற (மேலும்) நவில்வதாயினன்,

892. சொற்றருந் தவத்தின் மேலாஞ் சுகமுனி சொற்ற தெல்லாங்
கற்றுவந் துரைப்போர்க் கெல்லாங் கருத்தினி லெண்ணி யாங்கு
வெற்றியம் புயத்து வீர வாகுவே யருள்வா னென்றே
முற்றருங் குணர்வோர்க் கெட்டா மூவிரு முகத்தன் சொன்னான்.

(பொ - ரை) :—(அருள்) நூற்களால் அறிவிக்கப் பெறும் தவத்தின் மேம்பட்ட சுகமுனிவா! (நீ இங்கு துதியாகச்) சொன்ன அனைத்தையும் மனனம் செய்து ஓதுவார் அனைவர்க்கும், (அவர்கள்) மனத்தில் நினைத்த அனைத்தையும், வெற்றித் திருவீரவாகுவே நிறைவேற்றி வைப்பன் என்று, நிறைதரு ஞானிகளின் நினைவிற்கும் எட்டாத அறுமுக அமலன் அருளினன், (எ - று).

(குறிப்பு):—சொல் - ஆகு பெயராய், நூல்மேல் நின்றது. முற்றருங்குணர்தல் - இறைவனது எண் குணங்களுள் ஒன்று; அந்நிலையை, அமலன் ஞானிகட்கும் ஒருசார் அருள்வன் என்பது குறிப்பு. (97)

893. வந்தனையாய் நமைத்துதிக்குஞ் சுகனே கேண்மோ
வையகத்துக் குனதுதெரி சனத்தால் வாக்கால்
சிந்தனையாற் பரிசத்தா லறமுன் னான்குஞ்
சிறந்துதவி யுயர்சிவன் முத்த னாகி

*மூந்துநிலத் திருத்தியெனக் குமரப் புத்தேள்*
*முகமனெடுத் துரைத்துவிடை கொடுப்பப் போற்றிச்*
*சந்தமறைச் சுகமுனிதன் கரங்கள் கூப்பித்*
*தணவாத விடையென்றே தணந்தான் மாதோ.*

(பொ - ரை):—வந்து நம்மை வந்தித்த சுகமுனிவா! கேள்; உலகர்க்கு உனது தரிசனத்தால், மொழியால், நினைவால், தீண்டலால், அறம் (பொருள் இன்பம் வீடு) முதலான நாற்பேறும் சிறக்க நல்கி, உயர்ந்த சீவன் முத்தனுகி, எவ்வுலகினும் முற்பட்டு இருப்பாயாக என்று, குமார சுவாமி அருளுடன் உரைத்து அனுமதி யளிக்க, இசைமயமான மறையுணர் சுகமுனிவர், தன் (இரு) கரங்களைக் குவித்து வணங்கி, (இது) பிரியா விடை என்று திருவுளங் கொண்டு (அங்கிருந்து) பிரிந் தார், (எ - று).

(குறிப்பு):—தணவாமை - நீங்காமை. சுகர் எங்கிருந் தாலும், செந்தில்பதி அவர் சிந்தையில் இருக்கும் என்பது குறிப்பு. (98)

894. *குற்றமொரு மூன்றகற்றும் முனிவீர் கேண்மின்*
*குறைவிறவச் சுகற்குவிடை கொடுத்துச் செவ்வேள்*
*பற்றொடுதன் செயந்திபுரத் தின்று காறும்*
*பணிந்தவர்க்கெல் லாங்கருணை பாலித் துற்றான்*
*பெற்றமுகைத் தான்மகனைப் பணியும் பூசை*
*பெரிதியற்றுங் கீர்த்தனங்கள் பேசு நம்பால்*
*உற்றுரைத்த சரித்திரமே கதியுண் டாக்கும்*
*உண்மையுண்மை யென்றவர்பா லுரைத்துப் பின்னும்*

(பொ - ரை):—முக்குற்றங்களையும் அகற்றிய (நைமிச வனத்து) முனிவர்களே! கேளுங்கள்; செவ்வேள் பரன்,

குறைவிலா (நிறை) தவத்தரான சுகமுனிவருக்கு விடையளித்து, தம் திருச்செந்திற் பதியில், இன்று வரை வழிபடுநர் யாவருக்கும் அன்புடன் பரம திருவருளைப் பாலித்து அமர்ந்துளர்; விடையூர் சிவகுமரனை வணங்கும் வழிபாட்டைப் பெரிதியற்றும், (அதனுடன்) புகழ் பாடும் உங்கள் இடத்தில் (அடியேன்) வந்து விரித்துரைத்த இப்புராணமே (நலஞ்சிறந்த) பேற்றினை (உங்கட்கு) நல்கும்; (இது) உண்மையே உண்மையென்று, (சூதமுனிவர்) அவர்கள்பால் அறிவித்து, மேலும் (அவர்களை நோக்கி), (எ - று).

(குறிப்பு) :—குற்றம் ஒரு மூன்று-காமம், வெகுளி, மயக்கம். பற்று - அன்பு. பெற்றம் உகைத்தவன் - விடையூரும் விமலன். (99)

895. உரைத்தகதை வியாதமுனி சுகற்குச் சொன்ன
துங்களிடத் துரைத்தனன்யா னுமைசேய் காதற்
சரித்திரத்தைக் கருத்தினுடன் கேட்கின் றோர்க்குத்
தருமமுத லொருநான்கு மரபிற் சாரும்
விரித்தபுரா ணத்தியலை யெழுதித் தான
விதிமரபிற் கொடுப்பவர்தாம் வேலை ஞாலம்
அருத்தியுடன் கொடுத்தபல னடைவார் வாங்கும்
அன்னவரு மன்னகதி யடைவர் மாதோ.

(பொ - ரை) :—(இதுவரை யாம்) கூறிய (இத் திருச்செந்தூர்ப்) புராணம், வியாச முனிவர் சுகர்க்கு விளம்பியது; (அதை) உங்கள் இடத்தில் அடியேன் கூறினேன்; உமையாள் குமரன் உவகை கொள்ளும் இப் புராணத்தைச் சிந்தனையுடன் சிரவணிப்பவர்க்கு, அறம் (பொருள் இன்பம் வீடு) முதலான ஒப்பற்ற நாற்பேறும் முறையே உளதாகும்; விரிவான (இப்) புராண அத்தியாயங்களை வரைந்து, தான விதி மரபில் (பிறர்க்குத்)

தருபவர்கள், கடல் புடை உலகை அன்பொடு தானம் செய்த பயனை யடைவர்; வாங்கிய அவர்களும் அப் பேற்றினை யடைவர், (எ - று).

(குறிப்பு) :—கொடுத்தார்க்குக் கொடுத்த பயன்; பெற்றோர்க்கு ஓதியுணர்ந்த அளவிலாத அனுபவ இன்ப அரும் பயன் என்பது குறிப்பு. (100)

896. *புத்தகத்தைக் குமரன்வடி வாகப் பூசை*
*புரிந்தியற்றும் பெரியோர்க்கும் போர்வேற் செங்கை*
*யத்தனரு டருமுகமா யிருந்தன் றருக்*
*கறமுதனன் கையுமளிப்ப னவன்பு ராண*
*வித்தகப்புத் தகமிருக்கு மில்லந் தோறும்*
*விரைக்கமலத் திருமடந்தை கமலப் போதும்*
*கைத்தலத்தில் வளையாழி தாங்குங் கண்ணன்*
*கதிர்மணிமார் பும்போலக் களிக்கு மாதோ.*

(பொ - ரை) :—போர் வேல் ஏந்திய புனித திருக்கரப் புண்ணிய முருகன், (இந்) நூலைக் குமரவேள் திருவுருவாக எண்ணி வழிபடும் மேலோர்க்கும், அருள் பாலிக்கும் திருமுகத்தனா யிருந்து, அறம் முதலிய நாற்பயனையும் அளிப்பன்; அவனுடைய புராணமான (இந்த) ஞானநூல் இருக்கும் மாளிகைகள் தோறும், மணம் கமழ் தாமரைத் திருமகள், கமல மலர் போன்ற கரதலத்தில் சங்கு சக்கரம் கொண்ட திருமாலின் கௌத்துப மணி மாலை யணிந்த திருமார்பம் போல் மகிழ்ந்து தங்குவள், (எ - று).

(குறிப்பு) :—திருச்செந்தூர்ப் புராணம் இருக்கும் திருமாளிகையில், என்றும் திருமகள் இருப்பள் என்பது குறிப்பு. (101)

897. சிந்துபுர மான்மியத்தைத் தினஞ்சொல் வோர்கள்
சிறந்தநிதி மக்களுட னெடிது வாழ்வார்
முந்துகதை சந்நிதியிற் குருமுன் னாக
முற்றவத்தி யாயமொன்று கேட்போ ரெல்லாஞ்
சுந்தரவாம் புரவிமகக் கதியிற் சார்வார்
தூயகதை சந்நிதியின் முக்காற் கேட்போர்
எந்தமல டாளுனு மகப்பெற் றுய்ந்தே
யிருநிலத்தி லளகையர்கோ னென்ன வாழ்வார்.

(பொ - ரை):—திருச்செந்தூர்ப் புராணத்தைத் தினந்தோறும் பாராயணம் செய்பவர்கள், சிறந்த செல்வத்துடன், (சிறந்த குணமுடைய) மக்களுடன் நெடுங்காலம் வாழ்வர்; (இறைவன்) திருமுன், குருமுகமாக மேலுரைத்த புராணத்தின் ஒரு அத்தியாயம் முழுதும் சிரவணிப்பவர் அனைவரும், அழகிய அசுவமேதத்தால் ஆகும் கதியை யடைவர்; தூயதான (இப்)புராணத்தை (இறை) திருமுன் மும்முறை சிரவணிப்பவர், எத்தகைய மலடா யிருந்தாலும் (பெறுதற்கரிய) மக்களைப் பெற்று, உய்தி யடைந்து, நிலவுலகில் அளகாதிபனை குபேரனைப் போல் வளரும் செல்வம் பெற்று வாழ்வர், (எ - று).

(குறிப்பு) :—வாம் - தாவும். புரவிமகம் - அசுவமேத யாகம். மலடு பலவகை; ஆதலின், 'எந்தமல டாளுலும்' என்றார். (102)

898. நாலாறு குகதீர்த்தந் தன்னை வேத
நாடுசகந் நாதர்தமைத் திருமால் தன்னை
மேலான குருபரனை வீரர் தம்மை
மின்னுரைத் தோகைதனைச் செவ்வேல் தன்னைப்

பாலான நெடுஞ்சிகரந் தன்னைச் சந்தப்
பருப்பதத்தைத் திரிசுதந்த ரத்தர் தம்மை
நூலாரு முனிவீர்காள் ஆண்டு தோறும்
சென்றேத்து மெனச்சூத னுவன்றான் மாதோ.

(பொ - ரை):—நூற்களை இடையறாது ஓதியுணர் முனிவர்களே! இருபத்து நான்கு குக தீர்த்தங்களையும், நான்மறை தேடும் சகந்நாதரையும், திருமாலையும், மேம்பாட்டால் உயர்ந்த குருபரனான குமரனையும், நவ வீரர்களையும், வள்ளி தெய்வ யானையரையும், ஞான வேற்படையையும், உரிமையுடையதான திருக்கோயிலையும், சந்தனசலத்தையும், திரிசுதந்திரர்களையும் ஆண்டு தோறும் சென்று வழிபடுமின்கள் என்று, சூதமுனிவர் (நைமிசாரண்ய முனிவர்கட்குத்) திருவாய் மலர்ந்தனர்,

899. மயில்வாழி தகர்வாழி சேவல் வாழி
மனுவனைய திரிசுதந்தி ரத்தர் வாழி
குயிலவாழு மொழித்தெய்வ யானை வாழி
குறவர்குலக் கொடிவாழி கொடுஞ்சூர் மாய்த்த
அயில்வாழி செந்திபுரத் துற்றோர் வாழி
ஆறுமுகப் பெருமான்றன் கருணை வாழி
பயில்வான்மை முகில் வாழி புராணங் கேட்போர்
படிப்போர்கள் கிளைகளெலாம் வாழி மாதோ.

(பொ - ரை):—மயில் வாழ்க; ஆடு வாழ்க; சேவல் வாழ்க; மந்திர சொரூபம் போன்ற திரிசுதந்திர அந்தணர் வாழ்க; குயில் இசை தங்கிய மொழியினை யுடைய தேவயானையார் வாழ்க; குறவர்குலப் பூங்கொடி (யான வள்ளியம்மை) வாழ்க; கொடிய சூரனை மாய்த்த வேல் வாழ்க; திருச்செந்தூரில் இருப்பவர்கள் வாழ்க; ஆறுமுகப் பெருமானுடைய அருள் வாழ்க; வானின் இயங்கும் மழைபொழி மேகங்கள் வாழ்க; (இப்)

புராணத்தைச் சிரவணிப்போர், ஓதுவோர், உறவின ருடன் (வளம்பல எய்தி) வாழ்வாராக, (எ - று).

**(குறிப்பு)** :—மாது, ஓ இரண்டும் அசை நிலைகள். அள விலாத அதிசயம் அமைவது; முக்குண, நாம, ரூப விலாச தோகையை விரிப்பது மகா மாயை. அதை மயிலாக் கொண் டது ஒரு நிலை; இந்திர மயில்மேல் இருந்தது ஒருநிலை; மாபெரும் சூரனாகிய மயில்மேல் ஏறி யமர்வது ஒரு நிலை. இந்நிலையில் அன்பர்க்கு இறைவன் அருள்வன். முன்னை நல்வினை யுளதாயின், மாறு கொண்டாரையும் மடக்கி ஆள்வன். உண்மையே உண்மை யெனுமிதனை உலக முணர, அமல முருகனால் ஆளப் பெற்று, அன்பர் விரும்பு போதெல் லாம், அவரவர் தரத்திற்குத் தக்கவாறு, எம்மானை ஏந்தி விரைந்து வரும் நிலையை மனம்கொண்டு உணர்ந்து, 'மயில் வாழி' என்றார். அதே நிலையில் ஆட்கொளப் பெற்ற ஊர்தியான ஆட்டை எண்ணி, 'தகர் வாழி' என்றார்.

அருள்நாதச் சேவல் உண்டு; அக்கினியாகிய சேவல் உண்டு; ஆணவப் பதுமனான சேவலும் அத்தனுக்கு உண்டு. இறைவனது வெற்றிக் கொடியாய், பொல்லாதவரை யும் புனிதராக்கக் கூவும் தரத்ததான கோழிக் கொடியை உளங்கொண்டு, 'சேவல்வாழி' என்றார்.

அன்பு வழிபாட்டில் தலைமை யேற்று, தம்மை ஆராதிப் பார்க்கு நல்லருள் நல்கும் மந்திர அந்தணர் மரபினை எண்ணி, 'திரிசுதந்தரந்தர் வாழி' என்றார்.

அன்பொடு வந்தாரை அணைப்பன்; அதை உலகம் உணருமாறு எண்ணி யிருந்த அபின்ன சத்தியை, எவரும் அறியுமாறு மணந்து ஏன்று கொண்டனன் எம்மான்; அவன் இடத்திலிருந்தே எவர்க்கும் அருள்தரு அம்மையை எண்ணி, 'குயில் வாழும் மொழித்தெய்வ யானை வாழி' என்றார்.

தாழ்ந்த இனத்தராயினும், தாள் மறவாத் தன்மையரேல், வலம்சாருமாறு அவர்களை வாழ வைப்பன் வரதன். அந்த அனுபவத்தை என்றும் அறிவித்துக் கொண்டே

யிருக்கும் அம்மையை, 'குறவர்குலக் கொடி வாழி' என்று குறித்தார்.

"செனித்த சீவர் உள் மனத்தின் மாவொளி மினுக்கும் வேல்," ஞானசக்தி யெனப்பெற்று, என்றும் எம்பிரான் சொரூபமாய், அவன் திருக்கரத்தை அகலா அருமையை ஓர்ந்து, ஆணவ கண்டன அருள் வேலை, 'கொடுஞ்சூர் மாய்த்த அயில் வாழி' என்றார்.

முன்னைய புண்ணியத்தாலோ, இம்மை நல்வினை முயல்வாலோ, சிவலோகம் போன்ற செந்திலை யடைந்தார் சிறப்பினை யெண்ணி, 'செயந்திபுரத் துற்றோர் வாழி' என்றார்.

ஆன்ம கோடிகளை யெல்லாம் ஆளற் பொருட்டு, அருளார் நாம ரூபங்கொண்டு, செந்திலில் வந்தருள் கந்தனை யுணர்ந்து, 'ஆறுமுகப் பெருமான்நன் கருணை வாழி' என்றார்.

திருவருள் கொடையை நினைவூட்டி, மாதம் மும்மழை வழுவின்றிப் பொழியும் செந்தில் பதியின் முகில்வளமோர்ந்து, 'மைம்முகில் வாழி' என்றார்.

இப்புராணத்தை அன்பொடு ஓதினோர், ஆர்வம் கொண்டு சிரவணித்தவர், சித்தசுத்தி, சுத்தபுத்தி, தெய்வ சித்தி யாவும் பெறுவர்; அவர்களைச் சார்ந்தாரும் உய்வர் எனலை ஊன்றி யுணர்ந்து,

'கேட்டோர் படிப்போர்கள் கிளைகளெலாம் வாழி' என்று ஓதி உணர்ந்து உருகியபடி.

வாழி - அந்தர்ப்பாவிதணிச் இலக்கணப்படி, (எம்மை) வாழ்விக்க! எவரையும் வாழ்விக்க எனப் பொருள் கோடலுமாம்.

திருவருள் துணையால்
திருச்செந்தூர்ப் புராணவுரை நிறைவுபெறுகிறது.

**திருச்செந்தி லாண்டவன் திருவடிகட்கே அடைக்கலம்!**

ஓம்.

உ

முருகா !

# திருச்செந்தூர்ப் புராணசாரம்

## 1. நைமிசவனம்

அகத்தியர் வசிட்டர் முதலிய முனிவர்கள், தூய தம் துணைவியரும் மாணவர்களும் தொடர, நைமிச வனம் எய்தினர். அவர்களது வருகையைச் சவுனகர் அறிந்தார். எதிர்கொண்டார். பயனுன உபசாரம் பல செய்தார்.

திருநீற்று உருத்திராக்க தாரணர், சடைமுடியர், வியாசரது மாணவரான சூதமுனிவர், அச்சமயம் எதிர்பாராது அங்கு எழுந்தருளினர். கண்ட முனிவர்கள் மனம் களித்தது. அவர் முன் விழுந்து வணங்கினர்.

ஸ்வாமி! பதினெண் புராணங்களையும், பலப்பல சமயங்களில் தாங்கள் ஓத உணர்ந்தேம். திருச்செந்தூர் வரலாற்றை, இன்று விளக்கி யருளும் என்று வேண்டினர்.

இன்பக் கணபதியை சூதர் இறைஞ்சினர். செந்தில் பெருமானைச் சிந்தித்தார். அதன்பின் புனித வாக்கால் புகலத் தொடங்கினர்.

## 2. வியாசர் உபதேசம்

முனிவர்களே! கருதுவார்க்கு வீட்டுக் கதவைத் திறக்கும்; மோசமான நரகக் கதவை மூடும் தெய்வ




ஸ்ரீ ஷண்முக விலாஸ்
(இது, சஷ்டியில் எம்மான் [redacted] குமரன் எழுந்தருளும் மண்டபம்.)



யாத்திரிகர்கள் தங்கும்
ஸ்ரீ செந்திலாண்டவர் விடுதி

நலத்தது திருச்செந்தூர். அப்பதி, யோகிகளின் இதய தீபமாக யிருக்கிறது. இதன் சிறப்பை, எண்ணுவார் உள்ளத்தில் எம்மான் இருப்பன். இதன் அற்புதத்தை, ஒரு காலத்தில் வியாசர் சுகர்க்கு உபதேசித்தார். அண்மையில் இருந்து சிரவணித்த அடியேன், அன்று கேட்டவாறே இன்று அறிவிக்கிறேன். கேளுங்கள் என்று, சூத புராணிகர் சொல்லத் தொடங்கினர்.

## 3. செந்தில் சிறப்பு

தலங்கள் அனைத்தும், நிலமகளின் அங்கங்கள்; அவைகளுள், சிரத்தைப் போல்வது சிந்துபுரம். தத்தாத்திரேயர் முதலிய சித்தர்கள் பலர், வந்து இங்கு வழிபட்டு வாழ்வு பெற்றனர்.

தூய மனத்துடன், திருச்செந்தூரை எண்ணு வார்க்கு எல்லையிலாப் புண்ணியம் வந்தெய்தும். இப்பதியில் சிரார்த்தம் பிதுர்க்கட்குச் செய்தால், அவர்கள் நற்கதி யடைவர்.

காயத்திரியின் இருபத்திநான்கு எழுத்துகள், இங்கு இருபத்திநான்கு தீர்த்தங்களாக இருக்கின் றன. அவைகளில் மூழ்கினோர், பேறனைத்தும் இனிது பெறுவர்.

## 4. திருவவதாரம்

அவுணர் தொல்லை பொறுத அமரர்கள் வேண்ட, சிவபிரானி லிருந்து, வித்தக ஆறு சித்பொறிகள் வெளியாயின. ஐந்து பூதங்கட்கும் அமைதி செய் தன. அதன்பின் சேய்உரு ஆயின. கார்த்திகை

மாதர்கள் பாலைப் பருகின. சாயா சக்திகள் தந்த லட்சத்தொன்பது வீரர்களுடன், நலம் சிறந்த ஆடல் பல நடத்தின. அசுர கண்டனம் செய்தன. வள்ளி தேவயானையரை மணந்தன. அந்த ஆறு பொறி கள், எவர்க்கும் ஆறுதல் அளிக்க, ஆறுமுகப் பெருமான் என்று அமர்ந்தன.

## 5. செந்திலில் அமர்ந்த செல்வர்

அருளமைதி நிறைந்த திருச்செந்தூர், தவத்தி னர் பண்பிற்குத் தக்கபதி. அத்தலம், ஒரு சமயம் வித்தகச் சிவத்தைப் போல் விளங்கும். தூய தேவி சொரூபம் போல் தோன்றும். கணபதிபோல் காட்சி யாகும். திருமால் பிரமர்கள் திருமேனிபோல் தெரி தலுறும். எம்மதத்தரும் சம்மதிக்கும் அளவிற்கு, அரிய இத்தலம் பல அதிசயங்களை யுடையது.

வழிபடும் அடியேங்கள் வாழ்வு பெற, ஆறுமுக அத்தா! என்றும் இங்கு எழுந்தருளியிரும் என்று, இமையவர் வேண்டினர். வேண்டுவார் வேண்டு வதே அருளும் விசாகன், பூதங்கணங்கள், இலட்சத் தொன்பது வீரர்கள் தொடர, பரத்வ நுட்பங்களைப் பறைகள் ஒலிக்கப் புறப்பட்டு, திருச்செந்தூரை யடைந்து, இருதேவியர் இருபுறத்து இருப்ப, ஞான சக்தியுடன், இன்பத் திருக்கோலமாக எழுந்தருளி யிருக்கின்றான்.

## 6. வள்ளியம்மை திருவவதாரம்

மேருமலையில் ஏம முனிவர், திருமாலை எண்ணித் தவம் செய்தார். தேவமாதர் சிலர்,

கந்தர்வர்களுடன் சேர்ந்து, அவர் தவத்தை அழிக்க முயன்றனர். சாந்த முனிவர் சலனம் அடைந்திலர். அமர உலகர் இவர்கள், இழிந்த செயல்களில் இறங்கினரே என்று வருந்தினர்.

பாதகச் செயல்களில் பல்லிளிக்கின்றீர்! இது மறவர்க்கு உரிய மனநிலை என்று, கொதித்த உளத்தால் கூறினர்.

அவ்வாக்கால், ககன மாதரும் கந்தர்வர்களும், மறவர் மறத்தியர் ஆயினர். வேடர் வாசனை விளைந்தது. முன்னைய தம் நிலை மறந்தனர். விந்திய மலை நோக்கி விரைந்தனர். தம் ஆட்சியை அங்கு அமைத்தனர்.

அவர்கள் நிலையை அறிந்த ஏம முனிவர், ஏரக முருகனை எண்ணினர். வான்மகள் தலைவா! மான்மகள் மணாளா! புண்ணிய மிகுதியால் விண்ணவர் ஆயினர். தம் நிலையை மறந்து தவறு செய்தனர். இப்படி ஆகும் என்று எண்ணிலன். திருத்த நினைத்தேன் அவர்களை என் வாக்கு, வேடர்களாக ஆக்கியதே! அவர்கள் குற்றவாளிகள் தான்; அவசரப்பட்ட அடியேனும் குற்றம் செய்தவன் தான். இருதிறக் குறையும் தீர, கா! கா! தெய்வமே என்று கதறினர்.

கனிவு மிகுந்த அவர் பிரார்த்தனையை, அறுமுகன் திருவுளம் அறிந்தது. உடனே பெருமான், வள்ளியம்மை திருவுளத்தில், எதிர்முக நினைவை எழுப்பினன். அதன் பயனாக, அத்தேவியார் தேவயானையை நோக்கினர்.

தேவயானை! என்றும் பெருமான் என்னை நீங்கிலன். "எந்த நேரத்திலும், கோலக் குறத்தியுடன் வருவான்" என்று, பாட்டாகவும் என் பெருமையை அன்பர்கள் பாடுகின்றனர். குமரன் குரவன்; நான் குறத்தி. அவர் பெயரில் இடையின ரகரம்; என் நாமத்தில் வல்லின றகரம். உன் தந்தை இந்திரன், வணக்கம் பல செய்து, மங்கை உன்னை முருகன் மணக்கச் செய்தனன். என் சரிதை வேறு. என்னைத் தேடி வந்தான் எம்பிரான். கெஞ்சினான். கேண்மை காட்டினான். மனமிரங்க வைத்து என்னைப் பெருமான் மணந்து கொண்டனன். என்றும் ஏற்றம் எனக்குத்தான் என்று, எள்ளி நகையாடினர் வள்ளியம்மை. நாள்தோறும் இந்த நடை. தேவயானையார், அவைகளைக் கேட்கும் போதெல்லாம் தேம்பினர்.

வரத குமரன், வள்ளியை நோக்கினன். நிந்தனை பெருக்கினை! நியதி யழிந்தது. ஈரமிலா மனத்தர் இழிபிறப்பு எய்துவர். மீட்டும் ஒருதரம் மான் வயிற்றில் பிறந்து, மறவர்பால் வளர்ந்து, தவிரா இம் முனைப்பைத் தவிர்த்துக் கொள்! புடமிட்டு எடுத்த தங்கம்போல், மாசறும் உன்னைப் பிறகு மணந்து கொள்வேன் என்று, மயிலூர் பரமன் அருளினன். தன் குற்றம் உணர்ந்த தேவி திருவுளம் தளர்ந்தது.

கானவரை மீட்டும் வானவ ராக்க, வள்ளியார் அவர்கள் சார்பில் வளர வேண்டும். முன்னைய வரலாற்றில் முடிந்தபடி, பின்னைய சூழ்நிலையைப்

பெருமானே இப்படிப் பெருக்கினன். அவன் அருளாடல்களுள் இதுவும் ஒன்று என்று, அற வோர் அறிந்தனர்.

காஞ்சனை என்பவள், ஒரு தேவ மாது. அழகு மிகுத்த அவளை, பலர் மணக்க ஆவலித்தனர்.

மணப்பது; மக்களைப் பெறுவது; குடுகுடு கிழவியாவது. இறுதியில் மறிப்பது. சீச்சீ! என்ன வாழ்க்கை யிது! எடுத்த பிறவி யீடேற, இறை வியை எண்ணித் தவம் செய்வம். பார்வதியார்க் குத் தோழியாகும் வாழ்வு பலிக்கும். ஆம். இது தான் நலம் என்று அவள் நினைந்தாள். தாய் தந்தையரைத் துறந்தாள். விந்திய மலையை அடைந்தாள். அழகிய பெண்பிறப்பு ஆபத்தானது. அதை யுணர்ந்தாள். பெண்மான் ஆயினாள். சிறந்த பெரும் தவம் செய்ய லாயினாள்.

வள்ளி யம்மையார், வருந்திய மனத்தொடு வான் வழியே வந்தார். கடுந்தவம் செய்யும் மானைக் கண்டார். மகிழ்ந்தார். புனித அதன் கருவுள் புகுந் தார். அதைக் காஞ்சனை அறிந்திலள்.

வரவர வயிறு பெருத்தது. உருளல் புரளல் தெரிந்தது. என்ன அதிசயம் இது என்று, மயங்கி வருந்தியது மான். இருக்க இயலாமல் எழுந்தது. நடுங்கித் தளர்ந்து நடந்தது.

அதை மறவர்கள் அறிந்தனர். இயற்கையின் தூண்டுதலால், இரக்கம் கொண்டனர். அரிய தழையைப் புல்லை அருத்தினர். ஒருநாள், மான் கருவுயிர்த்தது. புனித சிசுவைச் சுமந்து பெற்ற

புண்ணியத்தால், காய பாசம் கழன்றது. பார்வதி யார்க்குத் தோழியாகும் பாக்கியம் எய்தினள் காஞ்சனை.

மான் வயிற்றில் உதித்த தெய்வ மகளை, மறவர் கண்டு வியந்தனர். எடுத்தனர். தங்கள் தலைவனிடம் கொடுத்தனர். வேடர் தலைவன், வித்தகச் சேயைக் கண்டு வியந்தான். அங்க அமைப்புகளை அறிந்தான். மகிமை யுடைய குமரனை, இம் மகள் எதிர் காலத்தில் மணப்பள் என்று மகிழ்ந்தான். அவனை யும் அறியாமல், வள்ளி என்னும் பழைய பெயரையே வைத்தான். வேட அரசி எடுத்தாள். என் மகள் எனப் பெருகிப் பாசம் பிறந்தது. பாலும் சுரந்தது. பாலூட்டிச் சீராட்டிப் பாராட்டினள். வளர்பிறை போல் அம்மை வளர்ந்தாள். இனிய மங்கைப் பருவம் எய்தினாள்.

## 7. வள்ளியம்மையிடம் வந்த வள்ளல்

தோழியர் தொடர, வள்ளியார் புனத்திற்கு வந்தார். தனக்கென்று அமைத்த பரண்மேல் தங்கினார். கதிர்களை மேய, விண்ணில் வரும் பறவைகளை விரட்டினார். இந்நிலை சிலகாலம் நிகழ்ந்தது.

வரத குமரன், ஒருநாள் காளைக் கோலத்தில் வந்தான். பாவையே! நீ யார்? உன் பெயர் யாது? உன்னைத் தந்தவர்கள் யார் என்று, ஒன்றும் அறியாதவன் போல் வினவினன்.

ஐயா! மலைமன்னர் கால்வழியில் வந்தேன். விந்தை மலைச் சாரல், யாங்கள் வசிக்கும் இடம்.

அப்படியா! வழியே வந்தேன். நின்னைக் கண்டேன்! என் உளத்தைக் கவர்ந்தாய்! என்னை மணக்க இசைவாயா?

நம்பி! கண்களால் உம்மைக் கண்டபின், காரணம் இன்றியே களிநடம் புரிகிறது என் மனம். என் அன்னை அத்தரிடம் கேளும்! தங்கள் தோற்றம் கண்டால், அவர்கள் தடை சொல்ல மாட்டார்கள் என்றார் வள்ளியார்.

## 8. வள்ளியம்மை திருமணம்

அப்படியே செய்கிறேன் என்று, அங்கிருந்து பெருமான் அகன்றான். மறவர் தலைவனை அணுகினன். அரிய தன் கருத்தை அறிவித்தான்.

குமரனுக்கே உரியவள், எங்கள் குமரி. நீ அவளை நினைவது நியாயம் அல்ல. போ! இந்த இடம் விட்டே போய்விடு! என்று, அதிரப் பேசினன் வேட அரசன்.

வள்ளியார் இருக்கும் இடத்திற்குப் பெருமான் வந்தான். நீண்ட வேங்கை மரமாகி நின்றான். அத் தருவை அம்மை அறிந்தாள். அதன் நிழலில் அமர்ந்தாள். விசுவிசு என்று தென்றல் வீசியது. பரம சுகம் என்று படுத்தாள். அரிய துயிலில் ஆழ்ந்தாள்.

மறவர் தலைவன், இனத்தருடன் வந்தான். அவன் கண்கள் வேங்கையைக் கண்டன. என்ன மாயம்! இத்தனை நாள் இல்லாத வேங்கை, இன்று எப்படி முளைத்தது? வெட்டி வீழ்த்துங்கள் என்று வீரிட்டான். அனைவரும் கருவி கொண்டு அணுகினர். மலர்ந்த வேங்கை உடனே மறைந்தது.

மன்னன் உள்ளம் மருண்டது. மகளை அழைத்தான். மனையில் சேர்த்தான். இரண்டொரு நாள்கள், இடையில் அகன்றன.

என்ன அருமையான தரு அது! எவ்வளவு பசுமை! என்ன குளிர்ச்சி! அதன் நிழல், எவ்வளவு இன்பமாக இருந்தது! ஞெரேலென்று உதித்தது; விரைந்து மறைந்ததே! என்ன வியப்பு! அங்கே செல்வம். ஒருவேளை அவ் வேங்கைமரம், மீட்டும் தோன்றவும் கூடும் என்று, வள்ளியார் எண்ணினர்.

அச்சமே தோன்றவில்லை. பணிமாதர் தொடர்ந்தனர். புறப்பட்டார் பாவையார். அத் தரு தோன்றிய இடத்தை யடைந்தார்.

சிறந்த கணபதியை, குமரன் சிந்தித்தான். அவ்வளவில், முழுயானை உருவாகி, அம் முதல்வர் அணுகினர். பிளிறிடும் ஒலி கேட்டு, தேவி திரும்பி நோக்கினள். திடுக்கிட்டது அவர் திருவுள்ளம். அணுகி வந்தது யானை. அஞ்சிய அம்மை, எதிர் வந்த குமரனை ஏறிட்டு நோக்கினள். ஐயகோ ஐயா! அடியேனைக் காத்தருளும் என்று, அவரிடம் அடைக்கலம் ஆயினர்.

இராட்சச மணம், அசுர மணம், பைசாச மணம் இனி ஒழியும். தெய்வ மணம் இனித் திகழும் என்று, போற்றி வானவர் புளகிதம் எய்தினர்.

களிற்றின் வடிவம் கரந்தது. அதே சமயம், வனத்தர் தலைவன் வந்தான். நம்பியும் நங்கையும் இருந்த நிலை கண்டான். முதலில் சினந்தான். மங்கை திருவுளமும் மயங்கியதே! குமரனே தானோ இவன் என்று ஐயுற்றான். அவன் மனநிலையறிந்த கந்தப் பரமன், உடனே தன் சுய சொரூபம் காட்டினன்.

அச்சமும் அன்பும் மிக, மறவர் தலைவன், புனித மொழிகளால் முருகனைப் போற்றினன். அவன் வேண்டிக் கொண்டபடி, தெய்வக் குமரி முருகன் திருமணம் நிகழ்ந்தது. மறவர் சாபம் அகன்றது. அவர்கள் அனைவரும், எம்மானது கௌமார புவனம் எய்தினர்.

தேவயானையார், திருச்செந்தூரில் சிவத்தை நினைத்துத் தவத்தில் இருந்தார். எம்பிரான் இலிங்க உருவாகி எதிரில் தோன்றினன். கண்ட வான் மகளார் கைகுவித்தார்.

மகதேவா! எனதுளமும், வள்ளி மனமும், ஒற்றுமையுடன் உறவாட அருளும் என வேண்டினள். அங்ஙனமே ஆக என அருளினர் அத்தர். அப் பெருமாற்கு, சகந்நாதர் எனும் பெயர் அமைந்தது. அதே நேரத்தில், மணக்கோலத்தில் முருகன் வந்தான். தேவயானையார் எதிர் கொண்டார்.

தேவியர் இருவரும் ஒருவரை ஒருவர் தழுவினர். அதுகண்டு மகிழ்ந்த முருக பிரான், வாழ்விக்கும் சகந்நாதரை வழிபட்டான்; அன்று முதல், என்றும் இரு தேவியர் நடுவில் இருக்கின்றான்.

## 9. நான்முகன் பெற்ற நல்வரம்

காலையில் எழுவார். கடனை முடிப்பார். நீராடுவார். அனுட்டிப்பார். செந்தில் ஆண்டவனைச் சிந்திப்பார். அன்பொடு அநவரதமும் வந்திப்பார், அங்குள்ள அந்தணர்கள்.

நெல்லிற்கு உமி; நீர்க்கு நுரை; பூவிற்குப் புல் இதழ். அதுபோல், குற்றமே உயிர்களின் குணம். அக் குற்றத்தைப் போக்க அறியாமல், மேலும் உலகரொடு கொள்ளும் உறவு, சூனியத்திற்கு ஆலவட்டம் சுற்றுவது போல்வது. இதை அதிகம் அறிந்தவர் அம் மேலோர்கள்.

அவர்கள் ஆறுமுகப் பெருமானை ஆராதிக்கும் போதெல்லாம், ஆறுமுக ஐயா! தேறுமுகம் தா! அயன் உலகில், விண்ணில், மண்ணில் வழிபடும் சுதந்தர வாழ்வை யளித்தனை. இப்பேறு, என்றும் அடியேற்கு இருக்க அருள் என்று, ஏத்திப் போற்றி இறைஞ்சினர்.

அவர்கள் வழிபாட்டை மகிழ்ந்த வேல் பரமன், விக்கிரகத்தி லிருந்து ஒருநாள் வெளிப்பட்டான். கண்ட அந்தணர்கள், கைகுவித்தனர். வீழ்ந்து பணிந்தனர். விநயம் காட்டினர்.

மெய்யன்பர்களே! திரிகரண சுத்தியர் திரிசுதந்தரர் என்று, எங்கும் ஞானிகள் உங்களை ஏத்துகின்றனர். நீங்கள் இரண்டாயிரவர்; உங்களுள் யான் ஒருவன்; உலகம் இதையும் உணர்ந்துளது. உங்கட்கு உதவி செய்தோர், எம்மை வழிபட்ட பயனை எய்துவர் என்று அருளி, திருவுருக் கரந்தது தெய்வம்.

வைதிக வழிபாட்டில் மனம் வைத்து, அன்றும் இன்றும் அமலன் திருப்பணிக்கே தம்மை அர்ப்பணித்த அவர்களின் வாழ்க்கை வளம்பெற, வசதி செய்பவர்கள், வாழப் பிறந்த பெருமக்கள்.

ஆற்றங் கரையில் தண்ணீர். அடுப்பங் கரையில் வெந்நீர். கவலை வாழ்க்கையில் கண்ணீர். பரமன் வழிபாட்டில் பன்னீர். இது பழங்காலப் பாட்டிகளின் பழமொழி. இது, இறைவழிபாடு, அடியர் வழிபாடு செய்பவர் வாழ்க்கை சிறப்படையும் என்பதை, அருமையாக நமக்கு அறிவிக்கின்றது அல்லவா!

பெருமா! மங்கல இறைவா! அரிய நினது ஆலயத்தை, அருளார் உனது கோலத்தை மறக்குமோ எங்கள் மனம்! பேறு தரும் ஒரு பொய்கை, இங்குப் பெருக அருள் என்று, வித்தக அந்தணர்கள் ஒருநாள் வேண்டினர்.

எம்மான் உடனே வேலை எடுத்தான். எண்ணிய உணர்வொடு ஏவினன். அது, ஊன்றி நிலத்

தில் ஊடுவி, பாதல கங்கையை மேல் வரச் செய்தது; அதன்பின், அருளார் திருக்கரத்தில் அமர்ந்தது. முதல்வன் முதலில் அதனில் முழுகினன். ஈராயிரவரும் நீராடி எழுந்தனர். அதன் பெயர், **கந்த புஷ்கரிணி**.

அந்தண்மையீர் ! திருச்செந்திற் கடல், **வதனாரம்பம்** என்னும் பெயரினது. எத்தனையோ கிரேதாயுகம் வந்து போயின. அவைகளுள் ஒன்றில், திருமால் இராமனாகத் திருவவதரித்து, இராவணனை அழிக்க, நம் சந்நிதி திருமுன், இக் கடலில் **ஆதிசேதுவை** எழுப்பினன்.

**கந்தமாதன அதிதேவதை**, நாம் இட்ட கட்டளைப் படி, நியதிபெற **இக்கடலில்** நாள்தோறும் **நீராடுகிறது** வாய்மை தோன்ற நம்மை வழிபட்டு, காண்பார்க்கு இனிய **மலைவடிவாய்** இங்கு இருக்கிறது.

சிவத்திற்கு ஐந்து தலை; எனக்கும் சிரம் ஐந்து என்று, ஒரு சமயம் பிரமன் இறுமாந்தான். அதைப் பயிரவர் அறிந்தார். துள்ளிப் பாய்ந்தார். ஐந்து தலைகளுள் ஒன்றைக் கிள்ளி அகற்றினார்.

குருதி கொப்புளித்தது. உபாதை பொறுக்க முடியாமல், பிரமன் ஓடினான். வைகுந்தத்தை அடைந்தான். நாராயணத் தந்தையிடம் நடந்தது கூறினான்.

மகனே ! பயிரவர்மேல் பிழையில்லை. தவறு நினைவே உன் தலையைத் தடிந்தது. மகத்தான

ஆறெழுத்தை, மானசிகமாக உருவேற்று! உய்ய அதுதான் வழி என்று உபதேசித்தார். அப்படியே பிரமன், எம்மைப் பலகாலம் எண்ணி யிருந்தான். பிரமன் முன் ஒருநாள், பிரசன்னம் ஆயினம்.

ஒழிந்த தலையை உதவுக என்று, அவன் உள்ளம் உருகித் துதித்தனன். சிவாபராதத்தால் சிரத்தை இழந்தனே! சாந்தி விளைய சிவத்தை வழிபடு என்று அருளினம். அதன்பின் பிரமன், அப்படியே செய்தான். விமல இறைவர் வெளிப்பட்டார். அற்புத துதிகளால், அவரை ஆராதித்தான்.

நான்முக! ஒவ்வொரு நாளும், நீ **செந்தில் கடலில் நீராடு!** செந்திற் குமரனை, **பொன் விமான மாகிப் போற்றுதல் செய்!** உனக்குரிய கற்ப இறுதி யில், இழந்த தலையை எய்துவை! அந்நாளில், நம் சாரூப கதியை நல்குவம் என்றார். அன்று முதல் அயன், சிறந்த அத் திருப்பணியைச் சிறக்க இங்குச் செய்கின்றான்.

கலிங்க நாட்டு மன்னன் மகள், **கனகசுந்தரி.** பொதிகைச் சாரலில் உள்ள தாமிரபரணியில், ஒருநாள், வநிதை அவள் நீராட வந்தாள். அவ்வழி வந்த **அயக்ரீவரைக்** கண்டாள். குதிரைமுக முனிவரா? என்று குறுநகை செய்தாள்.

**கனகசுந்தரீ!** ஆன்றோரை அவமதிக்கும் பாவத்தை, எவரும் அனுபவிக்கத்தான் வேண்டும். அடுத்த பிறப்பில், நீ இதே முகம் எய்துவை என்று,

அயக்ரீவர் அருளினர். அது கேட்டு அஞ்சி அகன்ருள். அவளது வாழ்நாள், சில நாளில் அகன்றது.

பிறகு உக்கிர பாண்டியர் மகளாகப் பிறந்தாள். அங்கமெலாம் சௌந்தர்யம்; முகம் மட்டும் குதிரை முகம். அது கண்டு அரசர் மனம் அதிர்ந்தது.

மன்ன! தெய்வத் தலங்களைச் சார்ந்த கடல், பொய்கை, நதிகளில், நின் மகளை நீராடச் செய்! அதன் பயனுக, நன்முகம் ஆவள் நங்கை என்று, அசரீரி விண்ணில் அதிர்ந்தது.

உடனே காவலர், எடுப்பான பல்லக்கில், தாயையும் மகளையும் ஏற்றினர். மந்திரிகளை, காப்பாளர்களை, தொடர்ந்து செல்லுமாறு தூண்டினர். சென்றவர்கள், வடநாட்டுக் கங்கை முதலிய நதிகள், தென்னுட்டுத் தனுஷ்கோடி, தெய்வப் பொய்கைகள் முதலியவைகளில் ஒன்றுவிடாமல் நீராடினர். அன்று சேயான அங்கசுந்தரி, இன்று பருவம் எய்திய பாவை. இறுதியில் திருச்செந்திலை எய்தினள். வருந்திய மனத்தொடு மங்கை, முருகா! முருகா! முருகா என்று, கடலில் முழுகி எழுந்தாள். மறைந்தது குதிரை முகம்; களங்கமற்ற மதியென முகம் கவினியது. உடன் வந்தவர் உவகையடைந்தனர். அறிந்த அரசரும் அகமகிழ்ந்தார்.

இத்தகைய காரணங்களால், செந்தில் கடல், **வதனரம்பம், முகாரம்பம், வாஞ்சா தீர்த்தம், சத்திய**

**தீர்த்தம், போத தீர்த்தம்** என்றெல்லாம் புகழ் பெற்றுளது. உலகம் இதன் அருமையை இனி உணரும் என்று, அறுமுகப் பரமன் அருளினன்.

## 10. திரிசுதந்தரர் வரலாறு

கங்கைக் கரையில் முனிவர்கள் பலர், கடுந் தவத்தில் இருந்தனர். மகிழ்ந்த வாணி மணாளர், அவர்கள் முன் வந்தார். கண்ட முனிவர்கள், கை குவித்தனர்.

வேதியர் பெரும! விண்ணில் மண்ணில், உயர்ந்த உமது சத்திய உலகில், உரிமையுடன் யாங்கள் உலவி, என்றும் இறைவழிபாட்டில் இருக்க அருளும் என்று இறைஞ்சினர். அங்ஙனே யாக என்று, பிரமதேவர் அருளினர். அதே வரத்தை, உருத்திரரும் திருமாலும் உதவினர், மூவுலக சுதந்தரம் பெற்ற அவர்கட்கு, முக்காணியர் என்பது திருநாமம்.

பழமலையில் ஆயிரர்; செந்திலில் இரண்டாயிரர்; தில்லையில் மூவாயிரர்; பிரம்ம புரத்தில் நாலாயிரர்; அருணையில் ஐயாயிரர்; சகந்நாதத்தில் ஆறாயிரர்; திருவீழிமிழலையில் ஏழாயிரர்; மதுரையில் எண்ணாயிரர்; தண்டக வனத்தில் ஒன்பதினாயிரர்; கோகுலத்தில் பத்தாயிரர்; பதரிகாசிரமத்தில் பதினோராயிரர்; சுவாமி மலையில் பன்னிரண்டாயிரர்.

இங்ஙனம் எழுபத்தெண்ணாயிரம் திரிசுதந்தரர்கள், எங்கும் முதல்வன் வழிபாட்டில் ஈடுபட்டனர்.

ஒப்பாரும் மிக்காரும் இல்லாத, இன்ப அந்தணர் களாக இன்றும் இருக்கின்றனர். இவர்களை ஏத்திப் போற்றும் எவர்கட்கும், எந்தப் பேறும் எளிதினுறும்.

## 11. மாத வழிபாடு

இங்குப் பன்னிரு திங்களிலும், விமலன் ஆலய விசேட வழிபாடுகள், நலம்தரும் கம்பீரமாக நடைபெறுகின்றன. இங்குப் பிதிரர்க்குச் செய்யும் சிரார்த்தம், அவர்கட்கு அளவிலாப் பயனை யளிக்கும்.

## 12. விபூதி இயல்

செவ்வேள் பரமா! ஞானவேல் இறைவா! உமது தடத்த உருவைச் சிறக்க அடியேன் சேவித் தேன். அரிய சொரூப சேவையை ஆவலிக்கிறது மனம். அருள்க பெரும என்று, ஒருநாள் வீரவாகு தேவர் விண்ணப்பித்தார். அவ்வமயம் அறுமுகப் பரன், சின்முத்திரையுடன் யோக ஆசனத்தில் அமர்ந்தனன்.

வீரவாகு! அண்டம் அனைத்தும் யாமே ஆயினம்! கேள்! கேள் என்று, விரிவாகப் பெருமான் அவைகளை விளக்கினன்.

## 13. விசுவ ரூபம்

சிவனார் தந்த செல்வமே! இந்த விளக்கத்தால், உள்ளத் தூய்மை யுற்றனன். சிறந்த அக்காட்சியை

அடியேன் சேவிக்க அருள் என்று, வீரவாகுதேவர் மேலும் வேண்டினர்.

வீரவாகு! நம் சொரூபம், முனிவர்களும் தேவர்களும் காண முடியாதது. இன்ப நாத வேத தேவதைகட்கும் எட்டாதது. ஊன் மயக் கண்களால் உணர இயலாதது. அருள்ஞானக் கண்ணை உனக்கு அளிக்கின்றேம். அதன் துணையால் சொரூபத்தை அறிந்துகொள் என்று, பெருமான் அருளினன். உடனே அண்டங்களும், தொகை கடந்த அவைகளில் இருப்பார்தம் தோற்றங்களும், வேதப் பயனுமாகி விமலன் விளங்கினன்.

கண்ட வீரவாகுவின் கரங்கள் எழுந்தன; சிரத்தின் மேல் ஏறின. ஆநந்தக் கண்ணீர் அருவியெனப் பெருகியது. சொற்கள் குழறின.

அத்தா! அமரர்கள், பத்துப் பிரமர்கள், அவர்களது தூய படைப்புத் தொழில்கள், பன்னிரு சூரியர்கள், பதினொரு உருத்திரர்கள், அவர்களது ஆட்சிகள், எண்ணிறந்த மலைகள், நதிகள், கடல்கள், சிவதாண்டவம், பாற்கடல், அநந்த சயனம், ஆலயங்கள் யாவும், உமது திருமேனியில் இருத்தலை உணர்கிறேன். அளவிலாத் திருமுகங்கள், கரங்கள், நாசிகள், கண்களை, அடியேன் உம்மில் அறிகிறேன். அண்டமெல்லாம் பேன் முட்டைகள்போல், உமது திருமேனியில் அமையும் அற்புத அனுபவத்தையும் காண்கிறேன். பார்க்கவே அதிக பயங்கரமாக இருக்கிறதே! அடியேன் உமது அடைக்கலம் !

கடிக்கும் பற்களின் ஓசையால், அடியேன் கன்மங்கள் அழிந்தன. பழைய உமது தடத்த உருவையே அடியேன் பார்க்க அருளும் என்று, வீரவாகுதேவர் அலறினர்.

உடனே பெருமான், சாந்த முகமான இளம் திருமேனி கொண்டனன். போற்றி வீரவாகு புளகிதம் எய்தினர். அத்தன் அருளியபடி, ஆறு எழுத்துக்களை உருவேற்றி, அமைதி கண்டது அவர் மனம்.

## 14. மந்திர மகிமை யுரைத்தல்

விசாகப் பரமன் விஸ்வ உருவம் கொண்ட போது, அதை அமரர் முனிவர் அனைவரும் கண்டனர். அளவிலாத விம்மிதம் அடைந்தனர். தம் வசம் இழந்தனர். பரவசம் ஆயினர். தொழுது துதித்தனர்.

அவர்களுள் ஒருவர் நாரதர். சேவையில் ஆழ்ந்து சித்தம் மகிழ்ந்த அவர், அங்கிருந்து விண் வழி விரைந்தார். சிறந்த வைகுந்தத்திற்குச் சென்றார். திருமாலைச் சேவித்தார்.

நாராயணா! செந்திலான் விஸ்வரூபத்தைச் சேவித்தேன். மெய்ம்மறந்தேன். அந்த ஆநந்தாதிசயம் இன்னும் அடங்கவில்லை. அதிர்கிறது உடல்.

பாரதப் போரில், காண்டீபனுக்கு நீர் காட்டிய விசுவ ரூபத்தை, அடியேன் உடனிருந்து கண்டேன். உவகை யடைந்தேன்.

தண்டகாரணியத்தில் அந்தத் தனஞ் செயற்கு, சிவனுர் காண்பித்த விஸ்வ உருவைச் சேவித் தேன். சிந்தை யுவந்தேன்.

பதரிகாசிரமத்தில், நர நாரணர்கட்கு, காலாக் கினி யுருத்திரர் காட்டிய கோலத்தையும், கண் பெற்ற பயனெனக் கண்டு களித்தேன்.

காகுத்தனுக்குச் சிவபிரான் காட்டிய பேரு ருவும் கண்டேன். ஆநந்தம் கொண்டேன்.

கமலாசனப் பரமனுக்குப் படைப்புத் தொழிலைக் கற்பிக்க, மேருமலையில் ஒருசமயம், பரமன் காட்டிய பாரமேசத் திருவுருவையும் பார்த்து மகிழ்ந்தேன்.

அச்சுதா! திருச்செந்தில் ஆண்டவன் இன்று காண்பித்த பெரு வடிவம்போல், என்றும் கண்டி லன்; எங்கும் அறிந்திலன். அதனுல் விளைந்த அதிசய விம்மிதம், இன்னும் என்னை விட்டு அகன்றது இல்லையே. அதன் காரணத்தை, அடியேன் அறியுமாறு அறிவித்தருளும் என்று இறைஞ்சினர்.

புருஷோத்தமர், அவைகளைக் கேட்டுப் புன்னகை செய்தார். கேண்மை நாரதா! கேள்!

ஐந்து முகத்தர் சிவபிரான். அவர்க்கு அதோ முகமும் உண்டு. அது கீழ்நோக்கும் அதிரகஸ்யத் திருமுகம். அதை யோகிகளே அறிவர். ஐம்முகத்துள் ஒன்று மேல் நோக்கும். அந்த இருமுகங்கட்கும்

உரிய தோள்கள் நான்கும், ஊனக் கண்கள் உணரு மாறு இல்லை.

அருளாட்சி நடத்த, அதோமுகம் தனியாகும். அந்த இரு முகங்கட்கு உரிய நாற்கரங்கள், தனித்த அவ்வுருவில் தரிசனம் ஆகும். வேருகி, அங்ஙனம் வெளிப்படும் திருவுருவம் எம் உருவம். இனி, வித்தக அவ்வுருவங்களின் செயல்களை விவரிக்கிறேன். கேள் !

மலைமேல் இருக்கிருர் சிவபிரான். அரிய கடல் மேல், யாம் அமர்ந்துளம்.

அறிவுக் கண்ணர் அந்த அமலர். யாம் அறி துயில் கண்ணன் ஆகின்றேம்.

அவர் பசுபதீசர்; பசு பரிபாலனன் எனும் பொருளில், கோபாலன் எனும் பெயரைக் கொண் டுளம் யாம்.

அவர் பாம்பாபரணர்; பாம்பின் மேல் யாம் படுத்துளம்.

அவர் பவள வண்ணர்; யாம் பசுமை வண்ணம்.

அவர் இடத்தில் மலைமகள்; எம் மார்பில் திருமகள்.

அவர் திருமுகம் ஐந்தும், நால் திசைகளையும் ஆகாயத்தையும் நோக்கும் காக்கும்.

எம் ஒரு திருமுகம், கீழ்நோக்கும், காக்கும். அவர் சடை முடியர்; யாம் கோல மாமுடி கொண்டுளம்;

கனிவொடு உயிர்களைக் காப்பது எம் தொழில்; இளைப்பாற்றுவது சிவச்செயல்.

அவர் திருநாமம், நமசிவய எனும் ஐந்தெழுத்து ஆக அமைந்துளது. எம் திருநாமம், ஓம் நமோ நாராயணாய எனும் எட்டு எழுத்து ஆகும்.

யாம் ஒன்று யிருந்த போது, அத் திருமேனி ரகஸ்யத்தை ஒருவரும் உணர்ந்திலர். வேறுபட்ட பின் சிவன் என்றும், திருமால் என்றும், எங்கும் எவரும் எண்ணுகின்றனர்; ஏத்துகின்றனர். அருளார் பயனை அடைகின்றனர்.

ஒன்றுபட்ட போதும், வேறுபட்ட போதும், ஈர் உருவும் ஓர் உருவே என்பதை, அனுபூதிக் காலத் தன்றி, மற்ற காலங்களில் மேதைகளும் மறந்து விடுகின்றனர்.

அந்த ரகஸ்யத்தை, எவரும் இனிது அறிந்து கொள்ள, இந்த இரு திருவுருங்களும் ஒன்றாக இணைந்தன. அதுவும் ஒரு அருளாடல்; அனுபவ உண்மையான அத்திருவுருவம், குகன் எனும் திருப் பெயரைக் கொண்டுளது.

சிவத்தின் ஐம்முகமும், எம் திருமுகமும் சேர்ந்து, குகன் உருவில், ஆறுமுகம் எனும் பெயர் அமைந்து, வெளிப்படுமாறு எவர் முன்னும் விளங்குகின்றது.

"ஐந்துமுகம் காட்டாமல் ஆறுமுகம் காட்ட வந்த செஞ்சரணச் சேவடியைச் சேரும்நாள் எந் நாளோ?" என்று, இனி எவரும் போற்றுவது இயற்கை அல்லவா.

சிவத்தின் எட்டுத் திருத் தோள்களும், எமது நாற்றோளும் இணைந்து, பன்னிரு தோளன் அப்பரன் என ஆயின.

எம் கண்களும், சிவனுர் திருக்கண்களும் ஒருங்கு இயைந்தமையின், "பன்னிரு கண்ணுடைய பிள்ளை தோன்றும்" என்று, தாண்டகம் பாடும் கால மும் வரும். நெற்றிக் கண்களையும் இணைத்து, பதி னெட்டுக் கண்ணினன் குமரன் என்னும் அனுபவ மும் அதனின் இருக்கும்.

இரு உருவமும் இணைந்தபோது, அவ்வவ் வுருவங்களில் இருந்த படைகளும் சக்திகளும், ஒருமை பெறுவது இயற்கை.

முச்சத்தி ரூப சிவனுர் முத்தலைச் சூலமும், துஷ்ட நிக்ரக எமது சக்கரமும் இணைந்து, குகன் திருக்கரத் தில், வேல் என்னும் பெயர் கொண்டு விளங்கு கின்றது. முழுசக்தி ரூபம் ஆதலின், சக்தி, ஞான சக்தி என்னும் பெயர்களையும் அது எய்தும்.

சிவத்தின் வலத்தில் சிவகலை. அது விண்ணில் சூரியன் என விளங்கும்; அச்சக்தி, எம் வலக்கண் ணில் இடம் பெறும். பக்தர்களின் பந்தம் அகற்றும்

அதன் பெயர், விட்சேப சக்தி. (விட்சேபம்-விலக்குதல்.) அச்சக்தி, வள்ளியம்மை என்று வரும்.

சிவத்தின் இடத்தில் சத்திகலை. அது, சாந்த வானில் சந்திரனாகி, எம் இடக்கண்ணில் இடம் பெறும். அதன் பெயர் ஆவரண சக்தி. அச்சக்தியே தேவயானை. இந்த இருசக்திகளும், குமரனது இரு புறத்தும் அமர்ந்து இருப்பர். வித்தகப் பிரமம், எவரும் அறியும் நாம ரூபம் கொண்டு, இப்படியெல்லாம் விளையாடுகின்றது; இது அனுபவ ஞானிகள் அறிந்துள செய்தி.

பரம குமரன் திருப்பெயர்கள் பல. அவைகள் மந்திர ரகஸ்யங்களாக மலர்ந்தன. அவைகளுள் ஒன்று சுப்ரமண்யத் திருநாமம். அது மூன்று பதங்களால் ஆன பெயர்.

ப்ரஹ்ம என்பது, சிவம் எனும் பொருளது; ந்ய-விஷ்ணு; சு-(அந்த இரு பெயர்களையும்) இணைப்பது. எனவே இத் திருப்பெயர், சிவவிஷ்ணு அபேதத்தைச் சிறப்பாக அறிவிக்கின்றது. நலம் மிகுந்த இப்பொருள், நான்கு மறைத் தீர்ப்பு.

சரவணபவ என்பது, மற்றொரு மந்திரம். சிறந்த இம் மந்திரம், மூன்று பதச் சேர்க்கை.

சர-நீர்; வந-இருப்பிடம். (அப்படியே நார-நீர்; அயந-வாழ் இடம். எனவே) சரவண என்பது, நாராயணன் எனும் பொருளது; நாராயண என்பது,

சரவணன் என்று ஆகும். இதனுடன் பவ என்பது, சிவம் எனும் பொருளது. ஆம். சரவணபவ எனும் ஆறு எழுத்துக்கள், நாராயண சிவம் என்று அருத்தம் பயப்பதை அறிந்து கொள்ளலாம்.

நிலம், மணல், பாறை, மலை என, நலம் சிறந்த இடங்கள் நான்கு. அவைகளுள் நிலம் எம் இடம்; மலை சிவனார் இடம். இந்நான்கு இடங்களிலும், குமரப் பெருமான் கோயில் கொண்டுளன்.

திருவேங்கட மலையும், அதன் மேல் உள்ள குகனேரித் தீர்த்தமும், மூலத்தான மூர்த்தியும், முருக முகுந்த வாசத்தலம்; புனித முருக முகுந்தப் பொய்கை; முருக முகுந்த சிலா ரூபம். இங்கு இருப்பது யாம் என எண்ணி வழிபடுவோர், எம்மை வேங்கடாசலபதி என்று விளிப்பர்; முருகனடியவர், வேங்கட சுப்ரமண்யம் என்று விநயம் காட்டுவர்.

கார்த்திகை நட்சத்திரத்தில், முன் மூன்று பகுதி, பின் மூன்று பகுதிகள். முன் பகுதியில், நிலமகள், மலர்மகள், மலைமகள் எனவுளது எம் சொரூபம்; பிற்பகுதியில், உருத்திர மகேச சதாசிவர் உளர். ஆறுபகுதிகளான அந் நட்சத்திரம், சிவவுருவும் எம் உருவுமாகச் சிறக்கின்றது. கிருத்திகை நாளில் வரத முருகனை வழிபடில், சிவமும் திருமாலுமான எங்கள் திருவுளம் இன்பமுறும்.

பிரணவம், அகரம் உகரம் மகரம் என்று அமையும்; அகரம் பிரமம்; உகரம் திருமால்; மகரம் உருத்திரன் என்பது பொது இயல்.

அகரம் வள்ளி; உகரம் குமரன்; மகரம் தேவயானை என்பது சிறப்பியல். அம்மூன்றும் ஒருமையுறும் பொழுது, ஓம் என்று ஒலிக்கும். இந்த அருமையால்தான், திருச்செந்திலான் விஸ்வ உருவில், பெருந் தெய்வ தத்துவம் பிரகாசிக்கின்றது; புரிகிறதா என்று புகன்றார் திருமால்.

அதன்பின், நாரதர் தொடர, திருச்செந்திலையடைந்தார். விமானமாக பிரம தேவன் விளங்குகிற, உலக நாதராக சிவனார் உவகையுறுகிற செந்திலில், நிலைபெற அமர்ந்தார் திருநெடுமால்.

## 15. பலகதை உபதேசம்

வான்மகள் ஒருத்தி, வான்வழி வந்த துர்வாசர்க்கு, மாலை சூட்டி மரியாதை செய்தாள். அவர் அம் மாலையை, அமரர் கோனின் கரத்தில் அளித்தார். அவன் அதை, ஏறி யிருந்த யானை மேல் வைத்தான். அது அம் மாலையைப் பிய்த்து எறிந்தது.

கண்ட தூர்வாசர் கனன்றார். ஒழிக உன் செல்வம் என்று உறுத்தார். படபடத்த சாபம் பலித்தது. அசுரர்கள் சுவர்க்கத்தை அபகரித்தனர். உயிர்க்கு அஞ்சி இந்திரன் ஒளித்தான். வருந்தித் தன் தவறை எண்ணி வாடினன். அதன் பின் பலகாலம், ஆண்டவனைச் செந்திலில் ஆராதித்தான். என்றால் அல்லவா இவ்வளவு இடையூறு என்று வருந்திய

வெள்ளை யானையும், புனித குமரனைப் பூசித்தது. அதன் பயனாக, இந்திரன் சாபம் அகன்றது. அவுணர்கள் அழிந்தனர். பழையபடியே அவன், பொன்னுலகத்தின் பூபதி யாயினன்.

செந்திலில் பகலின் முதல்யாமத்தில், பிரம தேவர்; இரண்டாம் யாமத்தில், முனிவர்கள்; மூன்றும் யாமத்தில், கந்தர்வ சித்தர்கள்; நான்காம் யாமத்தில், திசைபரிபாலர்கள்; இரவு ஐந்தாம் யாமத்தில், இலட்சுமி யாதியர்; ஆருவது யாமத்தில் ஆதிசேடனுடன் அவுணர்கள்; ஏழாவது யாமத்தில், வள்ளி தெய்வயானையர்; எட்டாம் யாமத்தில், கங்கை யாதிய சக்தியர் வைதிக விதிப்படி குமரனை வழி படுகின்றனர். இந்த ஆராதனைகளைக் கண்டு, இன்பம் கொள்கிருர் வீரவாகு தேவர்.

சிதம்பரத்தில், சிற்சபேசரைச் சேவித்து இருந்த புலிக்கால் முனிவர், ஒரு சமயம் செந்திலை யடைந் தார். நீராடினுர். நியதி செய்தார். ஆறுமுகத்தை ஆராதித்தார். ஆலயத்திற்கு ஆக்கம் விளைய, நலக்க ஒரு வேள்வியை சோமாரண்யத்தில் நடத்தி னுர். இறுதியில், அந் நிலத்தில் கோதாவரி நதி குதூகலித்து வந்தது. தாம்பிர பரணியின் தங்கை போல்,இன்றும் அந்நதி அங்கு இருக்கிறது-

வசிட்டர், வாமதேவர், காசிபர், மார்க்கண்டே யர், சாபாலி, கவுதமர், முற்கலர், கோசிகர் முதலிய எட்டு முனிவர்கள், அறுமுக வரதனை ஆராதித்து, ஓயாது செந்தில் புகழை ஓதுவார் ஆயினர்.

ஒரு சமயம் அதிதிதேவி, அறிவுடைய மகப் பேற்றை ஆவலித்து, நாரதர் குருவாகி நவின்றபடி, கார்த்திகைப் பௌர்ணமி யன்று ஆரம்பித்து, கடலி லும் கந்த புஷ்கரணிகளிலும் நீராடி, பத்துநாள் வரை சந்தானப் பிரத விரதத்தை நடத்தினள். இப்படியே ஒரு ஆண்டு அனுட்டித்த பயனுக, இந்திரனை, உபேந்திரனைப் பிள்ளைகளாகப் பெற்றுப் பெருமகிழ்வடைந்தாள்.

ஓதி உணர்ந்தவர் ஒரு அந்தணர். அறு சமய நுட்பங்களை அறிந்தவர். எனினும், பழம் பிறப்பிற் செய்த பாவம், அவரது அறிவை மறைத்தது. அதனுல் அந்தணர்களை, தெய்வத்தை, மந்திரங்களை, தானதருமங்களை ஓயாது குறைகூற லாயினர்.

கண்டதே காட்சி. கொண்டதே கோலமென்று களித்தார். வரவர அவர்க்கு, நரை திரை மூப்பு நண்ணியது. ஒரு நாள் இறந்தார். பிறகு வேறு ஒரு இடத்தில் கழுதையாகப் பிறந்தார். அவதி பல அடைந்தார். முன்னைய புண்ணியம் முன்வந்து நிற்க, அக்கழுதை செந்திலை யடைந்தது. ஒருநாள் வீழ்ந்து இறந்தது. அதன் பயனுக, சிவஞான மெய்திச் சிறந்தது அச் சீவன்.

## 16. இயமனுக்குச் சிந்துபுரச் சிறப்பறிவித்தல்

பகல் கொள்ளை யடிக்கும் படிறன் ஒருவன். அவன், கப்பலில் செல்வான். மரக்கலங்களை இடையில் மறிப்பான். அவைகளில் இருந்தவர்

தலைகளை அறுப்பான். அநியாயமாகப் பொருள்களை அபகரிப்பான். தன் சமயமே உண்மை என்று சாதிப்பான். தடுப்பார் உயிரை எடுப்பான்.

அவன் ஒருநாள், செந்தில் ஆலயத்தை அணுகினன். அங்கிருந்த அந்தணர்களை ஏறிட்டு நோக்கினன். இது என்ன சாமி? என்றான்.

அசுர உணர்வை அழிப்பவர்; அடியவர்களைக் காப்பவர்; அருளால் ஞானத்தை அளிப்பவர். இவர் திருச்செந்தில் அறுமுகர் என்றனர் திரிசுதந்தர அந்தணர்.

சிவனா? இவன் அவன் மகனா? பெயர் சண்முகனா? என்று கடுங்குரல் காட்டினன். உறையில் இருந்த வாளை உருவினன். விக்கிரகத்தைத் தவிடுபொடி யாக்குகிறேன், என்று விரைந்தான். தடுக்கியது கால். விழுந்தான். உயிரை இழந்தான்.

கால தூதர்கள் கட்டினர். இடைவந்த சிவகணத்தவர், வேல் பெருமானை விழுந்து வணங்கிய பக்தனை, விட்டு விடுங்கள் என்று உறுமினர்.

நடுவன் இயமன் நடந்ததை அறிந்தான். செந்திலை எய்தினன். குமர புனிதனைக் கும்பிட்டான். விளைவை விநயமுடன் விண்ணப்பித்தான்.

கற்றார், கல்லாதார், நல்லார், பொல்லார் எல்லாரும், நம்மை ஒருதரமேனும் தரிசிப்பரேல், தீரா

அவர் தம் வினைவேகம் தீர்ந்து விடும்! இவன் செய்த யாவும் பாதகம். ஆயினும், அந்தணர்களிடம் தல மகிமை, மூர்த்தியின் முதன்மைகளை முறையே கேட்டான். எதிர்ப்பு முகம் காட்டி இறக்கும் போது, நம்மையே நினைத்தான். அதற்குரிய பயனை அடைந்தான். அபுத்தி பூர்வமாகவேனும் எம்மை ஆராதித்தவர், எந்த இடையூறும் எய்தார் என்று, அருளொடு அறுமுகன் அருளினன்.

வணங்கிய இயமன், இறைவன் அருளியவைகளை எண்ணினன். அகமிக மகிழ்ந்தான். அங்கிருந்து அகன்றான். தன் உலகு அடைந்தான்.

## 17. பிரமன் தேவர்கட்கு உபதேசித்தது

வணிகர் குலத்தவன் ஒருவன். அவன் வளமார் செல்வம் வாய்த்தவன். சிவநிந்தை, அடியர் நிந்தை, கள்ள வாணிபம் முதலியவைகளில் கைதேர்ந்தவன். வருணச்சிரமம் என்பது ஏமாற்றும் தந்திரம். அவயவ ஒற்றுமை, உண்ணல் உறங்கல், கருவுயிர்த்தல் யாவும் சமம். தான் செய்த சிலைகளை, தெய்வம் என்று மனிதன் மதிப்பது மடத்தனம்.

உறவு, நட்பு, உயர்வு, தாழ்வு எல்லாம், பணம் செய்யும் பகட்டு வித்தை. அருமையான பணத்தை, வழிபாடு என்று பெயரிட்டு வாரி இறைப்பர் மதியிலிகள்; இப்படி எல்லாம் கூசாது பேசுவான்.

ஒரு சமயம் கப்பலில் சென்றான். வர்த்தகம் என்று பெயர் வைத்து, பல வழியில் பணம் திரட்டினான். ஊர் நோக்கித் திரும்பினான். நடுக்கடலில், எதிர்பாராத புயல் எழுந்தது. கப்பல் தத்தளித்துக்

கவிழ்ந்தது. இதுவரை சம்பாதித்த பொருள்கள், கடலுக்கு இரையாயின. தன் உயிர் தப்பினால் போதும் என்று, இயன்றவரை முயன்று நீந்தினான். எவரையும் காக்கும் செந்தில் கரையில் ஏறினான். கணக்கிலாப் பொருளிழந்த கவலை ஒருபுறம். அள விலாது நீந்திய அயர்வு மறுபுறம். தளர்ந்து நடந் தான். வாழ்விக்கும் ஆலய வாயில்வரை வந்தான். அதன் மேலும் நடக்க முடியவில்லை. வெட்டிவிட்ட மரம்போல் வீழ்ந்தான். அப்போதே உடலை விட்டு ஒழிந்தது அவன் உயிர்.

ஊரார் திரண்டனர். உறவினர் கூடினர். செய் வன செய்தனர். தகனம் நடந்தது. குற்றமே புரிந்து, இறுதிவரை கொடுமைகளே செய்த சூரபது மன் ஆதியர்போல், எம்பெருமான் சந்நிதி முன் இறந்தானாதலின், அவன் பாவங்கள் அழலிற் பட்ட பஞ்சுபோல் அழிந்தன. தவத்தினர் உணர்வு, மந்திரநாதம், அறுமுக அருளொளி விரவியது அக் கோயில் வாயில். அங்கு இறந்த அவன் உயிரில், அவைகள் கலந்து அளவளாவின. அந்த அரு மையை, கணத் தலைவர்கள் அறிந்தனர். வந்தனர். அவனை, அப் புண்ணியத்திற்குரிய சிறந்த கதியில் சேர்த்தனர். இவனுக்கே இப்பேறு எனில், உண்மை அடியவர்கள் பெறும் உயர்ந்த கதியின் உயர்வை உரைக்க இயலுமோ? இங்ஙனமெல்லாம் உம்பர்க் குப் பிரமதேவர், ஒருசமயம் உபதேசித்தார்.

இந்த அருமையை எண்ணிய வானவர், இது தியான தலம்; முக்திக்கு ஏணி என்றெல்லாம் போற்றி உள்ளம் புளகிக்கின்றனர்.

## 18. சுகப்பிரமர் வழிபாடு

பதினெட்டுத் திருப்பதிகள், பேரருட் குமரன் சொரூபம் போல் பிரகாசிப்பவை. வைகறையில் உத்தம அவைகளின் பெயர்களை ஓதுனர்க்கு, ஆகாமியம் உருவாவது இல்லை.

(1) இமயத்தில் ஒருபதி. அது இந்திர நீலம் எனப்பெறும். தேவர்கள் அங்குத் திரண்டனர். சுப்ரமண்யர்க்கு மகுடம் சூட்டினர். தேவ சேனுபதீ! என்று, ஏத்திப் போற்றி இறைஞ்சினர். அன்று முதல் முருகற்கு, அங்கு **அபிஷேக ஸ்வாமி** என்று திருநாமம்.

(2) கங்கைக் கரையில், கனகலம் என்று ஒரு பட்டினம். உமாபதி அளித்த கலைகளை உணர்ந்து, கந்தப் பெருமான், மாசிலாச் **சிவ மாணவன்** என்னும் திருநாமம் அங்கு எய்தியுளன்.

(3) பொதியமலை. அதன் மேற்கில் குமார தாரை. அந்த ஆற்றங் கரையில், விசாகப்பிரான், வைதிகர்களுடன் கலந்து, ஓயாது வேதங்களை உலகுய்ய ஓதிக்கொண்டு இருக்கின்றுன். **குமாரப் பிரமசாரி** என்று, அங்கு எவரும் பெருமானை ஏத்திப் போற்றி இறைஞ்சுகின்றனர்.

(4) சிவனுர் சனகாதியர்க்கு அருளியதுபோல், மயிலூர் பரமன், பழனிப் பதியில், நான்கு முனிவர்கட்கு **ஞானதேசிகன்** ஆயினன்.

(5) சுவாமி மலையில், ஓங்காரப் பொருளைச் சிவத்திற்கு உபதேசித்து, **சுவாமிநாதன்** எனவுளன்

(6) விந்தை மலையின் ஒருபுறமான விகார பட்டினத்தில், தேவயானையை மணந்த திருமணக் கோலத்துடன், இந்திரன் முதலோர் சதா இறைஞ்ச, குகன் **குமாரமூர்த்தி** எனும் பெயர் கொண்டுளன்.

(7) மதுரையில் நிகழ்ந்த அறுபான் மும்மை ஆடல்களை, சித்திரசேன பாண்டியர்க்குச் சிறக்கக் காட்டி, தாமே அச்சிவம் எனலை உலகம் உணர, திருப்பரங்குன்றில் **நடனநாதர்** எனும் பெயர் நண்ணி யுளன்.

(8) தெய்வப் பொதிகைத் தென்புறத்தில், பயன் தரும் சிவதலங்கள் பதினொன்று. அவைகளின் கீழ்ப்புறத்தில், ஒரு மங்கலக் குன்று இருக்கின்றது. படைப்புத் தொழிலை, அரிய ஞானம் போதிக்கும் அதிகாரத்தை, அங்கு அயனுக்கு அருளி, **போக மோட்சத் தியாகி** எனும் புனிதத் திருப் பெயரைப் பூண்டுளன்.

(9) செந்தில் பதியில், வீரவாகு தேவர்க்கு விஸ்வரூபம் காட்டியது காரணமாக, வேத மந்திர **விஸ்வரூபன்** என்னும் பெயரில் விளங்குகின்றான்.

(10) தண்டகாரணியக் கோதாவரியின் தென் புறத்தில், சீதையைப் பிரிந்து வருந்தி யிருந்த இராமனுக்கு, மகா வாக்கியங்களை உபதேசித்து, **அருள் ராமன்** எனும் பெயருடன் அமர்ந்துளன்.

(11) மகேந்திரம் என்று ஒரு மலை. அங்குக் குருங்கம் ஒன்று ஒருதலம். அதனில் ஆமை வடிவான ஒரு பாறை. அதன் மேல், இருதேவியருடன் ஊடியும் கூடியும், **காமக் கடவுள்** தானே எனலைக் காட்டுகின்றான்.

(12) மல்லிகார்ச்சுனத்தில், சித்தர்கள் இருக்கும் சிறந்த இடம் ஒன்று; அங்குச் சனகாதியர்க்குப் பிராணாயாம சித்தி, குளிகை சித்தி, பாதுகா சித்தி முதலியவைகளைப் போதித்து, எம்மான் சேந்தன், **யோகநாதர்** என்னும் பெயருடன் இருக்கின்றான்.

(13) திருக்குற்றாலத்தின் அண்மையில் உள்ள இலஞ்சிப் பதியில், மும்மூர்த்திகளும் தாமே என, முனிவர் கபிலர் முதலினோர்க்கு உபதேசித்து, அறுமுகன் **வரதராசன்** எனும் பெயர் வாய்ந்துளன்.

(14) விந்தை மலையின் மேற்புறத்தில் உள்ள குமார வனத்தில், இடையர் பெருமான் சீகரன் இச்சையை உணர்ந்து, கண்ணன் திருவவதார ஆடலை, நாடகமாகப் பத்து நாள் வரை நடித்து, **சீகரக் கடவுள்** எனும் சிறந்த பெயரை எய்தியுளன்.

(15) கங்கைக் கரையில் உள்ள சிருங்கிபேரக் குகனுக்கு, இராம நாடகம் ஆடிக் காட்டி, **வேத மந்திர இன்ப நாயகன்** என்னும் பெயர் விளங்கவுளன்.

(16) விருத்தாசலத்தில், தேவகுரு மைந்தன் கசனுக்கு, அகர வகர வித்தைகளை அருளி, **மாயாமய குமரன்** என்றுளன்.

(17) வடநாட்டின் மூகாம்புரியில், மந்திர சாதனை, மூலிகை நுட்பம் ஆகியவைகளைக் கபிலர்க்கு அருளி, **சகல லோக குரு** எனும் பெயர் சார்ந்துளன்.

(18) துங்க பத்திரை நதியின் வடபுறத்தில், அந்தண கோசிகர்க்கு ஞானம் அருளி, **ஞான தேசிகன்** எனவுளன்.

இங்ஙனமெல்லாம் உயர்ந்த சுப்ரமண்ய மகிமைகளை சுகர்க்கு உபதேசித்த வியாசர், அரிய தமது பதரிகாசிரமத்தை அடைந்தார். சுகமுனிவர், செந்திலாண்டவனைச் சேவிக்க விரும்பி, இடையில் உள்ள தலங்களைச் தரிசித்தபடியே அருமை அப் பதியை யணுகினர். நியதி விளைய நீராடினர். பரம குமரன் திருவருளைப் பரவி, அவர் பாடிய பாடல்கள் கோடி பெறும்.

திருவுளம் மகிழ்ந்த ஆறுமுகப் பரமன், நீ நினைத்த யாவும் நிறைவேறுக என்று அருந்தவச் சுகர்க்கு அருளினன். அதனுல் அளவிலா இன்பம் கண்ட அவர், தம் தபோவனம் அடைந்து, எப்போதும் திருச்செந்தில் ஆறுமுகத்தைச் சிந்தித்து, எல்லாப் பேறும் எய்தி இன்பம் கொண்டு இருக்கின்ருர்.

**திருச்செந்தூர்**
**புராணசாரம் நிறைவு பெறுகிறது.**
**திருச்செந்தில் ஆண்டவன்**
**திருவடிகட்கே அடைக்கலம் !**

ஓம்

தயவுசெய்து, இத்திருத்தங்களை அவ்வப் பக்கங்களில் குறித்துக் கொள்ள வேண்டுகிறேம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 83 | 11 | ஸ்ரீசையிலம் | ஸ்ரீசைலம் |
| 94 | 20 | அழய | அழகிய |
| 98 | 3 | தயயையி | தயையி |
| 99 | 22 | லந்த | அந்த |
| 113 | 14 | நதியு | நதி |
| 118 | 7 | சரசசாதி | சரசோதி |
| 125 | 12 | அன்றலர்த்த | அன்றலர்ந்த |
| 228 | 26 | உனடய | உடைய |
| ஷை | 29 | பிரகாசிக்த்தாள் | பிரகாசித்தாள் |
| 239 | 5 | சின்ற | கின்ற |
| 254 | 27 | னருட | னருடர |
| 288 | 20 | திரிசுந்தரர் | திரிசுதந்தரர் |
| 319 | 2 | விழுந்தபடி | விழுந்தடி |
| 328 | 25 | நீலண்டர் | நீலகண்டர் |
| 343 | 24 | விரும்பினேன் | விரும்பினேம் |
| 347 | 9 | அத்திரிசிதந்திரர் | அத்திரிசுதந்தரர் |
| 415 | 15 | வநம் | அயநம் |
| 430 | 17 | பேராசு | பேரரசு |
| 439 | 13 | குரோ | குரோச |
| 447 | 6 | தித்திக்கும் | சித்திக்கும் |
| 459 | 10 | வைசிரியர்கள் | வைசியர்கள் |
| 482 | 16 | முன்றுமுடைய | மூன்றுமுடைய |

(385-லிருந்து 400-ஆம் பக்கம் வரை, பக்க எண்களைத் திருத்திக் கொள்ளவும்)

குற்றம் களைந்து குணம்பெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.



திருச்செந்திலாண்டவர்
இலவச விடுதி

